**ஒலியின் வானம் :** ஒரிய மொழியின் சிறந்த கவிஞர்களுள் ஒருவரான சீதாகாந்த மகாபாத்ரா தொன்மக் கருத்துகளைத் தனிமனிதக் கவித்திறத்துடன் இணைத்து வழங்கிய கவிதைப் போக்கை இத்தொகுப்பில் காணலாம். வாழ்க்கையின் வளமை, ஆழம் புதிர்மிடைந்த போக்கு இவற்றைத் தற்கால ஒரியக் கவிதையில் தன்னிகரற்ற முறையில் ஆழ்ந்த புரிதலுடன் அணுகிறது. இக்கவிதை நோக்கு. உணர்வின் நளினமும் கருத்தின் தீவிரமும் இழைந்திட வாழ்கைகை என்னும் புதிர்ப்பின்னலைப் பளிச்சென்று படம் பிடிக்கின்றன இந்தக் கவிதைகள்.

**முனைவர் சீதாகாந்த மகாபாத்ரா (பி.1937)** இந்திக் கவிதையுலகின் முன்னணிக் குரல்களுள் ஒருவர். சமூக மானிடவியலில் முனைவர் பட்டம் பெற்றவர். ஒன்பது கவிதைத் தொகுதிகள் வெளியிட்டுள்ளார். பல்வேறு இந்திய, உலக மொழிகளில் இவரது கவிதைகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. சாகித்திய அக்காதெமி விருது (1974), ஞானபீட விருது (1993) உட்படப் பல விருதுகளைப் பெற்றவர். இந்திய ஆதிவாசிகளின் வாய்மொழிக் கவிதைகளில் சிறந்த திறனாய்வாளர் இவர்.

முனைவர். பி.பி. மகாபாத்ரா ஒரிய எழுத்தாளர். 'நம்மாழ்வார்' என்னும் சாகித்திய அக்காதெமி நூலை ஒரியாவில் மொழி பெயர்த்தவர். முனைவர் திருமதி விஜயாதாஸ் ஜாதவ்பூர் பல்கலைக் கழக ஒப்பிலக்கிய விரிவுரையாளர். சில மொழிபெயர்ப்புகளை முன்னரே தந்தவர். இருவரும் ஒரியக் கவிதைகளின் மூலப் பொருளை சிதறாது தமிழில் தந்துள்ளனர்.

**Oliyin Vaanam** (Tamil) **Rs. 50**

ISBN 81-260-0839-3

## ஏக வணக்கம்

ஒன்றே ஒன்றாய் உலகாய் விரிந்து
ஒன்றே ஒன்றாய் உயிராய் உருவாய்
ஒன்றே உணர்வாய் உறவாய் உவப்பாய்
ஒன்றே ஐந்தாய் விதியாய் கதியாய்
ஒன்றே அறிவாய் அருளாய் அன்பாய்
ஒன்றே பரமாய் இகமாய் அனைத்துமாய்
ஒன்றே சிவமாய் சக்தியாய் சிவசக்தியாய்
ஒன்றில் ஒன்றாய் ஒன்றி வணங்கிடுவோம்.

ஒன்றே ஒன்றாய் இரண்டாய் மூன்றாய்
ஒன்றே நான்காய் ஐந்தாய் ஆறாய்
ஒன்றே ஏழாய் எட்டாய் ஒன்பதாய்
ஒன்றே பத்தாய் பலவாய் பல் கோடியாய்
ஒன்றே கோடியாய் கோடி கடந்ததாய்
ஒன்றே கோடிக்குக் கோடியாய் கோடிக்குள் கோடியாய்
ஒன்றே கோடானு கோடியாய் இருக்கும்
ஒன்றை கொண்டாடி கொண்டாடி வணங்கிடுவோம்.

தவத்திரு சுவாமி ஓங்காரநந்தா

# ஜீவ யாத்திரை

# JEEVA YATHIRAI

**பாகம் -I**


**தவத்திரு சுவாமி ஓங்காரநந்தா**

**H.H. SWAMY OMGARANANDHA**

ஓங்காரத் தலைமைப் பீடம்

ஓங்கார ஆசிரமம்





**ஓங்காரம்**

M-14/2, கிழக்கு அவின்யூ,

T.N.H.B. காலனி,

கொரட்டூர், சென்னை - 600 080.

தொலைபேசி : 652 25 25

# நூல் விவரப் பட்டியல்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஜீவ யாத்திரை பாகம் -I |
| ஆசிரியர் | : | தவத்திரு சுவாமி ஓங்காரநந்தா |
| பொருள் | : | ஆன்மீகம் |
| நூல் உரிமை | : | © உலக உரிமை ஆசிரியருக்கே |
| பதிப்பு | : | முதல் பதிப்பு - ஜுன் 2001 |
| நூலின் அளவு | : | Demy Size |
| தாள் | : | Creamwove |
| எழுத்தின் அளவு | : | 11 Points |
| பக்கங்கள் | : | 316 + xx |
| விலை | : | **100.00** |
| பதிப்பாளர் | : | வெளியீடு<br>ஓங்காரம்,<br>சந்தோஷ் நிவாஸ்<br>M-14/2, கிழக்கு அவின்யூ,<br>T.N.H.B. காலனி,<br>கொரட்டூர், சென்னை - 600 080.<br><br>Published by the Author<br>**OMKARAM,**<br>"Santhosh Nivas"<br>M-14/2, East Avenue,<br>T.N.H.B. Colony,<br>Korattur, Chennai - 600 080. |
| ஒளி அச்சு, அச்சிட்டோர் | : | **MANI OFFSET,** Chennai 600 005.<br>Phone : 8555 249, 8588 186. |

# வணக்கம்

எல்லா நேரத்திலும் கடவுளை நினைந்திருந்தேன்.

ஏதோ ஒன்று மறக்காமல் நினைக்கச் செய்து கொண்டிருந்தது.

எல்லாக் கோயிலுக்கும் சென்று இருந்தேன்.

அதன் நினைவு.

கோயிலுக்குள் செல்ல - செல்ல நானே கோயிலானேன்.

கருப்பகிரகத்திற்குள் செல்ல - செல்ல நானே கருப்பகிரகமானேன்.

சாந்நித்தியத்தில் நுழைய - நுழைய சாந்நித்தியம் ஆக்கப்பட்டேன்.

சன்னிதானத்திற்கு வர - வர யாம் சன்னிதானம் ஆக்கப்பட்டோம்.

இந்த உலக நிலைகள் எல்லாம் ஏனோ என்னை விட்டுவிட்டு ஓடின. பிறகு அவைகளை அழைத்து அவைகளுக்கு யாம் ஆசி வழங்கி - வழங்கி வழங்கினோம்.

தேகத்தை எடுத்தக் கொண்டு வெட்டவெளியில் நடக்க - நடக்க தேகம் விழுதல் தன்மை விலகி ஒளி தேகமாக மாற்றப்பட்டது. கடவுளை நினைந்து - நினைந்து இடைவிடாது காலம் முழுவதும் ஜெபித்தேன். பருவங்கள் பயந்து என்னை விட்டு விலகின.

அருள்நாதம் வெளிப்பட்டது. ஓங்கார நாதம் என்னுள் ஒலித்தது. அது பரசிவ நாதமாய் மாறி அந்த நாதமே இன்றும் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது.

தியானத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டேன்.

தியானத்திலிருந்து சிவானந்த உலகிற்குப் பாய்ந்து சென்றேன். அங்கிருந்து எல்லாம் தரிசித்தேன். கடவுளைக் கண்டேன். எல்லா தரிசனமும் ஏகமானது. அதுவே "கடவுள்" தரிசனம். இதை யார் செய்தது. மனிதனா? இல்லை. காலமா?! இல்லை. விதியா?! இல்லை?

பிறகு யார்? சற்குரு

சற்குரு - சிவமாக, குருவாக, கடவுளாக எல்லாம் நடந்தது.

யாம் எதற்கும் பொறுப்பாளி அல்ல.

நீங்களும் அந்நிலைக்கு வாருங்களேன்!

உங்கள் எல்லோருக்கும் ஆசி வழங்குகின்றோம்.

ஆனந்தமாகுங்கள்

- மயிலாடுதுறை பரப்பிரம்ம சற்குரு
ஓம் ஸ்ரீ சித்தர் சுவாமிகள்

சந்தோஷம்

# சரணம்

எனக்கு அறிவைக் கொடுக்கக் கடவுள் இருக்கிறார்.

அன்பைக் கொடுக்கக் கடவுள் இருக்கிறார்.

என்னை அன்பு மயமாய் மாற்ற கடவுள் இருக்கிறார்.

என்னை ஆனந்தமயமாய் ஆனந்தத்தில் இருக்க வைக்கக் கடவுள் இருக்கிறார்.

என்னைச் சிரிக்க வைக்கக் கடவுள் இருக்கிறார்.

என்னுடன் பேசி என் காலத்தை விரட்டி என்னை இனிக்க வைக்கக் கடவுள் இருக்கிறார்,.

இக ஒளி வேண்டாமென்று தன் சுயஞ்ஜோதியை எனக்காக்கி எனக்காகக் கடவுள் இருக்கிறார்.

தன் கருத்தை எனக்கு அளித்து தவ வாழ்வு கொடுக்கக் கடவுள் இருக்கிறார்.

ஜீவர்களிலிருந்து என்னைப் பிரித்தெடுத்து தன் சிவபதியை எனக்கு அளிக்கக் கடவுள் இருக்கிறார்.

சிவயோகத்தில் பயிற்றுவித்து சிவானந்தத்தில் திளைக்க வைக்கக் கடவுள் இருக்கிறார்.

என் கண்ணீரை மற்றவர்கள் துடைக்கக் கூடாதென்று தன் கரத்தாலே துடைக்க, கடவுள் இருக்கிறார்.

மற்றவர்களைக் காண வைக்காது தானாகவே காட்சி கொடுத்து, நான் மற்ற ஜீவன்களுக்குக் காட்சி கொடுக்க கடவுள் இருக்கிறார்.

எனக்காகக் கடவுள் இருக்கிறார். அவருக்காக நான் இருக்கின்றேன். இருவரும் ஒன்றுக்குள் ஒன்றாய் ஒன்றேயாய் ஒன்றாய், பரிபூரணமாய், பரமானந்தமாய் இருக்கிறோம்.

- மயிலாடுதுறை பரப்பிரம்ம சற்குரு
ஓம் ஸ்ரீ சித்தர் சுவாமிகள்

# சாயுச்யம்

ஜீவன்கள் தங்களுக்காக என்னை நோக்கி ஓடி வருகின்றன.

அறியாமை நிறைந்தவர்கள் என்னை விரும்புவார்கள்.

அறிஞர்கள் என் பின்னால் வருவார்கள்.

அருளாளர்கள் என்னைச் சரணடைவார்கள்.

யோகிகள் என் திருவடியைச் சுமப்பதை பாக்கியம் என்று நினைப்பார்கள்.

ஆத்ம ஞானிகள் என்னிடம் சாஷ்டாங்க நமஸ்காரம் சதகோடி செய்வார்கள்

சித்தர்கள் பத்துத் திசையிலும் சென்று என் புகழைப் பாடுவார்கள்

உத்தமர்கள் தங்கள் இதயத்திற்குள் என்னை வைத்துப் பூட்டி மகிழ்வார்கள்

பாமரர்கள் என்னை வழிபட்டுப் பரசிவானந்தம் அடைவார்கள்.

துன்மார்க்கர்கள் தங்கள் கைகளைக் கட்டிக் கொண்டு சற்று தூரத்திலிருந்து என் ஆசிக்காகக் கண்ணீர் மல்கிக் கொண்டிருப்பார்கள்.

தவசிரேஷ்டர்கள் தங்கள் ஜீவ யாத்திரையில் சச்சிதானந்த நிலையில் நிறுத்தி சம்பூரணமாக்கிக் கொள்ள என்னிடம் தவமிருப்பார்கள்.

இந்த நிலையில்,

கடவுள் எல்லாவற்றையும் தன் அருள்பார்வையால் பார்த்து யார் - யாருக்கு எதெது வேண்டுமோ அதையதை அப்போதைக்கு அப்போது அவரவர்களுக்கு வழங்கிக் கொண்டிருப்பார்.

எனக்கு எதுவும் வேலையில்லை.

வேலையற்ற எனக்கு இப்படி.

- மயிலாடுதுறை பரப்பிரம்ம சற்குரு
ஓம் ஸ்ரீ சித்தர் சுவாமிகள்
29.8.1964 காலை 10.40 மணிக்கு வழங்கிய ஆசியுரை

# தாலாட்டு

*பரஞானப் பெருவெளியைப் பாரடா கண்ணே !*
*பரநாதப் பேரொளியைக் கேளடா கண்ணே !*
*அருள் ஞான துறவுதான் உனக்கடா கண்ணே !*
*ஆதிசிவன் உன் வீட்டில் இருப்பானடா கண்ணே !*
*– (பர)*

*திரு ஒளி தான் உன் முகத்தில் வீசுதடா கண்ணே !*
*தில்லை அம்பலக் காட்சியைக் காணடா கண்ணே !*
*மறுவாழ்வு துன்பமெல்லாம் உனக்கில்லையடா*
*கண்ணே !*

*மகேசனின் மடியினிலே நீயடா கண்ணே ! – (பர)*
*காடும் மலையும் உனக்குச் சொந்தமடா கண்ணே !*
*கல்லும் முள்ளும் உனக்குப் பந்தமடா கண்ணே !*
*நீரும் நெருப்பும் உனக்கு நண்பனடா கண்ணே !*
*யாரும் அறியா ஆண்டவனை அறிவாயடா*
*கண்ணே ! – (பர)*

*எட்டிக்கும் போட்டிக்கும் வேலையில்லை கண்ணே !*
*எங்கள் சிவம் உன்னையே வளர்ப்பான்டா கண்ணே ! (2)*
*ஆராரோ ஆராரோ ஆரிராரோ*
*ஆராரோ ஆராரோ ஆரிராரோ*
*ஆராரோ ஆராரோ ஆரிராரோ*
*ஆராரோ ஆராரோ ஆரிராரோ*
*ஆராரோ ஆராரோ ஆரிராரோ*
*ஆராரோ ஆராரோ ஆரிராரோ*
*ஆரிராரோ ஆரிராரோ ஆரிராரோ*

# திருவுரை - 1

அன்புத் தங்கை, தம்பிகளே,

நீங்கள் எனக்குத் தங்கைகளும், தம்பிகளும் அல்லர். நான் உங்களுக்கு அண்ணனும் அல்லன் அண்ணியுமல்லள். வெறும் தேகத்தையும் அதனுள் இருக்கும் நாடி, நரம்புகளையும், தசைகளையும் வைத்துக் கொண்டு அம்மா, அப்பா, அண்ணன், அண்ணி என்ற உறவைக் கற்பித்துக் கொள்கிறோம். ஜீவ யாத்திரை என்ற நூல் உறவுக்கு அப்பால் செல்கிறது. இருந்தாலும், நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இவ்வாறு அழைக்கின்றோம். உங்கள் காலமும் என் காலமும் - ஏக காலமே. ஆனால் இப்போது - நீ விதி நிறைந்த காலத்துக்குள்ளே நிற்கின்றாய். நான் அதற்கு அப்பால் பரத்தில் இருக்கின்றேன்.

இந்தப் புத்தகத்தைப் படித்தவுடன் புரியவில்லையே என்ற சொல் நாக்கின் நுனியில் நின்று துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கும். கண் இமைக்கும் நேரத்தில் முகத்தைச் சுளித்துக் கொண்டு இந்த நூலை லொடுக்கென்று எங்கேயாவது ஒரு மூலையில் பெருமைக்காகச் சொல்லுகின்றேன் வைத்து விடுவாய் தூக்கி எறிந்து விடுவாய்.

நீ நீயாக இருந்தால் தானே இது உனக்குப் புரிய வந்திருக்கும். நீ நானாக இருந்து இருந்தால் இந்த நூலுக்கு முன்பே இந்த நூலை எழுதி முடித்திருப்பாய். நீ பரமானந்த நிலைக்கு வந்து விட்டால் உன் யாத்திரை முடிந்திருக்கும். இந்த நூலுக்குத் தங்கப் பேழை செய்து வைரம், மாணிக்கம், மரகதம், முத்து, புஷ்பராகம் இவைகளைப் பதித்து அலங்காரப்படுத்தி உனக்குள்ளே நீ வைத்திருக்க மாட்டாயா?!

ஜீவ யாத்திரை நிறைவேறுவதற்கு முன் எத்தனையோ யாத்திரை செய்து இருக்கிறாய்? உன் யாத்திரையை என்றாவது நீ கணக்கிட்டுத் தொகுத்துக் கண்டறிந்து இருக்கின்றாயா? இல்லையே!?

ஜெக யாத்திரை, உன் சவ யாத்திரை, உன் நடை யாத்திரை, சவத்திற்குப் பின்னால் நடமாடும் சவமாக நடக்கும் யாத்திரை, உனக்கு பெண், மாப்பிள்ளை அழைப்பு போன்ற காசி யாத்திரை, ஞான யாத்திரை, வாசி யாத்திரை தேகத்திற்குள் தேகம் கொண்ட தேக யாத்திரை, கால யாத்திரை, கோல யாத்திரை, கூத்தாடும் யாத்திரை, காலன் யாத்திரை,

கரு யாத்திரை, இப்படி எத்தனையோ யாத்திரை நீ செய்து இருக்கின்றாய். இவையெல்லாம் உனக்குச் சுட்டிக் காட்டி உன்னை உணரச் செய்து இப்போது நீ செய்யும் உன் யாத்திரையும் உனக்கு வெளிக்காட்டி, அடுத்து யாத்திரைக்கு உன்னைக் கொண்டு போய் நிறுத்தி உன் ஜீவ யாத்திரையை நிறைவேற்றி வைக்க வேண்டுமென்பதற்காகவே உனக்காக, யாத்திரிகர்களுக்காக, வெளியிட அது சொன்னது. இதுக்குள் இருந்து அது வெளியிட்டது.

தம்பி, தங்கைகளே! பரிமாற்றமில்லாததால் மகனே, மகளே என்று என்னால் அழைக்க இயலாது. இந்த நூல் உனக்காக வர வேண்டும் என்பதற்காக அது எனக்குக் கவலையும் கொடுக்கவில்லை. திரவியக் கவலை, நூல் வெளியிடுவதற்கான தொழில் நுட்பக் கவலை, கண் தூங்கா நித்திரைக் கவலை, நூல் நுணுக்கமாக மெய்ஞ்ஞான நிலையில் வெளி வந்து, அந்த அது பாராட்ட வேண்டுமே என்ற நிலையையும், அச்ச உணர்வையும் கூட அது எனக்கு வைக்கவில்லை. நூலுக்கு முன் எந்தச் சந்தோஷத்தில் இருந்தேனோ அந்தச் சந்தோஷம் - நூல் வந்த பிறகும் அதே சந்தோஷத்தில் இருக்கின்றேன். இந்நூல் வெளிவர தேகம், பல மாதங்கள் கடினமாக உழைத்து, அங்கக் கருவிகளினால் சோர்வடையும் நிலையை அது எனக்குத் தரவில்லை. எல்லாவற்றையும் அதுவே முடித்தது. எனக்கு அது இட்ட பெயரை இந்நூலுக்குப் போட்டு உனக்குக் காட்டியது.

**சந்தோஷம்**

# திருவுரை - 2

ஜீவ யாத்திரை இக்கால கட்டத்திற்கு மட்டுமன்று. எக்கால கட்டத்திற்கும் இன்றியமையாதது. இப் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து ஜீவன்களும் ஸ்தூல நிலையிலும், சூக்கும நிலையிலும் யாத்திரை செய்கின்றன. ஸ்தூல நிலை யாத்திரை அவைகளுக்குத் தெரியாது. சூக்கும நிலை யாத்திரையின் நோக்கம், யாத்திரையின் சுபாவம் ஜீவன்கள் அறியாது. ஜீவ யாத்திரை என்ற நூல் ஜீவ யாத்திரையின் ஒரு அறிமுக நூலாகும். இந்த ஜீவ யாத்திரைக்கு ஜீவன்களின் யாத்திரைக்கு இந்நூல் ஒரு முன்னோடியாகும். ஜீவ யாத்திரை இன்னும் ஒன்பது பாகங்களில் வெளி வர உள்ளது.

இந்நூலில் குறிப்பிட்ட கருத்துகள் யாவும் ஜீவன்களுக்கு ஏற்படும் பழுதுகள், குறைகள், தடைகள் நீக்கித் தாம் யாத்திரை செய்கின்றோம் என்ற பேருணர்வு திருச்சிற்றம்பல ஒளியின் துணை கொண்டு ஜீவன்கள் யாத்திரை மேற் கொண்டு சந்தோஷமாக நிறைவேறப் பயன்படும்.

ஜீவ யாத்திரை பற்றி விவரிப்பது அல்லது விளக்குவது என்பது ஆத்மாவைப் பற்றி விளக்குவதற்கு ஒப்பாகும். கடவுள் ஜீவன்களுக்கு எதுவும் முடியாது என்ற தத்துவத்தையும், எல்லாம் முடியும் என்ற அற்புதத்தையும் கொடுத்து உள்ளார்.

எதுவுமே முடியாது என்பதற்குக் காரணம் என்ன என்பதை ஆய்வு நடத்தி, ஆய்வினால் வரும் வினையைக் கண்டு அதன் காரணங்களை நீக்கினால், எல்லாம் முடியும் என்கிற அனுபவக் கருத்து வந்து சேரும்.

சான்றாக, குரு தட்சிணா மூர்த்தி சுவாமிகள் தன் தாய், தந்தைக்கு முக்தி அளித்தார். தன் தாய், தந்தைக்கு மரணம் வரப் போவதைச் சொன்னார். மரணத்திலிருந்து ஜீவன்களைக் காப்பாற்றினார்.

மனிதனால் ஆற்ற முடியாத செயலைத் தன் அருள் வல்லமையால் ஆற்றினார். மிருகங்கள், மரம், செடி, கொடிகள் யாவும் இவர் என்ன சொல்கிறாரோ அதன்படி பணிந்து கேட்டு நடந்தன.

அருட் பிரகாச வள்ளலார்,

*சூகா என்று அடுத்தவர் கூடி அழா வண்ணம்*

*சாகா வரம் எனக்கே தந்தான்*

என்கிறார். வள்ளல் பெருமான் தன் தேகத்தையும், ஆத்மாவையும் வெட்ட வெளியில் சேர்த்து விட்டார். இதுவும் மனிதர்களால் முடியும் என்பதை நிரூபித்தார். ஆகவே, கடவுள் செய்வதை மனிதனுள் இருக்கும் தெய்வ சக்தி செய்கிறது.

ஜீவ யாத்திரையின் இறுதிப் பகுதி எல்லா ஜீவன்களையும் தெய்வ மாக்கி எல்லாவற்றிற்கும் சந்தோஷம் அளிக்கிறது. மனிதன் தெய்வமாவதற்கே பிறக்கின்றான்.

ஜீவ யாத்திரை என்ற நூல் இறைவனின் அருள் வல்லமையின் ஆக்ஞைப் படியும், சற்குருவின் ஆசியினாலும் வெளி வருகிறது. "அரிது - அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" - இவ்வாறு ஏன் ஔவை சொன்னார்?

ஜீவன் சிவமாவதற்கே ஜீவன் பேரின்ப மடைவதற்கே. மனிதனிலிருந்து பதவி உயர்வு பெற்று பிரம்ம சொரூபமாகிப் பர சிவனாந்தத்தில் இருந்து ஆனந்தத்தில் இருத்தல் வேண்டும்.

இந்த ஜீவ யாத்திரை என்ற அமுத நூலில் இடம் பெறும் அருட் கருத்துகள் 70 விழுக்காடு வெட்ட வெளியிலிருந்து எடுக்கப் பட்டவையாகும். மரணத்தின் உச்சியில் இருக்கும் போது கருத்துகள் வெட்ட வெளியிலிருந்து எடுக்கப் பட்டவையாகும். கடவுளைக் கண்டு கொண்டே கருத்துகள் பெறப்பட்டன. பிராணன் வெட்ட வெளி போகும் போது அங்கிருந்து கருத்துகள் பெறப்பட்டன. வெட்ட வெளியில் உள்ள ஜீவ வெளியிலிருந்து கருத்துகள் வாங்கப்பட்டன.

சுயஞ் ஜோதியிலிருந்து வாங்கப் பட்டன. பரஞ்ஜோதியிலிருந்து வாங்கப் பட்டன. சித்தர்களிடமிருந்து வாங்கப் பட்டன. சிதாகாசப் பெரு நிலையில் வாங்கப் பட்டன. பிரம்மரந்திரத்திலிருந்து வாங்கப் பட்டன.

ஜீவ யாத்திரை என்ற அருமையான சொல்லைச் சொல்லுங்கள். சொல்லுக்குள் இருக்கின்ற வெட்ட வெளிக் கருத்தை உணர்ந்து உங்கள் யாத்திரையை அன்பு மயமாக அருள் மயமாக, கடவுள் மயமாக மாற்றுங்கள். எல்லையில்லா சந்தோஷம் உங்களுக்குச் சொந்தமானது. எங்களுக்கும் கொஞ்சம் வாரித் தருகிறீர்களா?

**சந்தோஷம்**

# நன்றியுரை

ஜீவ யாத்திரை என்ற ஆன்மீக நூல் சிறப்புடன் வெளி வருவதற்கு காரணமாயிருந்த உத்தம நெஞ்சங்கள் இங்கு பிரகாசிக்கிறார்கள். அவர்களும் அவர் தம் குடும்பத்தினர் அனைவரும் வாழ்வில் நல்லனவெல்லாம் பெற்று, என்றும் இனிது வாழ, வெட்ட வெளியை ஆழ்ந்து சிந்தித்து ஆசி வழங்குகிறோம்.

ஜீவ பரோபகார கர்த்தா
சிவஸ்ரீ வி. சுவாமி நாத அய்யர், IAAS
அம்பிகைக் கடாட்சம் திருமதி. ரேணுகா சாமிநாதன், சென்னை.
ஸ்ரீ பி.ஆர். உமாமகேசுவரன் 'உங்களுக்காக' நூலாசிரியர்
திருமதி சீதா உமா மகேசுவரன்
துறவி லட்சுமி பாய், ஓங்கார ஆசிரமம்
செல்வி என். மதுரை மீனாட்சி
சிவனருள் செல்லம்மாள் நாகராஜன்
ஞானக்குயில் ஓம் ஞானேஸ்வரி, ஓங்கார ஆசிரமம்
நைஷ்டிக பிரம்மச்சாரி, ஸ்ரீ கோட்டீஸ்வரானந்தா

10/2

# பொருளடக்கம்

# ஜீவ யாத்திரை

*புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்மிருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லா அ நின்ற இத் தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத் தேன்*
*எம்பெருமான்!*

*மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று*
*வீடுற்றேன்.*
*உய்ய என் னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற*
*எம்பெருமான்.*

*- மாணிக்கவாசகர்*

# கடவுள்

* சித்தம் தெளிந்து, வேதக் கோயில் திறந்ததும் இறைவனைக் காண முடியும், பின் எல்லாம் அடங்கி விடும்.

* குரு சொன்ன வார்த்தையை குறித்து வினை யாற்றினால் குரு விளங்கும் மேனியாகி, கும்பராகி நின்று, நீர் திருவிளக்கு மேனியாய் இறைவனோடு கூடலாகும்.

* கடவுள் மனிதனுக்கு எல்லா அற்புதங்களையும் கொடுத்துள்ளார். மூல நாடி தன்னிலே முளைத்து எழுந்த ஜோதியை 1 மணி 36 நிமிடங்கள் ஒரு ஆத்ம சாதகன் தம்முள்ளே ஜோதியைத் தரிசித்து அப்படியே தரிசித்துக் கொண்டு இருப்பானாயின், அவனுள்ளே உள்ள மலங்கள் எல்லாம் நீங்கி, அவன் இழந்து போன சக்தியெல்லாம் மீண்டும் பெற்றுப் பாலனாகி வாழலாம். இது பொய் என்று நினைக்க வேண்டாம். ஆலமுண்ட கண்டணாணை, அம்மையாணை உண்மையே. இது சிவ வாக்கியர் கொடுத்த கருத்தாகும்.

* இறைவன் தந்த அடுத்த வல்லபம் மனிதன் விதிக்குக் கற்பித்து இருக்கின்ற கற்பனையைத் தூள்-தூளாகச் சாடுகிறார். இதுவும் சிவ வாக்கியர் அனுபூதி வினையாகும்.

* நீ எவ்வளவு நாட்கள், ஆண்டுகள் இருக்க வேண்டும் என்று நினைக்கிறாயோ. அவ்வளவு நாட்கள் இருக்கலாம் எப்போது இறந்து விடலாம் என்று நினைக்கிறாயோ அப்போது இறந்து விடலாம். சுறுக்கமற்ற தம்பிரான் (கடவுள்) சொன்ன அருளாசியின் படி நடந்தால் உனக்கு எல்லாம் கிடைக்கும்.

* அகரம் என்ற வியக்கத் தகுந்த மர்ம மந்திரத்திலே ஏழு அண்டங்கள் தோன்றின. உகரம் என்ற மகா மந்திரத்திலே உருவங்கள் தோன்றின. மகரம் என்ற மர்ம மந்திரத்திலே வையகம் தோன்றியது. வையகத்தில் இயக்கங்கள், மயக்கங்கள், சுக-துக்கங்கள் தோன்றின.

அகரம், உகரம், மகரம், ஐக்கியம் அடையும் போது சிவதரிசனம்.

* என்னவென்று சொல்ல முடியும் இலக்கணம் இல்லாத இறைவனை. விண்ணகத்தில் எல்லாம் ஒடுங்கி இன்புறுவன போல், என்னகத்தே ஈசன் வெளிப்பட்டதும், அங்கே ஈசன் உண்டு. யான் இல்லை.

* உணர வேண்டியது - இறைவனை. உணர வேண்டியது - தன் காலத்தை. உணர வேண்டியது - இறைவனின் அடுத்த நிமிட வல்லபத்தை. உணர வேண்டியது - நீ, உன் உறவு, உன் இன்பம், உன் சொத்து. சான்றாக, சிவ வாக்கியர் அமுதத்தைக் கேட்போம்.

*மாடுகன்று செல்வமு மனைவிமைந்தர் மகிழவே*
*மாடமாளி கைப்புறத்தில் வாழுகின்ற நாளிலே*
*ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே*
*உடல்கிடந்துயிர் கழன்ற வுண்மைகண்டு முணர்கிலர்.*

* வெட்டவெளிய தன்றி மற்றுமொரு தெய்வமில்லையே.

* சித்தர்கள் கருத்து - காமநோய் வென்ற பின் கருத்து உள்ளே வந்த பின் ஊனமற்ற காயம் வந்தபின் இருப்பான் எங்கள் ஈசன்.

* தேகத்துக்குள்ளே ஈசன் மணியரங்க ஜோதியாய் நிறைந்து இருக்கிறது.

* ஞான நாடி அதை வினையாற்ற வைத்துப் பார்த்தால் திக்கெல்லாம் பரப்பிரம்மம்.

* ஜீவர்கள் அடைய வேண்டிய கதி - சிவ கதி.

*சேருவார்கள் ஞானமென்று செப்புவார் தெளிவுளோர்*
*சேருவார்கள் நாலுபாதச் செம்மையென்ற தில்லையே*
*சேருவார்கள் சிவகதி திருவருளைப் பெற்றபேர்*
*சேருமாறு கண்டுநாலுஞ் செய்தொழில் திடப்படே*

**- 448**

* எல்லையற்று நின்ற ஜோதி ஏகமாய், வல்ல பூரண பிரகாச யோகமாய் விளங்கும் ஜோதி.

அந்த ஜோதியைக் கண்டபிறகு அந்த ஜீவன் நல்ல இன்ப மோன

சாகரத்தில் அழுத்தியே, அகங்காரம் நீங்கி யாராலும் நாட முடியாத அமுதத்தை உண்டு ஆனந்தமாய் என்றும் இருப்பாரே.

அத்தகைய அகண்டமான ஜோதியை உங்கள் உள்ளே புகுந்து காண வல்லீரேயானால், ஊனமுள்ள இந்தக் காயத்தை ஆளலாம். உலக பாரத்தையும் ஆளலாம். வானுக்குச் சென்று வான் உலகத்தையும் ஆளலாம் என்று பிறக்கும் போதே சிவ சிவ என்று சொல்லிக் கொண்டே பிறந்த சிவவாக்கியர் சொல்லுகிறார்.

அத்தகைய வல்லபம் உனக்கு வந்து விடும். எத்திசைக்கும் எவ் வுலகிற்கும் எங்கள் பிராட்டி எம்பிரான். எங்கும் கடவுள் ஒருவனே.

* ஆதியான ஒன்று அநேக, அநேக ரூபமாய்ப் பேத பேதமாய் எழுந்து சீவனாய் எங்கும் விளங்குகிறது.

* பரம் இல்லாதது எவ்விடம், பரம் இருப்பது எவ்விடம். அறச் சிந்தனையும், அற வினையும் இல்லாத பாவி களுக்குப் பரம் இல்லை. அது உண்மை. அவர்களுக்குக் கரம் இருந்தும், பொருள் இருந்தும் அருள் இல்லாத போது எல்லாம் பரம் இல்லாத சூன்யமாகும். அவர்களுக்கு எல்லாம் பாழ் நரகமாகும்.

* கடவுள் நல்லவர் அல்லர். அவர் கெட்டவரும் அல்லர். அவர் என்றும் நடுவில் நிற்பவர். அவரை நல்லவர் என்று நீ நினைத்து நல்ல வினையாற்றும் போது, அவர் உனக்கு நல்லவர். அவர் கெட்டவர் என்று தீய வினையாற்றும் போது, அவர் உனக்குக் கெட்டவர். ஆகவே கடவுளை நல்லவர் என்று நினைத்து அவரை நாடி நின்று அவர் நாமம் சொல்ல வேண்டும்.

* விண்ணில் உள்ள தேவர்கள் அறியவொண்ணாத மெய்ப் பொருள் கடவுள்.

* மாணிக்க வாசகர்,
  விண்நிறைந்து, மண்நிறைந்து மிக்காய் விளங்கு ஒளியாய் எண்ணிறந் தெல்லை யிலாதானே! நின் பெருஞ்சீர்.

## சந்தோஷம்

# சித்குரு, சிவகுரு, அருட்குரு அருளானந்த குரு

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவின் திருவுருவைச் சிந்தித்தல் தானே*
*- திருமூலர்*

சந்தோஷம். இது எல்லோருக்கும் தேவை. இதை எங்கே வாங்குவது? இதை மனிதன் தேடுகிறான். மிருகம் தேடுகிறது. மரம், செடி, கொடியும் தேடுகிறது. ஆதியில் ஏக சந்தோஷம்தான் இருந்தது. காலம் வளர வளரச் சந்தோஷம் பிரிந்து எத்தனையோ வகையான சந்தோஷம் ஏற்பட்டு விட்டது. இல்லறத்தானுக்கு ஆயிரம் கோடி சந்தோஷம். துறவறத்தான் சந்தோஷமும் மாறிக் கொண்டு வருகிறது. இரண்டும் கெட்டான் சந்தோஷமும் வித்தியாசப்பட்டுக் கொண்டிருக்கிறது. மரம், செடி, கொடி, புல், பூவின் சந்தோஷத்தை நுணுக்க நுணுக்கமாகப் பார்க்க ஆச்சர்யமாக உள்ளது. ஒட்டு மொத்தமாக ஏக சந்தோஷம் ஒன்று உள்ளது. எல்லா மனிதனுக்கும் சந்தோஷம் தேவை. மனிதரில் வித்தியாசமான பிறவிகள் உண்டு. சந்தோஷமே வேண்டாம் என்பவரும் உண்டு. பிறவியில் வித்தியாசமான ஆத்ம ஞானி உண்டு. முக்தி, ஐக்கியம், இறை தரிசனம் எதுவும் வேண்டாம். அவன் என்ன கொடுப்பது? அவன் இல்லாத இடத்தில் நான் இருந்தால் தானே அவன் சந்தோஷத்தைக் கொடுக்க வேண்டும். அவன் என்னுள் உள்ளான். நான் அவனுள் உள்ளேன்.

இவ்வுலகில் முதல் பிறவி எடுக்கும் ஆடு, புல், பூண்டு, மரம் அனுபவிக்கும் சந்தோஷம் வேறு. கடைசிப் பிறவி சந்தோஷம் வேறு. கடைசிப் பிறவி என்றால் மனிதனாகி, மனிதனாகி, மனிதனாகி கடைசியில் எல்லாப் பிறவியும் நீக்கி இறைவனிடம் சேருவது. அவன் பிரம்ம ஞானி. அவன் சந்தோஷமும் வேறு. ஐக்கியம் அடைந்தவன் சந்தோஷமும் முற்றிலும் மாறுபட்டது. யோகியின் சந்தோஷம் வேறு. வேதாந்தியின் சந்தோஷம் வேறு. சித்தாந்தியின் சந்தோஷமும் வேறு. பக்தர்கள் சந்தோஷம் வேறு. இப்படி, சந்தோஷம் ஒவ்வொருவருக்கும்

வேறு வேறு. மனிதன் கால சந்தோஷத்தில் கோல சந்தோஷத்தில் உள்ளான். நமக்கு மட்டும் நன்மை செய்பவனை நல்லவன் என்றும், நமக்கு மட்டும் தீமை செய்பவனைத் தீயவன் என்றும் சொல்ல இயலாது. ஏனென்றால் அவன் மற்றவருக்குத் தீயவனாகவும் இருக்கலாம். நல்லவனாகவும் இருக்கலாம்.

பிறந்தவுடன் பால் கிடைக்கிறது சந்தோஷம். குழந்தையைக் கொஞ்சுதல் சந்தோஷம். கல்வியில் அதன் வெற்றியில் சந்தோஷம். சுக துக்கம், திருமணம், உடை அணிகலன்கள், பதவி, புகழ், பொருள், மாடிகள் கட்டுதல் சந்தோஷம். மாயை அழிந்தால் சந்தோஷம். நண்பர்கள் நன்றாக இருந்தால் சந்தோஷம். அவர்கள் நம்மைவிட ஒரு நாலுபடி உயர்ந்தால் சந்தோஷம் குறைந்துவிடும். பகைவனுக்குத் துன்பம் வந்தால் சந்தோஷம். நமக்கு நிலையான சந்தோஷம் எது? விஷயம் தெரிந்த, உண்மை தெரிந்த, அனுபவம் நிறைந்த ஆத்ம ஞானி, ஒரு மகான், சித் புருஷர் சொல்லும் பேச்சைக் கேட்பதில்லை. அவரை இடித்துரைக்கின்றனர். இக சந்தோஷம் நிலையற்றது. சந்தோஷம் போன்று இருந்து கடைசியில் அழித்து விடும். பணம், பொருள், நூறு மாடிக் கட்டடம், ஆயிரம் இரண்டாயிரம் அடிமை, ஆயிரம் பெண்கள் மனைவிகள் சுகம், ஆயிரம் ஆண் சுகம், பால் சுகம் இவை எதுவும் சந்தோஷமல்ல. ஆயுளைக் குறைத்து விடும். இது இனவிருத்திக்காக இறைவன் செய்த மாயை. இது சந்தோஷம் போன்று காட்டப்படும். ஜீவன் நினைக்கும் சந்தோஷம் ஆதி அந்தம் உள்ளது. பிறப்பு இறப்பு உள்ளது. முதலும் முடிவும் உள்ளது. சந்தோஷத்திற்கு இரண்டு பக்கம் உண்டு. ஒரு பக்கம் சந்தோஷம். ஒரு பக்கம் துன்பம். ஒரு பக்க சந்தோஷம் கடவுள் சந்தோஷம். மூன்று வயதில் கூட இந்த சந்தோஷத்தை அனுபவிக்கலாம். ஒரு முறை இது வந்தால் போகவே போகாது. அதற்கப்பால் மற்ற சந்தோஷத்தை நாடாது. சந்தோஷத்தை விரும்பும் மனிதனுக்கு சந்தோஷம் என்று தெரியவில்லை. கூழாங்கல்லை வைரம் என்று நினைக்கிறான். வைரமே கிடைத்தபிறகு கூழாங்கல்லை நாடமாட்டான். மனிதன் உருவ மயக்கம் உள்ளவன். எனவே அவனுக்கு உருவத்தைக் காட்டி அருவத்திற்குக் கொண்டு செல்ல வேண்டும். சந்தோர்ஷ ஆனந்தம் சந்தோஷம். அவனைக் கண்டு, நினைத்து உணர்ந்து நெகிழ்ந்து அவனுள்ளே அவனாக இருப்பது சந்தோஷம். இதை உணர்த்துவது சித்குரு.

சித் பெருவெளி, அறிவு, வெளிச்சம், அற்புத சக்தி வாய்ந்த மர்மமான பெருவெளி. ஐம்புலன்களுக்கு அகப்படாத ஒன்று. அங்கிருந்துதான் ஐம்பூதங்களும் வந்தன. அந்தராத்மாவில் அது சித்ரூபமாய் இருக்கிறது. எத்தனை கண், காது, வயிறு, இதயம் இருந்தாலும் ஆத்மா இல்லையென்றால் இவை எதற்கும் வேலையில்லை. வந்தார், நின்றார், இருந்தார், கிடந்தார், சென்றார். இதுதான் நமது வாழ்வு. கூட்டுக்குள் உள்ள அகங்காரம். அவனை தலை நிமிர்ந்து நடத்துகிறது. சித் என்றால் அது தான் எல்லாம். இறை சந்தோஷம் இங்கு உள்ளது. எத்தனை பிறவி எடுத்தாலும் நம்முடனே வந்து நம்மைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று கரை சேர்த்து விடுவார். அவரே சித்குரு. அவர் இறை மர்மத்தைக் காட்டுகிறார். முற் பிறவியில் பத்து படி சாதனையை முடித்தவன், இப்பிறவியில் பதினோராவது படி சாதனையைத் தொடங்குகிறான். முற்பிறவியின் பத்து படி சாதனையையும் முடிக்க சித்குரு உடன் இருந்து உணர்த்தினார். ஆனால், அவன் அறியாமை நிறைந்த வனாகையால் இதை உணராமல் எனக்கு குருவே இல்லை. நானே இந்த பதினோராவது படி சாதனையைச் செய்கிறேன் என்று கூறுகிறான். சென்ற பிறவியிலேயே குரு உணர்த்தினார். இறைவனுடன் சேரும் வரை உடன் இருந்து உணர்த்துகிறார். அறியாமை மனிதனுடன் பிரயாணம் செய்து கொண்டே இருக்கிறது. சித் சொரூபிகள் எங்கும் உள்ளனர். அகங்காரம் உள்ளதால் மறைந்த ஆத்ம ஞானிகளைப் பார்க்க முடியவில்லை. நமது சக்தி பூராவும் வெட்ட வெளியில் உள்ளது. நமது பிரார்த்தனை வெட்ட வெளியில் கலக்கிறது. அதுதான் நமக்கு நன்மை செய்கிறது. ஒன்றுமே தெரியாத ஒரு காட்டு மனிதனுக்குக் கூட அவன் தனது துன்பங்களை கஷ்டங்களைக் கூறி வருந்தும் போது அதைக் கேட்டு வெட்ட வெளி அவனுக்கு நன்மை செய்கிறது. அறியாமை நீங்கினால் பெரு வெளி தெரியும். அதைக் காட்டுபவர் சித்குரு. வெட்ட வெளியில் அனைத்து சக்திகளும் உள்ளதால்தான் எங்கிருந்து எதை வேண்டினாலும் எந்த மார்க்கமாக இருந்தாலும், மரம், செடி, கொடிகளைக் கூட வணங்கினாலும் வெற்றி கிடைக்கிறது. எந்த இறை மார்க்கமாக இருந்தாலும் நம்மிடம் ஜெயிக்கிறது. இடைவிடாத ஒரு சக்தி எங்கும், சத்திய நிலையில் நிறைந்து இருக்கிறது. சற்குரு மனிதனை முறைப்படுத்துகிறார். நெறிப்படுத்துகிறார். இப்படித்தான் வாழ வேண்டும் என்று உணர்த்தி அவனை முழுமையாக்குகிறார். சித்குரு

இறைவனுக்கும் நமக்கும் ஓர் ஒற்றுமையை உண்டாக்குகிறார். அங்கு நம்மை அழைத்துச் செல்லுகிறார். அவனுக்கு மட்டுமே மானசீக தீட்சை கொடுக்க முடியும். சித்குரு தனது பணியை இப் பிரபஞ்சத்தில் எந்த கண்டத்தில் வேண்டுமானாலும் இங்கிருந்தபடியே செய்யலாம். எந்த சட்டத்தையும் (கற்பனை சட்டம்) மதிக்க மாட்டார். அமைதியாக இருப்பார். எதற்கும் அஞ்சமாட்டார். அவர் நம்மை நல்வழிப்படுத்தவே வந்தவர் சித்குரு ஞானகுரு. சித்குரு அருட்குரு சித்குரு அன்பு குரு. சித்குரு நம்மை இறை நிலைக்குக் கொண்டு வருவது. இறைவன் மனித வடிவத்தில் வந்து இந்த உலகத்தில் தன் அற்புதங்களை நடத்திக் கொண்டிருக்கிறார். சத்குருவினுள், சித்குருவினுள் இறைவன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். பெரும் குருவிடம் கேள்வி கேட்கத் தேவையில்லை. ஒருவன் வந்து அவர் முன் உட்கார்ந்த உடனேயே அவனைப் பற்றிய அனைத்தும் அவருக்கு உணர்த்தப்படுகிறது. ஆக வாயால் சொல்லத் தேவையில்லை. இதுதான் ரகசியம். உயிர் ரகசியம். ஜெக ரகசியம். சிவ ரகசியம். சீவ ரகசியம் உண்டு. இதைக் காட்டுவது சித்குரு. மரணம் வருவதைச் சொல்வது ரகசியம். மரணம் வருவதைச் சொல்லக் கூடாது என்பது ரகசியம். சித்குருவின் தேகம் தெய்வதேகம். தெய்வநிலை அவர் பார்வையால், சொல்லால், செயலால் மற்றவரை பிரகாசப்படுத்துகிறார். அவருடைய ஸ்பரிசம் அருட் சக்தியைப் பரவச் செய்கிறது. சமைக்கக் கற்றுக் கொடுப்பவர் சற்குரு சமைத்துக் கொடுப்பவர். சாப்பிட வைப்பர் சித் குரு. மரணம் நம் கையில்தான் உள்ளது. இந்த உடலோடு ஐக்கியம் அடையலாம்.

குருவை நினைக்க நினைக்க தெய்வம் நம்மை நினைக்கிறது.

குருவைச் சிந்திக்க சிந்திக்க தெய்வம் நம்மைச் சிந்திக்கிறது.

குருவை நமஸ்காரம் செய்யச் செய்ய தெய்வம் நம்மை ஏற்றுக் கொள்கிறது.

குருவை ஆலிங்கனம் செய்யச் செய்ய தெய்வம் நமக்கு அருள்பாலிக்கிறது. ஆனந்தம் கொடுக்கிறது.

குருவைத் தொடும் போது தெய்வத்தைத் தொடும் உணர்வு வருகிறது.

குரு நம்மைப் பார்க்கும் போது தெய்வம் நம்மைப் பார்க்கிறது.

ஏனென்றால் குருவினுள் தெய்வம் இருக்கிறது. குருவே தெய்வம். இவ்வுலகில் மூன்று பேரை நம்பலாம். சற்குரு, கடவுள் உன்னை நம்பலாம்.

சிவகுரு : வெள்ளிக் கிழமை எல்லா மதமும் போற்றும் நாள். உலகில் மூன்று பெரிய மதங்கள் உள்ளன. இந்து, முஸ்லீம், கிறிஸ்துவம். வெள்ளிக் கிழமை அற்புத சக்தி வாய்ந்த சக்தியின் திருநாள். பெண்கள் அலங்காரமாக கலகலப்பாக இருப்பார்கள். ஞாயிறு சிவத்தின் திருநாள். வெள்ளிக் கிழமைகளில் பெண்கள் பெரும் நோன்பு இருப்பர். பூஜைகள் செய்வர். விரதம் இருப்பர்.

ஒரு குருவானவர் மூன்று நிலையில் நின்று நம்மை வழி நடத்துகிறார். 1. சற்குரு 2. சித்குரு 3. சிவகுரு. பஞ்ச குருக்கள் உண்டு. சற்குரு புறநிலையில் மனித ரூபத்தில் நம்மிடம் பேசுகிறார். சித்குரு சூக்கும நிலையில் சாதகனின் அறிவில் புகுந்து பணியாற்றுகிறார். சிவகுரு தானே சிவஐக்கியம் கொடுக்கிறார். தானே இறைவனாய்ப் பணிபுரிகிறார். மூன்றையும் செய்பவர் ஒருவரே. மூவரின் பணியும் ஏறுமுகப்பணி. 'சி' அனாதியான பெருவெளி. 'வ' சக்தி இயங்க வைப்பது. சக்தி இல்லாமல் நாக்கு பேசாது. நாதம் சக்தி சொரூபம். ஜோதி சிவ சொரூபம். கறந்த பால், புதிய இளநீர், பிறந்த குழந்தை இவைகளில் ஒரு வெப்பம் இருக்கும். சற்குரு பணி முடித்த பிறகு சித்குரு பணியும் முடித்த பிறகு அவர் சிவகுருவாகக் காட்சியளிக்கிறார்.

சற்குரு சீடனைப் பரிசீலனை செய்கிறார். தூய்மையாக்குகிறார். புனிதமாக்குகிறார்.

சித்குரு பரிபூரணமாக்குகிறார். உங்களுக்காக மற்ற ஜீவன்களினுள் நுழைகிறார். மரம், செடி, கொடிகளினுள் உனக்காக நுழைகிறார். காற்று, நீர், நெருப்பு, பூமி இவைகளினுள் சித் சொரூபியாக நுழைகிறார். சிவகுரு முதல் இரண்டும் முடிந்த பிறகு தரிசனம் கொடுத்து தன்மயமாக்கிக் கொள்கிறார்.

சித்குரு சாதகர் எங்கிருந்தாலும் அவர் அறிவில் புகுந்த வேலை செய்கிறார். விழிப்பில் தோன்றுவார். துரியம், துரியாதீதம், திருச்சிற்றம்பலம் கபாலத்தில் தோன்றுவார். காட்டில் தவம் புரியும்

பொழுது காட்டு மிருகங்களினுள் புகுந்து அவை நமக்குத் தொல்லை கொடுக்காமல் காக்கிறார். நீர் வருவதையும், நெருப்பு பற்றுவதையும் சரி செய்கிறார். காட்டில் சித்குரு எல்லா நிலையிலும் சூக்குமத்தில் அனாதியாக நின்று அனைத்துக் காரியங்களையும் செய்கிறார். சிவகுரு வந்தவுடன் தேகம் போய்விடும். சித்குருவின் பணி தேவையில்லை. முதலில் சத்குரு பணி தொடங்கும். சகஜ நிலையில் பேசும்போது சற்குரு. ஞானம் பேசுவது சித்குரு. தரிசனம் கொடுப்பது சிவகுரு. வடநாட்டில் தரிசன நேரம் என்று உண்டு.

சாதகன் புத்தியை நெற்றியில் வைக்க வேண்டும். சிரசில் வைக்க வேண்டும். வயிற்றில் ஈன புத்தி, மார்பில் இக புத்தி, நெஞ்சில் விலகின புத்தி, நெற்றியில் ஞான புத்தி, சிரசில் சிவபுத்தி. குருவின் அருட்சக்தி சீடன் மேல் பட்டு அவனைத் தூண்டிவிடும். நாம் பிண்டத்துள்தான் இருக்கிறோம். அண்ட வெளியில் சிதாகாசப் பெருவெளியில் சிவஞான பெரு வள்ளலாக உள்ளவர் சிவகுரு. அவர் பேரானந்த வள்ளல். ஜீவனைப் பிரகாசப் படுத்தினால் குருவின் கபாலத்திலுள்ள அருட்சக்தி அவனுள் பாயும். ஆங்காங்கே ஞானிகளைத் தன் தூதனாக இறைவன் அனுப்புகிறார். நாம் தியானம் செய்யும் போது அவர்களின் அருட்சக்தி நம்மை வந்தடைகிறது. ஞானிகளை வெறுப்பவன் அஞ்ஞானி. ஞானிகளை வெறுப்பவனுக்கு இறை வெற்றி கிடைக்காது. சிவமே குருவாகச் சிவகுரு என்று பெயர் பெறுகிறார். அனாதி வஸ்துதான் சிவம். பரம், கர்த்தா, மனித குரு சூக்கும குருவாகி கடவுளே குருவாகி வருகிறது. அவரே சிவ குரு.

நிலைத்த மெய்ஞ்ஞான பிரம்மப் பேருணர்வு பார்த்தார் ஸ்ரீ அரவிந்தர். எல்லாவற்றையும் ஒன்றாக இப்படி ஒரே நிலையில் காட்டுவது சிவகுரு. மனதைக் கடந்து விட்டவர் சற்குரு. சந்நியாசிகளுக்கு இறைவனுக்கு மட்டுமே சாபம் கொடுக்கத் தகுதியுண்டு.

சுவாமி விவேகானந்தர் சிகாகோ மாநாட்டில் பேசச் சென்றிருந்தார். என்ன பேசுவது என்று தெரியவில்லை. பேச அழைக்கும் போதெல்லாம் அடுத்து பேசுகிறேன் என்றே கூறிக் கொண்டிருந்தார். திடீரென்று எழுந்திரு. போய்ப் பேசு என்று ஓர் உட்குரல் கேட்டது. எழுந்தார். ஒலி பெருக்கியின் முன் நின்று சகோதரர்களே சகோதரிகளே என்று

ஆரம்பித்து நீண்ட நேரம் பேசினார். எங்கும் ஒரே அமைதி. என்ன பேசுவது என்று தெரியாமல் இருந்த அவருக்கு விஷயங்களை உணர்த்தி நீண்ட நேரம் அனைவரும் வியக்கும்படி பேசச் செய்தது சிவகுரு ஆகும். சீடனின் மூச்சோடு சற்குரு இருக்கின்றார். தாய் தந்தை மற்றவர்களால் செய்ய முடியாத பணியைச் சற்குரு செய்கின்றார். சீடனுக்கு வரும் இடையூறுகளைத் துன்பங்களை நீக்கி விழிப்போடு அவனோடேயே பயணம் செய்து இறைவனிடம் அவனை ஒப்படைத்து விடுகிறார். இந்தப் பணியை சத்குரு, சித்குரு, சிவகுரு மூவரும் செய்கின்றனர். சித்குரு உலகிலிருந்து விலக்கி நம்மைத் தூக்கிச் செல்லுகிறார். மூன்று குருவையும் உணர்ந்தவர்களுக்கு பணம், பதவி எதுவும் பெரிதல்ல. மூன்று குருவின் அருளுக்கும் பாத்திரமாகப் பக்குவமடைய வேண்டும்.

அருட்குரு : குருவே அருளானவர். அருளே குருவானது. அருள்வதற்கே இங்கு வந்துள்ளார். அருள் ஒன்றினாலேயே இருளை நீக்க இயலும்.

அருள் என்பதற்கான பொருள் கடவுள் தயவு என்பதாகும். மனித தயவுகளை ஜீவகாருண்யம் என்று அழைத்தல் வேண்டும். அருளின் வல்லமையில் கடவுளின் ஆற்றல் அத்தனையும் அடங்கியுள்ளது. அருளால் அனைத்தையும் செய்யலாம். அருளால் முடியாதது எதுவுமே இல்லை. அருளே கடவுள் அருளின் வல்லமை முழுதும் உணர்ந்தவர் சற்குரு ஆவார். கடவுளுடைய பேரருள் முழுமையும் சற்குருவிற்குக் கொடுக்கப் பட்டுள்ளது. சற்குரு எல்லாவற்றையும் அருள் மூலமே பார்க்கிறார். அருளாலேயே எதையும் செய்கிறார். அருளாலேயே உலகத்து உயிர்களைக் காக்கின்றார். உலகத்து உயிர்களின் துன்பங்களைத் துடைத்து ஆறுதலளித்து அவைகளுக்கு சத்சித் ஆனந்தம் அளிப்பது அது. சற்குருவே அருட் குருவாவார்.

பரத்தைப் பற்றியும், பரத்துக்கு மாற்றான அபரத்தைப் பற்றியும், இறைவனைப் பறிறயும் பூவுலகைப் பற்றியும் விரிவாக விளக்குவது அருட் குருவாகும். சூரிய நிலையும் சந்திர நிலையும் அதனுடைய மாற்றங்களையும் அறிந்து அனைத்தையும் தெரிந்து காட்டுவது அவராகும். கணநிலை அவற்றின் ஆதிமூலமான கருநிலை. அவற்றின் குணாதி குணங்களை இந்த உலகிற்கு அறிவிப்பதும் அவரேயாகும். இறைவன், ஜீவாத்மா பாசம் அதாவது பதி, பசு, பாசம் ஆகியவைகளைத்

தெளிவாகத் தெரிந்து வழங்குவது அருட்குருவாகும். பிரம்ம இரகசியத்தைச் சொல்வது பரம இரகசியத்தைச் சுட்டிக் காட்டுவது சிவ இரகசியங்களைத் தெரிவிப்பது அதன் புதுமைகளை யெல்லாம் காட்டுவது ஞான சற்குருவேயாகும். அருட் குருவுக்கு ஞான சற்குரு என்ற பெயரும் உண்டு. சத்தியமனைத்தும் சித்தி நிலைக்குக் கொண்டு வருவது அவரேயாகும். அறிய வேண்டியவை களையெல்லாம் தெளிவாகச் சொல்வது ஞான குருவேயாகும். கேட்க வேண்டியவை களையெல்லாம் கேட்க வைப்பது சற்குருவாகும். காண வேண்டியவை களையெல்லாம் காண வைப்பது அந்தப் பதவியைத் தருவது ஞான குருவாகும். எல்லா தரிசனங்களையும் காட்டுவது ஞான குருவாகும். எந்தெந்த வினைகளை ஆற்ற வேண்டுமோ அந்தந்த வினைகளைச் செய்ய வைப்பது அவரேயாகும். உண்ண வேண்டியவைகளை மட்டும் உண்ண வைப்பது, கொள்ளத் தகாதவைகளை உண்ணாமல் காப்பது அந்தப் பரம சற்குருவேயாகும். சாகாக் கல்வியின், நிலையெல்லாம் போதித்து ஒரு நிலமிசையில் ஏற்றி வைப்பது அருட்குருவேயாகும். சிவ சித்திகளையும் மெய் நிலையில் அளித்து விளங்க வைப்பது ஞான குருவாகும். எல்லா நிலைகளிலும் ஏற்றி வைத்து சித்துகளுக் கெல்லாம் தலைவனாக்குவது சற்குருவாகும். அருள் என்பது பெரும் சக்தி. அது சிவத்திடம் இருந்து வருகிறது. இதற்குக் கொடுத்தல், அளித்தல் என்பது பொருள். அருள் என்பது தான் செய்த தவம் முழுவதும் பூரணமாக சிவத்திடம் தந்து விட்ட பிறகு சிவத்திடம் இருந்து சிவத்தின் சக்தி இவருக்கு வருவது. குடும்பக் கஷ்டம் நீக்க, மனிதக் கவலை நீங்க, இக துன்பம் போக, தான் செய்த பாவங்களை நீக்க, வழக்கு ஜெயிக்க, நோய் நீங்க அருட்குரு சக்தியைப் பயன்படுத்த முடியாது. பயன் படுத்தக் கூடாது. இறைபாதையில் செல்ல மட்டுமே பயன்படுத்த முடியும். சாதகனின் இடையூற்றை நீக்க உயர்ந்த உத்தம சாதகனுக்கு முக்தி கொடுக்க அவரின் சக்தி பயன்படும். இத்தகைய பெருநிலை வாழ்வு சக்தியை சாதாரணச் செயலுக்குப் பயன்படுத்தக் கூடாது. பேருக்கும், புகழுக்கும் அருட் சக்தியைப் பயன் படுத்தக் கூடாது. இறைவனின் பேரருள் தனிப்பட்ட ஒன்று. அத்தகைய அருள் உடையவர்கள் மிகவும் குறைவு. பேருக்காகவும், புகழுக்காகவும் உழைப்பவர்கள் தான்தான் என்ற தன்முனைப்பு உள்ளவர்கள். அகங்காரம் உள்ளவர்களுக்கு இந்த அருட்சக்தி கிடைக்காது. பேதமற்ற அன்பு, சுத்த நிலை சுகானந்த நிலை, சுப நிலை, பூரண சரணாதி பெற்றவர்கள். எளிமையிலும்

எளிமையானவர் களுக்கு மட்டுமே அருள் கிடைக்கும். இது பெறுதற்கரிய ஒன்று. இறைவனின் அருளுக்காக நாம் கெஞ்சுவது, வேண்டுவது, அழுவது கிடையாது. ஆண், பெண், அலி பேதமின்றி அருள் கிடைக்கும்.

*பாரம்பரியத்தில்* இரண்டு பெரும் குரு பரம்பரை உண்டு. *தத்தாத்ரேயர்* பரம்பரை. ஆதிசங்கரர் பரம்பரை. எல்லோருக்கும் குரு உண்டு. உயர்ந்த மெய்ஞ்ஞானிகளுக்கு குரு உண்டு. இராம கிருஷ்ணருக்குக் குரு உண்டு. குரு என்ற சொல் பரம் பொருளை நோக்கி அழைத்துச் செல்பவருக்கே பொருந்தும். சற்குருவே பிரம்மம். அவரே கடவுள். வேதாந்த தத்துவம். சைவ சித்தாந்த தத்துவம், சன்மார்க்க தத்துவம் போன்று குரு தத்துவம் உண்டு. தன்னுள்ளே மெய்ஞ்ஞானக் கனல் களன்று எழுந்தால் அதைத் தடுத்து நிறுத்த யாராலும் இயலாது. குருநிலை தெரிந்து முன்னால் அமர்ந்து விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம்.

கங்கைக் கரையில் ஒரு நாள் ஒரு சற்குரு தன் 15 சீடர்களுக்கு பிரமமம். பரம்பொருள். பரமாத்மா இறைவன் இதைப் பற்றிப் பேசினார். உள் பேருணர்வுத் தூண்டுதலை உண்டாக்குபவரே குரு. ஓர் ஆர்வமுள்ள தாழ்ந்த சாதி சாதகன் பர்ணசாலைக் கருகில் உள்ள ஒரு குப்பைத் தொட்டியில் உட்கார்ந்து பாடம் கேட்டான். சில நாட்கள் கழித்து அந்த சற்குரு தன் சீடர்களிடம் பரமாத்மாவைப் பற்றிச் சில கேள்விகள் கேட்டார். அனைவரும் திகைத்தனர். குப்பைத் தொட்டியிலிருந்து பதில் வந்தது. குருநாதர் "யாரங்கே அந்த பிரம்மம் இங்கே வரட்டும்" என்றார். அந்த சாதகன் பிரம்ம ரூபமாகவே வந்து அவரை நமஸ்கரித்தான். ஆர்வம் இருந்தால் எதையும் அப்படியே பிடித்துக் கொள்ளலாம். இந்த உலகிற்கு அப்பால் வேறொன்றும் உண்டு என்று கண்டு கொண்டால் அதைத் தடுத்து நிறுத்த யாராலும் இயலாது. ஒரு நாள் மாலை 6.00 மணியிருக்கும். நர்மதா நதிக்கரையில் ஸ்ரீ அரவிந்தர் நடந்து கொண்டிருக்கும் பொழுது 400 ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்த யோகி சுவாமி பிரம்மானந்தா என்ற ஞானியைப் பார்த்தார். வணங்கினார். நமஸ்கரித்தார். யாரையும் ஏறிட்டுப் பார்க்காத அந்த ஞானி ஸ்ரீ அரவிந்தரைப் பார்த்தார். முழுமையாகப் பார்த்தார். பார்த்தார் என்றால் அருளைக் கொடுத்தார்எ ன்று பொருள். காட்டுப் பகுதியாக இருந்ததால் அங்கு ஆயிரக் கணக்கான பேர் மாலை 4.00 மணிக்கே வந்து தரிசனம்

செய்து விட்டுப் போய்க் கொண்டிருப்பார்கள். ஆயிரக் கணக்கான பேர் வந்தால் ஆயிரக் கணக்கான நோக்கோடு பார்ப்பார்கள். ஞானிகள் எந்த நோக்கோடு பார்க்கின்றார்களோ அந்த நோக்கம் நிறைவேற வேண்டும். கடைக்கண் பார்வை என்பர். சச்சிதானந்தப் பார்வையில், ஆனந்தப் பார்வையில் அவன் கடைத் தேறிவிடுவான். அந்தத்திற்கு அப்பால் உள்ளது. கடவுள் ஐக்கியம்.

சென்னை திருவொற்றியூரில் ஒரு ஞானி அமர்ந்து கொண்டு இதோ கழுதை போகிறது, நாய் போகிறது, நரி போகிறது, குதிரை போகிறது, பன்றி போகிறது, மாடு போகிறது என்று சொல்லிக் கொண்டிருப்பார். அப்படி யென்றால் அவர்கள் அந்தந்த மிருகங்களின் குணத்தைப் பெற்றிருக் கிறார்கள் என்று பொருள். வடலூர் இராமலிங்க சுவாமிகள் அங்குச் சென்றார். அவரைப் பார்த்ததும் அந்த ஞானி இதோ மனிதன் போகிறான் என்றார். இராமலிங்க சுவாமியையே மனிதன் என்றால் தெய்வம் எப்படி இருக்கும்? இதுதான் அருட்குரு, சற்குரு என்று கேள்விப் பட்டவுடன் ஐம்புலன்கள், பஞ்சேந்திரியங்கள், அகங்காரம், மாயை ஒடுங்கும். குருவின் சொல் சப்த பிரம்மத்திலிருந்து வருகிறது. ஆனந்தம் கொடுக்கிறது. அவரது நாதம் அருள் நாதமாக வரும். பார்வை சுத்த பார்வை. சொல் சுத்தச் சொல். பேச்சு முற்றிலும் மாறுபட்டு இருக்கும். சத்துவ குணம், பரசாந்தம், பொறுமை, நிதானம், நேற்று இன்று நாளை பேச வேண்டியவை மட்டும் வரும். பேசக் கூடாதவை இருக்காது. ஆத்ம சாதகர்களுக்குத் தனி முகம் அமையும். அன்பு, பணிவு, அடக்கம், பூரண சரணாகதி இந்நிலை அருட்குரு. அதில் சிவத்தின் வெளிச்சம் உண்டு. (அருட்குரு) எல்லா சுகங்களையும் விட்டு விட்டு பகவானையே நினைத்துத் தன்னை உருக்கித் தவம் செய்து தவசக்தியைப் பெறுகிறார் அருட்குரு. அப்படிப்பட்ட சக்தியை உலகோருக்கு இக நிலையில் நன்மை செய்ய எதிர் பார்ப்பது தவறாகும். ஆத்மாவிலிருந்து ஆத்ம சக்தியை வெளியில் நயனத்தில் கொண்டு வந்து அதன் மூலம் வெளிப்படுத்துவது அருட்குரு. ஒரு நல்ல சாதகன் சர்வ லட்சணம் பொருந்தி யவனாக இருப்பான். அப்படிப்பட்ட சாதகனை இப்பொழுது பார்ப்பது அரிது.

அருளானந்த குரு : ஞாயிற்றுக் கிழமை மிகச் சிறந்த நாள். எனது சற்குரு உலகத்திற்கு வந்தது ஞாயிறு. ஞானம் பெற்றது ஞாயிறு. உபதேசம் பெற்றது ஞாயிறு. ஆசி வழங்கியது ஞாயிறு. அவருக்குக்

கிடைத்த நல்லவை யெல்லாம் ஞாயிற்றுக் கிழமை. எனக்கு சற்குரு சந்தோஷமே முதன்மையானது. இறைவன் கூட இரண்டாவதுதான். எல்லா வல்லமையும் பெற்றிருந்தாலும் பிறருக்குக் கொடுக்க வேண்டும் என்பதல்ல. கொடுப்பதும் கொடுக்காததும் அவர்களின் தனிப்பட்ட உரிமை. படுக்கை சுகம், பார்க்கும் சுகம், கேட்கும் சுகம், ருசி சுகம் போன்ற இவ்வுலக சுகம் அனைத்தையும் விட்டுத் தன்னை உருக்கித் தவம் செய்து பெற்ற சக்தியை இந்த இக உலக வாழ்விற்காக அவர்களது இக சுகத்திற்காகச் செலவிட வேண்டும் என்று மனிதன் நினைக்கின்றான். அதற்காக இரண்டு முழம் பூவையும் இரண்டு பழத்தையும் கொடுப்பான். பணத்தால் ஆவதைப் பணத்தால் செய்ய வேண்டும். மனதால் ஆவதை மனதால் செய்ய வேண்டும். அறிவால் ஆவதை அறிவால் செய்ய வேண்டும். பதவியால் ஆவதை பதவியால் செய்ய வேண்டும். இத்தனையாலும் முடியாத ஒன்றைத் தவத்தால் செய்ய வேண்டும். வக்கீலாக இருந்தாலும், டாக்டராக இருந்தாலும், பொறியியல் வல்லுநராக இருந்தாலும் அவருக்குரிய தொகையைக் கொடுத்தால் தான் வேலை நடக்கும். ஆனால், தன்னையே அர்ப்பணித்து, வருத்திக் கொண்டு வந்த தவசக்தியை இந்த உலகாயுத மனிதன் இலவசமாகப் பெற நினைக்கிறான். அதுவும் இவருக்கு என்ன பிள்ளையா குட்டியா செய்யட்டுமே என்ற வியாக்யானம் வேறு. அதனால்தான் ஞானிகள் பலர் இலை மறை காய் போன்று வாழ்ந்தார்கள். ஒரு சிறந்த பிரம்ம ஞானியாக இருப்பான். தனக்கு ஒன்றுமே தெரியாது என்று சொல்லி ஒதுங்கி விடுவான். தன்னைக் காட்டிக் கொள்ளவே மாட்டான். சுத்த பிரம்ம ஞானி, ஆத்ம ஞானி, மகான் என்னுள் நான் அமைதியாக இருக்கிறேன். அதைக் கெடுக்காதீர்கள். நான் கடினமாக உழைத்துப் பெற்றதைப் போல் நீங்களும் உழைத்துப் பெறுங்கள். மற்றவர்களிடம் ஏன் கெஞ்சுகிறீர்கள்? என்பார்கள். தான் நினைப்பவருக்கு முக்தியைக் கொடுக்க வல்லவர் அருளானந்த குரு. திருவாரூர் தட்சிணா மூர்த்தி சுவாமிகள் தம் தாய் தந்தையருக்கு முக்தியளித்தார். ஆதி சங்கரர் தம் தாய்க்கு மும்மூர்த்தி தரிசனம் செய்து வைத்தார்.

கையால் சாப்பிடும் ஞானி உண்டு. சட்டியில் சாப்பிடும் ஞானி உண்டு. இலையில் சாப்பிடும் ஞானி உண்டு. காற்றையே உணவாகக் கொள்ளும் ஞானியும் உண்டு. அப்படி காற்றையே உணவாகக் கொண்டு வாழ்ந்தவர் தான் ஆந்திராவில் மும்முடிவரம் பாலயோகி

சுவாமிகள். இகத்தில் காரியம் செய்ய வேண்டுமென்றால் உலகிற்குத் தன் சக்தியைப் பயன்படுத்தும் நிலைவந்தால் உணவு வேண்டும். தன் காற்றே தனக்கு உணவு தன் காற்றைச் சொந்தம் கொண்டாடினால் அது நம்மைச் சொந்தம் கொண்டாடும். இந்த தேகம் மண். நமக்குத் தலையில் இருக்கும் வெட்டவெளிதான் சொந்தம். பிரம்மரந்திரம் லலாட ஜோதி புருவமத்தியிலுள்ள லலாட ஜோதியை நம் காற்றைக் கொண்டு சுத்தப்படுத்த வேண்டும். மௌனத்தால், ஜெபத்தால், தவத்தால், நல்ல நினைவுகளால் நல்ல செயலால், உயர்ந்த எண்ணத்தால் சுத்தப் படுத்த வேண்டும். பிரம்மரந்திரத்தில் ஒரு சிறு துவாரம் உண்டு. 60 வெற்றிலையை அடுக்கி அதை ஒரு குண்டூசியால் குத்தி அடியில் உள்ள வெற்றிலையில் விழுந்த குண்டூசி துவாரத்தை பத்துப் பங்காக்கி அதில் ஒரு துவாரம் எவ்வளவு அளவோ அந்த அளவு பிரம்மரந்திர துவாரம் இருக்கும். அதை ஒரு ஜவ்வு மூடி இருக்கும். அது நம் ஞான வெப்பத்தால் திறக்கப்பட வேண்டும். கண்ணை உள்நோக்கிக் கொண்டு போக கபாலத்தில் வைத்து அதிலிருந்து லலாடத்தில் மகாநாதத்தில் கலக்க அது வெட்ட வெளியில் ஒன்று கலக்க சிவசக்தி தெரியும். உள்நோக்குப் பார்வையில் வெட்ட வெளியைப் பார்க்க வேண்டும். மேலே சென்றால் அந்த துவாரத்தின் வழியே சொரூப சக்தி தெரியும். காற்றில் ஒளியுண்டு. சூட்சும நாடியில் ஒளியுண்டு. இரண்டும் ஒன்று சேர அது பேரொளியாகிக் குண்டலினி கிளம்பி ஆறு இடங்களையும் தாண்டி லலாடத்தில் நிற்கும். அங்கு ஆயிரங்கால் மண்டபம் இருக்கும். அங்கு பெரும் பெரும் இரகசியம் உண்டு. கபாலத்தில் எவ்வளவோ இரகசியம் உண்டு. அங்கே பெரிய மண்டபம். அதன் வழியே வெட்ட வெளி தெரியும். பிரம்ம ரந்திரத்திலுள்ள அந்தச் சிறு துவாரத்தின் வழியாகத் தான் பல ஞானிகளுக்கு ஜீவன் பிரியும். மூட தேகம், துர்தேகம், சூன்ய தேகம், அசுர தேகம் இவையெல்லாம் போக்குபவர் அருளானந்த குரு. எந்த மயக்கத்திற்கும் மயங்காதவன் ஞானி. மயக்கம் அவனுக்கு அடிமை. பஞ்ச குரு உண்டு. அருளானந்த குரு முழு சந்தோஷத்தைக் கொடுக்க வல்லவர். அதோடு மட்டுமல்ல. சந்தோஷத்தைப் பெற்றவர்கள். அதை மற்றவர்களுக்கும் கொடுக்கும் ஆற்றலையும் அவர் அவர்களுக்குக் கொடுக்கிறார். அவரே அருளானந்த குரு. அவர் ஞான வள்ளல். ஆன்மீகத்திற்குப் புகழ் பதவி பெருமை தேவையில்லை.

மனிதன் மட்டுமல்ல. மரம், செடி, கொடிகளும் இறைவனை வணங்குகின்றன. அவைகளுக்கும் இறை நினைவு, இறை உணர்வு உண்டு. புல்லுக்கும் இறை உணர்வு உண்டு. அதுவும் இறைவனை வணங்குகிறது. ஒரு விதையை பூமியில் நட்டால் மூன்று நாட்களில் விதையிலிருந்து வரும் அந்த மென்மையான பகுதி மண்ணை மேலே தூக்கித் தள்ளிக் கொண்டு வெளியே வருகின்றது. இது சிவகுருவின் பணி.

சத்குரு, சித்குரு, சிவகுரு, அருட்குரு, அருளானந்த குரு இவர்கள் ஒரு மனிதனைத் தெய்வமாக்குகின்றார்கள்.

சந்தோஷம்

## ஒரு நல்ல சீடனுக்கு வேண்டிய பத்து குணங்கள்

1. நற்பண்பு
2. வாய்மை
3. இரக்கம்
4. நல்லறிவு
5. பொறுமை
6. குருவின் அடி நீங்காமை
7. உண்மை அறிவின்பப் பெரும் பொருள் உணர்வு
8. தெளிவு
9. ஓர்வு
10. அருள் நிகழ்ச்சி

# மானசீக குரு

சத்குரு சீடர்களுக்கு அருட்பாலிப்பதில் 3 முறைகளைக் கையாளுகின்றனர்.

1. சீடருக்கு மந்திர உபதேசம் செய்து, சில முறைகள் சொல்லித் தந்து, தன்னை விட்டு அனுப்பி விடுவதுண்டு. சீடர்கள் சத்குரு ஆணைப்படி செயல்பட்டு சாதனை செய்து வெற்றி பெறுவதுண்டு.

2. சீடர்களை சத்குரு தன் அருகிலேயே வைத்துக் கொண்டு தன் அருட் பார்வையில் வைத்துக் கொண்டு தன் கவனத்திற்குள்ளே வைத்துக் கொண்டு பயிற்சி அளிப்பதுண்டு. அக்காலத்தின் குருகுல வாசம் பொருந்தும். இம்முறையிலும் சீடர்கள் ஆன்மீக வெற்றி பெறுவார்கள்.

3. சரியான தகுதி வாய்ந்த சீடர்களைத் தேர்ந்து எடுப்பார்கள். அவர்கள் எங்கே இருந்தாலும் குறிப்பாகப் பல ஆயிரம் மைல்களுக்கப்பாலிருந்தாலும் தான் இருந்த இடத்திலிருந்தே அவர்களுக்கு மானசீக தீக்ஷைக் கொடுத்து அவர் சூக்ஷ்ம தேகத்தை அனுப்பி சீடருக்குள்ளே இருந்து சீடரை ஆன்மீகத்தில் வளர்ப்பார்கள். இத்தகைய சீடர்களும் ஆன்மீகத்தில் வெற்றி பெறுவது நிச்சயம். ஆனால், இதில் ஒரு நிபந்தனை உள்ளது. சீடர் சென்ற பிறவியிலேயே பரிசுத்தமாக இருத்தல் வேண்டும். சத்குருவிடம் போதிய சரணாகதி அடைந்திருத்தல் வேண்டும். சத்குருவே கடவுளெனக் கருதி வாழ்தல் வேண்டும். மற்ற தெய்வ வழிபாடுகள் கூடாது.

1. சீடர் சத்குருவின் மீது தீரா ஆர்வம் கொண்டிருத்தல் வேண்டும்.
2. சீடர் அன்னமைய கோசத்தைக் கடந்து, மனோமய கோசத்தைக் கடந்து, பிராண மயத்திலும் விஞ்ஞான மயத்திலும் நிலைத்திருக்க வேண்டும். சத்துவ உணவு சிறிதளவு உட்கொள்ளும் தகுதி பெற்றிருக்க வேண்டும்.
3. சீடன் இகப்பணியிலிருந்து விலகிக் கொள்ளும் தகுதி பெற்றிருக்க வேண்டும்.
4. துக்க தூக்கம், அசுத்த தூக்கம், பீடை தூக்கம், இந்திரிய தூக்கம், தரித்திரிய தூக்கம் ஆகியவைகளை விலக்கித் கொள்ள வேண்டும். சுத்த தூக்கம் ஒன்றே அவனுக்கு வருதல் வேண்டும்.

# பரவெளி

இது ஒரு உன்னதமான உயரிய சொல். எளிதில் பொருள் காண இயலாத அருஞ்சொல். இப்படி என்று ஒன்றுதான் எங்கும் வியாபித்துள்ளது. அதுதான் பரவெளி - 'வெளி'யைப் பற்றி அறிவியல் மேதைகளும் ஆத்ம சாதகர்களும் ஆய்வு நடத்துகிறார்கள். இருவருக்கும் அவரவர்கள் ஆய்வின் நோக்கத்திற்குத் தகுந்தவாறு வெற்றியை அது தருகிறது. 'வெளி' என்ற பொருள் எங்கும் என்றும் எல்லாவற்றிலும் நிறைந்துள்ளது. உள்ளும் வெளியும் உள்ளது. ஆகாசம் என்ற சொல் அதற்கு முழுப் பொருளைத் தராவிட்டாலும் மக்களுக்கு இது புரிவதற்குப் பயன்படுத்தலாம்.

வெளி ஒன்றுதான் - மிகப் பிரம்மாண்டமானது. அது முழுமையானது. அளவில்லாதது. கர்மேந்திரியங்களுக்குப் புலப்படாது. இல்லாதது போல் இருக்கும் இயல்புடையது. கருத்துள் இருக்கும். கருத்துக்களுக்கு அப்பாலும் நிலவுகிறது. இது கருத்தில் தன்னைக் காட்டுகிறது. இது கருத்துக்கு அப்பாலும் உள்ளதால் இதைக் கருத்தினுள் அடக்க முடியாது. கருத்தினுள் அடங்காத ஒன்று. இது அது என்ற இரண்டிலும் உள்ளது. ஸ்தூலத்திலும் உண்டு. சூக்குமத்திலும் உண்டு. பெயர்ச் சொல்லிலும் உண்டு. வினைச் சொல்லிலும் உண்டு. உயிரிலும் உண்டு. உடலிலும் உண்டு. பொய்யிலும் உண்டு. உண்மையிலும் உண்டு. தர்மத்திலும் உண்டு. அதர்மத்திலும் பரந்துள்ளது. நியாயம் அநியாயம் இரண்டிலும் ஒன்றாகப் பரவியுள்ளது. காணும் பொருள்களிலும் காணப்படும் பொருள்களிலும் நிறைந்துள்ளது. நீர், நெருப்பு, ஆகாயம், காற்று, மண் போன்றவைகளில் பொலிகிறது.

இது கோடிக்கணக்கான பிரபஞ்சங்களையும் அதனுள் அடங்கியுள்ள அண்டங்கள், பிண்டங்கள் அதனைச் சார்ந்துள்ள மற்றவைகளிலும் வியாபித்துள்ளது. இது தனித்தனியானதன்று (No Separate Units) வாழ்விலும் தாழ்விலும் உள்ளது. சப்தத்திலும் மௌனத்திலும் உண்டு. இருள் ஒளி இரண்டிலும் அழகாக வாழ்கிறது. இது பூரணத்துவம் நிறைந்துள்ளது. பரிபூரணம் இது ஒன்றேயாகும்.

இது இல்லாத இடம் எங்கும் இல்லை, இல்லை, உண்டு

இரண்டிலும் இது உண்டு. உடற் கூட்டிற்குள் இருக்கும் வெளியும் இதுவே. வெளிக் கூட்டிற்கு அப்பால் எங்கும் வியாபகமாய் உள்ளது பரவெளியாகும். வெளியைப் பற்றி மகான்கள் யோகிகள் தங்களுக்குள்ளே ஆய்வு நடத்துகிறார்கள். பிறகு பரவெளியில் நிலைத்துச் சஞ்சரிக்கிறார்கள். பிறப்பிலும், மரணத்திலும் உள்ளது "வெளி". இது எல்லோரும் அறிந்த ஒன்று ஆழ்ந்த அறிவினால் அறியக் கூடிய ஒன்று. ஆனால் பரவெளி அறிவதற்கு இயலாதது. ஆழ்ந்த அறிவையும் தன் விருப்பப்படி திசை மாற்றி விடும் தன்மை கொண்டுள்ளது. அனைத்தையும் துறந்து சத்திய நிலையில் ஏகமாய் உள்ள ஏகாந்தத்தில் தன்னை இருத்தும் போது தன்னுடைய அணுவிற்கு அணுவான ஒரு சிறுபகுதியைக் காட்டுகிறது.

அதற்கு இரவும் இல்லை. பகலும் இல்லை. ஆனால் இரவிலும் பகலிலும் அது உள்ளது. காலத்தினுள் இது உள்ளது. காலத்திற்கு அப்பாலும் இது உள்ளதால் காலம் இதைக் கட்டுப்படுத்தாது இது காலத்தைத் தன் விருப்பப்படி ஆளும். இது வண்ணங்களற்ற நிலையில் எல்லா வண்ணங்களையும் தன்னுள் கொண்டுள்ளது. எல்லா வண்ணங்களும் இதுவேயாகும் வண்ணங்களற்ற நிலையும் இதுவேயாகும். கருணை, கொடுமை இரண்டிலும் இது உள்ளது. அவற்றிற்கு அப்பாலும் உள்ளதால் இவற்றை இது ஆளுகின்றது. கருவை உருவாக்குவது இதுவே. திருவுருவாக்குவதும் இதுவே. பின் திருவுருவைக் கலைத்து விடுவதும் இதுவே. அன்னையின் வயிற்றிலிருந்து வெளி வந்தவுடன் குழந்தைக்கு அழச் சொல்லிக் கொடுப்பது இதுவே. பின் சிரிக்கவும் சொல்லித் தருகிறது. சிலருடைய வாழ்வு முதலில் அழவும் பிறகு சிரிக்க வைப்பதும் இதுவேயாகும். வேறு சிலருக்கு முதலில் சிரிக்க வைப்பதும் பிறகு அழ வைப்பதும் இதுவேயாகும். இதைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபடும் போது இது விரிந்து கொண்டே வேகமாகச் செல்கிறது. இதைப் பற்றிய சிந்தனையிலிருந்து விலகும் போது இது மிக வேகமாகச் சுருங்கிச் சுருங்கி அணுவிற்கும் அணுவாகிப் பின் தன்னை மறைத்துக் கொள்கிறது. வெளிப்படுதலும் மறைத்துக் கொள்ளுதலும் இதன் இயல்பாக அமைந்துள்ளது.

*வெளியெலாம் கடந்த பரவெளிப் பரப்பில்*
*ஒளியுணர் வாகத் திகழ்ந்திடு கின்ற*

*களியமு தூற்றாம் சிவத்திற் கலந்தோர்*
*ஒளியுட லோடு நிரந்தரம் வாழ்வர்*

*அந்தமும் ஆதியும் இலாப்பர வெளியில்*
*செந்தணற் பிழம்பாய்த் திகழ்ந்திடும் சிவமே*
*இந்தப்பே ருலகாய் விரிந்துமே இயங்கி*
*அந்தமில் இன்பம் துய்க்குது என்றும்*

அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரிபூரணானந்தப் பரம் பொருளைப் போலவே பரவெளியையும் சுலபமாகத் தரிசிக்கவும் தெளிவாக விளக்கவும் முடியாது.

பரவெளியும் பரம்பொருளும் வெவ்வேறானவைகள் அன்று கதிரோனையும் ஒளியையும் போன்று ஒரே பொருளின் பிரிக்க முடியாத இருவகைத் தன்மைகளாகும். பரவெளியைத் தரிசிக்கும் போது பரம் பொருளையும் பரம் பொருளைத் தரிசிக்கும் போது பரவெளியையுமே தரிசிக்கிறோம்.

அமைதியான வேத மந்திரங்களிலும் உபநிடதங்கள் பிரம்மசூத்திரம், கதை, ஞானவாசிட்டம் போன்ற அருள் மறைகளிலும் பரவெளியைப் பற்றி மிகச் சுருக்கமாகவே குறிப்பிடப்பட்டுள்ளன. கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர் என்னும் மறைமொழிக்கேற்பப் பரவெளியைப் பற்றி பிறர் தெளிவாக உணரும் வண்ணம் விளக்குவது மிக மிகக் கடுமையான காரியமாகும். பரவெளி தரிசனம் வெறும் யூகமோ நம்பிக்கையோ பண்படாத மனத்தின் பாவனையோ அருள் மறைகளில் அருளப்பட்டுள்ள வெறும் சொல்லோ அன்று.

அருந்தவ வாழ்வால் இடைவிடா சாதனையால் தணியாத ஆர்வத்தால் இறையருளால் கிட்டும் அருட்புலன்களின் மூலமாக உள்ளாழ்ந்த நிச்சலனமோனத்தில் மனாதீததுரிய நிலையில் உயரிய ஆத்மானுபவங்கள் அருட் காட்சிகள் ஐக்கியானுபூதி இவைகளின் மூலம் தெளிவாகவும் பிரத்தியட்சமாகவும் உணரவும் தரிசிக்கவும் கூடிய அனுபவப் பொருளாகும் பரவெளி.

மாயை இருட்திரையால் மறைக்கப்பட்டு ஆசை வாய்ப்பட்டு விஷயமோகங்களை நாடிப் புலன் வழிச் சென்று சதா சலித்துக்

கொண்டிருக்கும் மனத்தின் உதவியால் பரவெளியை உணரவும் ஊகிக்கவும் தரிசிக்கவும் முயல்வது வீண்மையேயாகும்.

எண்ணங்களற்ற சொல்லற்ற செயலற்ற நானென்னும் தனி உணர்வு அற்ற நிச்சலன நிலையில் ஆத்மானுபூதியின் மூலம் கிட்டும் அரும்பெரும் பேறாகும் பரவெளி. வெளிகளையெல்லாம் கடந்த பாழ்வெளி. பேரண்டப் பெருவெளி அருளொளி படர்ந்த பரதுரியப் பெருவெளி இடைவிடாது ஓங்காரப் பரநாதம் எழும்பிக் கொண்டிருக்கும் மெய்ஞ்ஞானம் படர்ந்த ஒலிவெளி அருள் கவிந்து தேஜோமயமாகத் திகழும் ஒளிவெளி என்றும் அழியாத அமரத்துவ நிலையளிக்கும் அருட்பேரானந்த உணர்வு வெளி பரமோனங்கவிந்து சாந்தம் தவழும் ஞானப் பெருவெளி அனைத்திற்கும் மூலமும் முடிவுமாய் இலங்கும் முழு முதலாகிய பரசிவம் தன்னின்றும் தோன்றிய சிற்சக்தியாகிய அன்னை உமையவளுடன் நிரந்தர ஆனந்தக் களி நடம்புரிந்து வருகிறது.

சந்தோஷம்

## சுபதேகம்

ஜீவ யாத்திரையில் ஏறுமுகத்தில் செல்லச் செல்ல அதாவது உயர்ந்து செல்லச் செல்ல உயர் மெய்ஞ்ஞான நிலையில் செல்லச் செல்ல, முழுமையான நிலையில் செல்லச் செல்ல, பூரண நிலையில் செல்லச் செல்ல, இந்த தேகம் சுப தேகமாக மாற்றப் படுகிறது.

சுப தேக நிலை மிக உயர்ந்தது. அது ஆத்ம ஞானிகளுக்குக் கிடைக்கக் கூடியது. மகா சுப தேகம் சற்குருவுக்கே கிடைக்கும். அந்த தேகத்தை வணங்குபவர்களுக்கு வாழ்வு உண்டு. வணங்குபவர்கள் ஆனந்தமாவார்கள். வணங்கும் எல்லாம் சுபம், சுகம். வணங்குபவர்கள் இக ஞானத்திலிருந்து விலகிக் கடவுள் ஞானத்திற்கு வருவார்கள்.

இவர்கள் இருக்கும் இடத்தில் சுபசக்தி பரவியிருக்கும்.

# ஜீவர்கள்

ஜீவர்கள் - ஜீவர்கள் நிலையில் இருக்கும் வரை உலகளவில் தன்னின் சுகத்தை, சுயநலத்தைக் கருதியே (ஜீவன்கள்) வினையாற்றும். குரு தத்துவம் அறியாத சீடன், குருவிடம் சரணாகதி அடைந்து விட்டேன் என்று சொல்லிக் கொண்டிருக்கும் வரை தன் சுய நலத்திற்காகச் சற்குருவையே உதாசீனப்படுத்தி விடுவான். அந்த ஜீவன் உலக மதிப்பு, உலக கௌரவம் ஆகியவற்றிற்காகச் செயல்படும்.

பொறாமையை உள்ளத்தில் மறைத்துக் கொண்டிருக்கும் ஜீவன், சற்குரு. அதுவும் தன்னுடைய சற்குரு துன்பம் அனுபவித்தாலும் பரவாயில்லை; ஆனால் தன் காரியம் நடக்க வேண்டும் என்ற வீரிய குணத்தோடு செயல்படும்.

இதனால் ஜீவன்கள் மறைமுகமாகத் துன்பத்தை அனுபவிக்க வழி தேடுகிறது. வெற்றியும் அடைகிறது. பிரம்ம ஞானத்தை அந்தரங்கத்தில் அவா உற்று அதை நோக்கிச் செல்ல விழையும் சீடர்கள் மிகக் குறைவு. சில காலங்களில் இல்லையென்று கூடச் சொல்லலாம்.

இவர்களை அணுக்கத் தொண்டர்கள் என்று சொல்ல இயலாது. என்ன செய்வது? கடவுளின் படைப்பு அப்படி!

ஜீவன்களின் இலக்கணம் அவ்வாறு! என்ன செய்வது? ஜீவன்களின் தவ சக்தியை ஜீவன்கள் தவறாக நினைத்து உதாசீனப்படுத்துகிறது. இதை யாராலும் மாற்ற முடியாது.

ஜீவனின் இயல்பை உணர்ந்து கொண்ட சற்குரு வருத்தமடையார். ஆனால் மற்றவர்க்கு இது ஆழ்ந்த வருத்தம் தரும். பிறகு மறைந்தும் விடும். இதுவும் ஜீவனின் ஜீவயாத்திரையின் இயல்பான வேகத்தைக் குறைக்கும் அல்லது மந்தப்படுத்தும்.

சற்குருவின் ஆழ்ந்த செயல்களின் சொற்களை ஜீவன்கள் கேட்டு, சற்குரு எதை ஆழ்ந்த வெளிப்படையில் சொற்களாகப் பயன்படுத்துகிறாரோ அதை உணராது மேல்போக்கில் அலட்சியமான சாதாரணப் பொருளைக் கண்டு எடுத்தேன், கவிழ்த்தேன் என்று பேசுகிற ஜீவன்களும் உண்டு.

**சந்தோஷம்**

# தற்காலிகத்திலிருந்து நிரந்தரம்

யாத்திரை என்றால் புனிதப் பயணம் என்று பொருள் கொள்ளலாம். தாழ் நிலையிலிருந்து மேல் நிலைக்குச் செல்லும் பயணமே யாத்திரை. சிற்றறிவிலிருந்து அதாவது இவ்வுலக அறிவிலிருந்து பர உலகத்திற்கு அதாவது பேரறிவுக்குச் செல்வதே யாத்திரையாகும். அதாவது ஜெக அறிவிலிருந்து சிவ அறிவுக்கு வருதலே யாத்திரையாகும். அதாவது சகநிலையிலிருந்து சிவநிலைக்கு வருதலே யாத்திரையாகும். அதாவது மாயா உலகிலிருந்து விடுபட்டுச் சத்திய சொரூபமாக நின்று சத்திய ஜோதிக்கு வருதலே யாத்திரையாகும். விகல்பத்திலிருந்து கல்பத்தை நோக்கி வருதலே யாத்திரையாகும்.

அழிவுப் பாதையிலிருந்து விலகி அமரத்துவப் பாதைக்குச் சென்று அமரத்துவ நிலைக்கு வருதலே யாத்திரையாகும். நீ, நான், அது - என்கிற நிலையிலிருந்து விலகி எல்லாம் ஏகம்! எல்லாம் ஒன்று! இது ஒன்றே அதுவாகி நான் என்கிற நிலைக்கு வருதலே யாத்திரையாகும்.

அருவறுப்பிலிருந்து பேரழகுக்கு வருதலே யாத்திரையாகும். அசுபத்திலிருந்து மகா சிவ சொரூபத்திற்கு வருதலே யாத்திரையாகும். இம்சையிலிருந்து முழுமையான அகிம்சைக்கு வருதலே யாத்திரையாகும். அதாவது, முழுமையான ஜீவகாருண்ய நிலையை அடைதலே யாத்திரையாகும். தேகத்திலிருந்து விதேகத்திற்கு வந்து எங்கும் விஸ்வ ரூபமாகி விஸ்வானந்த நிலைக்கு வருதலே யாத்திரையாகும். முக்குணங்களிலிருந்து விலகி நிர்குணத்தைத் தாண்டி சிவ அருளுக்கு வருதலே யாத்திரையாகும்.

மாயா நாதத்திலிருந்து விலகி ஆத்ம நாதத்திற்கு வந்து பரநாதத்தோடு கலந்து விடுதலே யாத்திரையாகும். இகத்தின் எல்லா வகையான கோடி-கோடி சந்தோஷங்களிலிருந்து, துன்பங்களிலிருந்து விலகிப் பரமானந்தம் பெற்று வருதலே யாத்திரையாகும்.

அநேகத்திலிருந்து விலகி ஏகத்திற்கு வருதலே யாத்திரையாகும். எல்லாவிதமான பேதங்களிலிருந்து விலகி அபேத நிலைக்கு வருதலே யாத்திரையாகும். ப்ராரப்த கர்மா, சஞ்சீவ கர்மா ஆகிய இரண்டிலிருந்து விலகிக் கர்மா கடந்த விதிக் கடந்த நிலைக்கு வருதலே யாத்திரையாகும்.

எல்லாவித உலக ருசிகளிலிருந்து விலகி, பஞ்ச பூத ருசிகளிலிருந்து விலகி, ருசியற்ற நிலைக்கு வந்து கடவுள் சுக ருசியை ருசித்து வருதலே யாத்திரையாகும். ஆண், பெண், அலி என்ற உருவ தத்துவத்திலிருந்து விலகி ஏக உருவத்திற்கு வந்து வெட்ட வெளிக்கு வருதலே யாத்திரையாகும்.

பார்வைகள் பலப்பல - பார்வைகள் - மயக்குப் பார்வை, அர்த்தமற்ற பார்வை, அர்த்தமுள்ள பார்வை, விகல்பப் பார்வை, நுண்ணிய பார்வை, அகண்ட பார்வை, ஆழமான பார்வை, கொடூரப் பார்வை, கோமாளிப் பார்வை, அழிவுப் பார்வை, அதர்மப் பார்வை, தேக சிதைவுப் பார்வை, புதுமைப் பார்வை, பழமைப் பார்வை, பாத்திரப் பார்வை, சித்திரப் பார்வை, பதினெண் குணங்கள் நிறைந்த பார்வை, பக்குவமற்ற பார்வை, ஆவேசப் பார்வை, ஆரவாரப் பார்வை, அட்டகாசப் பார்வை, கொண்டாட்டப் பார்வை, குதர்க்கப் பார்வை, கோணங்கிக் பார்வை, துக்கப் பார்வை, பொறாமைப் பார்வை, மும்மாயைப் பார்வை, வித்யா, அவித்யா, மாமாயைப் பார்வை, பஞ்சமா பாதகப் பார்வை, மூடப் பார்வை, மிலேச்சப் பார்வை, கனவுப் பார்வை, கயமைப் பார்வை, ஈனப் பார்வை, இருட்டுப் பார்வை, தரித்திரப் பார்வை, கும்மாளப் பார்வை, மறைப்புப் பார்வை, மரணப்பார்வை, மாசாத்துவான் பார்வை, மட்டிப் பார்வை, வெகுளிப் பார்வை, அலைபாயும் பார்வை, அனர்த்தப் பார்வை இன்னும் இவை போன்று கருத்து அழியும் சிந்தனைப் பார்வை, பேயுறவுப் பார்வை, பித்தர் பார்வை, எத்தர் பார்வை, ரோகப் பார்வைகளிலிருந்து விலகி எதார்த்தப் பார்வை, உத்தமப் பார்வை, மெய்ஞ்ஞான மேலுணர்வுப் பார்வை, ஜீவப் பார்வை, பிண்ட வெளிப் பார்வை, அண்டவெளிப் பார்வை, கடவுள் பார்வை, சிவகருத்துப் பார்வை, சிவ ஆனந்தப் பார்வை, பரசிவப் பார்வை, சின்மயப் பார்வை, தேஜோமயானந்தப் பார்வை, பரமார்த்தப் பார்வை, பரசுபமானந்தப் பார்வை, உயர்ந்த சீடர் பார்வை, சற்குரு பார்வை, சகஜப் பார்வை, சத்சித்தானந்தப் பார்வை, மகா வெட்டவெளிப் பார்வை, ஆசி கடந்த அற்புதப் பார்வை, அழியாநிலை பெற்ற ஆனந்தப் பார்வை, பஞ்ச பூதங்களை ஒன்றாக்கிய ஏக பூதப் பார்வை, சுகப் பார்வை, சுகோதயப் பார்வை, ஆயிரம் கோடி சூரியப் பிரகாசப் பார்வை, காலம் கடந்த காதல் பார்வை, அப்பால் பார்வை, மனத்திற்கு அப்பால் சென்று பார்க்கும் பார்வை, மகேஸ்வரன் பார்வை, மெய்ப்பொருள் சிருஷ்டியின் பார்வை, மெய்ப்பொருள் காத்தல் பார்வை, மெய்ப்பொருள் மாற்றல் பார்வை,

பராசக்தியின் பார்வை, அருவப் பார்வை, பரம்பொருள் பார்வை, பரநாதப் பார்வை, பரஞ்ஜோதிப் பார்வை, சுயஞ்ஜோதிப் பார்வை, ஆக்ஞை சக்ர தீப ஒளிப் பார்வை, சுத்த சந்தோஷப் பார்வை, ஓம் சத்சித்தானந்தப் பார்வை, ஜீவர்களைக் காத்திடும் பார்வை, உன்னுள்ளே நானும் என்னுள்ளே நீயும் இருக்கின்ற நிலையைப் பார்த்திடும் பார்வை, அவன்-இவன் என்ற பார்வை விலகி அதுவுள் இது என்கிற நிலையைப் பார்க்கின்ற பார்வை. நாதமும், விந்துவும் ஒன்று என்கிற தத்துவத்திலிருந்து பார்க்கும் பார்வை, இருள்-வெளி ஒன்றிடமான இடத்திலிருந்து பார்க்கும் பார்வை, முப்பாழுக்கு அப்பால் சென்று அங்கு இருக்கும் பாழில் நின்று கேவல யோகத்திலிருந்து பார்க்கும் பார்வை, கோபுரப் பார்வை, கற்பகப் பார்வை, அகண்ட அண்டவெளிப் பார்வை, ஒன்றுக்குள் கோடியிருக்கும் பிரம்ம இரகசியப் பார்வை, மகா சத்தியப் பார்வை, இகத்தையும், பரத்தையும் ஒன்றாகப் பார்க்கும் பார்வைக்கு வருதலே யாத்திரையாகும்.

சகத்தைப் பரமாக மாற்றிச் சகமற்ற நிலைக்குக் கொண்டு வந்து சாத்திரம் கடந்த பார்வைக்கு வருதலே யாத்திரையாகும்.

**சந்தோஷம்**

# ஜீவ யாத்திரையின் காலம்

ஜீவ யாத்திரை என்பது ஒரு உத்தம வினையாகும். அந்த வினையை மனிதன் தன் அறிவுக்குள் அடக்கிச் செல்வது அல்ல. இந்த உலகில் உள்ள அனைத்து ஜீவன்களும் யாத்திரையில் தான் இருக்கின்றன. யாத்திரை செய்கின்றன. ஜீவ யாத்திரைக்குத் தொடக்கமும் உண்டு, நிறைவும் உண்டு.

இந்த ஜீவ யாத்திரை காலம் ஒரு நொடியாக இருக்கலாம் அல்லது ஒரு யுகமாகவும் இருக்கலாம் அல்லது இந்தப் பிரபஞ்ச முடிவு வரையிலும் கூட இருக்கலாம். இந்த ஜீவ யாத்திரையின் காலத்தை நம்மால் நிர்ணயிக்க முடியாது. காலத்தை நிர்ணயிக்கவோ, ஜீவ யாத்திரையைத் தொடங்கவோ முடிக்கவோ இயலாது. ஜீவனே ஜீவனை வழி நடத்திச் செல்வது அரியது. எங்கிருந்து ஜீவன் புறப்பட்டு எங்கே அந்த ஜீவன் போய்ச் சேர்கிறது. இதற்கு இடையில் உள்ள காலம் எவ்வளவோ! கருத்துகள் எவ்வளவோ! பட்ட இன்ப- துன்பங்கள் எவ்வளவோ! பட வைத்த இன்ப - துன்பங்கள் எவ்வளவோ! இவைகளை எழுத்தாக்க இயலாது.

ஜீவ யாத்திரை யாருக்கும் விதிவிலக்கு இல்லை. பரசிவம் இதைத் திட்டமிடுகிறது. யாத்திரைகளுக்கான வினைகளுக்கு ஏற்றவாறு உருவங்கள் சமைக்கப்படுகின்றன. கொடுக்கப்படுகின்றன. இந்த யாத்திரையில் முழுமையாக இருந்த இடத்திலிருந்தே அவதார புருஷர்கள், சற்குருக்கள், ஆத்ம ஞானிகள் கலந்து கொள்கிறார்கள். பரசிவத்தால் வழி வகை செய்யப்படுகிறது.

ஜீவ யாத்திரையில் வகைகள் உண்டா? ஜீவ யாத்திரையை ஒரு வாழ்வாக எடுத்துக் கொள்ள இயலுமா? ஜீவ யாத்திரை முன்பு தான் நிலையான வாழ்வா? ஜீவ யாத்திரை இல்லாமல் இருந்தால் என்ன? ஜீவ யாத்திரையின் இரகசியம் என்ன? இப்போது இருக்கின்ற ஜீவ யாத்திரை - எந்த எண்ணைக் கொண்டு உள்ளது.

ஒருமுறை வெளி விரிந்தால் அந்த வெளிக்குள் ஆயிரம் கோளங்கள், பிரபஞ்சங்கள், உயிர்கள் மற்றும் மனிதன் எண்ணத்திற்கு, அறிவுக்குப் புலப்படாத அற்புத வெளிப் பாடுகள் வருகின்றன வந்து கொண்டு இருக்கின்றன. இந்த ஒரு தொடக்கம் வந்த பிறகு அது

நிர்ணயித்த யுகங்களுக்கு ஏற்றவாறு வெளிப்பாடுகள் மறைந்து பிரமாண்டமான சூனிய மையப் புள்ளிக்கு வந்து சேர்கின்றன. இதை சமஷ்டி ஜீவ யாத்திரை என்று சொல்லலாம். சமஷ்டி ஜீவயாத்திரை உண்டு. வியஷ்டி ஜீவ யாத்திரை உண்டு.

இந்த ஜீவ யாத்திரை சுபமானதா? அசுபமானதா? சாந்தமானதா? அமர்க்களமானதா? அறிவான செயலா? அல்லது இல்லாத செயலா? இந்த யாத்திரையில் ஜீவன்கள் சந்தோஷமாக யாத்திரை செய்கிறதா? அல்லது சோகத்தோடு யாத்திரை செய்கிறதா? இந்த யாத்திரை முழுமையாக நிதானமாக நடைபெறுகிறதா? அல்லது புயல் வேகத்திலும், ஆமை வேகத்திலும் நடைபெறுகிறதா? இந்த யாத்திரை முடிந்ததும் சற்று ஓய்வு உண்டா? அந்த யாத்திரை இப்படித்தான் இருக்குமா? அல்லது மாறுபட்டு இருக்குமா?

ஜீவ யாத்திரையில் தத்துவங்கள் உள்ளதா? தத்துவப்படி நிகழ்கிறதா? அந்தத் தத்துவத்தை யார் சமைத்தது? அந்தத் தத்துவத்தில் நிக்கிரகம் உள்ளதா? அல்லது யாத்திரை செல்லச் செல்ல தானாகவே கலைந்து விடுகிறதா? இந்த வெளியில் ஜீவன் அனாதியாகத் தன்னந்தனியே தட்டுத் தடுமாறி யாத்திரை செய்கிறதா? அல்லது மெய்ப்பொருள் சக்தியின் பக்க பலத்தோடு அருள் வினையோடு செயல் ஆற்றுகிறதா? ஜீவன் மட்டும்தான் இந்த இயக்கத்தில் ஈடுபட்டுள்ளதா? சிவனும் யாத்திரை புரிகிறதா?

ஜீவன்கள் யாத்திரை செய்கிறது அதே சமயத்தில் மனிதக் கூடுகள் ஜீவனோடு உலகம் முழுவதும் அந்தந்த வாகனங்களைப் பயன்படுத்தி அந்தந்த ஊர்களுக்கு, அந்தந்தக் கண்டங்களுக்குச் சென்று சென்று வந்து போகிறதே அதை என்ன சொல்வது. இதை யாத்திரை என்று சொல்லலாமா? அல்லது வேறு பெயர் உண்டா?

தினமும் பிராணன் மூக்கிலே சென்று உயிரோடு சம்பந்தப்பட்டுக் கொண்டு இருக்கிறதே அதை யாத்திரை என்று சொல்லலாமா? அதை என்னவென்று சொல்லுவது? இந்தப் பிராண யாத்திரையை யார் இயக்கியது? யார் முடிப்பது? இது நீண்ட யாத்திரையா? அல்லது குறுகிய யாத்திரையா?

தேக யாத்திரை, பிராணன் யாத்திரை, ஜீவன் யாத்திரை ஆகிய இந்த மூன்று யாத்திரைகள் முறையாக இயங்கு கின்றனவா? இயக்கப்

படுகின்றனவா? ஜீவ யாத்திரைக்கு இந்த மூன்று யாத்திரை தேவையா? மற்ற இரண்டும் இல்லாமல் ஜீவ யாத்திரை மட்டும் தனித்து இயங்க இயலாதா? சேர்ந்து தான் இயங்க வேண்டுமா? இந்த மூன்று யாத்திரைகள் இந்த வெளியில் வந்ததின் இரகசியத்திற்குள் அடங்கிய மர்மம் என்ன? இந்த யாத்திரையை யார் வெளிப்படுத்தியது?

இந்த யாத்திரை இல்லாமல் இந்த வெளி இருக்க இயலாதா? வெளியே சிவம். சிவமே வெளி. இந்த யாத்திரை இல்லாது வெட்ட வெளியே சிவம் என்று இருக்கக் கூடாதா? அதனால் ஓலங்கள், துக்கங்கள், சோகங்கள் வெளி வராமலும், இல்லாமலும் இருக்குமல்லவா!. ஜீவன் தேகத்தின் மூலம் வெளிப்படுத்தும் தேக இன்ப-துன்ப வினைகள் ஏன்? இது தேவையா? என்ற வினாவை வெளிப்படுத்துவதற்கு பயங்கரமான பயமாக உள்ளது. இந்த வினாவை இந்த ஜீவ யாத்திரையில் அது இதன் மூலம் வெளிப் படுத்துகிறது. இது மாயையும், அகங்காரமும் கொண்ட வெளி மூலத்தில் வந்ததா? ஆதி மூலத்திலிருந்து வந்ததா? ஆதி மூல மையப் புள்ளியில் இருந்து வந்ததா? இந்தக் கேள்விக்கு விடை இன்னும் இரகசியமாக உள்ளது.

கற்பனை விடை ஆயிரமாயிரம் இருக்கலாம். சிவத்தின் விடை ஒன்றே ஒன்று. சிவமே எல்லாவற்றையும் ஜீவனுக்குத் தெரிவிப்பது இல்லை. அது எதை எதை எப்போது தெரிவிக்க வேண்டுமோ அதை அதை அந்த ஜீவ யாத்திரை முடிவதற்குள் அந்த பெரிய அது இன்னொன்று இல்லாத அது, ஒன்றே ஒன்றான அது அந்தந்த ஜீவர்களுக்கு தெரிவிக்கிறது. அது எல்லாவற்றையும் முழுமையாகத் தெரிவிக்கிறதா என்றால் - இல்லை.

அது என்றுமே தான் வந்த விதத்தை தான் அதுவான நிலையை, அதுவாக இருக்கின்ற முறையை அது என்றுமே ஜீவனுக்குள் வெளிப்படுத்தியது இல்லை. தன்னுடைய முழு பேராற்றலை அது ஜீவர்களுக்குக் காட்டியது இல்லை. அதுவை அது முழுமையாக வெளிப்படுத்தியதுமில்லை. அதை நினைத்தாலே சுகம். மறந்தாலே சோகம். அது நினைவுக்கு வந்து விட்டால் மண்டையின் உச்சிப் பகுதிக்கு வந்து விட்டால் அங்கே முழு சுபம் வெளிப்பட்டு விட்டால் ஜீவயாத்திரை அக்கணமே நிறைவுறும்.

**சந்தோஷம்**

# ஜீவ யாத்திரை சுகம்

ஜீவ யாத்திரை பற்றி ஒவ்வொரு ஜீவனும் அதற்குக் கொடுத்த காலத்தின் முடிவில் சிந்திக்க வருகிறது.ஜீவ யாத்திரையில் அறிவு தெளிவு உள்ள ஜீவன்கள் தெரிகிறது. ஜீவ விழிப்பில் மௌனமாக இருக்கும். கபாலத்தின் படியில் ஏறி நிற்கும். தங்களின் நிகழ்கால ஜீவ யாத்திரை புரிய வரும். புரிந்த பிறகு, காலங்களில் நாளையும், இன்றையும் தெரியும்.

ஒரு மனிதன் ஏ.சி. காரிலோ, அழகான ஏ.சி. புகை வண்டியிலோ, விமானங்களிலோ சுகமாகச் செல்லும் அந்த சுகத்தை அனுபவிக்கின்றான்.

அதே போன்று ஜீவ யாத்திரையில் செல்லுகின்ற ஜீவன்கள், யாத்திரை சுகம் அனுபவிப்பதும் உண்டு. சுகங்களில் யாத்திரை சுகம், ஒரு சுகம் தான்.

நடப்பதில் சுகம், ஓடுவதில் சுகம், மெதுவாக நடப்பதிலே சுகம், நடந்து கொண்டே ஆகாயத்தைப் பார்த்தால் சுகம், அது போன்று சுகத்தை ஜீவ யாத்திரை செய்யும் போது அனுபவித்துக் கொண்டே செய்யும் ஜீவன்களும் உள்ளன.

இறைவனைத் தெரிந்த ஞானிகள், தன் ஆத்ம தரிசனத்தைக் கண்ட ஜீவன்கள், அதன் பிறகு செய்யும் யாத்திரை யெல்லாம் வெகு சுகமான யாத்திரையாகும், சுபமான யாத்திரையாகும். அங்கே தன்னைக் கண்டு கொண்டே யாத்திரை செய்து கொண்டிருக்கும்.

ஜீவ விழிப்பில் யாத்திரை செய்யும் ஜீவன்கள், அந்த ஜீவன்களின் தேகங்கள், அந்த தேகத்தின் முகம், மற்ற அகபுற, புற அக உறுப்புகள் - எல்லாம் பேரழகாக இருக்கும்.

அதிலே பேரொளி வீசும். அந்தப் பேரொளியிலே மங்கல சக்தி மலர்ந்திருக்கும். இத்தகையோர் எங்குச் செல்கிறார்களோ, அங்கும் எல்லாம் சுபம், சுகம், சுபம்.

அந்தத் தேகங்கள் இருக்கும் இடத்தில் துக்கங்கள் விளையா கவலை உள்ளவர்கள், குருட்டு ஜீவன்கள், இத்தகைய ஜீவ விழிப்பு

உள்ள ஜீவனோடு அண்டியிருந்தால், அந்த அன்பு இருக்கும். ஜீவன்களின் துன்பம் குறையும். மன அமைதி கிடைக்கும். அப்படி அண்டியிருப்பதில் சிறு சிக்கல் உண்டு. அது என்னவென்றால் அந்த அண்டியிருக்கும் ஜீவன்கள், ஜீவ விழிப்பு உள்ள ஜீவனிடம் அகங்காரம், மமகாரம், தன் மகா பாவ ஆற்றலைக் காட்டினால் ஜீவ விழிப்பு உள்ள - ஜீவனின் சக்தி இவைகளை விட்டு விடும்.

ஆகவே ஜீவ யாத்திரையில் சுகமான நிலை ஒரு கால கட்டத்தில் வந்து அமையும்.

## சந்தோஷம்

இக வாழ்க்கை சுகம் என்று நம்பி அதனுள் புகுந்து அதை அனுபவிக்கிறது. அந்தச் சுகத்தை ஆரம்பத்திலிருந்து எல்லை வரை அறிவோடு அதை அனுபவிக்கிறது. அறிவோடு அதை அனுபவித்தபிறகு அந்தச் சுகத்தின் எல்லையின் விளிம்பிற்கு வந்த பிறகு, இன்னொரு எதையோ அந்த ஜீவன் காணுகிறது. இதுவரை அனுபவித்த சுகம் - சுகமன்று; ஒரு பிரம்மை, மாயை, ஏமாற்று வித்தை. ஏதோ ஒரு காரியம் நடத்துவதற்காக, இந்த ஏமாற்று வித்தை என்பதை அந்த ஜீவன் உணருகிறது.

அந்தச் சுகத்தின் விளிம்புக்கு மேல் நின்று நிமிர்ந்து பார்க்கும்போது உண்மையாக, பரிபூரணமாக, கல்ப சுகம் ஒன்று. எங்கும் இருப்பதைப் பிரத்யட்சமாக உணருகிறது. அதன்பிறகு அதை அந்தச் சுகத்தை அனுபவிப்பதற்காக வழிகாட்டுகிறவர்களைத் தேடி அலைகிறது. திரிகிறது. கடைசியில் பெறுகிறது. அறிவோடு சுகத்தை அனுபவிக்கும். துன்பத்தை அனுபவிக்கும். வேதனை அனுபவிக்கும். இந்த உலகத்தில் எல்லாவற்றிற்கும் ஆதியும் உண்டு - அந்தமுமண்டு.

# ஒரு விதை

ஒரு விதை பண்பட்ட நிலத்தில் ஊன்றப்படுகிறது. நீரும், நெருப்பும், காற்றும் சேர்ந்து, ஆகாய சக்தியின் துணை கொண்டு அந்த விதையை அழகாக, மென்மையாக, இதமாக, அன்பாக, வலி இல்லாத சுகம் கொடுத்து, சுகத்தில் சுகமாய்ப் பிளக்கிறது.

இரண்டு பத்தைகளாக விரிந்து அந்த விதைக்குள் இருந்து உயிர் சக்தி வெளி வருகிறது. ஒரு பசுமையான, பசுமை உள்ள ஆணிவேர் தோன்றுகிறது. அது நிலத்தில் ஊன்றுகிறது.

பச்சை நிலத்தில் அந்தப் பகுதி அது தண்டாக மாறி இலையோடு பூமியைப் பிளந்து கொண்டு வருகிறது. காற்றும், ஆகாயமும் அந்த விதைக்குள் இருந்த பகுதி வெளி வருவதற்கு பூமியைப் பிளந்து வாசலைத் தருகிறது.

அந்த வாயிலின் மூலமாக விதையிலிருந்து அந்தச் செடி வெளி வருகிறது. நீரை எடுத்துக் கொண்டு ஆகாயத்தின் துணையினால் கதிர் ஒளியோடு அது வளர்கிறது.

சிறிய பகுதியாக வந்து அது இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து அடி வளர்கிறது. கிளைகள் எங்கும் தோன்றுகின்றன. நூற்று கணக்கான கனிகள், ஆயிரக் கணக்கான காய்கள், இலைகள் தோன்றுகின்றன.

விதையில் ஒரு ருசி, விதைப் பத்தையில் ஒரு ருசி, இலைகளில் ஒரு ருசி, மரப்பட்டையில் ஒரு ருசி, மரத்துக்குள் ஒரு ருசி, இப்படிப் பல ருசிகள் ஒவ்வொன்றிற்கும் வித விதமான உருவங்கள். உருவத்திற்குள் வியப்பு சக்திகள்.

உருவத்திற்குள் அருவம் நிறைந்திருக்கிறது. அதைக் கண்டு ஆனந்திக்கும் ருசி. பூவிலே அழகு, இலைகளில் அழகு, எல்லாப் பகுதியிலும் அழகு. மீண்டும் அது வளர்கிறது. மொட்டுத் தருகிறது. அதுவும் ஒரு அழகு. மொட்டு மலர்கிறது. அதுவும் அழகு.

பூ எழில் மனித மனத்தை மாற்றுகிறது. அதிலிருந்து வரும் வாசனை இயற்கை தரும் வாசனை, உயர் உணர்வில் நின்று அமர்ந்து அதற்கு அழகு தந்தது யார்?

ருசியைத் தந்தது யார்? மரம் இப்படித்தான் வளர வேண்டும். எல்லாப் பகுதிகளின் உருவ அளவுகளை, முறையாகக் கொடுத்தது யார்? அந்த மரத்திற்குள் ஜீவன் இருக்கிறது. அதுவும் உணர்கிறது. மீண்டும் ஒரு பிஞ்சைக் கொடுக்கிறது, அதிலிருந்து காய் வருகிறது. காய் ருசி. அது கனியாகிறது. பறவை, மிருகங்கள் உண்டு இன்புறுகின்றன.

மனிதன் அதை அறிவோடு அடைந்து மகிழ்ச்சிக் கடலில் வீழ்ந்து விடுகின்றான். மனிதன் அந்தக் கனி, காய் கொண்டு வாழ்க்கை நடத்துகின்றான். கனி அழகாக உள்ளது. மனிதனை மயக்குகிறது. அதன் ருசி நாக்கை நர்த்தனமிட வைக்கிறது.

இந்த சுவை தருகின்ற சுகம் மனிதனை ஆடாமல், அசையாமல் வைத்து, கொள்ளையாகச் கொள்ளை சுகம் அனுபவிக்கச் செய்கிறது. என்னே! இயற்கையிலிருந்து வரும் கனியின் சுவை, சுவையிலிருந்து வரும் சுகம். மனிதனையே கொள்ளையடிக்கிறது.

அந்த ஆணிவேர் அத்தனை வினையும் அறிவு விழிப்போடு ஆற்றுகிறது. இதில் எந்தப் பகுதியும் அது தவற விடுவதில்லை.

ஒரு புளிய மரத்தில் 20,000 இலைகள், 5000 கிளைகள், 40 அடி அகலம், 20 அடி உயரம் என்றால் அத்தனை பகுதிகளுக்கும் உணவைத் தருவது, உருவத்தைத் தருவது, சுவையைத் தருவது, குணத்தைத் தருவது, மனித நோய் நீக்கும் சக்தியைத் தருவது அந்த "ஆணி வேர்"

இயற்கை அறிவு உணர்வோடு செயல்படுகிறது. மிகவும் பொறுப்போடு, நிதானமாகவும், பஞ்ச பூதங்களைப் பயன்படுத்திக் கொண்டு, அதன் வினையை இடைவிடாது செய்கிறது. அப்போது புல், செடி, கொடி, மரங்கள், தாவர சங்கமங்கள் அனைதததும் மனிதனுக்கு அல்லவா நன்மை கொடுக்கிறது, மூலிகை என்ற பெயரில்! மரத்திலிருந்து செடி, கொடி எல்லாம் ஜீவ யாத்திரை செய்து கொண்டிருப்பதை உணர்ந்தால், ஜீவன்கள் ஞானப் படியேறிச் சென்றால் பிரம்மஞானம் வரும்.

**சந்தோஷம்**

# சிவ குணம்

## 1. தன் வயத்தனாகுதல்

எங்கும் நிறைந்திருக்கும் பரசிவத்தின் குணங்கள், நிலைகள் எட்டாகும். எல்லாமே தன்வயத்தனாகுதல் . மற்றொரு வயத்தில் அது வசப்படாது. யாரிடமும் அது மயங்காது. எல்லாம் அதனின் வெளிப்பாடாகும். அதற்கு அப்பாற்பட்டது எதுவுமேயில்லை. தானே தனக்கு அரசன். தானே தனக்கு நீதிபதி. தானே அனைத்தையும் படைக்கிறது, வெளிப்படுத்துகிறது. சுகமாக இருக்கச் செய்கிறது. பிறகு அழைத்துச் செல்கிறது.

## 2. தூய உடம்பினனாதல்

அடுத்த குணம் தூய உடம்பினனாதல். இந்த உடம்பில் சாவு ஏதுமில்லை, பாவங்கள் ஏதுமில்லை. இது எது செய்தாலும் பாவங்களாக மாறி இதனிடம் வராது. இது எது செய்தாலும் யாரும் இதற்குச் சாபமிட முடியாது. எந்தச் சாபமும் இதைத் தீண்ட முடியாது. இது சாபங்கள் கடந்த நிலையில் நிற்கிறது. இதை எதுவும் நெருங்க இயலாது.

## 3. இயற்கை உணர்வினனாதல்

பூலோக உணர்வுகள் எல்லாம் செயற்கை உணர்வுகளாகும். இயற்கை உணர்வு என்றும் உள்ளது. நாமே இயற்கை தான். இயற்கை தான் நம்மை இங்கு அனுப்பியது. காண்பதெல்லாம் இயற்கை. இயங்குவதெல்லாம் இயற்கை. காலமே இயற்கையிட மிருந்து தான் வந்தது. காலத்தைப் படைத்தது இயற்கை. இயற்கையில் இன்பமுள்ளது. ஆனால் துன்பமில்லை. இயற்கையில் உள்ள பேருணர்வு என்றும் நிலைத்த வொன்று. இயற்கையில் பல்லாயிரம் கோடி இரகசியங்கள் உள்ளன. மனிதனை இயற்கை தான் சமைத்தது. இயற்கைக்கு யாரும் எதிரியன்று. எல்லாம் இயற்கை படைத்தது தான். இயற்கை தான் மனிதனுக்குத தாயும், தந்தையுமாகும். மனிதன் கடைசியில் எய்தும் நிலை இயற்கை நிலை. அதனால் தான் மனிதனை இயற்கை எய்தினார் என்று சொல்கிறார்கள். இயற்கையே தெய்வம். இயற்கை என்றும் மகா விழிப்பில் உள்ளது. அது ஒவ்வொரு ஜீவனின் இயக்கத்தைக் கண்காணித்துக் கொண்டு வருகிறது. ஆனால், பாவம் மனிதன்!

இயற்கைக்கு எதிர் மறையான கருத்து, சிந்தனை என்று செயல் படுகின்றான். இயற்கையை அவமதிக்கின்றான். இயற்கையிலிருந்து நெடுந்தூரம் விலகிச் செல்கின்றான். பிறந்ததிலிருந்து இறுதி வரை இயற்கை உணர்விலேயே மனிதன் இருந்தால் அவன் ஞானி, அவன் சித்தன். இயற்கை எங்கும் உள்ளது என்றாலும் அது வெட்ட வெளியோடு கலந்து உள்ளது.

**4. முற்றுமுணர்தல்**

முற்றுமுணர்தல் என்பது மனிதனால் இயலாது. மற்ற ஐந்து வகை ஜீவ ராசிகளுக்கு இது இல்லை. ஒரு மனிதனை உணரக் கூடிய ஆற்றல் கூட மனிதனுக்கு இல்லை; ஒரு பல்லியின் முழு ஆற்றலைக் கூட உணர முடியாது; ஒரு மானின், ஒரு நத்தையின், கடலுக்குள்ளே உள்ள பல்லாயிரம் கோடி ஜீவ ராசிகளின் தனித் தனியே அவைகளின் முழு ஆற்றல் மனிதனுக்குத் தெரியாது.மனிதனுக்குத் தெரியாதது பல கோடி! தெரிந்தது குறைவு. அவனுக்குத் தெரிந்ததெல்லாம் அவனை வீழ்த்துகின்ற வித்தைகளாம். அவனை அண்டவெளிக்கு அழைத்துச் செல்கின்ற வித்தை. அவனுக்குத் தெரியவில்லை. அவன் தன் பிண்ட வெளியிலிருந்து விடுபட்டு, பிண்ட வெளிக்குள்ளே இருந்து கொண்டு அண்ட வெளிக்குள் பிரவேசித்து அதில் முழுதும் பயணம் செய்கின்ற ஆற்றல் அவனுக்கு இல்லை.அண்டவெளியின் பேராற்றல் இவனுக்குத் தெரிவதில்லை. இயற்கையை முழுமையாகத் தெரிந்தவன் - இல்லை. தான் இயற்கையிலிருந்து வந்தோம்; காட்டிற்குப் போகாது இயற்கைக்குச் செல்லுகின்ற வித்தையும் இவனுக்குத் தெரிவதில்லை. இவையெல்லாம் ஜீவ குணத்தின் இயல்புகள். ஆனால், சிவ குணம் நிறைந்த சிவத்திற்கு ஒரே சமயத்தில், ஒரே நொடியில் எல்லா ஜீவன்களிலும் உள்ள அனைத்து ஆற்றலையும் முழுமையாக உணரும் வல்லமை உண்டு. எல்லாம் - தான் படைத்தவை தாம்.அனைத்து ஜீவன்களுக்கும் ஆற்றலைக் கொடுத்தது அது தான். முற்றும் அறிதல்,முற்றும் உணர்தல் தன்மை சிவ குணத்திற்கே உள்ளது.ஜீவ யாத்திரையின் அந்திமப் பகுதியில் ஜீவ குணத்திலிருந்து சிவ குணத்திற்கு வந்து சேர்தலே ஜீவ யாத்திரையின் கடைசிப் படிக்கு ஒன்பதாவது படியாகும். இது ஆத்ம சாதனைக்கு மிகவும் இன்றியமையாததாகும்.சிவ குணத்திற்கு வந்து விட்டால் இயற்கையாகி விடுவான். இயற்கை இவனிடம் பேசும். இயற்கையும், இவனும்

நண்பர்களாகி விடுவார்கள். ஜீவ யாத்திரை மிகவும் எளிதாகி விடும். இந்த நிலைக்கு வந்த மனிதன் மனிதனல்லன்; மாமனிதன் அல்லன்; தெய்வ நிலைக்கு வந்து சேர்கின்றான். இவனுக்கு அழிவு என்பதில்லை.நினைத்த நேரத்தில் தேகத்தை விட்டுப் புறப்படுவான். நினைத்த நேரத்தில் தேகத்திற்குள் வந்து சேர்வான்.

### 5. இயல்பாகவே பாசங்களிலிருந்து நீக்குதல்

முற்றுமுணர்தல் என்ற படிக்குப் படியேறிய பிறகு அந்த ஜீவன் இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்கி விடும். பாசம் என்பதை உயர்ந்ததாக மனித குணம் நம்புகிறது. பாசங்களின் மொத்த உருவத்தையும் அதன் நன்மை, தீமைகளையும் ஏன் இந்த மனித குணம் முழுமையாக உணர்ந்த பாடு இல்லை. பாசம் என்பது நன்மையும், தீமையும் நிறைந்தது. பிடிப்பு, பிணைப்பு, தியாகம் செய்தல், நல்லதை வெறுத்தல், தீயதை ஏற்றுக் கொள்ளுதல் - தான் பாசம் கொண்டிருக்கும் ஜீவன்களின் சார்பாக அதர்மத்தில் நிற்றல். பாசம் செய்வோருக்குச் சார்பாகத் தேவைப் பட்டால் மற்றவர்களுக்குத் தீங்கு செய்தல்;பாசம் யார் மீது செலுத்துகின்றோமோ அவர்கள் நன்மைக்காக மற்றவர்கள் வாழ்வை அழித்தல் அல்லது சிதைத்தல் ஆகியவை நிகழும். கடுமையான பாசம் கொண்டவர்கள் கடவுளை அணுக மாட்டார்கள். கடவுள் அருள் கிடைக்காது. அவரிடம் பொய் இருக்கும்; பொறாமை கூட இருக்கும்.பாசங்கள் இல்லாத ஒரு மன்னன் மனு நீதிச் சோழன். பாசங்கள் இல்லாத மற்றொரு மன்னன் சிபிச் சக்ரவர்த்தி. மனுநீதிச் சோழன் தன் மகன் ஒரு பசுவின் கன்று மீது தேரை விட்டான். கன்று இறந்தது. அதற்குப் பதிலாக, தாய்ப் பசுவின் கண்ணீரைப் பார்த்து மன்னன் தன் மகனைச் சாலையில் படுக்க வைத்துத் தேரை அவன் மீது ஏற்றினான். இது பாசமற்றவருக்கு உதாரணம்.பாசங்களுக்கு உதாரணம் தன் மகன் அயோத்தியை ஆள வேண்டும் என்பதற்காக இராமனைக் காட்டிற்கு அனுப்பினாள் கைகேயி. கணவனையும் அழகாகக் கொன்றாள். இது பாசத்தில் விளைந்த அதர்மம்.ஆகவே எல்லாவற்றையும் முற்றிலும் உணர்ந்த பிறகு ஜீவன் இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்கி விடும். தர்மம், சத்தியம், நியாயத்தையுமே பற்றியிருக்கும். அதன் மீது கடவுளின் கருணை முழுமையாகப் பாய்ந்து கொண்டிருக்கும். பாசம் இயல்பாகவே நீங்கி விட்டால் சாதனையின் பணி 3/4 பகுதி குறைந்து விடும்.

### 6. பேரருள் உடைமை

அருள், திருவருள், பேரருள், தெய்வத் திருவருள், தவத் திருவருள் போன்ற நிலைகள் எல்லாம் உள்ளன. அளப்பதற்கரிய பேரருள் சக்தி முழுவதுமாக அந்த ஜீவனை வந்து அடைந்து விடுகிறது. அருள் - தன்னையாளும். அருளால் - உலகையெல்லாம் ஆளலாம். அருளால் ஜீவனுக்கு நன்மை, சந்தோஷம் அருளலாம். அருளால் ஜீவனைக் கடைத்தேற்றலாம். அருளால் மரணத்தை வெல்லலாம். அருளால் பிறவிகளை அறுக்கலாம். பேரருளால் செய்ய முடியாதது ஏதுமில்லை. பேரருளில் எல்லா வல்லமைகளும் உள்ளன.

### 7. முடிவில்லா ஆற்றல் உடைமை

எல்லாச் சக்திகளும், எல்லா ஆற்றல்களும் ஜீவன்களுக்கு அந்தப் பேரருள் வந்த பிறகு எல்லையற்ற நிலையில் வந்தடையும். வானத்தை வில்லாக வளைக்கலாம்; மணலைக் கயிறாகத் திரிக்கலாம். கைலாச நாதர் கோயில் மண்ணால் கட்டப்பட்டது. வானத்தை வில்லாக வளைக்கலாம் என்றால் வானத்தில் உள்ள அதிசயங்கள், இரகசியங்களை யெல்லாம் சிவ குணம் உள்ளவர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பது பொருள்.

### 8. வரம்பில்லா இன்பமுடைமை

சிவ குணம் உள்ளவர்கள்.எல்லையற்ற இன்பமுடையவர்கள். அதுவே பேரின்பம். சிற்றின்பம் ஜீவ குணத்திற்குரியது. எல்லையில்லா இன்பம் சிவ குணத்திற்குரியது. அதுவே சாயுச்யம். அவனுடைய இன்பத்திற்கு வரம்பு கிடையாது. எல்லை கிடையாது. எல்லாம் துன்ப மயம் என்று வாழ்ந்த ஜீவன் எல்லாம் இன்பமயம் என்ற அருளாட்சிக்கு வந்து இன்பமாய் நிற்கிறது.

**சந்தோஷம்**

# ஜீவ குணம்

## 1. பராதீனன்

ஜீவ யாத்திரையில் ஜீவனைப் பற்றிய கவனிப்பு இன்றியமையாதது. யார் இந்த ஜீவன்? ஜீவனும், ஆத்மாவும் ஒன்றா அல்லது வேறா? ஒன்று என்றால் ஆத்மாவிற்குத் துன்பம் இல்லையே! இதற்கு ஏன் துன்பம் இருக்கிறது? வேறு என்றால் ஆத்மாவைப் பற்றி ஏன் ஜீவனோடு இணைத்துப் பேச வேண்டும்? ஆத்மா வேறு, ஜீவன் வேறு என்றால் ஆத்மாவைப் படைத்தது யார்? ஜீவனைப் படைத்ததது யார்? இரண்டுக்கும் தலைவன் ஒன்றா அல்லது வேறு வேறா? ஜீவன்களின் குணங்கள் என்ன? ஆத்மாவின் குணங்கள் என்ன? இதனால் ஜீவ குணங்களைப் பற்றிப் பார்ப்போம்.

ஜீவன் என்பது ஆத்மாவைச் சுற்றிய பொருள் அன்று. அதுவே ஆத்மா. ஆத்மா அடங்கிய தேகம். விதி வழியே செயல் படுகிறது. விதியின் வினைப் பயன்கள் பாவம் புண்ணியம். இந்த இரண்டும் சேர்ந்து ஆத்மாவுக்குள் நுழைய முடியாது. நுழையாது. ஆத்மாவைச் சுற்றி நிற்கிறது. அந்தப் புண்ணியமும், பாவமும் இரண்டு குணங்களைக் குறிக்கின்றன.

பாவம் தருவது துன்பம். புண்ணியம் தருவது இன்பம். இந்த இரண்டும் ஒன்று கலந்து ஒன்றன்பின் ஒன்றாகி அந்த ஆத்மாவைச் சுற்றி இருக்கின்ற காரணத்தால் இதற்கு ஜீவன் என்று பெயர். ஆகவே ஆத்மாவிற்கு வெளியே, ஆத்மாவைச் சுற்றிக் கர்ம வினைகள் சூழ்ந்துள்ளன. இந்த ஜீவ யாத்திரையில் செல்லச் செல்ல, சத்ய நிலையில் செல்லச் செல்ல, கர்ம வினைகள் குறைந்து - குறைந்து கொண்டே இறுதியில் இல்லாமல் போகின்றன.

மேகத்திற்குள் இருக்கும் சூரியன் போன்று - மேகம் சூரியன் முன்னால் இருக்கும் போது பூமியில் எங்கும் இருள். மேகம் - சூரியனை விட்டு விலகிய பிறகு பூமியில் எங்கும் ஒளி வெள்ளம். அப்போது நாம் முழுச் சூரியனைப் பார்க்கின்றோம். பாவம், புண்ணியம். கர்ம வினைகள் முற்றிலுமாக விலகிய பிறகே ஜீவ யாத்திரை முடிகிறது. இந்த ஜீவனின் குணங்களைப் பற்றிக் கவனிப்போம்.

முதல் குணம். அதாவது ஜீவனுக்குள்ளே எட்டு குணங்கள் உள்ளன. அதில் முதல் குணம் பராதீனன். பராதீனன் என்றால் இழிவானது. இழிவான குணம், இழிவான நிலை, இழிவான செயல், இழிவான பேச்சு, இழிவான ஆசைகள், இழிவான பந்தங்கள், இழிவான சுவைகளை விரும்புதல், இழிவான புத்தி, இழிவான எச்சில் மொத்தத்தில் இழிவான வாழ்க்கை, இழிவான சுகத்தை விரும்புதல். உயர்ந்ததைக் கண்டால் பிடிக்காது. நல்லதைச் சொன்னால் ஏற்காது. சிலருக்கு எவ்வளவு பணம் இருந்தாலும் காய்கறிக் கடைக்குச் சென்றால் குறைந்த விலையில் கிடைக்கும் அழகிய தக்காளியும் சொத்தைக் கத்தரிக்காயும், வீணாய்ப் போன காய்கறியும் வாங்கி வருவார்கள். இவ்வாறு இத்தகைய பராதீன குண மனிதர்களுக்குக் கீழியல் குணங்கள் இருக்குமே ஒழிய மேலியல் குணங்கள் வராது.

அது போலவே பராதீன குணங்கள் உள்ளவர்களிடம் இவர்கள் நட்புக் கொள்வார்கள். சேர்ந்து வாழ்வார்கள். இவர்கள் எதற்கு எடுத்தாலும் கத்துவார்கள். சந்தோஷம் வந்தாலும் கீழியல் சந்தோஷம் இருக்கும். இழிவான சுவைகள் இவர்களுக்குப் பிடிக்கும். இழிவான கருத்துகள் இவர்களுக்குப் பிடிக்கும். இழிவான இடங்கள் இவர்களுக்குப் பிடிக்கும், இழிவான உடைகள் இவர்களுக்குப் பிடிக்கும், இழிவான காலம் இவர்களுக்குப் பிடிக்கும்.

பராதீனன் குணம் - அது மூடத் தன்மை வாய்ந்தது. அதிலிருந்து விடுபட வேண்டிய உணர்வு, நினைவு, ஜீவனுக்கு வராது. மற்றவர்கள் சொன்னாலும் இவர்கள் கேட்க மாட்டார்கள். மூடத் தன்மையும், மூர்க்கத் தன்மையும் இருக்கும். இவர்களை ஓரேயடியாகத் தீயவர்கள் என்று சொல்லி விட முடியாது. தான் சுகமாக வாழ - மற்றவர்களுக்கு விட்டு கொடுக்கும் குணம் உண்டு. இவர்கள் எங்குப் பார்த்தாலும் அலைந்து கொண்டு இருப்பார்கள்.

எதிலும் பற்று இல்லாத இவர்கள் எந்த ஒரு பெரிய காரியத்தையும் வெற்றி கரமாகச் செய்து முடிக்க மாட்டார்கள். இது தான் முழுத் துன்பம் என்று துன்பத்தைக் கண்டு கொள்ள முடியாதவர்கள். இது தான் முழு இன்பம் என்று இன்பத்தைக் கண்டு கொள்ள முடியாதவர்கள். வாழ்க்கையின் நுணுக்கங்களையும், அனுமானங்களையும் இவர்களால் ஏற்றுக் கொள்ள இயலாது. வாழ்க்கைக்கு இவர்கள் தரும் விளக்கமே

வேறு. பாவம் - இவர்களைக் கண்டு யாருக்கும் பரிதாபம் வருவதில்லை. ஆனால் மிகவும் பரிதாபத்திற்கு உரியவர்கள்.

ஆடைகளை நன்றாகத் தேர்ந்து எடுத்துக் கொள்ள மாட்டார்கள். இவர்களில் செல்வந்தர்கள் உண்டு. பெரும் பதவியாளர்கள் உண்டு. வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் வாழ்பவர்களிடம் இந்தப் பராதீனர்கள் உண்டு. பெரும் பணக்காரனாக இருப்பான். அவன் பேருந்து நிலையத்தில் பிச்சை எடுத்துக் கொண்டு இருப்பான். பெரும் பதவியில் உள்ளவனாக இருப்பான். சாதாரண எட்டணா, ஒரு ரூபாய் எல்லாம் திருடுவான்.

இவ்வாறு பராதீனன் குணத்தையும், செயலையும் எழுத்தாக்க இயலாது. சோகமாக இருப்பவர்கள், பரிதாபத்திற்குரியவர்கள், துன்பம் நிறைந்த இவர்களால் இவர்களையே காத்துக் கொள்ள இயலாது. சில கோடி மக்கள் இன்னும் பராதீனன் வாழ்க்கையை நடத்திக் கொண்டு தான் இருக்கின்றார்கள்.

பராதீனன் வாழ்வு ஆன்மிகத்திற்கு ஒத்து வராது. அந்த ஜீவன் யாத்திரை செய்யும் போது பராதீனன் வாழ்வில் ரொம்பவும் சிரமப்படும்.

**துக்க தேகி**

சிவம், ஜீவன், ஜெகம் அதன் அசைவுகள், இயக்கங்கள். இவற்றில் நான் துல்லியமாகக் காண்பது இவற்றின் அசைவுகளையும், இயக்கங்களையுமே இவைகளின் ஒவ்வொன்றின் வெளிப்பாடுகளும் விசித்திரமானவை. ஒன்றுக்கு ஒன்று பொருந்துவது போன்று தோன்றும். ஆனால் அவை பொருந்தாது. காலங்கள் இவைகளுக்குத் துணை போகின்றன.

இப்போது ஜீவ குணத்தில் இரண்டாவது குணமான துக்க தேகத்தைப் பற்றி அறிந்து கொள்வது தேவையானது. தேகங்களில் பலவகை உண்டு.

முதல் தேகம் - அதாவது ஜீவன் முதன் முதலில் மனித - தேகம் கொண்டு இயங்குவது.

இரண்டாவது, கடைசி மனித தேகம். இது மரணமில்லா தேகம்.

இதைத் தேகம் என்று சொல்லுவது பொருந்தாது. விதேக தேகம் என்று சொல்ல வேண்டும். அதற்குப் பிறகு மகா சுப தேகம். அல்லது தெய்வ தேகம். இதை அருள் தேகம் என்றும் சொல்லலாம். அன்பு தேகம் என்றும் சொல்லலாம்.

அடுத்தது, கல்ப தேகம். இது சுத்த தேகமாகும். இது உத்தம தேகமாகும். உயர் மெய்ஞ்ஞானிகளுக்கு இத்தேகம் கிடைக்கிறது. ஒழுக்கம் நிறைந்த சத்யவானுக்கு இத்தேகம் கிடைக்கிறது.

அதன் பிறகு, ஆனந்தமய தேகம். இப்போது சொல்லிய தேகமெல்லாம் மேலியல் தேகமாகும். (ie) Different kinds of Divine Bodies.

கீழியல் தேகம் என்று சில உள்ளன. சோக தேகம், துக்க தேகம், தரித்திரிய தேகம், மூட தேகம், மிலேச்சிய தேகம், ஈன தேகம், கடைசியாகப் பாழ் தேகம். இந்தக் கீழியல் தேக வகைகள் அனைத்தும் துன்பம் தருவதாகும். இன்பமேயறியாத இவைகளால் மற்றவர்களுக்கு இன்பமே கிடையாது. இந்தத் தேகம் உள்ளவர்கள் - மற்றவர்களுக்குக் கெடுதி செய்ய வேண்டிய அவசியமேயில்லை. ஏனென்றால், இந்தத் தேகம் உள்ளவர்கள் எங்குச் சென்றாலும் அவர்கள் தேகத்திலிருந்து வரும் துக்க சக்தி அந்த இடத்திலுள்ள மனிதர்களையும், அந்த இடத்தையும் துன்ப நிலைக்குக் கொண்டு வந்து விடும்.

நன்றாக இருந்த குடும்பத்தில் இத்தகையோர் நுழைந்து விட்டால் அந்தக் குடும்பம் சீர் அழிந்து விடும். இவர்கள் எப்போது பார்த்தாலும் துக்கப் பேச்சு, துக்கக் கதைகள், வேதனைச் சொற்கள், அழுகைகள், சோகக் கதைகள், நடிப்புப் பேச்சு, சாவுப் பேச்சு, நோய்ப் பேச்சு, துன்பப் பேச்சு போன்றவைகளைப் பேசிக் கொண்டு இருப்பார்கள். நல்லதே இவர்கள் வாயில் வராது. நல்லதே பேச மாட்டார்கள். நல்லதையே சிந்திக்க மாட்டார்கள். நல்லபடி வாழவும் மாட்டார்கள். இவர்களுடைய தேகத்திலிருந்து வெளிவரும் வெப்பம் துக்க வெப்பமாகும். இவர்களுடைய துக்க தேகத்தைக் கண்டு சுத்த அக்னி கூடக் கொஞ்சம் தள்ளியே நிற்கும்.

இத்தகையோரை அவர்கள் யாராக இருந்தாலும் நட்புக் கொள்ளாது இருத்தல் நன்று. இவர்களிடம் எந்தக் கருணை காட்டினாலும் அவைகளை நேரடியாகக் காட்டாது மற்றவர்கள் மூலம்

செய்ய வேண்டும். இவர்கள் தேகத்தைத் தொடாது இருத்தல் உத்தமம். இவர்கள் குரல் மற்றவர்கள் காதில் நுழையாது இருத்தல் பேராபத்தைத் தவிர்ப்பதற்கு ஒப்பாகும். இவர்களை எக்காரணத்தைக் கொண்டும் உங்கள் வீட்டிற்கு அழைக்காமல் இருப்பது நன்று.

இவர்களை முதல் முறையாகக் காலையில் பார்த்து விட்டால் அன்று முழுதும் பார்த்தவர்களுக்குத் துன்பம் தான் நிகழும். எந்தக் காரணத்தைக் கொண்டும் இவர்கள் வம்புக்குச் செல்லக் கூடாது. தெரியாத் தனமாக இவர்களுடைய தேகம் உங்கள் மீது பட்டு விட்டால் உடனே குளித்து விட்டுக் கோயிலுக்குச் செல்ல வேண்டும். அங்குள்ள ஏழை எளியவர்களுக்குத் தானம் செய்து விட்டு வீட்டிற்கு வர வேண்டும்.

அப்படியென்றால் இவர்களின் நிலை தான் என்ன? இந்த ஜீவர்கள் கடைத்தேற வழி இல்லையா? உண்டு. இருக்கின்ற இடத்திலிருந்து விலகிச் சற்குருவை அடைந்து அவர்கள் சொல்லிய மந்திரத்தை ஒரு ஆற்றங்கரையிலோ, கடற்கரையிலோ இருந்து நாள்தோறும் ஜெபிக்க வேண்டும். வேப்பிலையைக் கீழே போட்டு அதன் மீது தினந்தோறும் படுக்க வேண்டும். இவ்வாறு ஐந்து ஆண்டுகள் செய்ய வேண்டும். ஒரு நாளைக்கு மூன்று முறை குளிக்க வேண்டும். புலால், மது பானங்கள் ஆகியவற்றை உடனே நீக்கி விட வேண்டும். யாரையும் தொடக் கூடாது. ஜெபத்தில் ஆழ்ந்து உட்கார வேண்டும். தன் துணியைத் தானே துவைக்க வேண்டும். முழுமையான மௌனம் வேண்டும். பகையும் வேண்டா. நட்பும் வேண்டா என்று இரண்டும் இல்லாமல் இருப்பது உத்தமம்.

ஒரு திருவிளக்கு ஏற்றி அதைப் பார்த்துக் கொண்டு இருக்கலாம். வாய் மூடி மௌனமாக இருத்தல் வேண்டும். தேவைப் பட்டால், விரும்பினால் அருளாளர்கள் எழுதிய பாடல்களைத் தினந்தோறும் படிக்கலாம்.

இவர்கள் ஜீவன் பிரிந்து விட்ட பிறகு, இவர்கள் தேகத்தைச் சுடுகாட்டில் எரிப்பது கூடக் கடினம். அன்று மழை வரும். விறகு கிடைக்காது. வெட்டியான் கூடக் கிடைக்க மாட்டான்.

துக்க சக்தி எங்குப் பார்ததாலும் பரவிக் கொண்டு இருக்கும். துளசியைச் சாப்பிட்டுக் கொண்டு இருக்கலாம். ஆகாயத்தைப் பார்த்துக்

கொண்டு இருக்கலாம். துக்க தேகம் படைத்தவர்கள் தங்களைத் தாங்களே திருத்திக் கொள்ள வேண்டும். இது ஜீவ குணத்தின் அடித் தளத்திலுள்ள தேகத்தைக் காட்டுகிறது.

இத்தகைய ஜீவ குணம் உள்ளவர்கள் ஒரே அறிவில் பல தேகம் எடுத்தவர்களாக இருப்பார்கள். இத்தகைய துக்க குணம் உள்ள ஜீவன்கள் எல்லா அறிவு ஜீவன்களிலும் உள்ளன. மனிதனிலும் உள்ளனர். இத்தகைய துக்க தேகமுள்ளவர்கள் தீய காரியங்கள் செய்வார்கள். இந்த துக்க காரியம் செய்வதற்குத் தான் இத்தகைய தேகம் இறைவனால் படைக்கப்பட்டது. இவர்கள் செல்லுகின்ற போது கைப்படும் செடிகளும், பார்வைபடும் செடிகளும் இறந்து விடலாம் அல்லது வாடி வதங்கலாம்.

பிரசவமாகப் போகும் தாய்மார்கள் இந்தத் தேகத்தைப் பார்க்காமல் இருப்பது நல்லது. துக்க தேகம் சமூகத்திற்கும் நல்லது அன்று. இதற்கும் நல்லது அன்று. மரணம் சம்பவிக்கும் இடத்திற் கெல்லாம் இவர்கள் செல்வார்கள். இவர்கள் வாழ்த்துகளும், ஆசிகளும் தீமை கொடுக்குமே தவிர நன்மை கொடுக்காது. இவர்களை எல்லோரும் திட்டுவார்கள், விரட்டுவார்கள்; ஆனால் வாய் அடங்காது. சுப காரியங்கள் நடக்கும் இடங்களுக்குச் சென்றால் மற்றவர்களும் துன்புறுவார்கள், தாங்களும் துன்புறுவார்கள்.

### 3. செயற்கை உணர்வினன்

உணர்வுகள் மூன்று வகைப்படும். 1. கடவுள் உணர்வு 2. இயற்கை உணர்வு 3. செயற்கை உணர்வு.

கடவுள் உணர்வும், இயற்கை உணர்வும் சிவ குணத்தைச் சார்ந்தவை. செயற்கை உணர்வு - ஜீவ குணத்தைச் சார்ந்தது. செயற்கை உணர்வு - அநித்தியமானது; நிலையில்லாதது. ஆனால், மகாப் பிடிப்பு உள்ளது. அழிந்து போகும் மாயை சுகங்கள் மலை போல் காட்சி தரும். இது மனிதனுடைய மனத்தை முழுதும் ஆக்கிரமப் படுத்தித் தன் வயப்படுத்தும். இதனால், இயற்கை உணர்வு வருவதைத் தடுத்து நிறுத்தும். மனிதன் - பரசிவ நிலைக்குச் செல்ல ஓட்டாமல் செய்து விடும். இந்தச் செயற்கை உணர்விலிருந்து தப்பிப்பது என்பது சற்றுச் சிரமம்.

செயற்கை உணர்வு, செயற்கைக் குணம், செயற்கைச் செயல், செயற்கை புத்தி இவையெல்லாம் மனிதனைக் கீழ் நிலைக்கு அழைத்துச் செல்லும். பொய்யுலகுக்கு அழைத்துச் செல்லும். ஞானிகளை வெறுக்கச் செய்யும். ஞானத்திடம் வெறுப்புக் கொள்ளச் செய்யும். இந்தப் பிரிவில் 90 விழுக்காடு மக்கள் உள்ளனர்.

**4. சிற்றுணர்வினன் :**

பேருணர்வு, சிற்றுணர்வு, முடிவில்லா ஆனந்த உணர்வு என்று மூன்று வகை உணர்வுகள் உள்ளன. சிற்றுணர்வு என்றால் அற்பப் புத்தியினாலும், அற்பச் செயலினாலும், அற்பச் சிந்தையினாலும் வருகின்ற உணர்வாகும். இதைப் பஞ்ச பூதங்கள் ஏற்காது. இது காலத்திற்கு உட்பட்டது. கோலத்திற்கு உட்பட்டது. பருவத்திற்கு உட்பட்டது. பெரும் பயம் வந்தால் இது ஓடி விடும். பேராபத்து வந்தால் இது இருக்கும் இடம் தெரியாது. இறை நினைவு வந்தாலோ இது இல்லாதாகி விடும். ஞானிகளைத் தரிசித்தால் இது நசிந்து விடும். சற்குருவைச் சரணடைந்து விட்டால் சிற்றுணர்வு இரகசியமாக வெளியேறி விடும். பேருணர்வு ஆட்கொண்டு விடும். மிலேச்சியர்கள், ஈனர்கள், சண்டாளர்கள், ஆறுமா- பாதகர்கள், துரோகிகள், கொடுங்கோலர்கள், பேராசைக் காரர்கள், பொறாமைக் காரர்கள், பொய்யர்கள், மற்றவர்களுக்குத் துன்பம் கொடுக்க விரும்புபவர்கள், பாவம் செய்பவர்கள் ஆகியோருக்குச் சிற்றுணர்வு மேலோங்கி நிற்கும்.

**5. பந்தன் :**

பந்தப்படுதல் ஜீவனின் தொழிலாகும். நட்பும் ஒரு பந்தம், பகையும் ஒரு பந்தம். பகையும் ஒரு உறவுதான். இதுவும் விட்டு விடாது. அதுவும் விட்டு விடாது. எல்லாவற்றிலும் பற்று, பந்தப் பட்டுக் கொண்டேயிருக்கும். ஜீவ குணங்களிலே மிக முக்கியமான குணம் இதுதான். அசைக்க முடியாத பாசம் கொண்டிருக்கும். பாசத்திற்கு உயிர்த் தியானம் செய்யக் கூட அஞ்சாது. இப்படி இந்த உலகியல் உறவு பந்தத்தில் இருக்கும் ஜீவன் கடைத் தேறுவது எங்ஙனம்? இதைக் கடைத் தேற்றுவது சுத்தத் துன்பம் ஒன்றாலே தான் முடியும்.

**6. காடின்னியன் :**

இது ஈனத்தனமான செயலைக் காட்டுகிறது. ஒவ்வாத

குணங்களை இது சுகமாக ஏற்றுக் கொண்டு செயல் படுத்தும் நீச்ச கொடிய புத்தியுண்டு. இது ஜீவனைக் கடைத்தேற்ற முடியாமல் நிற்கும் தக்க பாதுகாவலனாகும். இவர்களிடம் நட்புக் கொள்வது என்றும் தீராத கெடுதியைக் கொடுக்கும். நல்லவர்களையும் தீயவர்களாக ஆக்கும் ஆற்றல் உண்டு. பூலோகத்தை இருளாக்கும் ஆற்றல் உண்டு.

சிறு-சிறு சக்தி உடையவன். தெய்வ ஆற்றல் இல்லாதவன். கீழியல் ஆற்றல் நிறையப் பெற்றவன். அவனால் அவனுக்கும் நிம்மதி இருக்காது; அவன் உறவுகளுக்கும் நிம்மதி இருக்காது. அவனைச் சார்ந்தவர்களுக்கும் நிம்மதி இருக்காது. ஆனால், அவனின் செயல்கள் அப்போதைக்கு அப்போது அவனுக்கு துர்சுகத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும். அந்த துர்சுகத்தை இந்த பூலோகத்தின் முழு சுகம் என்று அதைப் பெரியதாக்கிக் கொண்டு தன்னையே தான் வீழ்த்திக் கொள்வான்.

**7. நிர்பவன் :**

ஜீவ குணத்தில் ஏழாவது குணம் நிர்பவன். இது தீயதை உயர்ந்ததாகவும், உயர்ந்ததைத் தீயதாகவும் காட்டும், அல்ப நிலையைக் கொண்டது. இந்தக் குணம் ஜீவ குணத்தில் மேலோங்கி நிற்கும்.

இவனுக்குக் கொடுக்கப்பட்ட ஆற்றல் எல்லாம் ஒரு எல்லைக்கு; வரம்புக்கு உட்பட்டது. அவனுடைய ஆற்றலால் அவன் கண்ணீரை அவனாலே துடைக்க முடியாது. அவனுடைய ஆற்றல் பொய்யான ஆற்றல், மாயை நிறைந்த ஆற்றல், எந்த நேரத்திலும் அவனுடைய ஆற்றல் முடிவடைந்து விடும்; குறைந்து விடும் அல்லது இல்லாததாகி விடும். முதலும், முடிவும் உள்ளது இவனுடைய திறமைகள்.

**8. மலதேகி**

ஜீவ குணத்தில் எட்டாவது குணம் மலதேகி. ஆணவம், மாயை, கர்மம் ஆகிய மூன்று குணமும் ஒன்று கூடித் தேகமாக உருவெடுத்துள்ளது. மலதேகி என்றால் அழிந்த ஒன்று, சிதைந்த ஒன்று, பேதங்கள் உள்ள நிலையுள்ளது, ஞானிகள் வெறுப்பது, துர்நாற்றம் உடையது, சேரக் கூடாதது, வேண்டாதது, வெறுக்க கூடியது. இது மனிதனை நரகத்திற்கு அழைத்துச் செல்லும் சிறந்த வாகனமாகும்.

மலம் என்றாலே துர்சக்தி, துர்புத்தி தரும் துர் சக்தி. துர்குணம் தரும் துர்நிலை. துன்பமுடைமை, துன்பத்தை அனுபவிக்கும் நிலை, அகங்காரம், மமகாரம், கர்மம், மாயை ஆகிய இந்த வினைகளும், சக்திகளும் அதீத நிலையில் அதிகமாகி இருத்தல். மலதேகம் உள்ளவனுக்கு அந்த புத்திதான் இருக்கும். சந்தன மரக் காட்டில் இருப்பவருக்கு அந்தச் சந்தன வாசனை இருக்கும். சகதியில் இருப்பவனுக்கு சகதி வாசனை தான் இருக்கும்.

எட்டு குணங்களை எவன் விலக்குகின்றானோ அவன் ஞானி, ஆத்ம ஞானி. கடவுளைக் காண்பதற்கு முற்றிலும் தகுதியானவன். அமரத்துவ நிலை நிச்சயம் அவனுக்குக் கிடைக்கும். இந்த எட்டு குணங்கள் தனித்தனியே இல்லை. அவை ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்துள்ளன.

ஜீவ குணம் உள்ளவர்கள் இருக்கின்ற காரணத்தினால் தான் இந்த உலகம் இன்னும் இருக்கிறது. இன்னொரு அதி முக்கியமான கருத்து என்னவென்றால் ஜீவ குணம் உள்ளவர்களால் நிச்சயமாக, ஒருக்காலும் கடவுளைக் காணவே முடியாது. இப்படிப் பட்டவர்கள் தாங்கள் கடவுளைக் காண முடியாத காரணத்தால் அது இல்லையென்று சொல்லித் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்கிறார்கள்.

ஜீவ யாத்திரையை விரைவு படுத்த ஜீவ குணங்களை ஒன்று ஒன்றாக நீக்கி விட வேண்டும். அதுவும் சற்குருவின் அருட் சாதனை கொண்டு நீக்கி விடுதல் நன்று. ஜீவ குணம் நீக்கியவர்கள் எங்கும் நிற்கும் பரம் பொருளைக் காண்பார்கள். தாங்களும் அம்மயமாக இருப்பார்கள்.

திருஞான சம்பந்தர், தாயுமானவர், இராமலிங்க சுவாமிகள், ஞானேஸ்வர மகராஜ், இராமகிருஷ்ண பரம்ம ஹம்சர், திருவாரூர் தட்சண மூர்த்தி சுவாமிகள், பதினெண் சித்தர்கள், மற்றும் யோகிகள், கடவுளைக் கண்டவர்கள், கடவுள் சுகத்தை அனுபவித்தவர்கள் கடவுளாகவே உள்ளவர்கள்.

சந்தோஷம்

# வேறு - வேறு

ஜீவன் யாத்திரை செய்கிறது. அந்த யாத்திரை மிகவும் விசித்ரமானது. விசித்ரத்தில் சித்திரமுள்ளது. ஜீவன் யாத்திரையைப் பல வழிகளில் மேற் கொள்கிறது.

ஒன்று ஜீவன் வெளிப்படுகிறது. அது புனிதமாக வெளிப்படுகிறது. அது கர்மா என்கிற பாதையில் அது வைக்கப் படுகிறது. அது அந்தப் பாதையில் சூழல்கிறது. கர்ம சுழற்சிக்கு அது வந்ததும். அதில் ஒரு மயக்கம் வெளிப்படுகிறது. கர்ம வட்டம் அதீத சக்தி வாய்ந்தது. அகர்மமாக இருந்த ஒன்று அதாவது வினையற்ற நிலையிலிருந்த ஒன்று வினைப் பாதைக்கு வந்த பிறகு எண்ணில் அடங்கா வித விதமான நிலையில் வித்தியாசமாகச் சந்திக்கிறது. அதை வினை யாத்திரை என்று சொல்லலாம்.

எல்லா வினையோடு அந்த ஜீவன் செல்லுகிறது. அந்த வினையில் புகுந்து யாத்திரை செய்யும் போது இன்ப, துன்பத்தைச் சந்திக்கிறது. ஒரு வினையை முடிக்கிறது. அது இன்னொரு வினைக்குள் புகுகிறது. இன்னொரு வினையில் அது யாத்திரை புரிகிறது. அதோடு காலமும் வருகிறது. காலம், வினை இரண்டுக்குள்ளும் ஜீவன் புகுந்து யாத்திரை செய்கிறது. ஒளி யாத்திரை, இருள் யாத்திரை, இருளும், ஒளியும் கலந்த யாத்திரை, பர யாத்திரை, பர சிவ யாத்திரை என்ற ஐந்து நிலையில் ஜீவன் யாத்திரை செய்கிறது.

ஓரறிவு உள்ள கூட்டுக்குள் இருக்கும போது அந்த உடல் இளமைப் பருவம், இடைப் பருவம், முதுமைப் பருவம் என்று அந்தந்தப் பருவத்தில் பல்லாயிரம் வினைகளில் வருகின்றன. அந்த வினைக்குள்ளே அது யாத்திரை செய்கிறது. இன்பம் - துன்பம் அனுபவிக்கின்ற நிலையிலும் வருகிறது. ஜீவன் - ஓரறிவிலிருந்து இன்னொரு உருவத்திற்கு அதாவது புழுவிலிருந்து பூனை உருவத்திற்கு அது வரும் போது அந்த உருவமும் அதற்குப் புதிது. அந்த உருவத்தில் ஆற்றப் போகின்ற ஆற்றலும் புதிது. அந்த உருவம் சந்திக்கப் போகின்ற வினைகளும் புதியன. முந்தைய உருவத்தில் அது எப்படி இருந்ததோ? அது எப்படிச் செயல் பட்டதோ - இப்போது அந்த உருவத்தில் அவையில்லை. இந்தப் பூனை உருவத்தில் அதன் வினை முற்றிலும்

மாறுபட்டது. ஏற்றமுள்ளது. இந்த உருவத்தில் ஜீவன் ஆற்றப் போகும் அல்லது சந்திக்கப் போகும் வினை யாத்திரை புதியதாகும். எலியின் ஆற்றல் வேறு, பூனையின் ஆற்றல் வேறு, யானையின் ஆற்றல் வேறு.

ஜீவனுக்கு - பசி, தாகம், கோபம், பொறாமை, ஏமாற்றுத் தன்மை, எச்சரிக்கை, பயம், இன விருத்தி உணர்வு ஆகிய குணங்கள் எல்லாம் நிரந்தரமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. உதாரணமாகப் பூனைக்குள் அந்த ஜீவன் வினை யாத்திரை செய்கிறது. அடுத்து அந்த ஜீவன் அந்த உருவத்தை விட்டுப் பிரிந்து - மீண்டும் பூனை உருவத்தை எடுக்கும் போது அந்தப் பழைய பூனையின் வினைகள், அனுபவங்கள் இந்தப் பூனைக்கு அத்துப் படியாகின்றன. அந்தப் பூனை - முதல் பூனையன் ஆற்றலை விடத் திறமையாகச் செயல்படுகிறது. இப்படிப் பூனையாகப் பல பிறவிகள் எடுக்கும் போது - அது பூனைக்குள் வேந்தனாகிறது.

அது மனிதர்களிடமும், மற்ற ஜீவன்களிடமும் பழகிப் பழகி எல்லோருடைய குணங்களையும் கற்றுக் கொள்கிறது. அது ஒரு பூனையிலிருந்து மற்றொரு பூனை உருவத்திற்குப் போகும் போது - அதன் மனம் விரிவடைந்து செயல் படுகிறது. பூனையின் ஜீவ அனுபவத்தால் உலகத்தைப் புரிந்து கொள்கிறது. அதற்குப் பிறகு அது இன்னொரு உருவத்திற்குள் புகும் போது அந்த உருவமும், அனுபவமும் அதற்குப் புதிதாக இருக்கின்றன. உதாரணமாக நாயின் உருவம் போகும் போது பூனையின் அனுபவம் பயன் படுகிறது. ஆனால் பூனை செய்யும் வினைகளை நாய் செய்ய வேண்டிய அவசியமில்லை.

ஒரு ஜீவனுக்கு அறிவுண்டு, மனமுண்டு, instinct என்கிற மெல்லிய பேருணர்வு உண்டு. அது மற்ற ஜீவன்களிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள அந்த இறைப் பேருணர்வு அதற்குக் கொடுக்கப் பட்டுள்ளது. அந்த ஒவ்வொரு ஜீவனுக்கு உள்ள அதன் ஆற்றல், தகுதி எல்லாம் வித்தியாசப் பட்டுள்ளன.

ஆகவே ஓரறிவிலிருந்து ஆறறிவுக்குச் செல்லும் போது ஒவ்வொரு உருவமும் புதிது. அதற்குக் கொடுக்கப் பட்டுள்ள ஆற்றலும் புதிது. ஜீவ யாத்திரை அந்த ஜீவனுக்குப் புதிதாகவே உள்ளது. அது ஒவ்வொரு உருவத்தில் நுழையும் போதும், அந்த உருவத்தில் யாத்திரை செய்யும் போதும் - இந்த இதே உலகம் அதற்கு மாறுபட்டுக் கொண்டேயிருக்கிறது. அந்த ஜீவ யாத்திரை ஒவ்வொரு உருவத்தின்

வினையை முடித்துக் கொண்டு இன்னொரு உருவத்திற்குச் செல்கிறது. ஒரு உருவத்தில் அந்த ஜீவன் ஆற்றும் வினை முடிந்த பிறகு அந்த வினையின் முடிவு, பயன்கள் எல்லாம் அந்த ஜீவனுக்குப் பதவி உயர்வைக் கொடுக்கின்றன. இன்னொரு புதிய உருவத்திற்குச் செல்கிறது. அந்த வினை முற்றுப் பெறாமல் இருந்தால் மீண்டும் அதே உருவத்திற்கு அது வந்து விடுகிறது.

உதாரணமாக ஒரு பூனை தர்மம் செய்து கொண்டு இருப்பவரின் பக்கத்தில் இருந்து கொண்டு இருந்தால், அவனுக்கு உதவி செய்து கொண்டு இருந்தால் - இதன் விளைவு அதற்கு இன்னொரு மேலுயர்வு கிடைக்கிறது. அல்லது அதே பூனை ஒரு கொலைகாரன் பக்கத்தில் இருந்தால், பலரைக் கடித்துக் கொண்டு இருந்தால் அதே பிறவி கிடைக்கிறது.

இவ்வாறு ஜீவன் மனித உருவத்திற்கு வரும் வரை மாறி - மாறி வினைகள் ஆற்றுகின்றன. எல்லா தேகங்களும் புதியன. ஆற்றும் வினைகளும் புதியன. ஓரறிவிலிருந்து அடுத்த அறிவு உள்ள ஜீவன் தேகம் புதிது. தேகத்திற்குள் இருந்து பல பிறவிகள் எடுக்கப்பட்டு, மனித தேகத்திற்கு அப்பால் இன்னொரு தேகம் அதற்குக் கொடுக்கப் படவில்லை.

அந்தத் தேகத்திற்குள்ளே ஆத்ம ஞான அகண்டாகார அருள்வெளி திரு உருவ மாற்றம் ஏற்படுகிறது. ஒளி தேகம், பிரணவ தேகம், அருள் தேகம், சிவ தேகம், சாயுச்ய தேகம், கல்ப தேகம் இப்படி மாறிக் கொண்டே ஆனந்த தேகத்திற்கு வந்து சேர்கிறது.

கடவுள் திருமுறை வினைகளைக் கண்டறிந்தவர் யார் உள்ளார்? கண்டறியும் ஆற்றல் மனிதனுக்குத் தெரிவிக்கப்பட வில்லை. ஏதோ சில ஜீவன்களுக்கு அவர் தன்னைக் காட்டிக் கொள்கிறார்.

**சந்தோஷம்**

வித்வத் தன்மை, பாண்டித்தியம், புலமை இவையெல்லாம் விதியின் முன்னே செல்லாக் காசாகும்.

# தண்டனை எப்போது - சுகம் எப்போது

இது எப்போது எப்படி வகுக்கப்படுகிறது என்பது மனிதனுக்குத் தெரிவதில்லை. இது பெரிய இருட்டிப்பாக உள்ளது. முன் உரைத்தர் இதில் ஏமாந்து விடுகிறார்கள்.

ஒரு தவறு செய்கின்றான். அந்தத் தவற்றிற்கு ஏற்ற தண்டனையை எப்போது அவன் அனுபவிக்கின்றான்? இந்தப் பிறவியிலேயா? அடுத்த பிறவியிலா? இன்றைக்கா? நாளைக்கா? நேற்றா?

ஆகவே தவறு செய்வதற்கு முன்பே தண்டனை நிர்ணயிக்கப் படுகிறதா? தவறு செய்த பிறகு தண்டனை நிர்ணயிக்கப் படுகிறதா? விதியின் விளையாட்டு ஒரு வழிப் பாதையா? இரு வழிப் பாதையா? விதியின் விளையாட்டின்முழுமு தர்மம் என்ன?

அந்தத் தர்மத்திற்கும், மனித தர்மத்திற்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமை என்ன? மனித தர்மம் உயர்ந்ததா? விதி கண்டு பிடிக்கும் தர்மம் உயர்ந்ததா?

மனித தர்மத்திற்கும், விதியின் தர்மத்திற்கும் பகையா? நட்பா? ஒரு மனிதன் செய்யும் தவறுகள் பல பிறவிகளில் தொடர்ந்து வரும். அதே போன்று ஒரு மனிதன் செய்யும் எல்லையில்லா உதவியின் புண்ணிய சக்தியும் பல பிறவிகள் தொடர்ந்து விடும்.

இது பரமபதத்தில் உள்ள பாம்பு, ஏணி போல் இருக்கின்றது அல்லவா! மனிதன் புரியும் தவற்றின் விளைவு, அவன் புரியும் ஜீவ யாத்திரையின் வேகத்தைக் குறைத்து இவ்வுலகில் மீண்டும் மீண்டும் துன்பத்தை அனுபவிக்க வகை செய்கிறது. அதனால் தான், அவனின் தவறுகளின் விளைவாக ஒரே உருவத்தில் பல பிறவிகள் எடுக்கின்றான்.

சான்றாக, ஒரு நாய் யாரையும் கடிக்காமல் தன் ஜீவியத்தை முடித்து விட்டால் அது தான் அதற்குக் கடைசிப் பிறவி. அதற்கு அடுத்தாற் போல உயர்ந்த பிறவி கிடைக்கும். பசு, குதிரை போன்ற பிறவிகள் கிடைக்கலாம்.

அதே நாய் 100, 300 பேரைக் கடித்து, பலரைச் சாகடித்து இருந்தால், அந்த நாயில் உள்ள ஜீவனுக்குப் பல பிறவிகளில் நாய்

உருவமே கிடைக்கும்.

யாரையும் கடிக்காமல் பிறவியை முடித்துக் கொண்ட அந்த நாயில் உள்ள ஜீவனுக்கு அடுத்த பதவி உயர்வு கிடைக்கும். இதன் விளைவாக அந்த ஜீவன் காலத்தை வென்று ஜீவ - விழிப்புப் பெற்று யாத்திரை நிறைவு செய்து கொள்ள வாய்ப்பு உள்ளது.

ஆகவே பாவம், புண்ணியம் செய்யும் மனிதனை அல்லது ஒரு ஜீவனை இனங்கண்டு கொள்ளுதல் முற்றிலும் கடினமானது. ஒரு வடிவத்தில் உள்ள ஜீவன் ஆற்றும் வினையைப் பார்க்கும் பார்வையாளர் கண்ணில், பாவம் போல் இருக்கும் ஆனால் உண்மையில் அது புண்ணிய வினையாக இருக்கலாம்.

அதே போன்று ஒரு ஜீவன் ஆற்றும் வினை புண்ணிய வினையாகவோ, நன்மை பயக்கும் வினையாகவோ மற்ற ஜீவன்களுக்கோ, மனிதர்களுக்கோ தென்படலாம்.

உண்மையில் தெய்வ நிலையில் நின்று பார்த்தால், அது பாவமான செயலாக அமைவதற்கு வாய்ப்பு உள்ளது. ஆகவே, ஒரு ஜீவன் செய்யும் வினை நல்ல வினையா, தீய வினையா என்று கண்டறியும் ஆற்றல் - ஆத்ம ஞானிகளுக்கு, சற்குருவிற்கு, ஜீவ விழிப்பு உள்ள ஜீவன்களுக்கு உண்டு.

ஐம் பூதங்களுக்குத் தெரியும். வெட்ட வெளியில் எங்கும் நிறைந்திருக்கும் சித் சக்திகளுக்குத் தெரியும். ஆதி மூலத்திற்குத் தெரியும். வெட்ட வெளிக்குத் தெரியும்.

இதனால் ஜீவர்கள் ஆற்றும் வினைக்குத் தலைப்புக் கொடுக்க மனிதர்களால் இயலாது. ஜீவர்கள் ஆற்றும் வினைக்கு இணையான தண்டனையோ அல்லது நன்மை, தீமையோ - எந்த ஜீவனுக்கு எப்போது கொடுக்கப்படுகிறது என்பதை அறிந்து கொள்வது சிவ விழிப்புப் பெற்ற ஜீவன்களாலே முடியும்.

இதில் இரண்டு கருத்துகள் நிலவுகின்றன.

(1) இந்த உலகம் படைப்பதற்கு முன்பே எல்லாக் காலங்களும் படைக்கப் பட்டு விட்டன. வரும் ஜீவன்களின் வகைகள் ஓரறிவிலிருந்து

ஆறறிவு உள்ள ஜீவன்களின் உருவங்கள், அதற்கான ஆயுட் காலங்கள், இறத்தல் - பிறத்தல், இறத்தல் - பிறத்தல், இறத்தல் - பிறத்தல், இன்பம் - துன்பம், இன்பம் - துன்பம், இன்பம் - துன்பம், அழுகை - சிரிப்பு, அழுகை - சிரிப்பு, அழுகை - சிரிப்பு ஆகியவை நிர்ணயிக்கப் பட்டு விட்டன. பல்லாயிரம் கோடி ஆண்டுகளுக்குப் பிறகு அல்லது பல யுகங்களுக்குப் பிறகு இந்த உலகம் ஓய்வு பெறுகிறது. அது வரையில் இந்த உலகில் உள்ள உயிர்களுக்கு, மக்களுக்கு என்னென்ன நடக்க வேண்டுமோ எல்லாமே தீர்மானிக்கப்பட்டு, நிர்ணயிக்கப் பட்டுள்ளது. அதன் படி எல்லாம் நடக்கின்றன.

(2) ஜீவன்கள் அதனதன் வினைகளுக்கு ஏற்றவாறு விதியைப் படைத்துக் கொள்கின்றன. இன்பத்திற்கும் - துன்பத்திற்கும் தாங்களே தலைவனாக இருக்கின்றன. எந்தெந்த வினையை எந்தெந்த ஜீவன்கள் செய்கின்றவோ அந்தந்த வினைகளுக்கு ஏற்றவாறு வினைகளும், பயன்களும், இன்பமும் - துன்பமும் தரப்படுகின்றன.

## சந்தோஷம்

# இதோ ஒரு ஜீவனின் யாத்திரை (கொடியது, கொடுமையானது, கொடுங்கோலானது)

முன்னேறிக் கொண்டிருக்கும் ஜீவன் தன்னுடைய யாத்திரையில் வீழ்ச்சியை எதிர் நோக்குதலும் உண்டு. அது அதனுடைய கர்மாவேயாகும்.

அந்தக் கர்மாவில் மனம், சித்தி, புத்தி, அகங்காரமாகிய நான்கு அந்தக் கரணங்கள் விழிப்போடு இருந்தன. இந்த யாத்திரைக்கு முன்னே வீழ்ச்சி தருவதற்கு எல்லாப் பணிகளும் ஒன்றிணைந்து செல்கின்றன.

அந்தச் சமயத்தில் நல்லவை - தீமையாகப்படும்; உயர்ந்தது - தாழ்ந்ததாகப் படும்; தர்மம் - அதர்மமாகப் படும். அகங்காரம் மேலோங்கி நிற்கும். மற்ற ஜீவனுக்குத் துன்பம் கொடுத்தது தான் அதைப் போன்று 10 மடங்கு துன்பம் அனுபவிக்கும்.

இவ்வினையை ஜீவ யாத்திரையில்லாத ஜீவன்கள் ஆற்றுகின்றன. இந்த வீழ்ச்சியைத் தடுக்க யாராலும் இயலாது. தன் வீழ்ச்சிக்குத் தானே வீரமாய் நிற்கிறது. தன் வீழ்ச்சியைத் தானே, தந்தி கொடுத்து வர வழைத்துக் கொள்கிறது.

இந்த வீழ்ச்சிக்குப் பல வினைகள் உண்டு. பஞ்சமா பாதகங்கள் உண்டு. தாயைத் திட்டுதல், தந்தையை அவமதித்தல், மனைவிக்கு வாழ்வு கொடுக்காது புறக்கணித்தல், துறவிகளை விரட்டுதல், அவமானப் படுத்துதல், தேகத்திலிருந்து ஜீவன் பிரிந்த பிறகு அந்தத் தேகத்திற்கு மீளாத் துன்பத்தைக் கொடுத்து, சித்திரவதை செய்தல். இந்த வினை கொடிய வினையாகும்.

இந்த வினையைச் செய்த உடனே 100 பிரம்மஹத்தி தோஷம், அவன் முகத்தில் வந்து சேரும். இதன் சிறப்பான இன்னொரு கருத்து என்னவென்றால், ஜீவன் இல்லாத சொர்ண தேகத்திற்கு - யார் துன்பம் தந்தார்களோ? தேக அவமானத்தைத் தேடித் தந்தார்களோ? அந்தத் தேகத்தை சித்திரவதை செய்து புரட்டி எடுத்தார்களோ, அவர்கள் வாழ்வு என்றும் சுடுகாட்டில் தான்.

ஆயிரம் பிறவி எடுத்தாலும், அத்தனை பிறவியிலும் துன்பத்தைத் தான் அனுபவிப்பார்கள்.

அவர்கள் ஈன்றெடுத்த குழந்தைகளும், அதன் வம்சமும் நாளுக்கு நாள் நசிந்து எல்லாமே சாம்பலாகி விடும். இந்த ஜீவ வீழ்ச்சியைத் தடுக்க யாராலும் இயலாது. இந்த ஜீவ வீழ்ச்சிக்கு உறுதுணையாகப் பரமேஸ்வரனே சாரதியாக நிற்பார்.

இதில் இன்னொரு முக்கியக் கருத்து என்னவென்றால், இவ்வாறு கொடியது செய்தவர்களைச் சற்குருவாலும், தேவர்களாலும், மகேஸ்வரனாலும், வெட்ட வெளியாலும் ஓங்காரத்தினாலும் மன்னிக்க முடியாது.

ஜீவன் பிரிந்த சொர்ண தேகத்திற்குத் தீங்கு இழைத்தவர்களிடம் யார்- யார் நெருங்கிப் பழகுகிறார்களோ அவர்கள் அத்தனை பேருக்கும் பிரம்மஹத்தி தோஷம் வந்து சேரும். இதிலிருந்து யாரும் தப்பிக்க இயலாது. அவரவர் குடும்பமும் நாசமாகும்.

இது சத்தியம். இது சத்தியம். இது சத்தியம்.

ஆனால் ஒரு நூற்றாண்டிற்கு, ஒரு ஐம்பது, அறுபது சத சித்திரவதை செய்யும் சித்திரவாதிகள் இருக்கத்தான் செய்கிறார்கள். இது இறைவன் படைப்பின் நியதியாகும். இத்தகையோர், பின்னர் அழுவார்கள், துடி துடிப்பார்கள். இத்தகைய vibration நரகத்திற்குக் கொண்டு சேர்க்கும். அவர்களுடைய மேலோங்கிய அகங்காரத்தில் எதிர்பாராத நிலையில் இடிகள் விழ வாய்ப்புண்டு.

இத்தகையோர், ஜீவன் குடியிருந்த தேகத்திற்குத் துன்பம் செய்தால், சித்திரவதை செய்தால் மகா ஜீவ தோஷம் ஏற்படுகிறது. சற்குருவின் தோஷம் வருகிறது, சாபமும் வருகிறது. இறைவனின் சாபம் வருகிறது. காலத்தின் சாபம் வருகிறது. பஞ்சபூதத்தின் சாபம் சூழும். வெட்ட வெளியின் சாபம் எல்லாம் அனைத்துப் பிறவிகளிலும் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கும்.

இவர்கள் இறைவன் நாமத்தைச் சொல்வதற்குத் தகுதியற்றவர்கள். இறைவனை வணங்குவதற்கு எள் அளவும் தகுதியற்றவர்கள். இறைவனைச் சிந்திப்பதற்கு முடியாது. சிந்தித்தால் பாவம் வரும்.

கொடியவருக்கெல்லாம் கொடியவர்களாகிய இவர்கள் எங்கு இருக்கின்றார்களோ - அங்கு ஞானிகள், ஆத்ம சாதகர்கள் இருக்க மாட்டார்கள். விலகி விடுவார்கள்.

ஐம்பூதங்களில் ஏதாவது ஒன்று துன்பத்தைக் கொடுத்துக் கொண்டேயிருக்கும். திடீர் - திடீர் என்று எந்த மூலையிலாவது ஏதாவது துன்பம் வரும்.

இதில் இன்னொரு கருத்து என்னவென்றால், இவர்களுக்கு உயர்ந்த ஞானிகள், சித்தர்கள், யோகிகள், வேதாந்திகள், சித்தாந்திகள், கடவுள் - யாருமே கருணை காட்ட மாட்டார்கள். பரிதாபப் பட மாட்டார்கள்.

சில ஜீவன்கள் இப்படியும் உள்ளன. இந்த ஜீவனில் உள்ள துன்பத்தை விடுவிக்க யாரும் வர மாட்டார்கள். இவ்வாறு ஜீவ யாத்திரையில் வீழ்ச்சி அடையும் ஜீவன்கள் ஏராளமாக உள்ளன.

இன்னொரு கருத்தையும் வெளிப்படுத்துவது எம் கடமை. இந்த உலகம் என்று தோன்றியதோ அன்றைக்கு வந்த ஜீவன்கள், அந்தப் பிறவியிலே முக்தி அடைந்து இறைவனோடு கலந்து விடுவதும் உண்டு.

இந்த உலகம் என்று தோன்றியதோ? என்று இந்த உலகத்தில் அந்த ஜீவன்கள் வந்தனவோ அன்றிலிருந்து, இந்த உலகம் என்று முடிகின்றதோ, சூன்ய காலம் வருகிறதோ, அதுவரையில் பிறவியெடுத்து எடுத்து, வீழ்ந்து - வீழ்ந்து, எடுத்து - எடுத்து, வீழ்ந்து - வீழ்ந்து ஜீவ யாத்திரை முடிக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு, உலகம் முடியும் வரை உலகிலே பிறவியெடுத்துக் கொண்டு துன்புறும் ஜீவன்களும் உள்ளன. அத்தகைய ஜீவன்கள் தாம் உத்தம ஜீவன்கள் உடலிருந்து பிரிந்த பிறகு, அந்தச் சொர்ண தேகத்திற்குத் தீங்கு விளைவிக்கும்.

இப்படி இரண்டு நிகழ்ச்சிகள் இருபதாம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் நடந்தன.

**சந்தோஷம்**

# சுகம் - இரண்டு

மண் சுகம் ஏராளமாக உள்ளது. மண் புத்தி இந்த இக உலக புத்தி ஏராளமாக உள்ளது.

ஏண்டா திருடின?

அவன் திருடினான். நான் திருடினேன்.

ஏண்டா பத்து மார்க் வாங்கிருக்க. அவன் நூறு மார்க்கு வாங்கி இருக்கான். 90 மார்க் வாங்கி இருக்கான். நீ என்னடா வாங்கி இருக்க?

இன்னொருத்தன் 7 மார்க் வாங்கி இருக்கான். அவனைக் கேட்டீங்களா?

ஏம்மா இன்று சரியா சமைக்கல.

அவங்க வீட்டில சரியா சமைக்கிறாங்களா? ஆகவே, தான் செய்த குறையை மற்றவர்கள் செய்த பெரிய குறையைக் காட்டிக் காட்டித் தப்பிக்கின்ற உலகம் இது.

இந்த நிலையிலே இருக்கும்போது, ஒவ்வொரு குறையிலிருந்து தப்பித்துக் கொண்டு வருவது. மண் சுகம். மண் புத்தி. மீண்டும் மீண்டும் பிறந்து மனிதர்கள் என்ன செய்கின்றார்களோ, அதையே செய்து, பிறத்தல், வளர்தல்.

இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுதல். பசி உணவு இச்சை. காம இச்சை. அறிவு இச்சை. பிராண இச்சை. இந்த இச்சைகளையெல்லாம் திருப்தி செய்து கொள்ளுதல்.

துன்ப புத்தி, தீய புத்தி இதையெல்லாம் காட்டிக் கொண்டு வாழ்தல், கடைசியிலே சுடுகாட்டில் சேர்தல். புதைகாட்டில் சேர்தல். இது மனிதர்களின் நிலை. இந்த மனிதர்களிலே மிக உயர்ந்தவன் சான்றோன். மாமேதை அவன் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்ய மாட்டான். அவன் எல்லோருக்கும் நன்மை செய்வான். அவன் தன் அறிவைக் காட்டி எல்லோரையும் வணங்கச் செய்வான்.

அடுத்தது. விண் நிலைக்கு வருவோம். விண் என்றால் வெட்டவெளி. ஏக வெட்டவெளி.

"ஏகப் பெருவெளியில் இருள் கடலில் கம்பமற்ற
காகமது ஆனான் என் கண்ணே பராபரமே"
என்று மஸ்தான் சாகிப் சொல்கிறார்.

இந்த ஏகம் என்றால் ஒன்று. எங்குப் பார்த்தாலும், வெளி, வெட்டவெளி. அதைத்தாண்டி இன்னொன்று கிடையாது. ஐன்ஸ்டீன் இருந்தான். அவன் அணுவைக் கண்டுபிடித்தான். அவன் பிறப்பதற்கு முன்பும் அது இருந்தது. அந்த அணுசக்தி அவனுடைய சிரசிலே வந்த ஆற்றல். வல்லமை வந்தது. கண்டுபிடித்தான். அவன் இறந்துவிட்டான். அந்த ஆற்றல் சென்று விட்டது வெட்டவெளியிலே.

இப்படி ஒவ்வொரு மனிதனும் காலங்காலமாக, பல்லாயிரம் காலமாக மனித உயிரினங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அவன் போன பிறகு, அவனோடு அந்த ஆற்றல் அழியவில்லை. அந்த ஆற்றல் வெட்டவெளிக்கே சென்று விடுகிறது.

ஆகவே, வெட்டவெளியிலே படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் என்ற எல்லாச் சக்திகளும் எல்லா நிலைகளும் அங்கிருக்கின்றன.

என் குருநாதர் சொல்வார் - சுவாமிஜி, அந்த 3ஆவது தெருவிலே இருந்தானே! இந்தக் குப்புசாமி போய்விட்டான். நல்லவன். நம் ஆசிரமத்திற்கு வந்து கொண்டிருப்பான் என்று சொன்னால், அப்படியா! நான் அங்கே போய்ப் பார்க்கிறேன் என்பார்.

ஆக, அந்த வெட்டவெளிக்கு ஒரு காலத்திலே நாம் போகப் போகின்றோம். அவன் அங்கே இருப்பான். ஆகவே, அவனை அங்கே பார்த்துக் கொள்கின்றேன். இந்த நிலையிலே யாருமே அழிவதில்லை. கவலைப்பட வேண்டா. அங்கு நாம் போகும்போது பார்த்துக் கொள்ளலாம் என்று அழகாகச் சொல்லிவிடுவார்.

இந்த விண்புத்தி இறைவனுடைய புத்தி. கடவுளுடைய புத்தி. அந்த நிலைக்கு வந்தால், எல்லோரும் சந்தோஷமாக. கல்பமாக அழிவற்ற நிலையில் வாழ முடியும். இந்த உலகம் 100க்கு 90 சதவிகிதம் மண் புத்தியில் வாழ்கிறது. அதனால்தான்துன்பம் விளைகிறது.

### சந்தோஷம்

# சுகமும் - சோகமும்

கடவுள் படைத்த அனைத்திலும் சுகமுண்டு. அவன் சுகமில்லாததைப் படைக்கவில்லை. இறைவன் படைத்த அனைத்திற்கும் சுகமுண்டு. அந்தச் சுகத்தை அனுபவிப்பதற்குப் பல விதிமுறைகள் இருக்கின்றன. அந்த விதிகளின் படி நெறியாக நடத்தினால் சுகம் முழுவதையும் சுகமாக அனுபவிக்கலாம். இந்த இகத்தில் அவன் படைத்தவைகளில் சுகமும் வைத்துள்ளான். சோகமும் வைத்துள்ளான்.

இகத்தில் அவன் படைத்தவைகளில் சுகத்தைத் தர்மத்தினாலும் அனுபவிக்கலாம். அதர்மத்தினாலும் அனுபவிக்கலாம். இரண்டு வகையான வாய்ப்புகளையும் இறைவன் கொடுத்துள்ளான். தர்மத்தினால் அனுபவிக்கும் சுகத்திற்குப் பின்னால் சோகம் வராது. மறு பிறவியிலும் அந்தச் சோகம் தொடராது. அதர்மத்தினால் சுகம் அனுபவிப்பவனுக்கு அந்தச் சுகத்திற்குப் பிறகு சோகம் தொடரும். எந்த அதர்மத்தினால் அந்தச்சுகத்தை அனுபவித்ததோ அந்தப் பிறவியிலோ, அடுத்த பிறவியிலோ அவன் சுகத்தை இன்னொன்று அனுபவித்துக் கொண்டு இருக்கலாம். அப்போது அவனுக்குச் சுகம் இல்லாமல் போய் விடும்.

மண்சுகம் விசித்திரமானது. விபரீதமானது. விவேகமானது. காலத்திற்குள் அடங்கும். எல்லாச் சுகங்களையும் அனுபவிப் பதற்கான எல்லா வகையான மனிதர்களையும் படைத்திருக்கின்றான். நடுத்தர மக்களும் அதற்குச் சற்று முந்திய மக்களும் மட்டுமே தனக்குத் தானே சில விதிமுறைகளை அமைத்துக் கொண்டு ஒடுங்கி, முடங்கி, சமூகம், விதிமுறை, மானம், அபிமானம் எல்லாம் கடைப்பிடித்து வாழ்க்கையில் ஏமாந்து போய்க் கிடக்கிறார்கள்.

மண் சுகம் பற்றி அணு-அணுவாகப் பிரித்து 1000 கோடி ஆண்டுகள் ஆயிரமாயிரம் புத்தகங்களை வெளியிடலாம். மண் சுகம் இன்பத்திற்கும், துன்பத்திற்கும் பொறுப்பானது. விண் சுகம அவ்வாறு அன்று.

எது படைத்ததோ? எது நமக்கு வாழ்வு கொடுத்ததோ? எது நம்மைத் திருப்பி அழைத்துக் கொள்கிறதோ! எது நம்மை அழவும்,

சிரிக்கவும் வைக்கிறதோ? எது அண்ட கோளங்களையும், விரிவுகளையும் படைத்ததோ? அதனிடம் ஒரு சோகமற்ற சுகம் உள்ளது. இதற்குக் கடவுள் சுகம் என்று பெயர். அதனிடம் சோகமில்லை. அந்தச் சுகத்தை அனுபவிப்பதற்கு அதனிடம் முழுமையாக வந்து விட வேண்டும். அதனிடம் உள்ள சுகத்தை அதனிடம் வந்து தான் அனுபவிக்க முடியும். அதை அனுபவிப் பதற்கு அந்தச் சுகத்தின் தலைவரைக் காண்பதற்கு இந்த ஜீவ யாத்திரை தேவைப்படுகிறது.

## சந்தோஷம்

*ஒரு மனிதனிடம் ஆத்மா உள்ளது.*
*அந்த ஆத்மாவில் ஒளி உள்ளது.*
*அந்த ஒளி அறிவில் படும்போது*
*அந்த அறிவு ஆத்ம அறிவாக மாறுகிறது.*

அந்த ஆத்ம அறிவு அந்த மனிதனுக்குத தேவையான நல்லதையே சொல்லும்; நல்லதையே செய்ய வைக்கும். அந்தச் செய்கையினால் அவன் இறைவனை நோக்கி அழைத்துச் செல்லப்படுவான்.

இதுவும் ஜீவ யாத்திரையின் ஒரு பகுதியாகும். மற்றவர்கள் சொல்கின்ற அறிவுரைகள் எவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும், அதை இவனுக்குச் சொல்லும் போது, அதாவது, ஆத்ம அறிவு பிரகாசம் உள்ளவனிடம் சொல்லும் போது, அவன் ஏற்றுக் கொள்வானேயானால் அவன் தன் ஆத்ம அறிவின் வலுவை அறியாதவன் என்று பொருள். ஆகவே, ஆத்ம அறிவு பிரகாசம் உள்ளவன் எப்போது - எப்போது எதைச் செய்ய வேண்டுமோ அப்போதைக்கு அப்போது அவன் ஆத்ம அறிவு அவனை வழி நடத்திச் செல்லும். மற்றவர்கள் யாருடைய அறிவுரையும் அவனுக்குத் தேவையில்லை. அறிவுரை சொல்பவர்கள் எவ்வளவு உயர்ந்தவர்களாக இருந்தாலும், எவ்வளவு அதிகாரம் படைத்தவர்களாக இருந்தாலும், எவ்வளவு பெரிய உறவு உள்ளவர்களாக இருந்தாலும் அவர்களின் அறிவுரையை உதாசீனப் படுத்துவதிலோ, புறக்கணிப்பதிலோ எந்த விதமான தவறுமில்லை. திருஞான சம்பந்தர், அப்பரின் அறிவுரையையே புறக்கணித்தார்.

# ஒன்றாய் இருப்பது ஒன்று

ஒன்றாய் இருப்பது ஒன்று. அது விரிந்து - விரிந்து பலவாய் அநேகமாய், சிறியதாய், பெரியதாய், பிரம்மாண்டமாய், அகிலாண்டமாய், மகா பிரம்மாண்டமாய், மகா-மகா பிரம்மாண்டமாய், ஆயிரம் மகா பிரம்மாண்டங்களுக்குள் ஒன்றான அத்வைத பிரம்மாண்டமாய், மகா அத்வைத பிரம்மாண்டமாய், சத கோடி அத்வைத மகா பிரம்மாண்டமாய், எல்லையில்லா ஒன்று எங்கும் மகா விழிப்பாய் உள்ளது.

ஜீவன்களாகி, ஜீவ உருவத்தில், ஜீவ உருவம் கொண்டு அதிலே கோடானு கோடி பேதங்கள் விருத்தியாகி, அந்த விருத்திகளின் பணிகள், தகுதிகள், வினைகள் எல்லாம் வெவ்வேறாக்கப் பட்டு ஒவ்வொரு உருவ பேதத்திற்கும் வழங்கப் பட்டுள்ளது.

தொடக்கத்தில் அதாவது முதற் காலத்தில் உருவ பேதங்கள் கொடுக்கப்பட்ட நியதிகளின் படி எல்லாம் நடந்தன. ஜீவர்களாக வந்து பல படிகளேறி ஓர் உயிரிலிருந்து ஆருயிர் வரை படிப்படியாக நிதானமாக அந்த நியதிகளில் அவைகளுக்கு கொடுக்கப்பட்ட அறிவின் விளைவுப் படி, வினையாற்றி முழுமையாக ஜீவ யாத்திரை கடைசியில் சிவ யாத்திரையாக மாறி, சிவ வெளியில் சிவமாய் அல்லது ஏக வெளியில் ஏகமாய்க் கலந்து விடும்.

இந்த யாத்திரை ஒரே யாத்திரைதான். இதற்கு இறங்கும் முகம் கிடையாது. ஒரே உருவ பேத உருவத்தில் பல பிறவிகள் எடுப்பதுமில்லை. இயற்கை அதற்கு வழங்கப்பட்ட நியதிப்படி அது முறையாகச் செயல்படும் போது அப்படியே ஏறுமுகமாகச் சென்று ஜீவ யாத்திரையில் வெற்றி பெறுகிறது.

கொடுக்கப்பட்ட அந்த நீதி நெறியிலிருந்து மனம் காலப் போக்கில் கவர்ச்சியைக் கண்டு பேதலிக்கத் தொடங்கியது. பேரறிவு மறைக்கின்ற அறியாமை என்ற திரை வீழ்ந்தது. அந்தத் திரைக்கு முன்னால் அறிவுத் திரை அதற்கு முன்னால் மாயைத் திரை. மாயை வரும் போது தன்னுடைய உறவினரோடு வந்து சேர்கிறது.

பொய், பொறாமை, சூது, வாது, வஞ்சகம் - ஒன்றன் பின் ஒன்றாக வந்து சேர்ந்தன. அவையெல்லாம் ஒன்று சேர்ந்து, ஜீவனுக்கு ஒரு பரிசை வழங்கியது.

பரிசின் பெயர் தான் துன்பம், வேதனை, சோகம், இழப்பு, மீளாக் கொடுமைகள், ஜீவனைத் தலை தூக்க முடியாமல் செய்கின்ற கொடூரங்கள். முதற் காலத்தில் தூய்மையாகவும், முழுமையாகவும் இருந்த யாத்திரையை ஜீவன்கள் மிகக் குறுகிய காலத்திலே முடித்துக் கொண்டன. காலப் போக்கில் திரை விழ - விழ அறிவு- சிற்றறிவாக மாறி நாச புத்தி ஒவ்வொரு அறிவிலும் புகுந்து விளையாடத் தொடங்கியது. விளையாடுகிறது.

இதன் விளைவாக உண்மைகளெல்லாம் தன் மதிப்பை இழந்தன. ஜீவன்கள் தர்மத்தை உதாசீனப் படுத்தத் தொடங்கின. நியாயம், வேண்டாத பொருளாக அவைகள் கண்களுக்குப் பட்டது. தர்மத்தில், நியாயத்தில், சத்தியத்தில் வாழ்ந்த அது அதர்மத்தில், அநியாயத்தில், அசத்தியத்தில் வாழ முடிவு செய்தது.

*"நெறியைப் படைத்தான் நெருஞ்சில்*
*படைத்தான்நெறியில் வழுவின் நெருஞ்சில்முட்*
*பாயும்நெறியில் வழுவா தியங்கவல் லார்க்குநெறியின்*
*நெருஞ்சில்முட் பாயகிலாவே*
*- திருமூலர் - 1617*

அவைகளிலே சுகம் கண்டது. ஆனால் ஜீவர்களுக்கு அவைகள் அனுபவிக்கும் சுகத்தின் பின்னால் ஒரு பெரும் சோகம் இருப்பதை அவைகளால் கண்டு பிடிக்க முடியவில்லை. சுகத்தையும் அனுபவித்து, சோகத்தையும் அனுபவித்து ஒரு கால கட்டத்தில் சுகத்தைக் கோட்டை விட்டு விட்டுச் சோகத்தை மட்டும் அனுபவிக்கின்ற நிலை பெற்றது.அதன் பிறகுதான், இந்தச் சுகத்தை மட்டும் அனுபவிப்பதற்கு வழி என்ன? என்று அசத்தியத்தில் வாழ்ந்த ஜீவன்கள் வழியைத் தேடின.

அதன் பிறகு எது சந்தோஷம்? எது துன்பம்? எது நிலையான சந்தோஷம்? அந்தச் சந்தோஷத்தைக் கொடுப்பது யார்? அதைப் பெறும் மார்க்கம் என்ன என்பதைக் கண்டு பிடிக்கத் தொடங்கின.

அவைகள் கண்டு பிடித்த பாதையை விட்டு - விட்டு, மற்ற ஜீவன்களுக்கு சந்தோஷ மார்க்கப் பாதையைக் காட்டியது. அது வகுத்த பாதை - கடவுளைச் காண்பதற்கான பாதை - ஆற்றும் வினை தான் சாதனை.

அந்தச் சாதனை இக்கால கட்டத்தில், இந்தக் கலியுகத்தில் இறைவன் காட்டிய சாதனை, சற்குரு காட்டிய சாதனை, அருளாளர் காட்டிய சாதனை, மாயையும், அகங்காரமும் காட்டிய சாதனை, இருளாளர் காட்டிய சாதனை என்று வகைப்படுத்தும் நிலைக்கு வந்து நிற்கின்றோம்.

## சந்தோஷம்

ஒரு ஞானியாக வேண்டுமென்றால் சுத்தமாய் இருத்தல் வேண்டும். சுத்தமான ஞானிதான் சிவ ஜோதி தரிசனம் காண்பான்.

மூன்று இடத்தைத் தேடுதல் வேண்டும்.

1. முதல் இடம். இதயத்தைத் தொட கற்றுக் கொள்ள வேண்டும்.

2. இரண்டாவது இடம். ஜீவனைத் தொட வேண்டும்.

3. மூன்றாவது இடம். சிதாகாசப் பெருவெளியைத் தொடுதல். பரஞ்ஜோதியைத் தொடுதல்.

கபாலத்தைத் தொடுபவர். தன் ஜோதியை தான் தொடுபவர் வெட்டவெளியைத் தொடுபவர். ஆகவே மனித வடிவில் தெய்வம் உள்ளது.

# அதோ பாருங்களேன் அது என்னைப் பார்த்துச் சிரிக்கிறது

ஜீவ யாத்திரைக்குள் யாத்திரை. ஜீவ யாத்திரையில் பிறப்பு, இறப்பு, கல்யாணம் மூன்றையும் தவிர்க்க இயலாது. இம்மூன்றும் ஜீவ யாத்திரையில் இல்லாமல் இல்லை.

கல்யாணம் என்பது ஆண், பெண் சேர்க்கை மட்டுமன்று. அதற்கு அப்பால், அதனுள் உள்ள சுகத்தை வெளிப்படுத்தித் துய்ப்பதாகும்.

இம் மூன்றுமே சமநிலையில் உள்ளன. சுகத்தில் சோகம் உண்டு; சோகத்தில் சுகமுண்டு; மரணத்தில் சுகமுண்டு; சுபத்திலும் மரணமுண்டு; பிறப்பில் சுபமுண்டு; பிறப்பில் சோகமுண்டு; மரணத்தில் சுகமுண்டு; மரணத்தில் சோகமுண்டு; மரணத்தில் பிறப்பு உண்டு.

இப்படி நியதிகளை வகுத்தது யார்? இந்த ஜீவ யாத்திரை முழுமையாக முடியும் வரை நிச்சயம் இம் மூன்றும் ஒன்றை ஒன்று பின்னிப் பிணைந்து நிற்கும்.

கடவுள் மாபெரும் இரகசியமானவர். தன்னுடைய எந்த இரகசியத்தையும் ஜீவனுக்கு வெளிப் படுத்தாமல் ஜீவனை இச்சா சக்தி, கிரியா சக்தி, மோக சக்தியால் உழல விட்டு ஜீவனின் வாழ்க்கையைச் சுழல வைக்கிறார்.

இந்தச் சூழற்சி ஒரு சுற்றா? இரண்டு சுற்றா? ஓராயிரம் சுற்றல்கள் பிறகு ஓராயிரம் கோடி சுற்றல்கள். போதுமடா சாமி இந்த வாழ்க்கையென்று ஜீவன்கள் நயந்து படைத்ததை நினைத்து - நினைத்துச் சோர்ந்து, நயந்து இறுதி மூச்சை இறைவனிடம், அது கேட்கும் போது இறைவன் அதற்குக் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்கின்றான்.

இந்த நிலையில், ஜீவனுக்குக் கடவுளைப் பற்றி ஒன்றுமே தெரியவில்லை. திகைக்கின்றது. கடவுளைப் பற்றி எந்த முடிவுக்கும் ஜீவனால் வர முடியவில்லை.ஜீவனை அது - கடவுள், துன்பத்தின் உச்சிக்கு அழைத்துச் செல்கிறது. இன்பத்தின் உச்சிக்கு அழைத்துச்

செல்கிறது. இதில் ஒரு விந்தை என்னவென்றால் அது - கடவுள், எந்தக் காரணத்தைக் கொண்டும் இன்பத்தின் உச்சியிலோ, துன்பத்தின் உச்சியிலோ ஜீவனை விட்டு - விட்டு வருவதில்லை.

அதுவே இன்பத்தின் உச்சிக்கு அழைத்துச் செல்லுகிறது. பின் அதுவே ஜீவனின் கையைப் பிடித்து இன்பத்தின் உச்சியிலிருந்து கீழே அழைத்து வந்து விடுகிறது.அதே போன்று துன்பத்தின் உச்சிக்கு அழைத்துச் செல்கிறது, அங்கு வீடு கட்டி வாழ விடாமல், அதன் கையைப் பிடித்து துன்பத்தின் உச்சியிலிருந்து விரைவாகக் கீழே இறங்கி விடுகிறது. அந்த அதுவுக்கு இந்த மாயை வித்தையை யார் சொல்லிக் கொடுத்தது?இந்தக் கேள்வியை நான் கேட்கும் போது - அதோ! பாருங்களேன்! அது என்னைப் பார்த்துச் சிரிக்கிறதே.

**சந்தோஷம்**

மரணக்குரல், பிறப்புக் குரல், ஆதிக்குரல், அந்தக் குரல், ஒரு குரல், கடைசிக் குரல்.

ஆட்டை வெட்டும்போது மரணக்குரல். மனிதனிலிருந்து ஜீவன் போகும் போது மரணக்குரல். எல்லா ஜீவன்களிலும் உள்ள மரணக்குரல் வெவ்வேறு. அருளாளர்கள் இந்தக் குரலை அறிவார்கள். சந்தோஷமாக நன்றாகப் பேசிக்கொண்டு இருப்பார்கள். அவனை அறியாமல் மரணக்குரல் வெளிப்படும் - அது வந்து அவனுக்குச் சம்பவிக்கும்,.

மௌனத்தில் மரணக்குரல் உள்ளது. தூக்கத்தில் மரணக்குரல் உள்ளது. ஒருவன் கோமா ஸ்டேஜ் சென்று விட்டால் அங்கும் மரணக்குரல் வரும்.

பிறப்புக்குப் பிறகு இறப்பு, சில ஜீவன்களுக்கு. பிறப்பதற்கு முன்பே இறப்பு வந்துவிடும். அதேபோல் இறப்பதற்கு முன்பே பிறப்பு வந்து விடும். எவ்வளவு விந்தையாக உள்ளது! அது தன் ஆற்றலை இந்த வெட்டவெளியில் இவ்வுலகில் எப்படி வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது?

# ஒன்றுக்குள் ஒரு கோடி

இந்த அகண்ட பெருவெளியில் இருப்பது ஒன்று. அந்த ஒன்றில் எல்லாமே யாத்திரை செய்கிறது. அந்த மகா ஒன்றுக்குள் எல்லாமே யாத்திரை செய்கிறது. அந்த மகா ஒன்றுக்குள் ஒன்றில் அது அது யாத்திரை செய்வதின் நோக்கம் என்ன? அந்த மகா ஒன்றுக்குள்ளே எல்லாம் யாத்திரை செய்கிறது. ஜீவனும் யாத்திரை செய்கிறது. அண்ட கோளங்களும் யாத்திரை செய்கிறது. ஜீவன்கள் மிரளுகின்ற அளவிற்கு அண்ட கோளங்களும் யாத்திரை செய்கிறது. இன்னும் அழகாகச் சொல்லப் போனால் மலைகளும், கடல்களும், கோளத்திற்குள்ளே கோளமும் யாத்திரை செய்கிறது. ஜீவன் அண்டவெளியில் யாத்திரை செய்கிறது. கோள வெளியிலும் யாத்திரை செய்கிறது, பிண்ட வெளியிலும் யாத்திரை செய்கிறது, வெட்ட வெளியிலும் யாத்திரை செய்கிறது, வித்தக வெளியிலும் யாத்திரை செய்கிறது, உயிர் வெளியிலும் யாத்திரை செய்கிறது. இவ்வாறு எத்தனையோ வெளியிலும், எத்தனையோ நிலையிலும், எத்தனையோ உணர்வுகளிலும் அவைகள் யாத்திரை செய்கின்றன.

ஜீவன்கள் வெட்ட வெளியில் யாத்திரை செய்வது உண்மை. பூமி வெளியில் யாத்திரை செய்வது உண்மை. ஜீவன் - ஓருயிர் உடலிலிருந்து ஆருயிர் உடல் வரை யாத்திரை செய்கிறது. உடலற்ற ஜீவன்களும் அந்த வெளியிலே இருக்கின்றன. ஜீவ யாத்திரைக்குள்ளே ஜீவன் ஒன்று தான். அதற்குக் கொடுக்கப்பட்ட உருவங்களோ வெவ்வேறு. ஜீவன் வெவ்வேறு வகையான உருவங்களில் யாத்திரை செய்கிறது. ஜீவனுக்கு எந்த உருவம் கொடுக்கப்படுகிறதோ, அந்த உருவங்களின் குணங்களுக்கு ஏற்றவாறு, அமைப்புக்கு ஏற்றவாறு, கொடுக்கப்பட்ட உருவங்களின் நோக்கத்திற்கு ஏற்றவாறு அந்த உருவங்களுக்குள்ளே ஜீவன் சாந்தமாக உள்ளது.

தாவர சங்கமங்கள், மிருகங்கள், மனிதர்கள் என்று ஜீவ யாத்திரையைப் பிரிக்கலாம். ஒரு வீட்டிலிருந்து இன்னொரு வீட்டிற்குக் குடிபுகுவது போல இந்த ஜீவன் ஒரு தேகத்திலிருந்து இன்னொரு மாறுப்பட்ட தேகத்திற்குச் செல்கிறது.

எலி என்ற உருவத்திற்குக் கொடுக்கப்பட்ட உருவ அமைப்பு, உள்ளே அமைக்கப்பட்ட அது வாழ்வதற்கான திறமைகள், அதன் இன்ப - துன்பங்கள், மனோ நிலைகள், ஆசைகள் எல்லாமே வைக்கப்பட்டுள்ளன. சுறுசுறுப்புடன் தனக்கு வேண்டிய உணவைத் தானே எடுத்துக் கொள்ள இரகசியத் திறமைகள் உள்ளன. யோனி பந்தமும் அமைக்கப் பட்டுள்ளது. மனிதனைச் சமாளிப்பதற்கும், பாம்புகளைச் சமாளிப்பதற்கும், பூனைகளைச் சமாளிப்பதற்கும் திறமைகள் கொடுக்கப்பட்டு இருக்கின்றன. இருப்பினும் இந்த மூன்று கைகளிலும் பட்டு மாள்வதற்கான திறமைகளும் கொடுக்கப்பட்டுள்ளன. இங்கே ஜீவர்கள் தோற்றுப் போவதற்கும் திறமை வேண்டும். வெற்றி பெறுவதற்கும் திறமை வேண்டும். அந்தத் திறமை அதன் அறிவில் வைக்கப்பட்டுள்ளது. இது போன்றே எல்லா உருவங்களும் வெவ்வேறு விதமாகப் படைக்கப்பட்டுள்ளன. இந்த ஜீவன் ஒவ்வொரு மாறுபட்ட உருவங்களிலும் புகுந்து கால யாத்திரை செய்கிறது. அதற்குப் பிறப்பும் உண்டு, இறப்பும் உண்டு. இன்பமும் உண்டு, துன்பமும் உண்டு. இதில் ஜீவ உணர்வுகள் உள்ள உணர்வு வெளிப்படுகின்ற ஒரு சில உருவம் கொண்ட ஜீவன்கள் இறைவனைச் சிந்திக்கிறது. தான் யாத்திரை செய்த ஒவ்வொரு உருவங்களையும் அவைகள் பட்ட துன்பங்களையும் சிந்திக்கிறது, அவைகள் பட்ட சுகத்தையும் சிந்திக்கிறது - விளைவு விரக்தியேயாகும்.

இந்த யாத்திரை செய்வது யார்? செய்விப்பது யார்? இந்த யாத்திரையில் ஒவ்வொரு குறிப்பிட்ட ஜீவனுக்கும் முடிவைத் தருவது யார்? ஏன் யாத்திரை முடிய வேண்டும்? யாத்திரைக்கு அப்பால் என்ன உள்ளது? ஜீவ யாத்திரை சோகம் நிறைந்ததா? சுகம் நிறைந்ததா? சுபம் நிறைந்ததா? ஜீவ யாத்திரை முடிவு வெற்றியா? தோல்வியா? வெற்றி என்றால் என்ன பொருள்? தோல்வி என்றால் அதன் அர்த்தம் என்ன? அல்லது இரண்டும் இல்லையா?!

இதில் வியக்கத்தகு அம்சங்கள் உள்ளன. ஜீவர்களுக்காக இயற்றும் சட்டங்களை இயற்கையின் நியதி முறியடிக்கிறது. அது இதோ - இன்று தங்கையாகப் பிறந்து உருவெடுத்தவள் நாளைக்குத் தாயாக வருவாள். அதே ஜீவன் மறு பிறவியில் தாரமாக உனக்கு வரலாம். தந்தையும் அப்படியே. தந்தை நாளைக்கு மகனாகப் பிறக்கலாம். நீயே உன் தந்தைக்கு அப்பனாகப் பிறக்கலாம். என்னே! ஜீவ யாத்திரையின்

மர்மம், மாயம், நியாயம். இதை யாரால் கேட்க முடியும்? உனக்கு இன்றைக்குத் தந்தை நாளைக்குத் தாயாய் வரலாம். உன் மகளுக்கு நீயே மகளாகப் பிறக்கலாம். உனக்கு இந்த ஜீவன்களும் ஆண் உருவமும் சாஸ்வதம் அல்ல. பெண் உருவமும் சாஸ்வதம் அல்ல. சாஸ்வதமற்ற தேகங்களைச் சுமந்திருக்கும் ஜீவன்கள் தங்கள் தேகத்தைச் சாஸ்வதமாக உள்ள தேகங்களாக நினைக்கிறது.

சென்ற பிறவியில் ஆணாக இருந்து ஆண் உருவத்தில் இருந்த ஜீவன் இப்பிறவியில் ஆணாகப் பிறந்தாலும் தாயின் முகத்தைத் தாங்கி வர வாய்ப்பு உள்ளது. அதே போன்று பெண் உருவம் தந்தையின் முகத்தைத் தாங்கி வர வாய்ப்பு உள்ளது.

### சந்தோஷம்

அருளாளர்கள் சிந்தனைக்குள் நாம் வருவதே மகா புண்ணியம்.
பாம்பு கண்களுக்கு நாம் படக்கூடாது.
புலியின் பார்வைக்கு நாம் படக்கூடாது.
காட்டு மிருகங்கள் கண்களுக்கு நாம் படக்கூடாது.
கொலைகாரன் கண்களுக்கு நாம் படக்கூடாது.
திருடர்கள் கண்களுக்கு நாம் படக்கூடாது.
காமிகள் கண்களுக்கு நாம் படக்கூடாது.
லோபிகள் கண்களுக்கு நாம் படக்கூடாது.
பொய்யர்கள் கண்களுக்கு நாம் படக்கூடாது.
துரோகிகள் கண்களுக்கு நாம் படக்கூடாது.
நயவஞ்சகர்கள் கண்களுக்கு நாம் படக்கூடாது.
வாழ்க்கை கெட்டவர்கள் கண்களுக்கு நாம் படக்கூடாது.
ஆனால் அதே சமயம்,
அருளாளர்கள் கண்களில் படவேண்டும்.
சித்தர்கள் கண்களில் படவேண்டும்.
ஞானிகள் கண்களில் படவேண்டும்.
உத்தமர்கள் கண்களில் படவேண்டும்.
வெட்டவெளி கண்களில் படவேண்டும்.
உன் கண்ணிற்கு நீ படவேண்டும்.

# ஜீவன்களின் தொடர் சந்தோஷம்

ஜீவர்களுக்குச் சுகம் கொடுப்பது எது? மாயை கலந்த அற்ப சுகம். ஆத்மாவிற்குச் சுகம் கொடுப்பது எது? சிவத்திடம் இரண்டற ஐக்கியம் அடைதல். உருவுக்குச் சந்தோஷம் கொடுப்பது எது? அரு. அருவுக்குச் சந்தோஷம் கொடுப்பது எது? சத்சித் ஆனந்தம். மக்களுக்கு சந்தோஷம் கொடுப்பது எது? மண் சுகம். ஞானிக்குச் சந்தோஷம் கொடுப்பது எது? பிரம்ம தரிசனம். கடவுளுக்குச் சந்தோஷம் கொடுப்பது எது? சத்தியம், தர்மம், நியாயம், அருள் ஆட்சி நடத்தும்போது. மண்ணுக்குச் சந்தோஷம் கொடுப்பது? தர்மம் நிலைக்கும் போது.

சந்தோஷத்திற்குச் சந்தோஷம் கொடுப்பது - எல்லா ஜீவன்களும் பரிபூரணம் எய்திய பிறகு. காதலுக்குச் சந்தோஷம் - ஐக்கியம். கபாலத்திற்குச் சந்தோஷம் - ஜோதி தரிசனம். ஆசைக்குச் சந்தோஷம் கொடுப்பது - அழிவு. பெண்ணுக்குச் சந்தோஷம் - மாங்கல்ய சுகம். பரிசுத்த பெண்ணுக்குச் சந்தோஷம் - கடவுளைக் காணல். ஏட்டுக்குச் சந்தோஷம் - சான்றோர் கையில் அது இருக்கும் போது.

ஊருக்குச் சந்தோஷம் - தேர்த்திருவிழா. மதவாதிகளுக்குச் சந்தோஷம் - மக்கள் கூட்டம் பெருகும் போது. சற்குருவுக்குச் சந்தோஷம் - சீடன் சாயுச்சியம் அடையும்போது. முதியோர்க்குச் சந்தோஷம் - வாரிசுகள் சிரிக்கும்போது.

வில்லனுக்குச் சந்தோஷம்? தான் நினைத்தவர் வாழ்வு அழியும் போது. யதார்த்தம் உள்ளவருக்குச் சந்தோஷம்? என்றும் நிதானமாய் இருத்தல். கோயிலுக்குச் சந்தோஷம்? பூரண பக்திமான் வரும்போது. புடவைக்குச் சந்தோஷம்? பெண்ணின் மானத்தைக் காப்பாற்றும் போது. பொட்டுக்குச் சந்தோஷம்? அவள் வாழ்வு மலரும் போது. பூவுக்குச் சந்தோஷம்? இறைவனின் ஆசை எல்லோர் மீதும் படும்போது. தலைவியின் சந்தோஷம்? தனிமையற்று இருத்தல். அருளுக்குச் சந்தோஷம்? துக்க இருள் நீங்கும் போது. கோபுரத்திற்குச் சந்தோஷம்? தன்னைக் கும்பிடுபவர்களுக்குக் கோடி சுகம் கொடுக்கும் போது.

உனக்கும், எனக்கும் சந்தோஷம்? இராப் பகல் அற்ற இடத்தில் இருக்கும் போது. பெண்ணுக்குச் சந்தோஷம்? பேதைமை நீங்கித் தன்னை ஒரு சிறந்த தலைவனிடம் ஒப்படைக்கும் போது. ஆத்ம சாதகனுக்குச் சந்தோஷம்? ஆணிடமுள்ள ஆண்மையும், பெண்ணிடம் உள்ள பெண்மையும் விலகி ஆண்டவன் எங்கும் உள்ளதை உணர்ந்திருக்கும் போது.

### சந்தோஷம்

ஞானிகளுக்குத் தெரியும் தாம் எப்போது இறைவனோடு
கலப்பர்.
ஞானிகளுக்குத் தெரியும் தாம் இந்த உலகத்தில் எப்போது
பிறப்பர்.
ஞானிகளுக்குத் தெரியும் தன் விதி, கோலம், காலம்,
கொண்டாட்டம் தெரியும்.
ஞானிகளுக்குக் கடவுள் தெரியும், மனிதன் தெரியும், இந்த
உலகமும் தெரியும், நரகமும் தெரியும், சொர்க்கமும் தெரியும்.
ஞானிகளுக்குத் தன் உருவத்தை தானே பார்த்துக் கொள்ளத்
தெரியும்.
வெட்டவெளி இரகசியங்கள் தெரியத் தெரிய ஞானிகள் மகா
மௌனியாகி விடுவார்கள்.
அஞ்ஞானிக்கு தன்னைத் தெரியாது, அடுத்த நொடி என்ன
நடக்கப் போகிறது என்று தெரியாது.
அஞ்ஞானிகளுக்கு இருளாளர் என்று பெயர்.
ஞானிகளுக்கு அருளாளர் என்று பெயர்.
ஞானிகள் ஒளிமயமாக வாழ்வார்கள்.
அஞ்ஞானிகள் இருளுலகில் தள்ளாடுவார்கள்.

# இருப்பதும் இயங்குவதும்

ஜீவ யாத்திரையில் ஜீவனின் நிச்சய இலக்கணம் இயங்கும் நிலையாகும். அது தானாக இயங்குவதில்லை. அதை இயக்குவதொன்று உண்டு. அது எங்குமாய்க் காலம் கடந்து எல்லாமுமாய், எப்போதுமாய் ஒன்றி நிலைத்துள்ளது. அது நிலைத்த ஒன்று. எல்லா ஜீவனையும் தன் வினையினால் அசையும் நிலைக்குக் கொண்டு வரச் செய்து, அது நிசப்தமாய், நிர்மூலமாய், அனைத்திற்கும் அதிபதியாய், அருளானந்த நிலையில் ஆனந்த ஆனந்தமாய், அழகு அழகாய், அற்புதமாய், அதீதமாய், ஆக்கல், அழித்தல், படைத்தல், அருளல், மறைத்தல் ஆகிய ஐந்து தொழில்களை நிலைத்த நிலையில் நின்று வினையாற்றுகிறது.

இந்த நிலைத்த சக்தியும் அதாவது தத் இயங்கும் சக்தியும் அதாவது ஜீவன் இரண்டும் ஒரு காலத்தில் ஏகமாகும் நிலையுண்டு. இந்த ஜீவ யாத்திரையே இரு - பெரும் சக்திகளுக்கிடையே நடைபெறுகிறது.

*1. நிலைத்த சக்தி (Static)*
*2. இயங்கும் சக்தி (Dynamic)*

சிவம் - Static சக்தி - Dynamic நிலைத்த சக்தியிலிருந்துதான் - இயங்கும் சக்திகள் வந்து கொண்டிருக்கின்றன. இதுவை அது இயக்குகிறது. அது - ஓம்தத்சத். சிவம் - Static. அந்த சக்தி வெளிப்படும்போது பர நிலையிலிருந்து - இக நிலையில் சக்தியாக வினையாற்றுகிறது. அது வெளிப்படும் சிவத்திடம் ஒடுங்கும். ஒவ்வொரு ஜீவனுள்ளும் சிவம் உள்ளது. இதைப் பித்தர்கள் அறிந்திலர் என்று சிவ வாக்கியர் பேசுகிறார்.

*"சத்தியாவ தும்முடல் தயங்குசீவ னுட்சிவம்*
*பித்தர்காள் அறிந்திலீர் பிரானிருந்த கோலமே*

சிவவாக்கியர் இந்தக் கருத்தை வேறு ஒரு வகையிலும் பேசுகிறார்.

*"எழுத்தெலா மறிந்துவிட்ட இந்திரஞால வெளியிலே*
*யானுநீயு மேகலந்த தென்னதன்மை யீசனே"*

*"அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்*
*ஆருயிர்கட் கெல்லாநா னன்பு செயல் வேண்டும்*

- வள்ளல் பெருமான்

அந்த தத் என்ற ஒன்றைத்தான் அப்பா என்று அழைக்கிறார்கள். அந்த சித் என்ற ஒன்றைத்தான் அம்மா என்று அழைக்கிகறார்கள். நிலைத்த சக்தியை – அப்பா என்று அழைக்கிறார்கள். இயங்கும் சக்தியை அம்மா – என்று அழைக்கிறார்கள்.

ஆகவே எல்லாமே ஒன்றிலிருந்து வெளிவந்து, ஒன்றிலே ஒன்றாய் உள்ளது. அது அழுவதுமில்லை. சிரிப்பதுமில்லை. அது அனைத்தையும் அழ வைக்கிறது. சிரிக்க வைக்கிறது. இன்பத்தைத் துய்க்க வைக்கிறது. வாழ்க்கையென்ற ஒன்றை- அந்த அதுவின் தயவினால் - இந்த மகா சக்தியைச் சிருஷ்டித்து அல்லது படைத்து ஒவ்வொரு ஜீவனுள்ளும் தந்துள்ளது.

வாழ்க்கையென்ற ஒன்று இல்லையென்றால் ஜீவன் என்ற ஒன்று தேவையில்லை. அந்த மகாசக்தி அனைத்து ஜீவன்களுக்கும் பிறப்பு, இறப்பு என்பதைக் கொடுத்துள்ளது. இந்த இரண்டிலிருந்து ஜீவன் தப்பிப்பது என்பது கடினம். சிரமம். நிலைத்த சக்தியை எதனாலும் இயங்கும் சக்தியாக மாற்ற இயலாது. இந்த இடத்தில்தான் அறிவியல் மேதைகள், முனிவர்கள், தோற்று விடுகின்றனர். மனிதன் தோற்கும் இடம் இதுதான். மனிதனின் சவால், வைராக்கியம், கற்பனையெல்லாமே இந்த இகத்தில்தான் உள்ளன. இந்த ஜீவன்கள் இங்குதான் - இத்தனை வினையையும் ஆற்ற இயலும். அதாவது, இகத்திலிருந்து வரும் வினைகள் இங்கேதான் செயல்படும். பரத்தில் இவைகள் ஏதும் இராது. செயல்படுத்தாது.

பரத்தில் அது ஒன்றுதான். அந்த ஒன்றுக்கு அப்பால் இன்னொன்று கிடையாது. இரண்டு இல்லை. ஒன்றிலிருந்துதான் ஒன்று வந்தது. அந்த ஒன்று பல கோடியாய்ப் - பல கோடானு கோடியாய், பல கோடியிலும் பல்லாயிரம் கோடியாய் முடிவில்லா முடிவு ஜீவன்களாக வெளிப் படுகின்றன.

குயவன் களி மண்ணால் சாமி உருவம் செய்கின்றான். அதே களி மண்ணால் பானை உருவத்தைச் செய்கின்றான். அந்தக் களி மண்ணைக் கலைத்து விட்டு சக்தியின் உருவைச் செய்கின்றான். எல்லாம் களி மண்ணால் செய்கிறான். அந்த மண்ணுக்குள்ளே தான் நினைத்த உருவத்தைக் கொண்டு வருகிறான். அந்த ஒன்றால்தான் எல்லாம் முடியும். இதற்குச் சான்று ஏகவணக்கம் பாடல்.

**சந்தோஷம்**

# தீர்மானம்

மனிதன் எல்லாவற்றையும் தீர்மானித்துக் கொண்டு இருக்கின்றான். இது எல்லா ஜீவர்களுக்கும் பொருந்தும். புழு, பூச்சி ஆகியவை கூடத் தீர்மானிக்கின்றன. அவைகள் தீர்மானித்தபடி அவைகள் நடந்து கொண்டு இருக்கின்றன. சமயத்தில் அவைகளின் தீர்மானம் உடைத்து எறியப் படுகின்றன.

தீர்மானங்களில் எவ்வளவோ வகைகள் உண்டு. அவைகள் எல்லாம் எந்த நேரத்திலும் உடைக்கப்படலாம். எல்லாத் தீர்மானங்களின் முடிவும், அதை நிறைவேற்றச் செய்து வெற்றி பெறச் செய்வதும், வீழ்த்துவதும் இயற்கையின் கையில் உள்ளன.

இயற்கை நியதிப்படி, இயற்கையின் திருவுளக் கருத்தை உணர்ந்து, அதன் நிலையில் நின்று, அதன் தீர்மானங்களின் படி ஜீவர்கள் நடந்தால், குறிப்பாக மனிதன் நடந்தால், அவனுக்கு எல்லாம் வெற்றியே, தோல்வியே இல்லை.

எந்தெந்த ஜீவன்கள் எந்தெந்தக் கூட்டிற்குள் இருக்கிறதோ அந்தந்தக் கூட்டின் இயல்புக்கு ஏற்றவாறு அந்தந்தக் கூட்டின் அறிவு, இயல்பு, ஆற்றலுக்கு ஏற்றவாறு தீர்மான வினைகளும் இருக்க வேண்டும்.

அந்தக் கூட்டிற்குக் கொடுக்கப்பட்ட சக்திகளுக்கு அப்பால் உள்ள தீர்மானங்களை நிறைவேற்றச் சில ஜீவன்கள் துடிக்கின்றன. குறிப்பாக மனிதன் இந்த வகையில் சேருகின்றான். இதன் விளைவு துன்பம், நாசம்.

ஆத்ம ஞானிகள் இறைவன் தீர்மானத்தை உணர்ந்து செயல்படுகிறார்கள். அவரிடம் பூரண சரணாகதி அடைந்து விடுகிறார்கள். ஆகவே, ஜீவ யாத்திரையில் ஜீவன்களின் தீர்மானம். அது இருள் நிறைந்த தீர்மானம். இது வெற்றி பெறுமா? அல்லது தோல்வி அடையுமா? இது அறியப்படாத, ஆய்வு நடத்த இயலாத தீர்மானமாகும். தன்னை முழுமையாக இறைவனிடம் ஒப்படைத்து, இறைவனின்

திருவுளக் கருத்துப்படி வினையாற்றும் ஆத்ம ஞானிகளின் கருத்து வேறு விதமானது.

ஜீவ யாத்திரையில் இறைவனின் திருவுளக் கருத்தைக் கண்டு, உணர்ந்து, அதன்படி வினையாற்றுகின்ற ஒரு நிலை ஜீவனுக்குக் கொடுக்கப்படுகிறது. அது ஜீவ விழிப்பு நிறைவேற்றுகின்ற நிலையில், அந்த ஆற்றல் அந்த ஜீவனுக்குத் தரப்படுகிறது.

ஜீவ யாத்திரை முடிவுக்கு அல்லது வெற்றிக்கு இந்தப்படி மிகவும் அவசியமானதாகும். இந்தப் படியை அடைந்தால் தான் ஜீவ யாத்திரை - சம்பூரண நிலையில் மகத்தானதாக நிற்கும்.

சந்தோஷம்

கல்லுக்கு முன் நின்று மனம் நொந்து பேசினால், கடவுளுக்குக் கேட்குமா? கல்லென்று தெரியும்; தன் குறைகளை அது கேட்காது என்றும், காரியம் செய்ய இயலாதென்றும் நமக்குத் தெரியும். இருந்தும் பேசுகின்றோம். நம்முடைய குறைகளைக் கடவுள் கேட்கிறதா?

கேட்கிறது. கேட்டது என்ற உண்மை நம்பிக்கை தோன்றி, குறைகள் தீர்ந்து நம்பிக்கை வளர்ந்து, கல்லும் கருத்தும் பழகுகிறது. கல்லுக்குள் இருக்கின்றது வெட்டவெளி, கடவுளும் வெட்டவெளி, சொல்லுக்குள்ளும் வெட்டவெளி. எல்லாம் வெட்டவெளி. ஆகவே வெட்டவெளியில் நின்று மனம் நொந்து, நமக்கு இழைக்கப்பட்ட அதர்மத்தை, மனம் கரைந்து, மனமுடைய துன்பம் வெளிப்படுத்தினால் வெட்டவெளியில் துன்பம் கேட்கும். துன்பம் நீங்கும்.

# தேகங்கள்

தேகங்கள் - ஸ்தூல தேகம், சூக்கும தேகம், காரண தேகம், மகா காரண தேகம். ஜீவ யாத்திரையில் மேற் செல்லச் செல்ல ஜீவன்கள் பயணம் செய்யும் தேகங்களுக்கு மாற்றங்கள் ஏற்படும்.

சுபதேகம், மகா சுபதேகம், ஓங்கார தேகம், அருள்தேகம், சாயுச்ய தேகம், ஒளி தேகம், தெய்வ தேகம், கல்ப தேகம், வெட்டவெளி தேகம், சுத்த தேகம் என்று பல வகையான தேகங்கள் உள்ளன. அத்தனை தேகங்களும் ஒன்றன் பின் ஒன்றாக ஜீவ யாத்திரையில், இறுதி நிலைக்கு வந்து சேரும். மாறாக, அஞ்ஞான தேக வகைகள்.

*1. மல தேகம் 2. தரித்திரிய தேகம் 3. துக்க தேகம் 4. தூக்க தேகம் 5. அசுப தேகம் 6. துர் தேகம் 7. நாச தேகம் 8. குருட்டு தேகம் 9. அசத்ய தேகம் 10. கொடூர தேகம் 11. பஞ்சமா பாதக தேகம்*

இந்தத் தேகமெல்லாம் ஒவ்வொரு ஜீவனுக்கும் அந்தந்தத் தீய வினைகளை ஆற்றுவதற்குக் கொடுக்கப் பட்டுள்ளன. இந்தத தேகம் உள்ளவர்கள் யாரிடம் சேர்கின்றார்களோ, அவர்களுக்கும், அந்தக் குடும்பத்தில் இருக்கின்ற அந்தக் குடும்பத்தினருக்கும் துன்பம் விளைந்து கொண்டேயிருக்கும்.

**சுபதேகம்**

ஜீவ யாத்திரையில் ஏறுமுகத்தில் செல்லச் செல்ல அதாவது உயர்ந்து செல்லச் செல்ல உயர் மெய்ஞ்ஞான நிலையில் செல்லச் செல்ல, முழுமையான நிலையில் செல்லச் செல்ல, பூரண நிலையில் செல்லச் செல்ல, இந்த தேகம் சுப தேகமாக மாற்றப் படுகிறது.

சுப தேக நிலை மிக உயர்ந்தது. அது ஆத்ம ஞானிகளுக்குக் கிடைக்கக் கூடியது. மகா சுப தேகம் சற்குருவுக்கே கிடைக்கும். அந்த தேகத்தை வணங்குபவர்களுக்கு வாழ்வு உண்டு. வணங்குபவர்கள் ஆனந்தமாவார்கள். வணங்கும் எல்லாம் சுபம், சுகம். வணங்குபவர்கள் இக ஞானத்திலிருந்து விலகிக் கடவுள் ஞானத்திற்கு வருவார்கள்.

இவர்கள் இருக்கும் இடத்தில் சுபசக்தி பரவியிருக்கும்.

**சந்தோஷம்**

# அழகு

அழகு என்பது மனிதன் நாவால், அறிவால், கற்பனையால் விவரிக்க முடியாத திருவருள் வடிவமாகும். அந்த அழகை அனுபவிக்கலாம், உணரலாம், உய்யலாம்.

அந்த அழகை மூன்று வகையாக மனோ நிலையில் வகைப்படுத்தலாம்.

1. தெய்வத் திருவழகு அல்லது அண்டவெளி அழகு அல்லது வெட்டவெளி அழகு.
2. அருள் தீவிர ஆத்ம சாதனையால் விளைகின்ற ஆத்ம அழகு, பிரம்ம ஞான அழகு, பிரம்ம பேரன்பு அழகு.
3. உருவ அழகு, பருவ அழகு, காலத்தால் எழுகின்ற காலத்தின் கோல அழகு.

முதல் ஒன்று. வெட்டவெளி அழகு. அது நிலையானது. திருவருள் மயமானது. பேரறிவு பிரகாசிக்கும் - பேரழகாகும். இந்த நிறைந்த அழகை யார் காண்கிறார்களோ அவர்கள் அதாவது காண்பவர்கள் உள்ளத்திலே மோகம் வராது. போக புத்தி சிறிதும்இராது.

காண்பவர்கள் ஐம்புலன்களும் அடங்கி விடும். மனம் ஒடுங்கி விடும். மாயை, அகங்காரம் எல்லாம் அப்படியே செயலற்று, சக்தியற்று அந்த அழகிடம் தண்டனிடும். இது ஜீவர்களுக்கு மட்டும் இருக்கும் என்பதன்று. கடவுள் படைத்த எல்லாவற்றையும் பேருண்மையில் நின்று பார்க்கும் போது அழகு - அழகாக உள்ளது.

வானம் அழகானது. மலைகள் அழகானவை, நதிகள் அழகானவை, சூரியன் அழகானது, சந்திரன் அழகானது, காற்று அழகானது, காற்று மெள்ள வீசும் போது அந்தச் செடி, கொடிகள் அசைகின்றதே அது நங்கையின் சதுராட்டத்திற்கு ஒப்பாகும். அக்னி பேசும் அழகு அழகானது, நீர் அழகானது, எல்லா வற்றையும் தாங்குகின்ற பூமி அழகானது, சவம் அழகானது. கள்ளிக்குள்ளும் அழகு பூத்திருக்கிறது. பாம்புக்குள்ளும் அழகு பளிச்சிடுகிறது. கருவேலை மரத்திலும் அழகு காத்திருக்கிறது.

ஜீவன் பல வகையான வடிவங்களுக்குள் நின்று நடமாடுகிறதே அதுவும் அழகானது. எங்குப் பார்த்தாலும் அழகு. அந்தர் முகத்திலும் அழகு. அந்தரங்கத்திலும் அழகு. பகிரங்கத்திலும் அழகு. பகிரங்க - அந்தரங்கத்திலும் அழகு. பகிரங்க- பகிரங்கத்திலும் அழகு.

அழகு. அழகு. அழகு. அழகு. அழகு. அந்த அழகிலே பேரமைதியுண்டு. அந்த அழகில் ஆரவாரம், ஆவேசம், ஐயங்கள், பரிதாபங்கள் எதுவுமே இராது. அதனுள் இருக்கும் மனமும் அழகாக இருக்கும். பார்க்கின்ற ஒவ்வொன்றிலும் தெய்வத் தன்மை ஒளிவிட்டுக் கொண்டு இருக்கும்.

பார்ப்பது - அது புறப்பொருள். கண்ணின் வழியாக ஆத்மா அனைத்தையும் பார்க்கிறது. இது மெய்ஞ்ஞானப் பொருள். ஒரு ஜீவர் பூரணமடைந்ததும், பரிபூரண நிலைக்கு வந்ததும், அது தன்னுடைய பேரழகைத் தானே தரிசிக்கிறது. இங்கும் அழகு, அங்கும் அழகு, அழகுக்கு அப்பால் அழகு. அழகைப் பார்க்கப் பார்க்க இன்பம்.

அந்த அழகிலே பேரின்பமுள்ளது. அந்த அழகிலே கடவுளின் திருவருள் உள்ளது. அந்த அழகு எல்லாக் காலங்களிலும் உள்ளது. எல்லாக் கோலங்களிலும் உள்ளது. காலம் கடந்த பிறகும், அந்த அழகை மிக அழகாக உணரலாம். அழகை மதிப்பதே அழகாகும். அழகுக்குள் இருந்து அழ்காக வாழ்வு நடத்துவது பேரழகு.

அழகுக்குள் இருக்கும் அழகான கருத்துகளை அழகாக வெளியிட்டு மற்ற உயிர்களை அழகாக வாழச் செய்தலும் தெய்வ அழகாகும். நடப்பது அழகு, உண்பது அழகு, அமர்ந்திருப்பது அழகு, ஓடுவதும் அழகு, உறங்குவதும் அழகு, ஜீவன் தேகத்தை விட்டுப் பிரிந்த பிறகு அந்த ஜீவர் பேரழகாக இருக்கும்.

தேகத்தில் உள்ள ஒவ்வொன்றிலும், அந்த அண்டவெளி அழகை அழகாக உணரலாம். அந்த அழகு நிர்மலமானது. மிகத் தூய்மையானது. அழகு - எல்லாம் அழகானவை. அந்த அழகில் எல்லாமே நன்மையாக நடக்கும். அந்த அழகில் சந்தோஷம், பரம திருப்தி, பரமானந்தம், பேரறிவில் மகா விழிப்பு நிலைகள் உள்ளன. அவற்றில் கற்பனைக்கு எட்டாத, விவரிக்க முடியாத சித்ரூப அழகு, நீக்கமற நிறைந்துள்ளது. கடவுள் படைத்ததெல்லாம் அழகு.

அழகன்றி வேறு ஏதுமில்லை. கடவுளே பேரழகானது. அந்த அழகைப் பற்றி ஆயிரங் கோடிப் பக்கங்கள் விவரித்தாலும் அதன் இயல்பை 1 சதவிகிதம் கூட நெருங்க இயலாது.

குழந்தை அழகானது. பிறந்த பிறகு, பிறந்திருக்கும் ஆத்மா விழிப்பு நிலையில் இருந்து, தான் எங்கிருந்து வந்ததோ அதனோடு தொடர்பு கொண்டிருக்கும். அது அழகானது. தன் இறுதி மூச்சு வரை அழகாக இருக்கும். அழகின் இலக்கணம் தான் - அழகாக இருப்பதை உணர்ந்து, எதிரிட்டு வரும் உயிர்களை அவரவர்கள் உணரச் செய்து, அந்த அழகுக்குள் இருக்கும் ஆனந்தத்தைத் துய்க்க வைப்பதாகும்.

ஜீவன் பிறந்த பிறகு ஒரு குறிப்பிட்ட வயது வளர்ந்த பிறகு, அந்த ஜீவன் ஒரு சற்குருவை நாடும். அந்தச் சற்குரு ஆக்ஞைப்படி சற்குருவிடம் தீட்சை பெற்று தீவிர ஆத்ம சாதனை செய்யும்.

ஆணவம், கர்மா, மாயை என்ற மும்மலங்களோடு இந்த உலகிற்கு வந்த அந்த ஜீவன், ஜீவ நிகழ்வால் சற்குரு மூலம் அதி தீவிர ஆத்ம சாதனை செய்யும். இதன் விளைவாக அதற்கு ஆத்ம தரிசனம் கிடைக்கும். அந்த ஆத்ம தரிசனத்திற்குப் பிறகு இதன் மும்மலங்கள் நீக்கப்படும்.

ஆத்மா விவரிக்க முடியாத அருள் அழகாகும். அந்த அருள் அழகு ஆனந்தம் தருகின்றது. பிறகு இதன் உருவம் பேரழகாகி விடும்.

நிராமய அழகு இதற்குக் கிடைக்கும். இந்த உருவத்தை யார், எந்த ஜீவன் தரிசிக்கின்றதோ அந்த ஜீவனும் ஆனந்தத்தைப் பெறும். மனதில் சஞ்சலங்களும், சலனங்களும் அறவே நீங்கி விடும். தர்மம், சத்தியம், நியாயம் எங்குப் பார்த்தாலும் இந்த அழகில் விரவி நின்று பேசும்.

ஆத்ம தரிசனத்திற்குப் பிறகே காணும் இடமெல்லாம் அழகு, காணும் பொருள் எல்லாம் அழகு, காணுகின்ற இந்த வடிவம் அழகானது. இந்த சமயத்தில் விதி அழகானது. வினை அழகானது. வினையின் வினைகள் அழகானவை.

துன்பம் கூட அழகாக இருக்கும். எல்லாவற்றிற்கும் மேலாக - அந்த நிலையில் அந்த ஜீவன் அந்த தேகத்தை விட்டுப் போகும் போது இதமாக,

இனிமையாக, சுகமாக, சுபமாக, சுகானந்தமாக, பரசாந்தமாக, அழகு நிறைந்து விழிப்போடு சிரித்துக் கொண்டே மங்கலமாகப் புறப்படும்.

அப்போது அந்த இடத்தில் உள்ள ஆத்ம தரிசனம் பெற்றவர்கள், எங்கிருந்தாலும் ஆத்மா தேகத்தை விட்டுப் பிரிகின்ற உள்-வெளி காட்சியைக் காண்பார்கள்.

மூன்றாவது அழகு அந்தந்த வடிவங்களுக்குக் கொடுக்கப் பட்ட அழகு. அது காலத்திற்கு உட்பட்டது. கோலத்திற்கு உட்பட்டது. பருவங்களுக்கு உட்பட்டது. ஜீவ விருத்திக் கேற்றவாறு, செய்யும் வினைக் கேற்றவாறு, அங்கு அழகுகள் அமைக்கப் படுகின்றன.

இந்த அழகில் அருவறுப்பு, வெறுக்கத் தகுந்த நிலையுண்டு. புறக்கணிக்கின்ற தோஷம் உண்டு. ஒதுக்கி வைக்கின்ற நிலை, ஜீவன்களே ஜீவன்களை வெறுக்கும் அகோரமும், அகோலமுமுண்டு. தீய வினையாற்றினால் அத்தகைய பூரணமற்ற வெறுப்புகள் தேகத்திற்கு வரும். அந்த வடிவத்தைப் பார்த்தாலும் மற்ற ஜீவன்கள் வெறுக்கும்.

அந்த அழகில் மாயை, கவர்ச்சிகள் உண்டு. மோகமுண்டு. அந்த மாயை அழகிலே பசப்பு மொழிகள், நடிப்புகள், செயற்கை நிலைகள், அறியாமை ஆகியன பெருகியிருக்கும். இருள் நிறைந்த செயல்கள், மூடத்தன்மை வினைகளெல்லாம் இருக்கும். அந்தந்தக் காலங்களில், அந்தந்த அழகுகள் வரும்; பிறகு மறைந்து விடும்.

முதுமைக் காலம் வந்த பிறகு அழகற்ற அருவறுப்பான ஒரு வடிவம் கிடைக்கும். முதுமைக் காலம் உள்ளவர்களுக்கு மட்டும் இந்த வடிவமன்று. இந்த அருவறுப்பான வடிவங்கள் அந்தந்தக் காலத்தில் அதன் தீய வினைக்கேற்றவாறு அதற்குத் தரப்படுகிறது. இதற்கு ''விகல்ப தேகம்'' என்று பெயர். இதற்கு வாழ்வு, துன்பம், சோகம், வேதனை, தற்கொலை, தவறுகள் உண்டு. அழகு ஒரு ஜீவனுக்கு இன்றியமையாதது. இயற்கையே அழகாக இருக்கும். இயற்கை வதியும் போது எல்லாமே அழகாக மாறி விடுகிறது.

மனிதன் முழுமையானதும், பரிபூரண நிலை வந்ததும் தான், இந்த உலகு, இந்த உலகில் நடமாடும் வடிவங்கள் எல்லாமே அழகாக விளங்கும்.

இந்தப் பரமானந்த மௌனப் பேரழகைக் கடவுளின் அற்புதப் பேரழகை, அருள் ஆனந்த அழகை, அமரத்துவமான அழகைக் காண்பவர் - சற்குரு. காண்பவர் - ஆத்ம ஞானி.

*உள்ளதை உள்ளபடி காண்பது.*
*உள்ளதை உள்ளபடி உணர்வது.*
*உள்ளதை உள்ளபடி வாழ்வது.*
*உள்ளதை உள்ளபடி இருப்பது.*
*சிவஞானப் பெரு நிலையாகும்.*

அழகு - சித்தழகு, பேரழகு, பரிபூரணானந்த பேரழகு, பரிபூரணானந்த அமரத்துவமான மகா பேரழகு. அதுவே சிவானந்த அழகு, சித் சொரூப அழகு. அழகு. அழகு. அழகு. எல்லாம் அழகு. எங்கும் அழகு. எங்கும் ஆனந்தப் பேரழகு. அங்கு அதிலிருந்து கோடானு கோடிப் பேரொளி அழகுகள் விரிந்து வந்து கொண்டேயிருக்கும். விரிந்து கொண்டேயிருக்கும்.

*"யார் அறியப் போறார் இந்தப் பெரு நிலைப் பேரழகை*
*யார் உணரப் போறார் இந்த மெய்ஞ்ஞானப் பேரழகை*
*அதனுள் விளங்கும் பெரும் பொருளை*
*யார் காணப் போறார் இந்த சௌபாக்கிய சுந்தர மகாப் பேரழகை*
*இந்தப் பேரழகின் அதிபதியை. அந்தச் சிவஞானப் பேரழகைப் படைத்த கடவுளை"*

அழகு. அழகு. பேரழகு. அமரத்துவமான ஆனந்த அழகு. அழகு அழகு. அருளழகு. சிவானந்த சிவ அழகு. அழகு. அழகு. எங்கும் அழகு. எல்லாம் அழகு. என்றும் அழகு. அழகே அழகாக உன்னை ஆராதிக்கின்றேன். அழகே அழகாக உன்னை அன்போடு ஆராதிக்கின்றேன். அழகே ஏற்றுக் கொள். அழகு. அழகு. பேரழகே. பிரம்மாண்ட பிரம்ம ஞான அழகே.

அழகு. அழகு. அழகு.

**சந்தோஷம்**

# அருவும் உருவும்

ஜீவ யாத்திரைக்கு இந்தப் புவியில் வேண்டுவது, காண்பது - உருவம், அருவம், உருவத்துள் அருவம் ஆகியவை ஜீவ விழிப்றிற்கு முன்பு உருவத்தைப் பற்றி உருவப் படைப்பின் இரகசியங்களைப் பற்றி உருவத்தின் தொழில் நுட்பங்களைப் பற்றி, உருவத்தின் இயல்புகள், இயக்கங்கள், அதன் முக்கியத்துவம் ஆகியவை தெரிவதில்லை.

தன்னைக் கவனித்தல் என்பது ஒரு அலாதியான அற்புதமான ஒரு முனைப் படுத்தப் பட்டுள்ள உள்வீரியம் நிறைந்த ஒரு சாஸ்வத உண்மையாகும். தன்னைக் கவனிப்பதற்கு ஆத்மபலம் தேவை. ஆத்ம பலம் ஒன்றினால்தான் தன்னைக் கவனிக்க முடியும். உருவத்தின் பெருமைகள், மகிமைகள், பேராற்றல்கள் ஆகியவை வெளிப்படும்.

உருவத்தை உதாசீனப் படுத்துதல் தன்னை வீழ்த்திக் கொள்ளும் செயலுக்கு ஒப்பாகும். உருவத்தை மதித்தல் வேண்டும். மனத்திற்கு அப்பால் சென்று உருவத்தை மதித்தல் வேண்டும். உருவப் படைப்பிற்கும் ஜீவனுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்றாலும், ஜீவன்கள் ஆற்றும் வினைப்படிதான் அந்தந்த ஜீவன்களுக்குத் தேவையான உருவங்கள் அந்தந்தச் சமயத்தில் தரப்படுகிறது. உருவத்தை எள்ளி நகையாடல், கேலி செய்தல் பாவம் நிறைந்த ஒரு செயலாகும். நாம் காணுகின்ற எல்லா வகையான உருவங்களும் போற்ற வேண்டியவை வணங்க வேண்டியவை. இதது தன்னை வணங்கக் கற்றுக் கொண்ட ஒருவனாலே முடியும். ஜீவ விழிப்புப் பெற்றவன் தன் உருவத்தைத் தானே வணங்குவான்.

வெட்டவெளி அருவமாகும். ஆனால் அதுதான் தன்னுள் எல்லா வகை உருவங்களையும் படைக்கிறது. பூமிக்கு அனுப்புகிறது. பிறகு அதை அழைத்துக் கொள்கிறது.

அழிவு என்ற சொல்லுக்கு இங்கு வேலை இல்லை. இது மனிதன் கற்றுக் கொண்டது. உருவம் கலைதல், உருவம் மறைதல், உருவம் ஒடுங்குதல், பிரமிப்பு உருவம் பெறுதல், உருவத்தின் கவர்ச்சி, தெய்வ உருவம் பெறுதல், மனித உருவத்தில் இருந்து மாமனித உருவம் பெறுதல், தெய்வ உருவத்திலிருந்து மகேசன் உருவம் பெறுதல்,

உருவத்தில் அருள் நிறைந்திருத்தல், உருவத்தை வைத்துத் தவம் செய்தல், உருவத்தைத் தியானம் செய்தல். இந்த வினைகளால் நினைத்த காரிய வெற்றி கிடைக்கும். உருவ வழிபாடு ஒருவனை உயர்த்தும். உருவத்திலே அருவ உருவம் உண்டு. பிரணவ உருவம் உண்டு. சுத்த உருவம் உண்டு. சுக உருவம் உண்டு. சுப உருவம் உண்டு. மகா சுப உருவம் உண்டு. தெய்வமே வணங்குகின்ற உருவம் உண்டு. தெய்வ உருவம் உண்டு. வடிவத்தைக் கண்டதும் அஞ்ஞானம் அக்கணமே விலகுகின்ற, விலக்குகின்ற சக்தி உருவத்திற்கு உண்டு.

அருவம் உருவத்தின் மூலமாகவே செயல்படுகிறது. அருவம் தங்கி இருந்து தன்னை வெளிப்படுத்துவதற்கு உருவத்தினாலே முடியும். உருவத்தை வெறுப்பவர்கள் உருவ வழிபாட்டை வெறுப்பவர்கள் பூரண அறிவு நிறைந்தவர்கள் அல்லர். ஏனென்றால் உருவப் படைப்பில் இரகசியம் உள்ளது. அது 96 தத்துவங்களைக் கொண்டுள்ளது. அந்த உருவத்திற்குள்ளே அண்டவெளி சக்தி உள்ளது. பஞ்ச பூத தத்துவம் உள்ளது. ஐந்து மகத்தான கோசங்கள் உள்ளன. அதைப் படைத்த இடமோ வெட்டவெளி. வெளியே நகலாக மனித உருவங்களில் வைக்கப்பட்டு வெளிப்படுத்தப்படுகின்றது. வெட்டவெளி எங்கும் உள்ளது. மூக்குத் துவாரத்தில் உள்ளது. கருப்பையில் உள்ளது. சிரசில் உள்ளது. கண்ணின் துவாரத்திற்குள் உள்ளது. நெஞ்சுக் குழிக்குள் உள்ளது. தேகத்தின் உள்ளே உள்ளது. இரத்தத்தின் உள்ளே உள்ளது. எலும்பின் உள்ளே உள்ளது. முடிக்குள்ளே உள்ளது. ஒரு முடிக்கும் இன்னொரு முடிக்கும் இடையே உள்ளது. வெட்டவெளி என்றால் உருவத்திற்கும் வெட்டவெளிக்கும் ஒரு 10,000 மைல் இருப்பதாகக் கற்பனை செய்து கொள்ளக் கூடாது. எல்லாமே வெட்ட வெளிதான். வெட்ட வெளிக்கு அப்பால் எதுவுமே இல்லை. கடலுக்குள்ளே மீன் நீரைத் தேடுவது போல்தான் இன்றைய மனிதன் வெட்டக் வெளிக்குள்ளே இருந்து வெட்ட வெளியைத் தேடுகின்றான்.

அசல் வெட்ட வெளியில் உள்ளது. இங்கு நகலைத்தான் அழிக்கிறார்களே தவிர அசலை அழிக்க யாராலும் இயலாது. மீண்டும் அந்த அசல் உருவமாக வரலாம், உலகிலே நடமாடலாம். இதை உணர்ந்தவர்கள் ஞானிகள், குறிப்பாக இராமலிங்க சுவாமிகள் போன்றவர்கள் உள்ளனர். மீண்டும் வருவேன் என்று சென்று

உள்ளார்கள். சற்குருக்கள் பலர், நான் மீண்டும் வருவேன் என்று சொல்லி விட்டுச் சென்றுள்ளார்கள்.

நகல் மூலம் அசலுக்குச் செல்லலாம். அசல் மூலம் ஆத்மாவுக்குச் செல்லலாம். ஆத்மாவோடு வெட்ட வெளியில் ஐக்கியமடையலாம்.

அருவ வழிபாடு என்பது சாதாரண காரியம் அன்று. மனிதக் கூட்டுக்குள்ளே இருந்து கொண்டு அருவத்தை அறிந்து கொண்டு அருவத்தாலே ஆண்டவனை வழிபடுகின்ற பாதையை அறிந்தவர்கள் மிக மிகக் குறைவு.

இங்கு அருவத்தைத் தெரிந்து கொள்ளாது, அதாவது தனக்குள்ளே உள்ள உயிரைத் தெரிந்து கொள்ளாது, உருவத்தைத் தெரிந்து கொள்ளாது, உருவத்தை மெய்ஞ்ஞான நிலைக்கு அழைத்துச் செல்லவும் தெரியாது. அருவ வழிபாடு உயர்ந்தது உருவ வழிபாடு தாழ்ந்தது அல்லது உருவ வழிபாடு மட்டமானது, உருவ வழிபாடு உள்ளவர்கள் எல்லாம் கீழ் இன மக்கள் என்று பேசும் கூட்டங்கள் உள்ளன. வழிபாடு அறியாத வாய்ச் சமர்த்துப் பேசும் வீணர்களும் வம்பர்களும் ஏராளம் ஏராளம். இந்தக் கூட்டத்தோடு சேர்ந்தால் இவர்கள் பேச்சைக் கேட்டால், ஜீவ யாத்திரை வெற்றி பெறும் வாய்ப்பை இழக்கும்.

ஆகவே அருவத்துள்ளே உருவம் உண்டு. உருவத்துள்ளே அருவம் உண்டு. அருவத்தையும் உருவத்தையும் அதுதான் படைத்தது.

ஆகவே மனிதனின் பேச்சைக் கேட்டு மண்ணாகி விடாதே. சற்குருவின் பேச்சைக் கேட்டுப் பரம் பொருளோடு சங்கமமாகு. தெய்வத்தின் பேச்சைக் கேட்டுத் திருவாகுங்கள்.

வெட்ட வெளியில் அசலின் குரல் வரும் அல்லது வெட்ட வெளியே பேசும். அதைக் கேட்டு, பார்க்கும் இடங்களெல்லாம் நீக்க மற நிறைந்திருக்கும் வெட்ட வெளியில் விரைந்திடுங்கள். வெட்ட வெளியிலே விரைந்திடுங்கள்.

**சந்தோஷம்**

# அறிய வேண்டியது

அறிய வேண்டியது, அருளால் காண வேண்டியது

உலகை அறிவால் அறிய வேண்டும். அன்பை உணர்வால் உணர வேண்டும்.

ஜீவனை ஜீவகாருண்யம் மூலம் அறிய வேண்டும்.

விதியைத் தேகத்தின் சூக்கும உறுப்புகளை - புலனடக்கம், சாந்தநிலை, வேகம் நீக்குதல் ஆகியவைகளின் அருள் வல்லமையால் வினையாற்ற வேண்டும்.

தவத்தால் இறைவனை நோக்கிச் செல்ல வேண்டும்.

சத்தியம், தர்மம், நியாயத்தால் மாயை, அகங்காரம், கர்மா ஆகிய பதினெட்டு குணங்களை வெல்ல வேண்டும்.

உயிருக்கு உறுதியான எழுத்து மந்திரம் - "அகரம்"

உதடுக்கு உறுதியான யந்திர மந்திரம் - "உகரம்"

இரண்டும் ஒன்றையொன்று வினையாற்றி இன்பம் -துன்பம் அனுபவிக்கச் செய்து அந்தமாய்த் திகழ்வது - "மகரமாகும்".

இரண்டாம் நிலை ஜீவ விழிப்பில் உள்ள ஜீவன் அறிய வேண்டியது.

ஒவ்வொரு ஜீவனுள்ள மனித உடலிலும் மூன்று மகத்தான இரகசிய சூக்கும உறுப்புகள் உள்ளன.

1. ஞான நாடி
2. நாத நாடி
3. மூல நாடி
4. நடு நாடி
5. மேதா நாடி

இதற்கப்பால் பிரம்ம தரிசனம் யார் பெறுகின்றார்களோ அல்லது பெற்று விட்டார்களோ, அவர்களால் மட்டுமே அறிய முடிந்தது.

சிரசுக்குள்ளே ஒரு அந்தரங்க அறை உள்ளது. அந்த அறையினுள்ளே ஒரு வேர் உள்ளது.

ஆத்மாவின் கதிர் ஒளியினால், அந்த அறையைத் திறந்து அந்த வேரை உணர்ந்து பார்க்கும்போது வெட்டவெளி வெளிப்படும். அதில் இரகசியங்கள் மர்மங்கள் அடங்கியயுள்ளன.

வெளிப்படையான சில உண்மைகள்

மனிதர்களின் மனோ திருப்திக்காக வெளிவரும் நூல் அன்று ஜீவ யாத்திரை.

சிரசுக்குள்ளே உள்ள வேரில் மர்மங்களும், அதிசயங்களும் உள்ளன. ஆதிமூல ஆணி வேர். எல்லோரிடத்திலும் உள்ளது. பக்தியினால் அறிய இயலாது. கம்பீரமான இராஜ யோகத்தால் அறிய இயலாது. கர்ம யோகத்தால் அறிய இயலாது.

இந்த வேரை அறிந்த பிறகுதான், அதன் மூலம் அரூப முக்தி, சொரூப முக்தி ஜீவனைத் தேடி வரும்.

சித்தர்களால் மட்டுமே அறிந்து, இனம் கண்டு, அதைப் பயன்படுத்த இயலுகிறது. அது பேரம்பலத்தையும், சிற்றம்பலத்தையும் அறிவதற்குச் சிறந்த ஒளியாக உள்ளது. அங்குச் செல்வதற்கு வாகனமாக உள்ளது.

நடு நாடிக்குள் தத்துவ எழுத்துகள் எல்லாம் மலர்ந்து நிற்கும். இதற்கு மேல் இக்கருத்தை வெளிப்படுத்தி, விரிவாக்கு வதற்கு அதன் அருள் வல்லமையின் ஆக்ஞை வேண்டும்.

**மேதா நாடி**

ஞானிக்குப் பிராணன் புருவ மத்தியில் நின்று உச்சந்தலை வழியாகப் பிரம்ம ரந்திரத்தின் வாயிலாக வெளியேறுகிறது. பிரம்மச்சாரிக்கு ஏன் மதிப்பு கொடுக்கப்படுகிறது? இல்லறத்தாருக்கு அத்தகைய மதிப்பு இல்லையே ஏன்? பிரம்மச்சரியத்திலிருந்து சந்நியாசம் அடைகிறவர்கள் ஒரு சிலர். இல்லறத்திலிருந்து சந்நியாசம் அடைகிறவர்கள் ஒரு சிலர். இருவருக்கும் ஆயிரம் மைல்கள் இடைவெளி உண்டு. இல்லறத்தார் உயிர் சக்தியை முற்றிலுமாக

வீணாக்கியவர்கள். பிரம்மச்சாரிகள் உயிர் சக்தியில் உள்ள சட்டைகளைக் கழற்றி அதன் பேரொளி மையத்தைத் தங்களுக்குள்ளே வெளிப்படுத்திக் கொள்வார்கள். சந்நியாசம் ஆனதும் அந்த ஒளி பொருந்திய உயிர்சக்தியைப் புருவ மத்திக்குக் கொண்டு வந்து ஞானக்கனலால் அதைப் புடமிடுவார்கள். அது மணியாக மாறும். அதற்குப் பெயர் ஞான மணியாகும்.

பிரம்மச்சாரிகளுக்கு மேதா என்னும் நாடி உள்ளேயிருந்து வெளிப்பட்டு அது செயல்படுகிறது.

மேதா நாடியின் விவரம் : மேதா நாடி உடல் பணிகளுக்குச் செயல்படாது. அந்த நாடிக்குப் பாதிப்புக்கிடையாது. அதனால் உடல் பாதிக்காது. பிராணன், விந்து, லலாடம் இவற்றோடு தொடர்பு கொண்டுள்ளது. சூட்சும தேகத்தோடு இதற்குப் பந்தம் உண்டு. ஆத்ம தரிசனத்திற்கு இதுவே மூல காரணம். ரமணர், சேஷாத்திரி சுவாமி, காயல் விருபாட்சித் தேவர், குக நமச்சிவாயர், ஞானேஸ்வர மகராஜ், ஷீரடி சாய்பாபா இன்னும் மற்றும் பலருக்கு இந்நாடி வெளிப்பட்டுச் செயல்படுகிறது. நீளமாக இருக்கும். வெள்ளை நிறம் சற்று நீலம் பாய்ந்த தன்மையில் அது இருக்கும். இந்நாடியின் பயன் உலக வாழ்க்கைக்கு ஏதுமில்லை. அதிகமாகப் பேசுவோருக்கு இந்நாடி தன் செயலை நிறுத்திக் கொள்ளும்.

மேதா நாடி அண்டவெளி சக்தியோடு தொடர்பு கொள்ளும். காம இச்சை கொண்டவர்களுக்கு இந்நாடி வெளிப்படாது. வெளிப்படாது. இந்நாடி செயல்படாவிட்டால் குண்டலினி சக்திக்கே இங்கு இடமில்லை. இதைத் தியானத்தால் உருவாக்க இயலாது. எந்தச் சக்தியாலும் இதை உருவாக்க இயலாது. பிரம்மச்சரியத்தாலே இதை உருவாக்க இயலும். சற்குருவின் சூட்சும அருளாசி இருந்தால் இந்நாடியைப் பேச விடலாம். சுவாமி விவேகானந்தருக்கு இந்நாடி அவர் வாழ்வு முழுவதும் வழிகாட்டியாக இருந்திருக்கிறது. மேதா நாடி செயல்பட்டுக் கொண்டிருப்பவன் ஆன்மீகத்தில் தீரனாக இருப்பான். ஆண் மயக்கம், பெண் மயக்கம், உலக மயக்கம் ஆகிய மூன்று மயக்கங்களையும் கடந்தவனாக இருப்பான். அவனை எந்த மயக்கமும் பற்றாது. இத்தகையோர் உண்பது சிறிது. உறங்குவது சிறிது. அவர்கள் எதை நினைக்கிறார்கள். எதைப் பேசுகிறார்கள். எங்கு இருக்கிறார்கள்.

எதிர்காலத்தில் அவர்கள் எங்கிருப்பார்கள் போன்ற எதையுமே யாராலும் கண்டு கொள்ள இயலாது.

மேதா நாடி பிரம்ம தரிசனத்தைக் காண வைக்கும். அந்நாடியைப் படம் பிடிக்க இயலாது. அந்நாடிக்கு நோயுமில்லை. மருத்துவமும் இல்லை. உடலில் எவ்வளவு நோய் வந்தாலும் அது மேதா நாடியைப் பாதிக்காது. அதனால் அது பழுதுபடாது. மௌனிகளுக்கு இந்நாடி தெய்வமாக இருக்கும். கலங்கரை விளக்கமாகத் தோன்றும். மேதா நாடியின் ஆற்றலை இன்னும் விளக்கலாம். இதை அறிந்து கொள்ளவே இக்கால மனிதர்களுக்குச் சக்தி இல்லை. இதை உணர்ந்தவர்களுக்கு இந்நாடியின் மற்றொரு அத்தியாயம் சொல்ல இயலும்.

சந்தோஷம்

*மேல் நோக்கிய மெய்ஞ்ஞான நிலைகளில்*
*மிக உயர்ந்தது - சாந்தம்.*
*இதன் முதற்படி - நிதானம்*
*இதன் விளைவு - மௌனம், மௌனம்.*
*இதன் மேற்படி அன்பு*
*இதன் விளைவு அருள்.*
*இவைகள் வந்த பிறகு - பரசாந்தம்*
*பிறகு கடவுள் தரிசனம்.*
*பிறகு ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம்.*
*பிறகு பிறகற்ற அற்புத நிலை.*

# சுயதர்மம்

ஜீவ யாத்திரையில் சுய தர்மம் இன்றியமையாதது. சுயம் ஒவ்வொரு மனிதன் உள்ளும் அல்லது ஒவ்வொரு கூட்டின் உள்ளும் உள்ளது. அது யாராலும் தோற்றுவிக்கப்பட்டது அன்று தோற்றுவிக்கப்படவும் இயலாது. அதுவே "ஆத்மா". இது தேகத்திற்குள் தன் வினையை விதியின் வல்லமைக்கேற்றவாறு ஆற்றும். ஆத்மபலத்தோடு, 96 தத்துவங்கள் தேகத்தை இயக்குகின்றன.

இந்தத் தேகம் அந்த ஜீவனுக்கு நன்மை செய்கிறது. அந்த ஜீவன் கடைத்தேறுவதற்கு இந்தத் தேகம் வினையாற்றுகிறது. இந்தத் தேகம் இல்லையென்றால் ஜீவ யாத்திரையில். இந்த ஜீவன் வெற்றி பெற இயலாது.

ஆகவே, ஜீவன்கள், தேகத்திற்கான தர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். தேகத்திற்குத் தர்மங்களுண்டு. நியாயங்களுண்டு. இந்த உயிர் வழியே தேகத்தை வழி நடத்திச் செல்ல வேண்டும்.

தேகத்தை - அதர்ம காரியங்களுக்கு, மற்ற ஜீவன்களுக்கு துன்பத்தைக் கொடுக்கும் காரியங்களுக்குப் பயன்படுத்துதல் கூடாது. கடவுளைப் பற்றிச் சிந்திப்பது, கடவுளின் கருத்துகளை நினைந்து - நினைந்துஅன்பால் உணர்ந்து - உணர்ந்து, அறிவால் ஆழ்ந்து - ஆழ்ந்து தவத்தால் ஓங்கி - ஓங்கி, தத்துவம் கடந்த நிலைக்கு வந்து, மகா சூரிய பிரகாசத்தால் தேகத்தைக் காப்பது வேண்டும்.

கோயிலுக்குத் தேகத்தை அழைத்துச் செல்லலாம். தர்மத்தோடு ஜீவர்களுக்கு உதவி செய்வதற்காகத் தேகத்தை அழைத்துச் செல்லலாம்.

யோகிகள், சித்தர்கள், ஞானிகள் தரிசனம் பெறுவதற்கு இந்தத் தேகத்தை அழைத்துச் செல்லலாம்.

கரங்கள், சிரம், கால்கள், மற்ற அங்கங்கள் ஞான கர்மம் புரியலாம். தேகத்திற்குச் சக்திக்கு மீறிய பணியைக் கொடுக்கக் கூடாது. தேகத்திற்குப் பாவச் சுமையை ஏற்றக் கூடாது. தேகத்தைப் பட்டினி போட்டுச் சிதைக்கக் கூடாது. தேகத்திற்குப் பொருந்தா உணவைக் கொடுத்து, தேகத்தை அழ வைக்கக் கூடாது.

அதர்மத்தால் தேகத்தை அலைக்கழிக்கச் செய்து, தேகத்தை நயந்து, நொந்து போய், வருந்தும் அளவிற்கு வினை கொடுக்கக் கூடாது.

உன் தேகமே உன்னைச் சுமந்து செல்லும் தேகமே, உன் நாள் முழுதும் உனக்குச் சேவை செய்யும் தேகமே, உனக்குச் சாபமிடும். அதனால் ஜீவ யாத்திரை தடைப்படும். ஆகவே, நீ உன் தேகம் சாபம் கொடுக்கும் அளவிற்கு நடக்காதே.

தேக - ஆசிகள் உனக்கு வேண்டும். தேக ஆசிகள் உனக்குக் கிடைத்தால், உன் யாத்திரை வேகமாக மேல் நோக்கிய நிலையில் செல்லும்.

ஆகவே, உன் தேகத்தை நீ மதி. திருமூலர் தன் தேகத்தை மதிக்கிறார்.

*உடம்பார் அழியில் உயிரார் அழிவர்*
*திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்ததே*
*உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே - 724*

*உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்*
*உடம்பினுக்கு உள்ளே உறுபொருள் கண்டேன்*
*உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று*
*உடம்பினை யான்இருந்து ஓம்புகின் றேனே - 725*

ஆகவே, எட்டு அடி குச்சுக்குள்ளே ஒரு மச்சு உண்டு. அந்த மச்சுக்குள்ளே கடவுள் மெச்சும் சுகமுண்டு. மச்சு சுகத்தைக் காண்பவன் - ஞானி. எச்சில் சுகத்தில் இருப்பவன் - அஞ்ஞானி.

உன்னை அறிந்தால் உலகை அறிவாய்.

**சந்தோஷம்**

# ஒரு உண்மை

ஒரு உண்மை. இது இயற்கையிலிருந்து வந்த உண்மை. ஒரு மனிதன் அல்லது ஒரு குழந்தை இந்த உலகிற்கு வந்து விட்டால் பெருநெறி கொண்டு வளர்ந்து வாழ்ந்து வந்தால் அந்தந்தக் கால கட்டத்தில் அந்தக் குழந்தைக்கு அறிவு வளர்ந்து கொண்டே இருக்கும். அறிவு பிரகாசமாகி வளர்ந்து கொண்டே இருக்கும். அறிவுக்கு அந்தந்த வயதிலே பெரிய நுண்ணுணர்வுக் கருத்து எட்டிக் கொண்டே இருக்கும். அறிவு பிரகாசமடையும், அது மேலும் பிரகாசமடையும், அது இன்னும் பிரகாசமடையும், இப்படி அறிவு பிரகாசமாகி ஒவ்வொரு படியாக அடைய அடைய ஒவ்வொரு படியிலும் இயற்கையில் உள்ள நுண்ணிய கருத்துகள் வெளிப்படும்.

1) புறநிலைப் பொருள்கள் நிலை கலையும். காணுகின்ற காட்சிகளையும், மாற்றங்களையும் முழுமையாக அறிதல் ஒன்று.

2) அதற்குப் பிறகு காமியார்த்த நிலை. மகா மோகநிலை மாறிப் பணம், புகழ் என்ற ஒரு நிலையில் இருத்தல் ஒரு காலம்.

3) அடுத்த நிலையில் இவைகளெல்லாம் தாண்டி இவைகளுக்கு அப்பால் சென்று புலன்களுக்கு அகப்படாத சிற்றறிவு கலந்த பேரறிவு நிலை. நுண்ணிய சித் சக்திகளை அறியும் அறிவு அந்த அறிவுக்கு வெளிப்படல்.

4) புறநிலையை விட்டுப் பரநிலைக்கு வருதல் ஒன்று. இதில் தன்னை அறிய வேண்டும் என்ற ஆர்வம். தன்னை அறிந்து இன்புற வேண்டும் என்ற ஆர்வம் வரும்.

எல்லாவகைப் புறநிலைகளும் விடுபட்டு, விடுவித்துக் கொண்டு சுத்த முழு நிலைக்கு வந்து சேரும்.

அதற்குப் பிறகுதான் புறநிலையில் மக்களுக்குச் செய்த சேவை போகும். தனக்கு ஏதாவது செய்ய வேண்டும். தன் ஜீவனுக்கு ஏதாவது செய்ய வேண்டும். தன் ஆத்ம வெளிப்பாட்டுக்கு ஏதாவது செய்ய வேண்டும். தன்னை இயக்குகின்ற சக்திக்கு ஏதாவது செய்ய வேண்டும். தன்னை இயக்குகின்றதைத் தரிசிக்க வேண்டும். தான் யார் என்று காண

வேண்டும் என்ற எல்லையற்ற பேரார்வம் அந்த ஜீவனுக்குள்ளே சலனமற்ற மோன நிலையில் மோனப் பணி ஆற்றிக் கொண்டிருக்கும். அத்தகைய நிலை வந்ததும், மீண்டும் ஜீவன் நிலைக்கு வராது கீழ்நிலை எண்ணங்கள், செயல்கள் யாவும் அதற்குத் தலை காட்டாது. எல்லாம் அமைதி ஆகி விடும். சாந்தம் ஆகி விடும். மோனமாகி விடும்.

இந்த நிலை ஒரு மனிதனுக்கு ஒரு வயதில் வந்தாலும் வரலாம். கருவிலே, 7 வயதிலே, 8 வயதிலே, 15 வயதிலே, 50 வயதிலே, 80 வயதிலே, 100 வயதிலே வந்தாலும் வரலாம். மரணம் வருவதற்கு 3 நாழிகைக்கு முன் வரலாம். ஒரு சாமத்தில் வந்தாலும் வரலாம். உயிர் பிரிந்து கொண்டு இருக்கும் போதே அது வரலாம். எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம். ஆதி சங்கரருக்கு 7 வயதிலும், சுவாமி விவேகானந்தருக்கு 12 வயதிலும் அந்த உணர்வு வந்தது. திருவாரூர் தட்சிணாமூர்த்தி சுவாமிக்குப் பிறந்து கொண்டு இருக்கும் போதே வந்தது. இராமலிங்க சுவாமிக்குச் சிறு வயதிலே வந்தது. ஞானேஸ்வர மகராஜுக்குப் பிறந்தவுடனே வந்தது. தேவராஜ் சுவாமிகளுக்கும் அவ்வாறே! மயிலாடுதுறை பரப்பிரம்ம ஓம் ஸ்ரீ சித்தர் சுவாமிகளுக்கு 11 வயதில் வந்தது, கனன்று கனன்று ஞானக் கனலாகத் தீப ஜோதியாக நின்றோங்கியது. மாதாஜி சித்தருக்கு அவளை அறியாமலே அவளை ஞானத்திற்கு அழைத்துச் சென்று சித்தாந்த வெளிப் பாதையிலே நிற்கச் செய்தது. குள்ளச்சாமி வரும் போதே முழுமையாக வந்தார். அப்பூதி அடிகளுக்குத் திருமணத்திற்கு முன்பே வந்தெய்தியது. புதுவையிலே ஒரு மருத்துவருக்கு 58 வயதிலே வந்தெய்தியது. திருச்சியிலே ஒரு ஜீவனுக்கு 22 வயதிலே வந்தது. பாண்டியிலே இன்னொரு ஜீவனுக்கு 26 வயதில் வந்தது.

பரிசுத்த நிலை வந்தெய்தியதும் இறைவன் தூய்மையானவன் என்ற பேருண்மை வெளிப்படும். பரிபக்குவம் வந்தெய்தும், தனக்குள்ளே எல்லா இகச் சூழ்நிலை, உலகச் சூழ்நிலையிலிருந்து விலகிச் சாதனையில் வெற்றி பெறும் வல்லபம் வந்து சேரும். எனக்கு எதுவும் வேண்டா. புறநிலைக் கல்வி வேண்டா. ஞானம் தான் வேண்டும் என்ற கருத்தை வெளிப்படுத்துகின்ற சுத்த ஆத்ம ஞான அலை சக்திகள் உள்ளிருந்து வெளிப்பட்டு அறிவுக்குள்ளே நிறைந்து, நாதத்திற்குள்ளே சுத்த நாதமாகி, அது நாத சொரூபமாகச் சொற்கள் நிலையிலே வெளிவரும். பிறக்கும் போதே திருநிலை பெற்றது. பார்ப்பதெல்லாம்

சிவமயம், இருப்பதெல்லாம் கடவுளுக்குள், பேசுவதெல்லாம் அதைப் பற்றித் தான் என்ற நிலை ஷிரடி சாயி பாபாவுக்கு வந்தெய்தியது. கோரக்கருக்கும், போகருக்கும், மச்ச முனிக்கும், சட்டை முனிவருக்கும் எல்லாம் கடவுள் மயமே. இராமலிங்க சுவாமிகளுக்கு 8 வயதிலும் திருஞான சம்பந்தருக்கு 3 வயதிலும் இந்தத் திருநிலை என்று சொல்லுவதை விடக் கருவிலே கலந்து திரு உருவமாகி வெளி வந்து இந்த ஜெகத்தையே சிவமயமாய் உள்ளதை உள்ள படிக் காணும்படி நின்றது. படியில் நின்றது.

சில ஜீவன்களுக்கு பல கோடி ஜீவ யாத்திரைகள் உண்டு. சில பிறக்கின்ற பிறப்பிலிருந்து சிவ யாத்திரை மேற் கொள்கின்றது. சிவத்தில் சிவமாய் சிவானந்தத்தில் சிவமாய், சிவ வெளியில் சிவமாய், ஜெகமே சிவமாய், ஜெய ஜெய என்று போற்றி, பரம சந்தோஷத்தில் திவ்ய தேனானந்த நிலையில் அதுக்குள்ளே அது யாத்திரை செய்து கொண்டே இருக்கிறது. இதைச் சொற்களால் எழுத முடியாத நிலையில் இருப்பதால் இகத்தில் வந்த சொற்களை மாற்றி மாற்றிப் போட நேரிடுகிறது.

அதற்குப் பிறகு சுத்த அறிவு வரும். சுத்த உணர்வு வரும். அது தன் ஆத்ம தரிசனத்தையும், அண்டவெளியில் உள்ள அருட் சக்தியையும் காண வேண்டும் என்ற உயர் உணர்வு வந்து பேருணர்வு கொண்டு இருக்கும். அந்த உணர்வு அந்த ஜீவனை அழைத்துச் சென்று அந்த உணர்வு விரும்பிய அத்தனையையும் அந்த ஜீவனுக்குக் கைவல்யமாக்கும்.

அடுத்தபடியாக நிதானம் வரும். பரசாந்தம் வரும். அடக்கத்திற்கு மேல் அடக்கம் வரும். ஒடுக்கியதெல்லாம் ஓடி விடும். அடக்கியதெல்லாம் ஓடி விடும். அப்படிப்பட்ட நிலை வரும்போது புற அமைதியோடு புறத்தில் அசையா நிலை கொண்டு வெட்ட வெளியில் அமர்தல் வேண்டும். அமர அமர அமர்ந்து இப்படிப் பலகாலம் செல்லும். மனமும் அசையா நிலைக்கு வரும்.

வெட்ட வெளியில் அமர அமர, பல காலங்கள் மனித இயல்பிலிருந்து விலகி அமர்ந்து இருக்க இருக்க நாதம் - உலகியல் நாதம் அதாவது மாயா நாதம் விடுபட்டு அருள் நாதம் தோன்றும். அருள்

நாதம் வந்த பிறகு உலகப் பேச்சுகள் எல்லாம் நீங்கி விடும். மௌனம் ஏற்படும். நாத மௌனம் தோன்றும். நாத மௌனத்தில் இருக்க இருக்க நாத மௌனத்திற்குள் மகா நாதம் வெளிப்படும். புருவ மத்தியிலிருந்து அந்த மகா நாதம் வெளிப்படும். அந்த நாதம் வெளிப்பட வெளிப்பட எல்லாமே நமக்கு அறிவிக்கப்படும். அந்த மகா நாதத்திற்குச் சாந்தி தேவையில்லை. அந்த மகா நாதம் கேட்பவர்கள் அனைவரும் மகா சாந்தி அடைவார்கள்.

ஜீவ யாத்திரையில் மகா நாதம் கேட்பது வெட்ட வெளி என்ற மகாக் கோயிலில் அடிக்கப்படும் ஞான மணியாகும், ஞான ஒலியாகும். அந்தக் கண்டாமணி மகா நாத ரூபத்தில் ஏன் அங்கு அடிக்கப் படுகிறது தெரியுமா! வா, வா, வா! உனக்கு அன்பு அழைப்பு விடுக்கிறோம் வா!. அருள் நிறைந்த தங்கரதம் அனுப்பியுள்ளோம் ஏறி வா! அந்த ரதத்தை ஓட்டுபவன் நான். ஏறி வா! சொர்க்கத்தின் வாசலுக்குள் சொற்பதம் கடந்த துரிய நிலைக்கு அப்பால் மெய்ஞ்ஞான நிலையில் சிவபத நிலையில் சிவ வெளியில் வா! என்று அது அழைக்கும். இக அழுக்குகள் எல்லாம் நீங்கிப் பரிசுத்த மெய்ஞ்ஞான நிலை, பரிபூரணம் எய்தும் போது இந்த நிலை அல்லது இந்தப் படிக்கு ஜீவன் வருகிறது.

ஜீவ யாத்திரை உன் விதி மயமாய், நீ செய்த வினைகளே விதியாகி, அந்த வினையாற்றலே விதியாகி, அதுவே ஜீவ யாத்திரை யாகி, அந்த வினையின் பயன் சிவயாத்திரையாகித் தங்க ரதத்தை அழைத்து வரும் சொர்ண யாத்திரையாக நிறைவு பெறுகிறது.

*அங்கே எங்குப் பார்த்தாலும் "ஓம்" என்ற பிரம்ம நாதம் - மகா நாதம்* திவ்ய ஜோதியாக திவ்ய ஆனந்தமாக, திவ்யத் திருவருளாக எல்லாம் கடவுள் மயமாகும். திசைகளற்ற, வினைகள் அற்ற, வினைப் பயனற்ற, ஓம் ஸோகத்தில் ஒய்யார வாழ்வை உல்லாசம் கொண்டு நித்திய சொரூபத்தில் ஆனந்தமாய், அனந்த மயமாய் அனந்த சயனத்திலே அப்படி அப்படி அப்படியே.

**சந்தோஷம்**

# நீ இப்படிச் செய்

அறிவின் முதிர்வு வணங்குதல். உயர்ந்தோரை வணங்குதல். ஞானிகளை வணங்குதல். சற்குருவை வணங்குதல். ஜீவப் பிரகாசமுள்ள ஜீவனை வணங்குதல். அருளாளர்களை வணங்குதல். சித்தர்களை வணங்குதல். யோகிகளை வணங்குதல். நடமாடும் தெய்வங்களை வணங்குதல். பஞ்ச பூதங்களை வணங்குதல். வெட்டவெளியை வணங்குதல். தன் னையே வணங்குதல்.

எல்லாவற்றையும் நமஸ்கரித்தல். நமஸ்காரம் செய்தல். நமஸ்காரம் என்ற சொல்லுக்கு என்னுள் உள்ள எனக்கே சொந்தமான அனைத்தையும், என்னையும் முழுமையாக உன் திருவடிகளில் சமர்ப்பிக்கிறேன் என்று பொருள். ஒரே சமயத்தில் யாரை நமஸ்கரிக்க வேண்டுமென்று நினைக்கின்றோமோ அவருடைய திருவடியில் சிரசை வைத்து, சரணம் - சரணம்; என்னுள் உள்ள எல்லாம் தங்களுக்கே சொந்தமென்று மானசீகமாக நினைத்து அவருடைய இரண்டு திருவடிகளில் அந்தக் கமல பாதார விந்தங்களில் சிரசை 1/2 நிமிடம் வைக்க வேண்டும்.

*ஓம் ஸ்ரீ குருப்யோ நம :*
*ஓம் ஸ்ரீ மாத்ருப்யோ நம :*
*ஓம் ஸ்ரீ பித்ருப்யோ நம :*

என்று மானசீகமாக நினைந்து நமஸ்காரம் செய்ய வேண்டும். இதில் வெட்கப் படுவதற்கோ, கூச்சப்படுவதற்கோ ஒன்றுமேயில்லை.

ஒரு ஜீவன் சுத்த நிலை அடைந்து விட்டால் அந்த ஜீவன் அனைத்தையும் நமஸ்காரம் செய்வதற்குத் தயாராகி விட்டது என்று பொருள். முறையாக 1/4 நிமிடம் நின்று பஞ்சாங்க நமஸ்காரமோ, அஷ்டாங்க நமஸ்காரமோ அல்லது சாஷ்டாங்க நமஸ்காரமோ செய்ய வேண்டும். அப்போது அந்த நமஸ்காரத்தை ஏற்பவர்கள் முறையாக அந்த ஜீவனுக்கு வேண்டிய தக்க ஆசீர்வாதத்தை வழங்குவார்கள். அந்த ஆசீர்வாதம் பெற்ற பிறகு எழுந்து கை கூப்பி மீண்டும் ஒரு முறை வணங்க வேண்டும்.

இன்னும் முறையாகச் செம்மை படுத்தலாம். யாரை வணங்கு

கின்றோமோ அவர்களை ஒரு சுற்றோ அல்லது மூன்று சுற்றோ சுற்றி வந்து நமஸ்கரிக்க வேண்டும்.

ஒற்றைக் கையில் பாதத்தைத் தொடுவதோ, ஒரு விரலால் பாதத்தைத் தொடுவதோ, பயந்து - பயந்து வெளியிடுவதோ முறைகேடான நமஸ்காரமாகும்.

ஜீவ யாத்திரையில் பாவங்களை வெல்வதற்கும், ஜீவ யாத்திரையை விரைவு படுத்தவும், ஜீவ யாத்திரைக்கு இத்தகைய ஆசிர்வாதங்களிலிருந்து வந்த சக்திகள் மிகவும் இன்றியமை யாதன. இதை உணர்ந்தோர்கள் மிக விரைவில் உய்வார்கள்.

இவ்வாறு நமஸ்காரம் செய்வதற்கு யாரைக் கண்டும், எதைக் கண்டும், அஞ்சாது, விதியிலிருந்து விலகித் தூக்கி எறிந்து விட்டு இப்புனித சாதனையைச் செய்வது ஆத்ம சாதகர்களின் வீரத்தை வெளிப் படுத்தலாகும். இது அருள் நிறைந்த விவேகமான செயல்.

நமஸ்காரங்களில் அதாவது நமஸ்கார யோகத்தில் யார் ஒருவர் வெற்றி பெறுகிறாரோ? அவர்களுக்குத் தான் சற்குருவின் திருவடி தீட்சை கிடைக்கிறது. தீட்சைகளில் திருவடி தீட்சை அதி அற்புத சக்தி வாய்ந்ததாகும். திருவடி தீட்சையிலே சகல தரிசனமும் கிடைக்கும். திருவடி தீட்சையிலே மூலாதாரம், ஆக்ஞா, கபால வாசல்கள் திறக்கப்படும். திருவடி தீட்சையில் ஜோதி தரிசனம் கிடைக்கும். திருவடி தீட்சையிலே - உள்ளே அமுதப் பால் சுரக்கும். திருவடி தீட்சையிலே மனமும், ஐம்புலன்களும் ஒடுங்கிச் செயலற்றதாகி விடும். திருவடி தீட்சை பெற்றவர்களுக்கு அமங்கலம், அசுபம் என்ற எதுவும் அணுக்கூட இருக்காது. எல்லாம் பறந்தோடி விடும். திருவடி தீட்சை பெற்றவர்கள் நிஷ்காமிய உலகத்திற்கு அழைத்துச் செல்லப் படுவார்கள்.

அவர்களுக்கு எல்லாம் சுபம் - சுபம், மங்களம் - மங்களம், மகா சுபமாகச் சற்குருவின் திருவடிகளைச் சிரசில் சுமந்து செல்லுகின்ற மகா பரி பக்குவிகளும் அதனையே சாதனையாக வைத்து இருப்பவர்களும் மூன்று காலங்களிலும் உள்ளனர்.

ஜீவ யாத்திரை வெற்றிக்கு இது அத்தியாவசியமானதாகும்.

**சந்தோஷம்**

# அது நடந்தது

அன்று அது நடந்தது. அது நடக்குமென்று யாருக்குமே தெரியவில்லை. அது மனித யுகங்களுக்கு அப்பாற்பட்டது. இப்படி ஒன்று நடக்கும் என்று எனக்கும், எங்களுக்கும் தெரியாது. அது நடப்பதற்கு முன்பு அதற்கான முன் ஏற்பாடுகள் - அதற்கு முன் ஏற்பாடுகள்; அதற்கு முன்னால் உள்ள முன் ஏற்பாடுகள்; இப்படி ஒன்றன் பின் ஒன்றாகக் கடந்த காலத்தில் நடந்த தொடர் முன் ஏற்பாடுகள்; அது அன்று நடந்த பிறகு தான் எல்லாமே என் சிவஞானத் திரைக்கு வந்து சேர்ந்தது. யாரோ ஒரு பையன் எங்கிருந்தோ இன்டர் நெட்டில் எதையோ பார்த்து விட்டு அந்நிய நாட்டிலிருந்து இங்கு வந்து சுவாமிகளின் அன்புப் பார்வைக்குள், ஞானப் பெட்டகத்துள் தன்னையும் தன் விதியையும் சமர்ப்பித்து விட்டுச் சாந்தமாக இருந்தான். அவர் சுவாமிஜி அவனைத் தன் சொல்லுக்குள் புகுந்து கொண்டு சொல்லின் வினையைச் சொல்லிலே பணியாற்றிக் கொண்டு இருக்குமாறு செய்தார்.

பல ஆசிரமங்கள் சென்றார். அங்கெல்லாம் சாதனை செய்தார். பல சாதுக்கள், சந்நியாசிகளைத் தரிசித்தார். அவர்கள் ஆசியைப் பெற்றார். அம்மாவைத் தரிசித்தார். அவர் ஆசியும் பெற்றார். சற்குருவின் ஞானக் கோயிலிலே இருந்து கொண்டே எல்லோரையும் வெளியில் நிறுத்தி அவர்கள் ஆசியைப் பெற்றார்.

பிறகு 17.2.2001 இல் இரண்டு மணிக்குக் காசியில் உள்ள அரிச்சந்திராக் காட்டிற்கு (Ghat) வந்து அங்கு ஜீவனற்ற தேகத்தின் முன் அமர்ந்து வானாளாவிய தியானம் செய்து கொண்டிருந்தார். அந்த தியானத்தின் இரகசியத்தைச் சற்குரு அவருடைய சிரசில் வெளிப்படுத்தி - இருவருக்கும் ஒரு தியானத் தொடர்பை உருவாக்கினார். முதலில் அவருடைய தியான சக்தி புருவ மத்திக்கு வந்தது. பிறகு அவர் ஜீவன் புருவ மத்திக்கு வந்தது.

தேகம் ஆடவில்லை. தேகியும் ஆடவில்லை. மனம் அசைவற்று நின்று விட்டது. விதி செயல் இழந்து கிடந்தது. அவருடைய புனித ஜீவன் தியானம் செய்யத் தொடங்கியது. தியானத்தில் ஆழ்ந்தது. ஜீவன் பரத்தோடு தொடர்பு கொள்ள முனைந்தது. அத்தனையும் அவர் கர்ம-திரைக்கு வெளியே இருந்து செய்யப்பட்டது. எரிகின்ற தகன

எரிப்பைப் பார்த்துக் கொண்டிருந்தது. அதைத் தரிசித்தது. அவருடைய அந்தர் ஆத்மா எரிகின்ற தேகத்திற்குச் சொந்தமான ஜீவனிடம் சென்று, ஜீவன் (வெட்ட வெளியில் இருக்கின்ற ஜீவன்கள்) எரிகின்ற ஜீவன், தன் ஜீவன் மூன்றுக்கும் தொடர்பு ஏற்பட்டது. அந்த தேகத்தின் ஆற்றல் எல்லாம் வெளிப்பட்டு வெளியில் கிடந்தது. அவருடைய கர்ம பந்தம் கலைந்தது. மூன்று மணி நேரம் அதனருகே அமர்ந்திருந்தது.

அவர் ஜீவன் அங்கு எரிந்து கொண்டிருக்கும் பல ஜீவன்களோடு, தொடர்பு கொண்டிருந்தது. ஒரே சமயத்தில் எல்லா ஜீவன்களிடமும் தொடர்பு கொண்டிருந்தது. எரிவது எரிந்து கொண்டிருந்தது; எரிய வேண்டியது எரிந்து கொண்டிருந்தது; எதிர் காலத்தில் எரியப் போவது எரிந்து கொண்டிருந்தது; எரிவதற்கு ஒன்றுமே இல்லை என்ற நிலையில் எல்லாமே எரிந்து கொண்டிருந்தது.

எரிந்ததெல்லாம் எரிந்த பிறகு எரிய வேண்டியதெல்லாம் எரிந்த பிறகு, எதிர் காலத்தில் எரியப் போவதெல்லாம் இப்போதே எரிந்த பிறகு, எரிந்த கரிகளை அந்தத் தகன கூடத்தில் உலுக்கி விட்டுச் சுத்தமாய் அது வந்தது.

சற்குருவின் ஆடையைச் சிரசில் சுமந்து பேரமைதியோடு சொல்லொணா, விவரிக்க முடியா ஒன்றோடு ஒன்றித் தலையிலே சற்குருவின் ஆடை - அதன் மேலே கற்பூரம் - அப்படியே நேரே கங்கைக்குச் சென்றது. அதைக் கங்கையில் சமர்ப்பித்து விட்டு அப்படியே அது வந்தது. சற்குரு திருவடியைப் போற்றிச் சிரசில் சுமந்து வருவது ஞான மகா புண்ணியமாகும். அந்தச் சற்குரு வஸ்திரத்தில் ஞான ஜோதி - கற்பூர சொரூபத்தில் வெளிப்பட அதைக் கொண்டு சென்றது. கங்கையில் நீண்ட தூரம் சென்றது. அந்த ஜோதியை நீண்ட நேரம் எல்லோரும் பார்த்தார்கள். இப்படிப்பட்ட அருள் காட்சி இந்த நூற்றாண்டில் இதுவே முதல்; இதுவே கடைசியாகும். அது தான் இறைவன்.

யார் யாரோ அந்த நிலைக்கு வந்து - வந்து தடுமாறித் தடுமாறித் தவறிச் சென்றார்கள்.

ஒவ்வொரு ஜீவனும் யாத்திரை செய்கிறது. ஆனால் ஞான யாத்திரை செய்யும் ஜீவன்களின் ஒரு இரகசியத்தை அது தருகிறது.

**சந்தோஷம்**

# சுகம்

ஏழு சுகங்கள் உள்ளன. அவையெல்லாம் ஏறுமுகத்தில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு என்ற நிலையில் உள்ளன.

1. உருவ சுகம்
2. தேக சுகம்
3. மனோ சுகம்
4. வித்யா சுகம் (அறிவு சுகம்)
5. உலக அனுபவ சுகம்
6. மச்சு சுகம் (கபால சுகம்)
7. சிவ சுகம் (கடவுள் சுகம்) (வெட்டவெளி சுகம்)

எல்லாம் சுகத்தை நாடுகின்றன. சுகம் சந்தோஷத்திற்கு உடலாகும். சந்தோஷம் சுகத்திற்கு உயிராகும். சிவானந்தத்தைத் தரிசித்து சிவயோகத்தில் அமர்ந்திருக்கும் நிலையே சந்தோஷம். இதற்கு ஈடு இணை இகத்தில் இல்லை.

சுகம். சுகமாக இருக்கும். சுகத்திலிருந்து சோகம் வராது. ஜீவன் தன் யாத்திரையில் ஒவ்வொரு சுகத்தையும் முழுமையாக, முறையாகக் கொள்ளை கொள்ளையாய் அனுபவிக்க வேண்டும் என்ற அடர்த்தியான உணர்வு எல்லா ஜீவன்களுக்கும் உண்டு.

அகலாத ஆனந்தமயமான சுகம் எங்கு இருக்கிறது என்று அந்தந்தப் பிறவியில் அந்தந்தக் கூட்டிற்குள் இருந்து கொண்டு தேடித் தேடி, கண்டு கண்டு, ஆதியிலிருந்து அந்தம் வரை அனுபவித்து அல்லது கோட்டை விட்டு அல்லது ஏமாந்து போய் அல்லது வெற்றிகண்டு ஜீவ யாத்திரை செய்கிறது.

அது முதலில் கூடு (தேக) சுகத்தை விரும்புகிறது. அதுதான் அதற்கு உயர்ந்தாகத் தோன்றுகிறது. சொல்லப்பட்ட ஒவ்வொரு சுகமும் அனுபவிப்பதற்கு அல்லது அந்த சுகத்தை இனங்கண்டு கொள்வதற்கு தேகத்தில் ஒவ்வொரு வகையான அகக் கருவிகளும், புறக் கருவிகளும் அகப்புறக் கருவிகளும் உள்ளன.

உச்சி சுகத்தைத் தவிர மற்ற எல்லா சுகங்களும் காலத்தால், காலத்துள், காலத்தினால் மறைந்துவிடுகிறது. அல்லது கலைந்து விடுகிறது.

இந்த சுகம் நினைப்பு, மறப்புக்கு உட்பட்டது. அறிவு இந்த சுகத்தைத்தாண்டிப் பணியாற்றும்போது இந்த சுகம் வேண்டாம் என்று அறிவு புறக்கணிக்கிறது. அறிவு சொல்வதை மனமும், தேகமும் ஏற்றுக் கொள்கிறது. அல்லது இந்த சுகம் அனுபவிக்க வேண்டும் என்ற அவா இருக்கும் ஆனால் அனுபவிப்பதற்கான சக்தி தேகத்துக்குள் இராது.

நினைவு அல்லது எண்ணம் இந்த சுகத்தைப் பெற விழித்துக் கொண்டிருக்கும். ஆனால் தேகம் இடம் கொடுக்காது. சுகம், அனுபவ ஆற்றல் இரண்டும் அப்போது எண்ணும். நினைவும் ஏங்கி - ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கும்.

இதே சுகத்தைப் பெற அடுத்த பிறவி தொடரும். இந்த சுகத்தைப் பெற இயற்கை நெறிமுறைப்படியே அல்லது இயற்கை நியதிகள் இருந்து வழுவி வினையாற்றும். (தர்மம், அதர்மம்)

இந்த அறிவு, இனி இந்த சுகம் தேவையில்லை என்று அறிவித்த பிறகு தேகம், மனம், மற்ற கரணங்களும், கருவிகளும் ஏற்றுக் கொண்ட பிறகு அது அடுத்த சுகத்தை நாடும்.

நினைப்பும், மறப்பும் ஜீவன்களின் நிலைகளாகும்.

விருப்பும், வெறுப்பும் ஜீவன்களின் அடுத்த முக்கிய அம்சங்களாகும்.

நட்புறுதலும், பகைத்தலும் ஜீவன்களின் பெருங்குணங்களாகும். அழுவதும், சிரிப்பதும், ஜீவன்களின் வாழ்க்கைப் படிகளாகும். வெற்றியும் தோல்வியும் ஜீவன்களுக்கு மூச்சாகும். இன்பமும், துன்பமும் ஜீவன்களுக்கு உச்சிப் பகுதியாகும். வாழ்தலும், தாழ்தலும் ஜீவன்களுக்குப் பரிசுகளாகும்.

ஜீவ உலகத்தில்தான் நல்லவர், கெட்டவர், நல்லது, கெட்டது என்ற மாறுபாடுகள் உள்ளன. ஆனால் சத்திய உலகத்தில் அவைகள் இல்லை. எல்லாம் நல்லதே. எல்லாம் ஒன்றே.

ஜீவ தத்துவத்தில் ஏக ஆனந்தத்தில் பார்க்கும்போது எதுவுமே நல்லது இல்லை. எதுவுமே கெட்டது இல்லை. அவரவர்கள் ஆற்றும் வினைதான் அவரவர்களை நல்லவர்களாக, கெட்டவர்களாகக் காட்டுகிறது.

சூட்டிலும் சுகம் உள்ளது - சுருதியிலும் சுகம் உள்ளது
சுபத்திலும் சுகம் உள்ளது - சோகத்திலும் சுகம் உள்ளது
சொல்லிலும் சுகம் உள்ளது - மௌனத்திலும் சுகம் உள்ளது.
பகலிலும் சுகம் உள்ளது - இரவிலும் சுகம் உள்ளது
பாட்டிலும் சுகம் உள்ளது - ஏட்டிலும் சுகம் உள்ளது
பரத்திலும் சுகம் உள்ளது - இகத்திலும் சுகம் உள்ளது
சோகத்திலும் சுகம் உள்ளது - சுகத்திலும் சுகம் உள்ளது
என்னுள்ளும் சுகம் உள்ளது - இறைவனிலும் சுகம் உள்ளது

என் சுகத்தைக் காண்பதற்கு இறைவன் ஏங்கித் தவிக்கின்றான். அவன் சுகத்திற்காக நான் காத்திருக்கின்றேன்.

எங்கள் இரு சுகமும் மங்களமாகும் - அது சங்கமம்.

எங்கள் இரு சுகமும் ஏக சுகமான போது அந்த ஏக சுகம் யாருக்கு?!

சந்தோஷம்

உன் அறிவே உனக்கு எதிரியாக இருக்கிறது. அந்த அறிவு உனக்கு என்று நண்பனாக வருகிறதோ அன்றே நீ ஜீவ யாத்திரையில் வெற்றி பெற்றவனாவாய். உன் கால்கள், கைகள், கண்களெல்லாம் உனக்கு எதிரியாக இருக்கின்றன. உன் கால்கள் ஞானப் பாதையில் செல்லட்டும். உன் கண்கள் இறைவனைத் தரிசிக்கட்டும். உன் காதுகள் இறைவன் அருளைக் கேட்கத் தொடங்கட்டும்.

# காரண - காரியங்கள்

**கா**ரணம் தெரியவில்லை. காரியம் புரியவில்லை. காரணம் புரிந்தால் காரியம் தெரிந்து விடும். வாழ்க்கை என்பது காரணங்கள், காரியங்களின் தொகுப்பு தான்.

காரணம் காரியமாகிறது. காரியம் மறுபடியும் காரணமாகிறது. காரணம் காரியமாகிறது. அந்தக் காரியம் காரணமாகிறது. இந்தக் காரண, காரியங்கள் ஜீவ பிணைப்புகளுக்குமுண்டு. ஐம் பூதங்களுக்கும் உள் வினையுண்டு.

காரண, காரியம் அல்லது எல்லாமே காரணங்கள் - அந்தக் காரணம் எல்லாவற்றிற்கும் காரியமாக உள்ளது. சில சமயங்களில் காரணமென்று தருகிறது. காரியமென்று ஆற்றுகிறது. காரணமின்றிக் காரியமில்லை.காரியமின்றிக் காரணமில்லை.

இதுக்கு அப்பால் மகா காரணம் உள்ளது. ஆனால் இன்னொன்று காரணமுண்டு, காரியமில்லை. அது மீண்டும் தொடராது முற்றுப் புள்ளி வைக்கும். ஆனால் இன்னொன்று காரண, காரியம் இல்லாமல் காரியம் வினையாற்றும்.

காரண, காரியம் கடந்த நிலையும் உள்ளது. காரண, காரியம் இடைவிடாத தொடர் நிலைகளாகும். இகத்தில் காரண, காரியங்கள் முற்றுப் புள்ளி வைப்பது - ஜீவ யாத்திரையின் நிறைவு. காரண, காரியத்தைக் கண்டு உணர்ந்த பிறகு எல்லாம் அமைதி. எல்லாம் சந்தோஷம். எல்லாம் ஆனந்தம், எல்லாம் சுபம்.

காரண, காரியம் கண்டு கொள்வதும் ஜீவ யாத்திரையின் ஒரு முக்கியமான பணியாகும். ஜீவ விழிப்பு வந்த பிறகு தான் காரண, காரியம் தெரியும்.

காரண, காரியம் தெரியாத வரை துன்பம், வருத்தம், சோகம், பிரச்சனைகள். காரணமும், காரியமும் அற்று விட்டால் காலமுமில்லை. காலத்தைத் தாண்டி விடலாம். காரண, காரியம் கண்ட பிறகு அமைதி, சாந்தம்.

**சந்தோஷம்**

# விதி

ஜீவன் எந்த உருவத்தை வேண்டும் என்றாலும் எடுக்கலாம் அல்லது பெறலாம். எந்த உருவத்திலிருந்தும் ஆத்ம சாதனை புரியலாம். எந்த உருவத்திலிருந்தும் தவம் இருக்கலாம். நிஷ்காமிய நிலையில் ஆத்ம சாதனை புரியலாம். அந்தந்த உருவத்திலே முக்தி அடையலாம். ஆனந்தமாகலாம்.

விதி என்பது இறைவன் படைத்த ஒன்று. அது மகா தர்மப் பிரபுவாகும். அந்தந்த ஜீவனின் வினைக்கேற்றவாறு இயல்பாக விதி - மனித நிலையைத் தருகிறது. மாமனித நிலைக்கு அழைத்துச் செல்கிறது. பிறகு உத்தமன் என்ற படியில் ஏற்றி வைக்கிறது. நிர்குண நிலைக்கு வந்து சேர்கிறது. மனிதன் உள்ளே இருந்து ஜீவனைத் தெய்வமாக்கிறது. பிறகு, அதுவே பிரம்ம நிலை அடைகிறது. பரப்பிரம்ம ஐக்கிய நிலை வந்து பரப் பிரம்மாகிறது.

விதியை எதிர்க்கக் கூடாது. வெறுக்க வேண்டிய தேவையும் இல்லை. விதி உனக்கு நண்பர். அது உன்னை கடவுளிடம் அழைத்துச் செல்லும், பெரும் துணையாகும். உன்னைக் கைப் பிடித்து அழைத்துச் செல்கிறது. ஆகவே அதை வெறுக்காதே. உன்னை மதி. விதியை மதிப்பாய். விதியை வணங்கு. அது யாரையும் அழிப்பதில்லை.

அதன் நோக்கமும் அது அன்று. விதியை வாழ்த்து. விதி என்ற ஒன்று இல்லையானால் உனக்கு ஜீவ விமோசனம் கிடையாது. இறைவனை என்றும் அடைய மாட்டாய். தன் உருவத்தின் இரகசியம் மனிதனுக்குத் தெரிவதில்லை. அது அருவத்தைக் காட்டிலும் அற்புதமான பணியை ஆற்றுகிறது.

உருவமும், அருவமும் கணவன் - மனைவி. உருவத்தை வெறுக்க முடியாது. உருவம் இல்லையென்றால் மனிதனுக்கு உன்னைத் தெரியாது. உன்னை மனிதனுக்குத் தெரியாது. உலகம் புரியாது.

உருவத்திற்கும் அருவம் இருக்கும். அருவமே உருவத்திற்கு உருவமாய் இருப்பதும் உண்டு. தங்கத்திற்குள் தங்கம். ஒளிக்குள் ஒளி. நாதத்திற்குள் நாதம். உனக்குள் நீ. அந்த உனக்குள் கடவுள். உருவம் சிவத்தால் படைக்கப்படுகிறது. சக்தியால் இயக்கப்படுகிறது.

**சந்தோஷம்**

# சேவை

சேவை என்ற சொல் உயர்ந்தவைகளுக்கெல்லாம் உயர்ந்தவையாகும். கடவுளுடைய பெருங்கருணை இங்கு வெளிப்படுகிறது. கடவுளைக் காட்டிலும் கனிவான பெருங்கருணையாளர் யாருமில்லை. கடவுளைக் காட்டிலும் சோதனை தருபவரும் யாருமில்லை. அந்தக் கடவுளின் பெருங்கருணையில் வெளி வந்த ஒன்றுதான் சேவை.

ஜெகத் சேவை, பூத சேவை, ஜீவ சேவை, ஞான சேவை, மகேஸ்வர சேவை, சற்குரு சேவை, இவ்வாறு சேவைகளை வகைப்படுத்தலாம். ஆனால், இதுதான் முடிந்த முடிவானதென்று முற்றுப் புள்ளி இட இயலாது. சேவையிலே சிறந்த சேவை "சற்குரு சேவை". எல்லோருக்கும் எல்லா சேவையும் செய்து விட முடியும். ஆனால், சற்குரு சேவை எல்லோருக்கும் கிடைப்பதில்லை. அந்த வாய்ப்பு இறைவன் திருவருளும், ஆசியும் - அவனுடைய திருவருள் பாங்கு எந்த ஜீவன்மீது ஒன்றுகிறதோ அந்த ஜீவனுக்கே மகாசிவ சற்குரு சேவை வாய்ப்பு கிட்டுகிறது.

அந்தச் சேவையின் மையப் புள்ளியின் வெளிப்பாடு என்னவென்றால் சற்குருவுக்குச் சேவை செய்த ஜீவனுக்குப் பிறவிகள் அனைத்தும் விலக்கப்படுகிறது. திருதரிசனம், திருக்காட்சி, திருவருள், முக்தி, கடவுள் ஐக்கியம் நிச்சயம் சேவை செய்யத் தொடங்கும் முன்பே அந்த ஜீவனுக்கும் வழங்கப்பட்டு விடுகிறது.

மீண்டும் ஒருமுறை வலியுறுத்துவது என்னவென்றால் சற்குருவுக்குச் சேவை செய்யும் திருவருள் வாய்ப்பு கடவுளின் திருஉள்ளப்படி கிடைக்கிறது. அதுவும் யாருக்கோ ஒருவருக்குக் கிடைக்கிறது. யோக நூல்களோ, சாதனை நூல்களோ, தத்துவங்களோ, மூச்சுப் பேச்சோ, நாதப் பேச்சோ, விரதங்களோ, யாத்திரைகளோ எதுவுமே வேண்டியதற்றதாகி விடுகிறது.

சற்குரு இறைவனோடு ஐக்கியமடைந்தவர். நடமாடும் கடவுள். அந்தக் கடவுளைத் தொடுவதற்கு அந்தக் கடவுளின் திருவருள் ஸ்பரிசத்தில் கலந்தாலோ, சற்குருவின் உணர்வில் ஐக்கியப்பட்டாலோ, சற்குருவின் முன்பு அவர் சந்நிதானத்தில் இருந்து சான்னித்யம்

அடைந்தாலோ, விகல்பங்களற்ற - விதேக நிலை பெறுதல் - நிலை கிடைக்கும். கடவுளே அதைத் தருகிறது.

கடவுள் சேவையில் முழுமையானதும் சற்குரு சேவை கிடைக்கிறது. அந்தச் சேவையை கைலாய சேவையென்று சொல்லலாம். கைலாயம் அடைவதற்கு இதைவிட நுணுக்கமான சித்ரூபமான செயல் சொற்பதம் கடந்தது.

'பரவெளி சேவை' இதுவேயாகும்.

சந்தோஷத்தோடு பிரம்மானந்தத்தில் திளைத்துக் கொண்டே பிரம்ம சொரூபமாய்ப் பிண்ட வெளியிலிருந்து விடுபட்டு அண்ட பிரம்மாண்டமான மகா வெட்ட வெளியில் கண்டு கொண்டே சேவை செய்தல் - சற்குரு சேவையாகும்.

சான்றாக, ஆதிசங்கரருக்கு பத்மபாதர் ஆற்றிய சேவையைச் சொல்லுக்குள் அடக்க இயலாது. அருட்பிரகாச வள்ளல் இராமலிங்க சுவாமி மீது கல்பட்டு ஐயாவிற்கு இருந்த எல்லையில்லாப் பேருணர்வும், அன்பும் - இங்கிருந்து கைலாயம் வரை பரவியிருந்தது. சற்குரு சேவைக்கு - சற்குரு, யாரையும் நெருங்க விடமாட்டார். கடவுளின் வல்லமைகள் பெற்ற அவர் தனக்குத் தானே சேவை செய்து கொள்ளும் பேராற்றல் பெற்றவர். தனக்குத்தானே பேராற்றல் பெற்ற சற்குரு இன்னொருவரை ஏன் தேடப் போகிறார்?

மேலும், சற்குருவின் தேகம் கடவுளின் திருவருள் தரிசனம் பெற்ற தேகம்; கடவுளின் ஸ்பரிசமடங்கிய தேகம்; அவருள்ளிருந்து கடவுள் பேசுகிறார்; அவரே அருளாளராக ஞானமாக உள்ளார். ஆதி அந்தமாகவும், அதைக் கடந்தவராகவும், பேரானந்தப் பேரின்பமாய் அவரே இருக்கிறார். இந்த நிலையில் அவருக்குச் சேவை செய்ய இன்னொருத்தரா? இல்லை - இல்லை.

ஜீவன் முன்னேற - கடைத்தேற கடவுளைக் கண்டு பேரானந்தமாய், பேரின்பம் பெறுவதற்குப் படைக்கப்பட்ட கோடானு கோடி ஜீவன்களில் ஏதோ ஒன்று இரண்டிற்குச் சற்குரு சேவை செய்ய வாய்ப்பு கிடைக்கிறது. அவைகள் கடைத்தேறுவதற்காக.

## சந்தோஷம்

# சாதனை

மனிதன் எதையோ சாதிக்க வேண்டும் என்று துடியாய்த் துடிக்கின்றான். அதுவும் இந்தத் துடிதுடிப்பில் கோடானு கோடி இளைஞர்கள் பங்கேற்கிறார்கள். இயற்கை சாதிக்காததை, இறைவன் சாதிக்காததை இவன் என்ன சாதிக்கப் போகின்றான். அவன் தேகத்தில் வேகமாக வளர்ந்து வரும் வீரிய சக்தி அவனைத் தூங்க விடாது. எதையாவது செய் என்று தூண்டிக் கொண்டே இருக்கிறது. இது தான் ஆறாவது அறிவின் குணமாகும். மீதியிருக்கும் ஐந்து அறிவுகளான மிருகங்களும், மற்றவைகளும் எதையாவது சாதிக்க வேண்டும் என்று துடிப்பதுமில்லை. அதனால் துயருறுவதுமில்லை.

மனிதன் - அறிவு வளர்ச்சி, ஆற்றல், தெளிவு, தீரம், நுண்ணிய பேருணர்வு, சித் வெளியின் இரகசியங்கள் எல்லாவற்றையும் அறிய முற்படுகின்றான். யாரோ ஒருவர் அறிகிறார்.

மனிதன் எதையாவது சாதிக்க விரும்புகின்றான். அவனின் விருப்பம், பேரார்வம், அறிவின் ஆற்றல் ஆகியவை கொண்டு சாதிக்கின்றான். சாதிக்கின்றான். மனிதனால் எல்லாவற்றையும் சாதிக்க முடியும். அவனால் சந்தோஷமாக வாழவும் இயலும், சந்தோஷமாக வீழவும் இயலும். அவனால் எல்லாமே இயலும்.

இன்றைய உலகம் துன்பத்திற்கு வருவதற்குக் காரணம் - மனிதனின் சாதனையே தான். இன்றைய மனிதன் உலகிற்குத் துன்பத்தைக் கொண்டு வரும் சாதனையே சாதிக்கின்றான். நாளைய மனிதன் இவ்வுலகிற்கு இன்பத்தைக் கொண்டு வருவானா?

சாதனை - அணுகுண்டு படைத்தல், விண்வெளி, கப்பல், கணிப்பொறி படைத்தல், மனிதனைக் கதி கலங்க வைக்கும் ஆயுதம் படைத்தல். மனிதன் சாதித்த சாதனைக்கு அளவேயில்லை.

மனிதனால் சாதிக்க முடியும். எதையும் சாதிக்க முடியும். எல்லாம் - சாதிக்க முடியும். அவனால் முடியாதது எதுவுமேயில்லை. கடவுளையே கட்டி இழுத்துக் கொண்டு வந்து விடுவான். காலத்தைச் சண்டையிட்டு அதைக் கொன்று விடும் ஆற்றல் கூட மனிதனுக்கு உண்டு.

மனிதனால் எல்லாம் முடியும் என்பது வெறும் பொய். அது பொய் மட்டுமன்று. அவனை அறியாது அவன் பிதற்றுகின்றான். அறியாத்தனம். மனிதனால் எதுவுமே முடியாது என்கிற நிலையும் உண்டு. ஒரு அகண்ட பெரிய சிறைக்குள் ஆயிரமாயிரம் சிறைகளைப் பூட்டிக் கொண்டு அதைத் திறக்க முடியாமல் இருக்கின்ற நிலையும் மனிதனுக்குண்டு.

மனிதனை ஒரு நிலையிலிருந்து பார்த்தால் பாக்கியசாலி என்று தோன்றுகிறது. இன்னொரு நிலையிலிருந்து பார்த்தால் அவனைக் காட்டிலும் பெரிய முட்டாள் யாரும் இருக்க இயலாது. இன்னும் அழகாக, ஆழமாகச் சொல்லப் போனால் மனிதனைப் பார்த்து மிருகங்கள் கை கொட்டிச் சிரிக்கின்றன. குரங்குகள் கூட அவனைத் தமாஷ் செய்கின்றன. சர்ப்பம் - மனிதனைக் கண்டு சவால் விடுகிறது. - ஏய்! மனிதனே உன்னை ஒரு நொடியில் கொன்று விடுவேன். அல்லது இல்லாமல் ஆக்கி விடுவேன் என்று கம்பீரமாகப் பேசுகிறது. புலி பேசுகிறது - ஏய் மனிதனே! என்னிடம் உன் ஆற்றல் செல்லாது. யானை பேசுகிறது - நான் நினைத்தால் ஒரு நொடியில் உன்னை என் காலால் மிதித்து விடுவேன். நட்டுவாக்கிளி சொல்லுகிறது - ஏய் மனிதனே! என் விஷத்தினால் உன் தேகத்தைக் கட்டுக் கட்டி உன்னை உடைத்து விடுவேன். ஒரு கொசு சொல்லுகிறது - ஏய் மனிதனே! உன் மூக்குள் நான் நுழைந்து விட்டால் நீ என்ன பாடுபடுகிறாய் என்று எனக்குத் தெரியும். ஒரு எறும்பு பேசுகிறது - ஏய் மனிதனே! நான் உன் காதுக்குள் சென்று விட்டால் அய்யோ - பாவம் துடியாய்த் துடிக்கின்றாய்.

அதுதான் அப்படி என்றால், அவன் மூக்கில் ஓடும் காற்று சொல்லுகின்றது - ஏய் மனிதனே! உன்னால் என்னை மிரட்ட முடியாது. நான் நினைத்தால் உன் உடம்பிலிருந்தே ஓடி விடுவேன். அவன் உடம்பில் உள்ள வெப்பம் சொல்லுகிறது - தம்பி! உன் வாலாட்டம் என்னிடம் செல்லாது. நான் நினைத்தால் உன் தேகத்திலிருந்து வெளியே வந்து உன்னைச் சுட்டெரித்து விடுவேன். மறுக்க முடியுமா? மனிதனால் எதிர்க்க முடியுமா? மனிதனே காற்றிடமும், வெப்பத்திடமும் நேருக்கு நேர் சண்டையிட்டு வெற்றி பெற முடியுமா?

*ஏ மனிதனே! உன்னிடம் 6 அறிவு உள்ளது.*
*ஆனால் உன்னை ஓரறிவு மிரட்டுகிறது.*

*ஈரறிவு உன்னிடம் சவால் விட்டு வெற்றி பெறுகிறது.*
*மூன்றறிவு உன் உயிரை வாங்கத் தயாராக உள்ளது.*
*நாலறிவு உன்னை வீழ்த்தத் திட்டமிட்டுள்ளது.*
*ஐந்தறிவு உனக்கு மரணத்தைக் கொடுக்கவல்லது.*

ஐந்து அறிவும் - உனக்கு மரணத்தையும், பெரும் துன்பத்தையும் கொடுக்கக் காத்துக் கொண்டு இருக்கின்றது. ஐந்தறிவிடம் தோற்கும் நீ எதைச் சாதிக்கப் போகின்றாய். ஐம்பூதங்கள் - காற்று, நீர், நெருப்பு, பூமி, ஆகாயம் அனைத்தும் உன்னுள் உள்ளன. இவைகளிடம் நீ முறைத்துக் கொண்டால் அவற்றில் ஏதாவது ஒன்று உன்னிடமிருந்து விலகி விட்டால் நீ மண்ணுக்குச் சென்று விடுவாய் அல்லது நெருப்புக்குள் சென்று விடுவாய். ஆகவே, ஐந்தறிவுகளும் உன்னை மிரட்டுகின்றன.

பஞ்ச பூதங்கள் எல்லாம் எந்த நொடியிலும் வெற்றிகரமாக உன்னை வீழ்த்தத் தயாராக உள்ளன. அவைகளை ஜெயிக்க உன்னால் முடியாது. நீ பேசும் சப்தம் இருக்கின்றதே அது உனக்குத் துரோகம் செய்து விடும். ஏனென்றால், அந்தச் சப்தத்தின் சக்தியைப் பாவச் செயலுக்கு அல்லது தீய செயலுக்குப் பயன்படுத்திக் கொண்டு வருகின்றாய். சப்த பிரம்மம் - சப்தத்திலிருந்து வரும் சக்தியின் விளைவு உன்னை நிசப்தம் ஆக்கி விடும். நிரந்தரமான நிசப்தமாக்கி விடும்.

இந்தச் சூழ்நிலையில் நீ எதைச் சாதிக்கப் போகின்றாய்? இதுவரை நீ சாதித்தது என்ன? நோய்களுக்கு அடிமையானாய். நோய்களை அடிமைப்படுத்த உன்னால் முடிந்ததா? நோய் விடுபடும் சாதனையைச் சாதித்து இருக்கின்றாயா? மரண உபாதைகளிலிருந்து விடுபடும் சாதனையைச் சாதித்து இருக்கின்றாயா? உனக்கு எதிராகச் செயல்படும் உன் மனைவியின் செயலுக்கு எதிராக எதையாவது சாதித்திருக்கின்றாயா?

பெண் புத்தியிலிருந்து விடுபட நீ வல்லமை பெற்று இருக்கின்றாயா? அல்லது சாதித்து இருக்கின்றாயா? ஆண் புத்தியிலிருந்து விடுபட நீ வல்லமை பெற்றிருக்கின்றாயா? அல்லது சாதித்திருக்கின்றாயா? ஆணும், பெண்ணும் ஆடும் நாடகத்திலிருந்து விடுபட்டு இருக்கின்றாயா? அல்லது அதைச் சாதித்திருக்கின்றாயா?

ஆனால் சாதிக்க முடியாது என்று பல நிலைகள் உள்ளன. பெண்ணால் சாதிக்க முடியாத நிலைகள் உள்ளன. ஆணால் சாதிக்க முடியாத நிலைகள் உள்ளன. இந்த இருவரும் சாதிக்க இயலாததை ஒரு துறவி சாதித்து விடுவான். ஒரு துறவியால் சாதிக்க முடியாது என்று சில உள்ளன.

நீ கோடி கோடியாய்ப் பணத்தைச் சம்பாதிக்கலாம். ஆனால் கோடி கோடி உயிர்களைக் காக்கும் வல்லமையை உன்னால் சாதிக்க இயலாது.

ஏ மனிதனே! சாதிக்க வேண்டும் என்று துடியாய்த் துடித்தாயே! எங்கேயோ பிறந்த நீ எங்கேயோ மரணத்தின் பள்ளத்தில் விழப் போகிறாய். அந்த இடமாவது உனக்குத் தெரியுமா?

சலனமில்லாத நிலை சாதனையின் முதல்படி.

சபலமில்லாத நிலை சாதனையின் இரண்டாவது படி.

சஞ்சலமில்லாத நிலை சாதனையின் மூன்றாவது படி.

சகுண பிரம்மம் கடந்த நிலை சாதனையின் நான்காவது படி.

நிஷ்காமியப் பணி சாதனையின் ஐந்தாவது படி.

நிராமயம் சாதனையின் ஆறாவது படி.

நிர்விகல்ப நிலை சாதனையின் ஏழாவது படி.

நித்தியம் அநித்தியம் விலகி இருத்தல் சாதனையின் எட்டாவது படி.

கடவுள் சுகத்தைக் கவ்விப் பிடித்தல் சாதனையின் ஒன்பதாவது படி.

கடவுளாகி நிற்றல் சாதனையின் பத்தாவது படி.

*அன்புள் உருகி அழுவன் அரற்றுவன் என்பும் உருகி*
*இராப்பகல் ஏத்துவன் என் பொன் மணியை இறைவனை*
*ஈசனை தின்பன் கடிப்பன் திருத்துவன் தானே - திருமூலர்.*

**சந்தோஷம்**

# அதது... அப்படி அப்படியே

1. நீங்கள் எப்போதும் சத்திய வினையை ஆற்றிக் கொண்டிருங்கள்.

2. உலகில் உள்ள ஒவ்வொன்றும் அதனதன் வினையை ஆற்றிக் கொண்டிருக்கிறது. அந்த வினைகளின் செயல்பாட்டைக் கண்டு குறை கூறுதலோ, மனம் வருத்தப் படுதலோ, திட்டுதலோ அறவே கூடாது.

3. இறைவனால் படைக்கப்பட்ட அனைத்தும் அதனதன் வினையை அந்தந்தக் காலத்தில் அப்போதைக்கு - அப்போது காரியமாக்கிக் கொண்டிருக்கிறது. ஆகவே, உன் வினையை நீ ஆற்று.

அதோ பார் தென்னை மரம் அழகாக வளர்ந்து, தேங்காய்கள் தருகிறது. அடுத்து பார் மாமரம் அழகாக வளர்ந்து மாங்காய்களும், கனிகளும் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

அதோ பார் எருக்கஞ்செடி பூத்துக் கொண்டிருக்கிறது. அதனதன் வினையை அது-அது ஆற்றிக் கொண்டிருக்கிறது. அதோ பார் கருவேல மரங்கள். அது தங்கள் வினையை ஆற்றிக் கொண்டிருக்கிறது. இதோ காற்று வீசிக் கொண்டிருக்கிறது.

உன்னுள்ளே பார். உயிர் அக்னி அல்லது உயிர் வெப்பம் அணையாது, இடைவிடாது இருந்து கொண்டிருக்கிறது. அது உன்னை விட்டுப் போய் விட்டால், உன்னைக் கிடத்திவிடும். சுடுகாட்டில் படுக்க வைக்கப்படும்.

உன் உடலில் 3/4 பகுதி ஜலம். அது உன்னிடம் கோபித்துக் கொண்டு வெளியேறி விட்டால் - நீ ஜடம்.

அதோ பார். உன்னை பூமி தாங்கிக் கொண்டிருக்கிறது. அது உன்னை வெறுத்துத் தள்ளி விடலாம். ஆனால் தள்ளவில்லை. மேலே பார் ஆகாயம். அது சர்வ வல்லமையும் கொண்டது. உன்னை அது தான் படைத்தது. உன்னை அது தான் அனுப்பியது. உன்னை அது தான் சுடுகாட்டிற்கு அனுப்பப் போகிறது. உன்னை அது தான் அழைத்துச் செல்லப் போகிறது.

இவ்வாறு கடவுள் படைத்த ஒவ்வொன்றையும் பார். இதை நீ ஆழமாக அழகாக உணர வேண்டும். இடைவிடாது சிந்திக்க வேண்டும். சிந்தனைகளில் வரும் மலர்களின் வாசனையையும், தேனையும் பார்.

கடவுளை வணங்கக் கோயிலுக்குச் செல்கிறாய். கோயிலின் பிரகாரத்தில் சற்று அமருகிறாய். அங்கு ஒரு பீடித் துண்டு கிடக்கிறது. அதை நீ பார்க்கிறாய். இப்படிப்பட்ட தீய வினைகளை மக்கள் செய்கிறார்கள். இப்படிச் செய்யலாமா? என்று நீ வேதனைப் படுகிறாய். அதனால் கோயிலுக்கு வராமல் இருக்கிறாய்.

அந்த பீடித் துண்டு உன்னைப் பார்த்துச் சிரிக்கிறது. "என்னைக் கண்டு மிரளுகிறாய். என்னைக் கண்டு வேதனைப் படுகிறாய்? நான் இருப்பதால் இவ்வாலயத்திற்கு வரக் கூடாதென்று முடிவு செய்கிறாய்."

"உன் வாழ்வை உயாத்திக் கொள்ள இறை இன்பத்தை, சுகத்தைப் பெற கோயிலுக்கு வந்த நீ, இறைவனை வணங்காது என்னைப் பார்த்ததும், நீ வந்த நோக்கத்தை விட்டு விட்டு என்னிடம் சரண் அடைந்து விட்டாயே. நன்றாகச் சிந்தித்துப் பார். உன் நெஞ்சுக்குள் என்னைப் பற்றிய உறவும் உண்டு. பாசமும் உண்டு. உண்மையில் என்னை, நீ வெறுத்தாயானால் என்னை ஏறெடுத்துப் பார்க்காதே. கோயிலுக்குச் சென்று கடவுளை வழிபடு."

யார் நீ? நீ யார்? என்றது பீடித் துண்டு.

எருக்கஞ் செடி, தென்னை மரத்தைப் பார்த்து அது அவ்வளவு காய் காய்க்கிறதே, அது தென்னை மரமாய் இருக்கிறதே என்று பொறாமைப் படுவதில்லை. கருவேல மரம் மாமரத்தைப் பார்த்து எல்லா மக்களும் அங்குக் கூடுகிறார்கள். அது மாம்பழம் கொடுக்கிறதே நாமும் மாமரம் ஆகக் கூடாதா என்று கருவேல மரம் அழுவதில்லை, துடி - துடிப்பதில்லை. இவைகளிடம் பொய்யுமில்லை, பொறாமையும் இல்லை.

முறையாக யாத்திரை செய்து கொண்டிருக்கும் ஜீவன்கள் மனித நிலைக்கு வந்ததும் தடுமாற்றம், தடைகள், மயக்கங்கள் வருகின்றன. இன்னும் என்ன-என்னவோ வருகின்றன. இங்குதான் அவனுடைய யாத்திரை நீண்டு- நீண்டு ஓடிக் கொண்டிருக்கிறது.

## சந்தோஷம்

# ஜீவனின் உண்மை

எவ்வளவு சாப்பிட்டாலும், எவ்வளவு சுகத்தை அனுபவித்தாலும், எவ்வளவு ஆசையை நிறைவேற்றினாலும், எவ்வளவு இன்பம் வந்தாலும் - மனம் நிறைவதில்லை. மனம் திருப்தி அடைவதில்லை.

அறிவு விளக்கம் கொடுத்தாலும், மனம் ஏற்பதில்லை. இவை ஜீவர்களுடைய இயல்பான குணங்களாகும். இந்த குணத்திலிருந்து விடுபடுதல், ஜீவ யாத்திரை பயணம் மேலும் உயர்ந்து செல்லுதல் என்ற பொருளாகும்.

சித்தத்தைச் சிவன்பால் ஒடுக்கினால், சப்தத்தைச் சங்க நாதமாக்கினால், திருச்சிற்றம்பலத்தை உணர்வுக்குள் கொண்டு வந்தால், ஜீவ குணங்களிலிருந்து விலக வாய்ப்பு உண்டு.

மனிதன் சுத்த அறிவால் திருந்தலாம்.

சற்குருவின் ஆசியால் திருந்தலாம்.

பெரும்துன்பத்தால் திருந்தலாம்.

எல்லையற்ற விரக்தியில் திருந்தலாம்.

உணர்ந்து உணர்ந்து உணர்வினால் திருந்தலாம்.

நல்லவர்களின் பார்வையினால் திருந்தலாம். கேட்டுத் திருந்தலாம். மனம் ஒடுங்கினால் திருந்தலாம். அன்னமய கோசமும், பிராணமயகோசமும் குறைந்தால் திருந்தலாம். தினமும் ஒரு மணி நேரம் வெட்டவெளியில் தேகத்தைக் கிடத்தினால் திருந்தலாம். ஞானிகளின் மத்தியில் இருந்தால் திருந்தலாம். சற்குருவின் பார்வையால் திருந்தலாம். கனவிலும் திருந்தலாம். நினைவிலும் திருந்தலாம். திருத்தப்பட வேண்டியவர்கள் மட்டும் திருந்த வேண்டும். திருத்தப்பட வேண்டாதவர்களை திருத்த வேண்டிய அவசியமில்லை.

இருள் ஒளியை திருத்தாது. ஒளிதான் இருளை நீக்கும்.

அறியாமை அறிவைத் திருத்தாது. அறிவுதான் அறியாமையை நீக்க வேண்டும்.

மற்றவர்கள் குறையைக் கண்டு கண்டிப்பதை விட்டுவிட்டு, அந்தக் குணத்தை நீக்குபவர்கள் ஜீவ யாத்திரையில் முன்னேறுவார்கள்.

### சந்தோஷம்

# இந்த உலகம்துன்பமயமானதா?! இன்பமயமானதா?!

இந்த உலகம் சிரிக்கிறதா?! அழுகிறதா?!

என்றும் இந்த உலகம் இப்படித்தானா? இந்நிலைக்கு நேர்மாறான தலைகீழான மாற்றம் உண்டா? கடந்த கால இதிகாசங்களும், புராணங்களும், ஜீவர்களின் ஏறுமுக யாத்திரைக்கு நம்பிக்கை ஊட்டும் நட்சத்திரமா? அல்லது இருள் தரும் அரக்கரா?

ஓட்டமும், நடையும்தான் வாழ்வா? ஆயிரம் பிறவி கண்டவர்கள் - இந்த உலகில் ஒன்றுமேயில்லை எல்லாம் பொய் என்று தங்கள் அனுபவத்தால் உணர்ந்து, நூறு முழு நிலவுகள் புருவ மத்தியில் கண்டு, இந்த உலகம் மெய், கடவுள் மெய், எல்லாம் - ஆனந்தம், எல்லாம் - ஆனந்தம், எல்லாம் சந்தோஷம் என்று இருக்கின்ற அவர்களை வருத்தினால் அல்லது அவர்கள் வருத்தப்பட்டால் மண்ணுலகமே மாற்றப்படும்.

ஜீவன்களின் அழுகை, சிரிப்பு நிலையானது அல்ல. அது மாயை. இவர்களின் கண்ணீரையும் அழுகையையும் மாற்ற வேண்டிய அவசியமில்லை என்பது குறிப்பிட்ட சித்தாந்தப் பிரிவு மக்கள் அல்லது ஆத்ம ஞானிகள் அருள் உரையாகச் சொல்கிறார்கள். இது தீர்க்கதரிசனம் கூட. ஏனென்றால் பிண்ட வெளியிலிருந்து விலகி, மனிதன் புருவ மத்திக்கு வந்து சகஸ்ரார நிலைக்கு வந்தால் அண்டவெளியில் அந்த ஜீவனைத் தரிசிப்பான்.

**சந்தோஷம்**

*விதி வலிது. கடவுள் பெரியவர்*
*சற்குரு கருணை காட்டினாலும்*
*விதி தடுத்து விடும்*
*கடவுள் விதிக்குக் கண்ஜாடை*
*காட்டி விடுவார்.*

# கண்ட உண்மை

இதுதான் வாழ்வு, இதுதான் சுகம், இதுவே போதும். இதுதான் வேண்டும்.

பிறகு அடுத்த நிலையில்,

வேறு சுகம் வந்ததும். இதுதான் வாழ்வு. இதுதான் சுகம். முன்னையது வேண்டா. இதுதான் வேண்டும்.

காலம் செல்லச் செல்ல அடுத்த சுகத்தைக் கண்டதும் முன்னையது வேண்டவே வேண்டாம். இதுதான் எப்போதும் வேண்டும்.

அறிவு வளர, வளர ஒளி பொருந்திய அறிவு வந்தபிறகு, உலகில் பெரும் சுகத்தை அறிவால் கண்டபிறகு நாம் தேடிய சுகம். இதுதான். இதுதான். திருப்தியுடன்.

இந்த சுகம் சொர்க்கம். இதற்கு மேல் இன்னொன்று வேண்டா. இந்த சுகத்தை உரிமையாக்கிக் கொள்ள வேண்டும்.

மனதில் ஒளி வந்ததும், தன் உறவு சுகம், இன்புறுதல், மயங்குதல், மதிமயங்கி இன்புற்று சுகத்தை இருளில் அனுபவித்தல்.

ஞானிகளின் ஆசிகள் வந்தபிறகு,

தான் எந்தப் பணியைச் செய்ய வேண்டும் என்ற உண்மை தெரிந்ததும். அந்த வினைதான் தவம். தவமே வாழ்வு. தவமே வாழ்வு. தவமே சுகம். இதுவரையில் கண்டதெல்லாம் சுகமேயில்லை. சோகம் என்று தெரியும். தவத்தில் வெற்றி கண்டதும் இறையருள், இறை தரிசனம், தன் தரிசனம், தானானந்தம், தன் சுகத்தைத் தானே அனுபவித்தல், தானே சுபமாதல்,

மகா சுகம்.

வெட்டவெளியில் இருக்கும், வெட்டவெளி சுகத்தைக் காணல், வெட்டவெளிக்குச் செல்லுதல், அம்மயமாதல்

அருள், அருள் மயம், ஆனந்த மயம்.

சுபம் - சுபம் - சுபம் சுபமயம்

சந்தோஷம்

# புதுமை

மிகப் பழையதான தொன்று தொட்ட காலம் கணக்கிட முடியாத சனாதமான ஒன்று, அது படைத்த எல்லாமே ஜீவ உலகில் இருக்கும் ஜீவன்களுக்கு எல்லாம் புதுமையாகவே தெரியும். புத்தாண்டு வருகிறதென்று சொல்லப்படுகிறது. அது புத்தாண்டு அல்ல. பழைய ஆண்டுதான். புதிய மனிதர்கள் வருகிறார்களென்று சொல்லப்படுகிறது; அது புதிய மனிதர்கள் அல்ல; பழைய மனிதர்கள்தான்.

புதிய உருவங்கள் இறைவனால் படைக்கப்படுகிறது. உருவங்களும், நிகழ்வுகளும், சுவைகளும், இன்ப-துன்பங்களும், அற்புதங்களும், அத்தனை பிரமிப்புகளும், அத்தனை பிறப்பும், அத்தனை மரணங்களும், அத்தனை தோற்றங்களும், அத்தனை அஸ்தமனங்களும், அத்தனை அண்ட கோளங்களும், அத்தனை விஸ்வரூபங்களும், கோடானு கோடியான அத்தனை சக்திகளும், படைப்புகளும், படைப்புக்குள் படைப்புகளும், இன்னும் அறிவுக்கு அகப்படாத படைப்புகளும், அவன் மகிமைகளும், மானசீகங்களும் எல்லாம் எழுதாமல் விடுபட்ட அனைத்துமே அவனுக்குப் புதியதல்ல, சற்குருவுக்கும் புதியதல்ல. ஜீவன்களுக்குப் புதிது. புதிது. புதிது.

ஜீவ விழிப்பில் மேல் நிலையில் செல்லும்போது எல்லாமே புதியதுமல்ல. பழையதுமல்ல. உள்ளது உள்ளபடி உள்ளது என்ற உண்மை தெளிவாக்கப்படும்.

கடவுளின் திருவருளாலே, கடவுள் திருவுள்ளக் கருணையினாலே, கடவுள் ஜீவன்களுக்குக் காலங்காலமாய் கருத்துகளைப் படிப்படியாய் - அறிவுக்குப் புலப்படுத்தி, உயர்நிலைக்கு அழைத்துச் செல்கிறது.

அறிவியல் கண்டுபிடிப்பெல்லாம் மனிதனின் எத்தனத்தில் அல்ல. ஜீவன்கள் வாழ்வதற்காக மேல் நோக்கிய வசதிகளை அந்தந்தக் காலத்தில், ஜீவனுடைய அறிவுக்குப் புலப்படுத்தி, அதை ஜீவன்களாலே வெளிப்படுத்தச் செய்து, ஜீவன்கள் தாங்களே கண்டுபிடித்ததாகக் குதூகலத்துடன் கொண்டாட, குதூகலத்தைத்

தருவதும், தரப்படுவதும் அதுதான்.

ஆரம்பத்தில் மின்சாரமில்லை. எல்லாம் இரவில் இருண்டு கிடந்தன. மரங்கள் ஒன்றோடு ஒன்றின் மீது உராயச் செய்து அதன் தீயை வெளிப்படுத்தி மரத்தின் மூலம் ஒளியைக் காட்டியது. பிறகு, மனிதன் மரங்களைப் பற்ற வைத்து அதன் ஒளியிலே வாழத் தொடங்கினான். பிறகு, அதிலிருந்து எண்ணெய் எடுத்து (நல்லெண்ணெய், மண்ணெண்ணெய்) அதன் மூலம் ஒளியைக் கொண்டு வந்து வாழத் தொடங்கினான்.

இன்று மின்சாரம். நாளை எதுவோ? நாளை அது நமக்கு ஒளிக்கு என்ன கொடுக்குமோ தெரியாது? எல்லா அறிவியல் கண்டுபிடிப்புகளும், எதிர்காலக் கண்டுபிடிப்புகளும், கடவுள் (அது) மனிதனுக்கு - ஜீவன்கள் சுகமாக வாழ்வதற்காக அறிவியல் கண்டுபிடிப்பு சாதனங்களை அவன் அறிவுக்குப் புலப்படுத்தி அவனை வாழ்வாங்கு வாழச் செய்கிறது.

இதுபோன்று எதிர்காலத்தில் எத்தனையோ கண்டுபிடிப்புகளையும், புதினங்களையும், உலகு வாழியல் சாதனங்களையும் - அது மனித அறிவுக்குப் புலப்படுத்தி புலப்படுத்தி வாழ வழி வகை செய்யும்.

இது ஒரு உதாரணமாகும். அது ஜீவன்களுக்குச் செய்யும் கருணைக்கு ஒரு சான்றாகும். ஆகவே, ஜீவனைக் கொண்டு வருவதும், அங்கிருந்த ஒன்றை ஜீவனாக்கிக் கொண்டு வருவதும் அதுதான். ஜீவனின் குருட்டுத் தன்மையைக் கொஞ்சம் கொஞ்சமாக விலக்கி ஜீவன்களுக்கு ஒளிதந்து ஜீவானந்தத்திற்கு அழைத்துச் செல்கிறது.

## சந்தோஷம்

ஒரு மனிதன் வாழ்கின்ற 100 ஆண்டு வாழ்வை, ஒரு கொசு 3 நாட்களில் வாழ்ந்து விடும். 100 ஆண்டுகள் வாழ்ந்து, மனிதனுக்குக் கிடைக்கின்ற அனுபவம் அந்தச் கொசுவுக்கு மூன்று நாட்களில் கிடைத்து விடும்.

# இவர்களில் நீங்கள் யார்?

ஒரு ஞானியும், ஒரு அஞ்ஞானியும் சாப்பிடச் சென்றார்கள். இருவருக்கும் இலைகள் போடப்பட்டன. அஞ்ஞானி தன் அருகே வைத்திருந்த நீர்க் குவளையை எடுத்து இலையில் தண்ணீர் தெளித்து இலையைக் கழுவினான். அதை ஞானி பார்த்துக் கொண்டு இருந்தான். அவர் தன் கரத்தினாலே அந்த இலையைத் தடவினார். தண்ணீர் வார்க்கவில்லை. அஞ்ஞானி கேவலமாகச் சிரித்தான். ஞானி அவனைப் பார்த்துக் கேவல நிலையில் நின்று சிரித்தார். இரண்டு சிரிப்பும் ஒன்றையொன்று சந்தித்தன. அஞ்ஞானி சிரித்த கேவலம் பாழ்பட்டு விட்டது. அஞ்ஞானி கேட்டான், ''என்னப்பா இப்படி'' என்று ஆயிரமாயிரம் மக்களுக்குத் தினந்தோறும் ஆசியை வழங்குகின்ற கை இது. இந்தக் கையினால் தனி மனிதனின் விதியையும் மாற்றலாம். உலக விதியையும் மாற்றலாம். அத்தகைய அருள் சக்தி வாய்ந்த என்னின் திருக்கரத்தால் இலையைத் தடவினால் இலை பரிசுத்தமாகி விடும். தண்ணீரால் சுத்தம் செய்வது என்பது ஒரு சாதாரணமானது. விதியின் அசுத்தத்தை நீரால் நீக்க இயலாது.

எதிர்த்த வரிசையில் ஒரு முக்தன் அமர்ந்திருந்தான். அவன் சொன்னான். இலையைத் தடவ வேண்டிய அவசியமில்லை. என் பார்வை பட்டாலே போதும் சுத்தமாகி விடும் என்றான். அவன் தியானம் இருந்தான். ஞானிகள் தரிசனம் பாவ விமோசனம். ஞானியின் பார்வைக்கு அந்தச் சக்தி உண்டு என்றான்.

முக்தன் அருகிலே ஒரு சித்தன் அமர்ந்திருந்தான். எல்லோரையும் பார்த்து ஒரு நமட்டுச் சிரிப்பு சிரித்தான். என்ன நீங்கள் சிரிக்கிறீர்களே என்று எல்லோரும் கேட்டனர். எனக்காக ஒரு இலை வருகிறது என்றால், எனக்கு என்ற நிலை வந்தவுடனே அந்த இலையிலுள்ள எல்லா விதி அசுத்தங்களும், அம்சங்களும் அக்கணமே மறைந்து விடும். நான் தடவ வேண்டிய அவசியமுமில்லை. பார்க்க வேண்டிய அவசியமுமில்லை என்றான்.

அதற்கு அருகே உட்கார்ந்திருந்தான் இந்தப் பிரபஞ்சத்தின் சுற்றுலாப் பயணி ஒருவன். அவன் எல்லோரையும் பார்த்துப் பேஷ் பேஷ் என்றான். என்ன சொல்லுங்களேன் என்றார்கள். நான் இந்தப்

பிரபஞ்சத்திற்குச் சுற்றுலாப் பயணியாக வேடிக்கை பார்க்க வந்துள்ளேன். ''சித்'' வினைகளை ஆற்றிக் கொண்டு இருக்கிறேன். என்னிடம் வருபவைகளெல்லாம் பரிசுத்தமானவைகள் தான் வர வேண்டும் என்று அந்த மெய்ப் பொருள் தீர்மானித்து அந்த ஆக்ஞைப்படியே எனக்கு எல்லாம் பரிசுத்தமாக வந்து கொண்டு இருக்கிறது என்றான்.

*எனக்கு எல்லாம் பூரணம். எனக்கு எல்லாம் பரி பூரணம். எனக்கு எல்லாம் ஆனந்தம். ஆனந்தம். என்றான்.*

அங்கே மனித உருவத்தில் உட்கார்ந்திருந்த கடவுள் பார்த்தது. அது சிரிக்கவில்லை. இத்தனை பேர் பேச்சையும் பார்த்துத் தன் படைப்பின் வல்லமையை நினைத்து மகிழ்ந்து கொண்டு இருந்தது.

**சந்தோஷம்**

*ஹே மகாபிரபுவே வா வா*
*ஹே மகாபிரபுவே வா வா*
*ஹே மகாபிரபுவே வா வா*
*அந்தரானந்தரே*
*பரிபூரணானந்தரே*
*சிவானந்தரே வா வா*
*உன் பிரபு நான், எங்களை*
*அழைத்துச் செல்*
*சங்கமம் - நீயும், நாங்களும்*
*சங்கமம் இன்றே*
*சங்கமம் யாத்திரையை நிறைவேற்றிய*
*மகா பிரபுவே*
*உனக்கு என்*
*வந்தனம், வந்தனம், வந்தனம்.*

# ஜீவ தயவு - கடவுள் தயவு

மனிதனிடத்தில் ஜீவ தயவும், கடவுள் தயவும் தேவை. ஒரு மனிதனிடத்தில் கடவுள் தயவும், ஜீவ தயவுமிருந்தால் அவன் ஜீவ யாத்திரையைத் தங்கு தடையின்றிச் செய்து இறைவனின் திருவருளாலும், நல்லாசியினாலும் கடவுளிடம் ஐக்கியம் அடையலாம்.

கடவுளின் தயவின் இலக்கணம் என்னவென்றால் - இறந்த உயிரை எழுப்புதல்; தாவரங்கள், ஜீவ ராசிகளுக்கு மழை பெய்ய வைத்தல்; மிருகம், பட்சி, ஊர்வனவற்றிற்கு உணவுகளை அதன் - அதன் நியதிக்கேற்றவாறு தன் அருள் வல்லமையால் ஊட்டி வைத்தல். கடவுள் தயவு உள்ளவர்களிடம் இந்த ஆற்றல் இருக்கும். கடவுள் தயவு உள்ளவர்களுக்குச் சான்று திருமூலர், தன் உயிரைத் தந்து மூலனைக் காப்பாற்றினார்.

அடுத்தது திருவண்ணாமலை குகை நமச்சிவாயர் அவர்கள் இறந்து கிடந்த ஒரு ஆட்டை உயிர்ப்பித்தார். மூன்றாவதாக, கடவுள் தயவு பெற்றவர் இராமலிங்க சுவாமி - அவர்கள் இறந்தவர்களை உயிர் பெறச் செய்தார். செத்தார் எழுவார் என்று கைத்தாளம் போடுங்கடி என்றார்.

அப்பரும் இந்த வினையைச் செய்தார். அப்பர் அடிகளாரிடமும் கடவுள் தயவு இருந்தது. அப்பூதி அடிகள் மகன் இறந்து விட்டான். அவரின் மகனை அப்பர் அடிகளார் உயிர்ப்பித்தார்.

**சந்தோஷம்**

அந்த மூன்று நாட்கள் வாழக் கூடிய ஜீவனுக்கு உலக அனுபவம், மற்ற ஜீவ அனுபவம், பயம், சுகம், துன்பம், வெறுப்பு, விரக்தி, படைத்தவனை நொந்து கொள்ளுதல், படைத்தவனிடம் வேண்டுதல், படைத்தவனை வெறுத்தல் ஆகிய அனுபவங்கள் அந்த 72 மணி நேரத்தில் அதற்குக் கிடைக்கிறது. எல்லா ஜீவன்களுக்கும் அந்தந்த உருவம் கொடுத்த காலத்திற்குள்ளே அதனதன் நிலைக்கேற்றவாறு முழுமையாகக் கிடைக்கிறது. ஆனால் மனித உருவம் மகோன்னத நிலை பெறுகிறது.

# ஜீவன்கள் - கடவுளைத் தேடல்

ஜீவன்கள் கடைத் தேறுவதற்காக அதாவது இறைவனை அடைய அதாவது தன் துன்பங்களைப் போக்கிக் கொள்வதற்கு வழி தேட முயல்கின்றன. ஆனால் வழி தெரியவில்லை.

கடவுள் தான் எல்லாவற்றிற்கும் காரணமென்று அவைகளுக்குத் தெரிகிறது. ஆனால் கடவுளைக் காண முடியவில்லை. அறிவாலும், மனதாலும், பஞ்சேந்திரியங் களாலும், கர்மேந்திரியங்களாலும் கடவுளைக் காண முடியவில்லை.

ஆகவே ஜீவன்களில் சில கடவுளைக் காண்பதற்காகத் தான் எவைகளை யெல்லாம் உயர்ந்ததாக நினைக்கின்றதோ, அவைகளை ஒன்று படுத்தி அழகான உருவமாக்கி, அவற்றை வழிபடுகின்றன.

இதையும் தவறு என்று சொல்வதற்கு இல்லை. கடவுளைப் பற்றி எதையும் தெரியாத இவைகளுக்கு உருவ வழிபாடு வழிகோலாக அமைகிறது.

இயற்கையில் வெளியாகுகின்ற அனைத்திற்கும் உருவங்கள் உள்ளன. அதை வணங்குவதில் தவறில்லை. இந்த நிலையில் தான் உருவ வழிபாடு வெளி வந்தது.

மரங்களை வணங்கினான், ஆகாயத்தை வணங்கினான், இதைப் போல பஞ்ச பூதங்களை வணங்கினான், நதிகளை வணங்கினான், மலைகளை வணங்கினான், ஆத்ம ஞானிகளை வணங்கினான். சற்குருவை வணங்கினான், தத்துவங்களை வணங்கினான், பிறகு தன்னையே வணங்கத் தலைப்பட்டான்.

இந்த வணக்கத்தினால் எழுகின்ற சக்தி எங்கும் நிறைந்த மகா சக்தியோடு கலந்து விரவி நிற்கின்றது.

**சந்தோஷம்**

# கடவுள் பாதைகள் வெளிப்படும் வகைகள்

கடவுளை அடைய மதங்களும், மார்க்கங்களும் உள்ளன. நுண்ணிய மெய்ஞ்ஞான இயற்கைத் தத்துவங்களை, இயற்கை வெளிப்படுத்தி அதைச் செயல்படுத்த வைக்கும். ஆதி மூல அந்தரங்க அருட் சிவ இரகசிய அற்புத மெய்ப் புள்ளி - மகா நிலைத்த மெய்ப்புள்ளி - அதை அடைகின்ற வழிகளையும், முறைகளையும், வழி முறைகளையும் மக்கள் இனத்திற்குக் கொடுத்தவர்கள் அருளார்கள், ஆத்ம ஞானிகள், சித்தர்கள், யோகிகள், வேதாந்திகள்,பேரறிஞர்கள், உத்தமர்கள் ஆவர். அவர்கள் விவரிக்க முடியாத இந்தக் கடவுள் கொள்கைகளை கடுந்தவத்தால் உணர்ந்து கண்டு கடவுள் பாதையை நமக்கு கொடுத்தனர்.

* கடுந் தியானத்தினாலும், ஆன்மிக அருள் உழைப்பினாலும் கடவுள் நிலையை உணர்ந்து கண்டு கடவுள் பாதையைக் காட்டியுள்ளனர்.
* மெய்ஞ்ஞான அருட் சிவமே தன் ஜீவர்கள் தன்னை அடைவதற்கான வழியைச் சில மகாத்மாக்களுக்கு அறிவித்தது. அவர்கள் மூலம் கடவுள் கொள்கை வெளிப்பட்டது.
* சிலருக்கு ஆகாய வெளியில் அசரீரி கேட்கும். அந்த அசரீரியின் அருள் வல்லமையை உணர்ந்து, அந்த அசரீரியின் ஆக்ஞைப் படி மக்களுக்குக் கடவுள் சுகத்தையும், கடவுள் பாதையையும் அவர் மூலம் வெளியாற்று.
* அந்த மெய்ஞ்ஞான அருட் சிவமே, ஆதி மூலமே இந்த வெட்ட வெளியில் மனித உருவம் தாங்கி அவதாரமாய் அனைத்து ஜீவன்களிலும் தன்னிடம் வந்து இன்புற, ஆனந்தக் களிப்பில் ஆழ்ந்திட மார்க்கத்தையும், வழியையும், பாதையையும் காட்டியது.
* அந்தர் முக அருட்காட்சி மூலம், பகிரங்க அந்தரங்க அருட்காட்சி மூலம், காண முடியாததை நெற்றிக் கண்ணால் கண்டு, தரிசித்து, அடைந்து,பேரின்பமுற்று, பேரானந்த நிலையில் - கடவுளை அடைய அந்தப் பாதையை மக்களுக்குக் காட்டியுள்ளது.

* அண்ட வெளியின் மூலம் மகா அருட்சக்தி திண்ணியதாய் அருள் வெளியில் வெளிப்பட்டு அகண்ட பெரு வெளியில் நிறைந்து, எல்லா ஜீவன்களின் பிண்ட வெளியில் கலந்து, நிறைந்து பிரகாசித்துப் பேரொளியுடன் அந்த ஜீவன் அந்தர் கர்மாக்களை நீக்கி, மெய்ஞ்ஞானத் திருவிளக்கேற்றி, எல்லா ஜீவன்களும் ஒரே சமயத்தில் பிரம்ம ஞானம் அடையச் செய்து, ஜீவ விழிப்பு தந்து ஜீவானந்தம் துய்க்கச் செய்து, அந்த அதனிடம் சரணடையச் செய்து, மெய்ஞ்ஞான சுகத்தில் இரண்டறக் கலக்கச் செய்த அருள் அற்புதம் ஒரு கால கட்டத்தில் நடந்துள்ளது.

* காலம் பொய், காலம் கெட்டு விட்டது, காலம் மாறி விட்டது, காலம் போய் விட்டது, காலமாகி விட்டது என்ற கருத்துகள் எல்லாம் - இந்தக் கடவுள் பாதையில் செல்வோருக்குச் செல்லாக் காசாகும்.

* ஜீவன்கள் மனித உருவில் வெளிப்படுகின்றன, வெளிப்படும் போது அண்டவெளியில் உள்ள, அருள் வெளி அதனுள் ஒளி மயமாய், பேரொளி மயமாய் விளங்கிக் கடவுளின் திருவருள் பாதையை மிக வேகமாக நடத்திச் செல்கிறது. அதற்கு இடையூறாகக் காலமோ, கோலமோ அல்லது விதியோ, உறவு பந்தங்களோ எதுவுமே அதன் வேகத்தைத் தடுத்து நிறுத்த இயலாது. மெய்ஞ்ஞானத்தை அடைந்தே தீரும். கடவுளிடம் கலந்தே தீரும்.

* ஞான வளர்ச்சியில், கடவுள் பாதையில் செல்லும் ஜீவன் வேகத்தை எந்த அஞ்ஞான சக்தியினாலும் தடுத்து நிறுத்த இயலாது. கட்டுப் படுத்த முடியாது. அஞ்ஞான சக்திகள் கடைசியில் தோல்வியைத் தான் அடையும். ஏனென்றால், எது படைத்ததோ எல்லாவற்றிற்கும் மூல காரணமோ அதுவே அந்த ஜீவனை அதனிடம் அழைத்துச் செல்கிறது. அதை எதிர்த்து நிற்க யாராலும் இயலாது.

* ஜீவ யாத்திரையில் ஏறுமுக நிலையில் இருள் ஜீவர்களுக்கும், அருள் ஜீவர்களுக்கும் அந்தக் காலத்திலிருந்து, இன்று வரை போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. இருள் ஜீவன்கள் தோல்வியை அடைகின்றன. அருள் ஜீவன்களுக்குப் பகையாக இருக்கும், இந்த இருள் ஜீவன்களின் ஜீவ யாத்திரைக்கு இடையூறு வரும். துன்பம் வரும். அவைகளின் ஜீவ யாத்திரை துன்ப மயத்தில் தான் நடந்து கொண்டிருக்கும். அது அடைய வேண்டிய ஒன்றைக்

கால தாமதப்படுத்தும். வருகின்ற பிறவிகளெல்லாம் தோல்விகள், துன்பங்கள் நிறைந்து இருந்து, அவைகள் அழுது கொண்டே யாத்திரை செய்து கொண்டிருக்கும். அதே இடத்தில் யாத்திரை செய்து கொண்டிருக்கும். செக்குப் பாதை போன்று.

* ஞான அருள் ஜீவர்களுக்குக் கொடுத்த தொல்லைகள், வினைகளின் விளைவை ஜீவர்கள் முழுமையாக அனுபவித்த பிறகு மீண்டும் அது ஜீவ யாத்திரையை மேற் கொள்ளும்.

* கடவுளின் படைப்பு அல்லது கடவுளின் பாதையைக் காட்டுவதற்கு உலக அனுபவம் வேண்டா, வயது வேண்டா. இந்த உலக வாழ்க்கை வேண்டா, உலக உறவு வேண்டா, அதர்மச் சேர்க்கை தேவையில்லை. அஞ்ஞானச் சிந்தனைகள் வேண்டா, நிதானம் வேண்டா, பொறுமை வேண்டா, அதர்மத்திற்குத தயவு காட்ட வேண்டா, எதுவுமே வேண்டா.

* எது - எது வந்ததோ எது - எது அதை அனுப்புகின்றதோ அது - அது வீரமாகக் கடவுளின் வல்லமையை ஜீவர்கள் உதாசீனப் படுத்தி விட்டு, ஜீவ யாத்திரை முன்னேற்றத்திற்காக வந்தவைகள் கொடுக்கப்பட்ட காலம் வரை, கொடுக்கப்பட்ட வினைகள் முடியும் வரை வினையாற்றி விட்டு மீண்டும் கடவுளுலகம் போய்ச் சேர்ந்து விடும். அவைகளுக்கு ஜீவர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும், தங்கள் வினைகளைத் திணித்துச் செயல்படுத்த வைக்க இயலாது.

அதுகள் வேறு. ஜீவர்கள் வேறு. வந்தவைகள் யாத்திரையைப் பல முறை முடித்தவைகளாக இருக்கலாம் அல்லது யாத்திரை தேவையில்லாததாகவும், யாத்திரை கடந்தவைகளாகவும், யாத்திரை அற்றதாகவும், யாத்திரைக்குக் கர்த்தாவாகவும்கூடக் இருக்கலாம்.

மனித அறிவுக்குப் படைப்புகள் இன்னும் தெரியாது. கடவுள் எவ்வளவு வகையான படைப்புகள், உருவங்கள் படைத்தார். இன்னும் எவ்வளவு வகையான புதிய படைப்புகளைப் படைக்கப் போகிறார் என்பதை இது வரை மனிதர்கள் முழுமையாகக் கண்டதில்லை.

எல்லாம் அதிசயம். எல்லாம் மர்மங்கள்.

**சந்தோஷம்**

# ஜீவ விழிப்பு

ஜீவன் தனக்குத் தானே பெரும் அற்புத சக்தியைத் தனக்குள் அடக்கித் தன்னைத் தானே அறியாத நிலைக்குத் தன் கா்மத்தால் தானே கொண்டு வந்து தன்னை நிறுத்திக் கொண்டு விடுகிறது.

தனக்குத் தானே தன் கண்ணைத் தானே மூடிக் கொண்டு ஜீவ குருட்டு நிலைக்குப் பகிரங்க, பகிர்முகக் குருடாக, இக மண்டலத்திற்கு வந்து, தன் யாத்திரையைத் தொடங்கி நடத்துகிறது. இந்த நிலையை அந்தரங்கத்தில் அந்தா் முகத்தில் ஜீவனைப் பணியாற்ற வைக்கிறது - வெட்ட வெளியில் உள்ள மகா குண்டலினி.

திருவருள் சிவ சுகத்தில் ஆதி மூலத்தில், அனந்த சயனத்தில் கிடந்த இது, இந்த ஜீவன், இங்கே குருட்டு நிலைக்கு வந்து, படும் இக இன்ப-துன்பத்தின் எல்லையை இதுவரை யாரும் கண்டதில்லை.

இந்த ஜீவன் தன் யாத்திரையில் இருக்கும் போது வெட்ட வெளியாய் நிற்கும் அந்த அளப்பதற்கு அரிய ஆதி மூல சிவம் கடவுள் தன் மகா விழிப்பில், விழிப்புக்குள் அதன் யாத்திரையை வைத்துள்ளாா். மகா விழிப்பு ஒன்றா? இரண்டா? கோடியாய், கோடானு கோடியாய் உள்ளது. அவரின் மகா விழிப்பு அப்போதைக்கு அப்போது தோன்றும் நிலையும் உள்ளது. நாளைக்கு வரும் கொசு உள்ளது. இன்றைக்குள்ள கொசுவும் உள்ளது. இப்படி ஆகாயத்தில் வளா்ந்து ஆகாயத்தில் தன் வாழ்க்கையை முடித்துக் கொள்கின்ற ஜீவனும் உள்ளது. காற்றில் வளா்ந்து காற்றில் தன் வாழ்க்கையை முடித்துக் கொள்கின்ற ஜீவனும் உள்ளது. அக்னி தத்துவத்தில் ஓங்கி, அக்னி தத்துவத்தில் வளா்ந்து, அக்னி தத்துவத்தில் வாழ்ந்து, அக்னி தத்துவத்தில் உலகை விட்டுப் பிரிந்து போகும் ஜீவன்களும் உள்ளன. மண் தத்துவத்தில் தான் ஏராளமான வகையான ஜீவன்கள் உதிக்கின்றன. சொல்லொணா நாடகத்தை நடத்துகின்றன. சோகத்தில் வெட்கிப் போய்க் கரைந்து விடுகின்றன.

ஜீவன் விழிப்பு நிலை பெறுகின்ற வாய்ப்பு இறைவனால் ஒவ்வொரு ஜீவனுக்கும் கொடுக்கப்பட்டுள்ளது. அது அந்தந்த நிலையில் அந்தந்த ஜீவன்களுக்கு வந்தே தீரும்.

ஜீவ யாத்திரையின் போது ஒவ்வொரு ஜீவனுக்கும் பாவங்கள் செய்வதற்கான வழி வகைகளும், சாதகங்களும் கொடுக்கப்பட்டு இருந்தாலும் புண்ணியங்களும், மகா புண்ணியங்களும், ஞான புண்ணியங்களும் செய்வதற்கான வாய்ப்புகளும் ஜீவனுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே, அது எந்த நிலையிலும் அவைகள் கீழே இறங்குவதற்கான வினைகள் கொடுக்கப்பட்டு இருந்தாலும் அவைகளிலிருந்து விலகி ஏறுமுகத்திற்கு அழைத்துச் செல்லும் வினையை ஆற்ற - எல்லாம் கொடுக்கப்பட்டுள்ளது.

அந்த ஏறுமுக ஜீவ யாத்திரைக்கான வினையை முழுமையாக அந்த ஜீவன்கள் ஆற்றும் போது, ஜீவன்களுக்கு முழுமையாக ஆற்றிய வினையின் முடிவு - ஜீவ தயவு தோன்றுகிறது. உயிர்களுக்கு உதவிகள் செய்தல், எல்லா ஜீவன்களையும் மதித்தல், தன் வயப்படுத்துதல், எல்லா ஜீவன்களையும் தனக்கு நிகராக ஏற்றுக் கொள்ளுதல், எல்லா ஜீவனிடத்திலும் ஆறுதலையும், அன்பையும் தருதல், ஈசன் எனக் கருதி எல்லா ஜீவனையும் நேசித்தல், ஆன்ம நேயக் கலப்பில் பற்று கொண்டு என்றும் தயவு வடிவாய் இருத்தலே - ஜீவ தயவாகும்.

அந்த ஜீவ தயவு சாதனையின் போது - ஜீவனுக்கு ஜீவ விழிப்பு வருகிறது. ஜீவ விழிப்புக் கனல் பெருகிப் பெருகி வளரும் போது - சற்குருவைத் தேடுகிறது; கடவுளைச் சிந்திக்கிறது; தர்மத்தை வழிபடுகிறது; சத்தியத்திடம் சதமடைகிறது; இயற்கையின் நியதியை- அறியும் ஆற்றல் பெறுகிறது அல்லது காதலிக்கிறது; தன் ஏக்கங்களை நீக்குகிறது; உள்ளதை உள்ளபடி காண்கின்ற ஆற்றலைப் பெறுகிறது. நுண்ணிய சூக்குமக் கடவுள் சாதனை செய்வதற்குத் தன்னை முழு மூச்சோடு ஆயத்தப்படுத்திக் கொள்கிறது. அந்த ஜீவனின் அகக்கண் திறக்கப்படுகிறது. உலகையும், உலகத்து நிகழ்ச்சிகளையும், தன்னையும், தன்னைச் சுற்றி அன்றாடம் வரும் நிகழ்ச்சியையும் ஒவ்வொரு நொடியிலும் வரும் எல்லா நிகழ்ச்சியையும் சத்திய நிலையில் நின்று அசையாது சாந்தமாகப் பார்க்கிறது. எந்த விதத்திலும் அப்போது அது பாதிக்கப்படுவதில்லை. அது துக்கத்தையோ, சந்தோஷத்தையோ காண்பதில்லை.

ஞானிகள் கருத்துகள் அவைகளுக்குத் தெளிவாக்கப் படுகின்றன. எல்லா நிலையிலும் அது தெளிவாக இருக்கிறது. குழப்பம் என்ற சொல்லுக்கே இங்கு வேலையில்லை.

ஜீவ விழிப்பு வந்த பிறகு மனிதனின் அல்லது உயிர்களின் புற நிலைச் செயல்களிலிருந்து விலகி ஒவ்வொரு உடலில் உள்ள ஜீவனை அது பார்க்கிறது. அங்கே ஜீவ பிரகாசம் அதற்குத் தோன்றுகிறது. அந்த ஜீவ ஒளியில் அதன் விதி காட்சியளிக்கிறது. ஜீவ பிரகாசம் தோன்றியவுடன் பிண்ட வெளியிலிருந்து அண்டவெளியில் அன்புப் பரிமாற்றம் ஏற்படுகிறது.

ஜீவ விழிப்புக்குப் பின் அந்த ஜீவனுக்குள்ளேயும், வெளியேயும் மின்னல் வேகத்தில் தொடர் தகனங்கள் நடைபெறுகின்றன. காம தகனம், மாயை தகனம், பொய் தகனம், பொறாமை தகனம், அதர்ம தகனம், ஜீவ இம்சை தகனம், சிதைத்தல் தகனம், அழிவு தகனம் வாழ்க்கை இருள் தகனம், குண பேதங்கள் தகனம், இருள்நாத தகனம், அகங்கார தகனம், மமகார தகனம் போன்ற 70க்கும் மேலான தகனங்கள் நடைபெறுகின்றன.

ஜீவ விழிப்பின் போது அந்த ஜீவன் எல்லாவற்றையும் பார்க்கிறது. அதற்குக் காரண சரீரம், மகா காரண சரீரம், சூக்கும தேகம், ஆத்மாவின் பேரழகு தெரிகிறது. அவ்வளவும் தெரிந்த பிறகு அதற்கு ஜீவானந்தம் கிடைக்கிறது. ஆனால் கடவுள் தெரிவதில்லை. பரசிவம் தெரிவதில்லை. படைக்கும் தொழில் தெரிவதில்லை. காக்கும் நிலைகள் தெரிவதில்லை. கடவுளின் ஆதி மூல இரகசியங்கள் இந்த ஜீவ விழிப்பில் தெரிவிக்கப்படுகிறது.

ஜீவ விழிப்பில் அது ஆற்றிக் கொண்டு இருக்கும் ஏறுமுகப் பயணம் ஆனந்தமாக இருக்கும் அதில் துக்கமோ, சோகமோ இல்லை.

ஜீவ விழிப்பு வந்ததும் - அது அந்த ஜீவனுக்குக் கடைசிப் பிறவியென்று அர்த்தமன்று. அதற்குப் பிறகு ஆறு, ஏழு பிறவிகள் கூட எடுக்க நேரிடும்.

இதில் இன்னொரு கருத்து என்னவென்றால் அந்த ஜீவன் ஒன்றோடு ஐக்கியமடைவதற்கு அல்லது ஜீவ முக்தி பெறுவதற்கான ஆயத்தங்களை அந்த வெட்டவெளி. அந்த ஜீவனுக்குச் செய்து கொண்டிருக்கிறது.

இதில் மற்றொரு கருத்து என்னவென்றால் ஜீவ விழிப்பு வந்த பிறகு அந்த ஜீவன் அந்த ஜீவ விழிப்பு பெற்றது அது அனுபவிக்கும் ஜீவ ஆற்றல், அதன் வினைகளெல்லாமே மிகப் பெரியதாக மக்களுக்குத்

தோன்றும். பாமர மக்கள் அதைக் கடவுள் என்று வழிபடுவார்கள். அந்த ஜீவன் அந்தத் தேகத்தை விட்டுச் சென்ற பிறகு அடுத்த தேகம் மாறும். ஆனால் மக்கள் அதற்குக் கோயில் கட்டி சிவ ஐக்கியம் கிடைத்தது அல்லது ஜீவ முக்தி அடைந்தது என்று வழிபடுவார்கள். அப்படி வழிபடும் சமாதிகள் ஏராளமாக உள்ளன.

இதில் இன்னொரு வித்தியாசமான செய்தி என்னவென்றால், ஜீவ விழிப்பு பெற்றதால் யாத்திரை முற்றிலும் மாறுபட்டு விடும். ஜீவ விழிப்புக்கு முன் இருந்த யாத்திரை நிலை வேறு. ஜீவ விழிப்புக்கு பின்புள்ள யாத்திரை நிலை வேறு. ஜீவ விழிப்பு வந்ததிலிருந்து ஜீவ முக்தி அடையும் வரை ஒரே ஜீவனுக்கு அந்தந்தப் பிறவியிலும் சமாதிகள் கட்டப்பட்டு 10, 15 சமாதிகள் கூட இருக்கலாம். பல பெயர்களில் சமாதியிருக்கும். இது மனித நிலையிலிருந்து மகத்தான நிலை குறை சொல்வதற்கு ஒன்றுமில்லை. இறைவனிடம் நிறை குறை சொல்வதற்கு ஒன்றுமில்லை. இறைவனிடம் இரண்டற ஐக்கியமடைந்த சமாதி வேறு; இந்த சமாதி வேறு.

அந்த ஜீவன் விழிப்பு பெற்ற பிறகு, ஜீவன் பிரிகிறதே அந்த ஜீவனுக்குக் கட்டிய சமாதியைச் சென்று வழிபடுபவர்கள். ஆத்ம சாதனை செய்பவர்கள் அந்த ஜீவ விழிப்பு அடைந்த அது எந்த நிலையில் முன்னேறி இருக்கிறதோ; அந்த ஜீவ யாத்திரையில் ஒரு நிலை அடைந்திருக்கிறதோ அந்த நிலை அந்த ஜீவனை வழிபட்டதற்கும் கிடைக்கும்.

ஐக்கியமடைந்தவர்கள் - சமாதியை வழிபடுபவர்கள் அவர்கள் அடைந்த நிலையைக் காலப் போக்கில் பெறுவார்கள்.

ஜீவ விழிப்பு, ஜீவ தயவு பெருகப் பெருக அந்த ஜீவ விழிப்பு வெற்றி வர - வர ஜீவ விழிப்பு இல்லாத எல்லா ஜீவனும் இதை வணங்கும். வணங்கும். ஜீவ விழிப்புப் பெற்றவைகள் இந்த ஜீவ விழிப்பு உள்ளவைகளிடம் நட்புக் கொள்ளும். ஜீவ விழிப்புப் பெற்றவைகளிடம் பயமற்றுப் போகும். மரணத்தை அறிவார்கள்.

ஜீவ விழிப்பு - தேகத்தில் - இருதயத்தில் தோன்றும். விளங்கும். அது காலப் போக்கில் தவசக்தி பெருகப் பெருகப் புருவ மத்திக்கு வந்து சேரும். இருதயஸ்தானத்தில் - ஜீவன் பெற்ற ஒளி வேறு; அதே ஜீவன்

புருவ மத்திக்கு வரும் போது அதனுடைய பிரகாசம் வேறு. இந்த நிலை வந்த பிறகு தான் - புருவ மத்தி கதவு திறக்கப் பெறுகிறது. புருவ மத்திக்குள் ஆக்ஞைச் சக்கரம் உள்ளது. அவன் பிரம்ம ஸ்திதியைப் பெற வாய்ப்பு தரப்படுகிறது. பிரம்ம நிர்வாணம் அந்த ஜீவன் அடைய - அப்போதுதான் பத்திரம் எழுதப்படுகிறது.

ஜீவ விழிப்பு - பெரு நிலைக்கு வந்ததும், பூரணமானதும், அப்போது ஏற்படுகின்ற மரணம் பிரம்ம நிலையிலேயே இருக்கும். இது அதைக் கண்டு பயப்படாது. அதுவும் இதை மிரட்டாது. மரணமும் அதன் பார்வைக்குப் பிரம்மாண்டமாகத் தெரியும். ஜீவ விழிப்புக் கொண்ட அது - பிரியும் போது மரணத்தோடு கை கோர்த்துச் சந்தோஷமாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கும்.

அந்த ஜீவ விழிப்பு பெற்ற அந்த ஜீவன் தேகத்திலிருந்து பிரியும் பிரம்மாண்ட நிலையில் மகா சந்தோஷமாக எல்லோருக்கும் ஆசி வழங்கிக் கொண்டே விலகுகிறது.

ஒவ்வொரு ஜீவனும் பிரிந்த பிறகு அந்தத் தேகத்தைச் சுடுகாட்டில் முழுமையாக எரிக்கும் போது அல்லது புதை காட்டில் புதைக்கும் போது புறவெளியில் சூக்கும தளத்தில் நின்றிலங்கும். எல்லாம் முடிந்த பிறகு அது வெட்டவெளியில் ஜீவ வெளியில் பிரவேசிக்கும். புறவெளியிலிருந்து ஜீவ வெளியில் பிரவேசிப்பதைப் பரம புருஷர்கள், சித்தர்கள், யோகிகள் அறிவார்கள். தன் சீடர்களுக்குச் சொல்வார்கள். அதற்குப் பிறகு அதற்கு வரும் பிறவி எல்லாம் பிரம்ம சொரூபப் பிறவியாகும். பிரம்ம அனுபவங்கள் கிடைக்கும். நிஷ்காமிய சித்தியை இந்த ஜீவ விழிப்புப் பெற்ற ஜீவன்கள் பெறும். அதற்குப் பிறகு வரும் பிறவிகளில் அது ஆற்றுகின்ற சாதனைகளுக்கு எந்தத் தடையும் வருவதில்லை.

இதில் மற்றொரு கருத்து என்னவென்றால் சமயத்தில் பக்தர்களுக்கும் இதற்கும் சண்டைகள் வருவதுண்டு.

அதாவது, தன்னைச் சமாதி கொண்டு வழி படுபவர்கள் - தன் சமாதியைப் பலர் வழிபட்டுக் கொண்டு இருக்கும் போது ஒரு பிறவியெடுத்துத் தன் சமாதிக்கு வந்து நின்று - ஒரு பிரம்ம ஸ்திதி அடைந்த பிறகு இந்தச் சமாதி தன் முன் ஜென்ம சமாதி என்பதைத்

தெரிந்து கொள்ளும். அப்போது அங்கு இருப்போரிடம் சத்திய நிலையில் நின்று இந்த சமாதியை வணங்காதீர்கள். இது இறைவனிடம் முக்தி அடையவில்லை. (விதேக முக்தி) அடையவில்லையென்று சொல்லும்.

அந்தச் சமாதியை வழி படுபவர்கள்; அந்தச் சமாதியின் மீது வைத்திருக்கின்ற பாசத்தால் இவரை விரட்டி விடுவார்கள். இதுவும் பல இடத்தில் நடந்திருக்கிது.

ஜீவ யாத்திரையில் ஒரு படி என்னவென்றால் - ஜீவ குருட்டினை நீக்குதல். இது பிரமிக்கத் தகுந்த அத்தியாயம். ஜீவ யாத்திரையில் ஜீவ குருட்டினை நீக்குதல் அத்தியாவசியமான ஒன்றாகும்.

ஜீவ விழிப்பில் ஜீவ பேதங்கள் எல்லாம் விலகவேண்டும். ஜீவ அபேதம் வரும். ஈசன் எனக் கருதி எல்லா ஜீவனையும் நேசிக்கும் பரிபக்குவம் வந்தெய்தும்.

ஜீவ விழிப்பு வந்து விட்டால் - உலக விழிப்பு அதில் அடங்கியுள்ளது. ஜீவ கண்ணைத் திறந்தால், விழிப்புக் கண்ணைத் திறந்தால் தன் சித்திரத்தைத் தானே அறிதல், தன் சிற்பத்தைத் தானே அறிதல்; தன் சிலைக்குள் ஒரு சித்திரம் இருப்பதை அறிதல். தன் சித்திரத்திற்குள் பேரருள் இருப்பதை உணர்தல். அந்தப் பேரருளுக்குள் அகண்ட நவரத்தின கூடத்தில் பிரவேசித்தல் ஆகிய இவையெல்லாம் சாத்தியம்.

மூன்று குருடர்கள் இருக்கிறார்கள். ஜீவ விழிப்பு, ஜெக விழிப்பு, சிவ விழிப்பு என்ற மூன்றிலும் குருடர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய வாழ்வு எப்படி இருக்கும்? அதை விளக்கப் போனால் தீரா சோகம் வரும். அவர்கள் செய்கின்ற செயல்களினால் தனக்கும், மற்றவர்களுக்கும் துன்பத்தைத் தான் தருவார்கள்.

ஒரு சற்குருவின் பணி ஒரு சீடனுக்கு ஜீவ விழிப்பு, சிவ விழிப்புத் தருவது; எல்லையில்லா வெளியில் சாந்தமாய் விஜயம் செய்தல். எல்லாம் ஜீவ விழிப்பில் தொடங்கி சிவ விழிப்புக்குள் முடியும்.

ஓம் சாந்தி ஓம் சாந்தி ஓம் சாந்தி

சந்தோஷம்

# சிவ விழிப்பு

விழிப்பு ஒரு மாபெரும் திருவருள் சக்தியாகும். விழிப்பில் தான் வாழ்வு அடங்கியுள்ளது. விழிப்பு முழுமையாக இருக்கும் போது விழிப்புக்குரிய அது பூரணமாக உள்ளது என்று பொருள். ஒரு ஜீவன் விழிப்பு நிலைக்கு வந்து விட்டால்; ஜீவ விழிப்பு முழுமையாகப் பெற்று விட்டால்; அது முழுமையாகி விட்டது என்று பொருள்; பூரணமடைந்து விட்டது; பூரணமாய் உள்ளது; பூரணமான ஒன்று மீண்டும் பூரணமற்ற நிலைக்கு வராது. அது ஏறு முகத்தில் பரிபூரணமாகும். விழிப்பு என்றால் அது எந்த நிலையில் உள்ளதோ - அந்த நிலையில் அந்த ஜீவனுக்கு எல்லாம் தெரியும். முதலில் தன்னைத் தான் அதற்குத் தெரியும்.

விழிப்பு மூன்று நிலைகளில் உள்ளது. அவையாவன : 1. ஜெக விழிப்பு 2. ஜீவ விழிப்பு 3. சிவ விழிப்பு

**ஜெக விழிப்பு :**

ஜெகத்தில் ஜீவன்கள் ஜீவ குருட்டோடும் வாழ்கிறது; ஜீவ விழிப்போடும் வளர்ந்து - வாழ்ந்து அடுத்த நிலைக்குச் செல்கிறது.

இந்த உலகத்தில் ஜீவன் உலக விழிப்பு நிலை பெற்றால் எல்லாம் தெரியும், உலகமெல்லாம் தெரியும், நல்லவர்-கெட்டவர் தெரியும், நன்மை - தீமையும் தெரியும். எல்லா மிருகங்கள், மரங்கள், செடிகள், கொடிகள், மனிதர்கள் உலகம், உலகத்தில் உள்ள 64 கலைகள் எல்லாவற்றையும் அறிந்து இருக்க வாய்ப்பு உள்ளது.

அறிவு மேதைகள், சான்றோர்கள், அறிஞர்கள், வீரம் உள்ளவர்கள், விவேகம் உள்ளவர்கள், எல்லாம் இந்த வகையில் சேர்ந்தவர்கள். விஞ்ஞானிகள், எழுத்தாளர்கள், அரசியல்வாதிகள், பொதுச்சேவை செய்பவர்கள், குடும்பத்தை நன்றாக நடத்துபவர்கள், பெரிய - பெரிய விஞ்ஞானிகள், நாட்டை வழி நடத்திச் செல்பவர்கள், இன்னும் அறிவின் உச்சியில் உள்ள எல்லோரும் உலக விழிப்புப் படைததவர்கள். 100 ஆண்டு வாழ்வார்கள் தங்கள் வாழ்க்கையை உணர்ந்து கொள்வார்கள்.

அவர்களுக்கு ஜீவ விழிப்பு பற்றிய கருத்துகள் தெரியும். ஆனால்

அதற்குச் சாதனை செய்ய வர மாட்டார்கள். இவர்களை சமூகம் மதிக்கும். கௌரவத்திற்கு ஆசைப்படுவார்கள்.

**ஜீவ விழிப்பு :**

இதைப் பற்றிய விளக்கம் இந்நூலில் தனிக் கட்டுரையில் பார்க்கவும்.

**சிவ விழிப்பு :**

பஞ்ச அவத்தைகளைக் கடந்தவரின் குண்டலினித் தாய் ஐந்து நிலைகள் கடந்து ஆறாவது நிலையில் மணிக் கதவுதாள் திறக்கப்பட்டு திருச்சிற்றம்பலத் திருக்கோலத்தில் அமர்ந்து அங்கிருந்து சகஸ்ராரத்திற்கு, கபால வெளிக்கு வந்து கபால தரிசனம் கண்ட பிறகு, சொர்க்க வாசல் திறக்கப்பட்டுச் சொர்க்க வாசலின் மூலம் ஜீவ வெளி தரிசனம் காணும் போது அந்தச் சிவ விழிப்பு மாணிக்கக் கதவு திறக்கப்படுகிறது. அது இதைப் பார்க்கிறது, இது அதைத் தரிசனம் செய்கிறது. அது-அது இடத்திலிருந்து அங்கு-இங்கு இருந்து இதுவும், அதுவும் உணர்வினால், அருள் ஆகர்ஷ சக்தியினால், விதி கடந்த நிலையில், ஆத்ம ஒளியும், அருட் பெருஞ் ஜோதி ஒளியும் சங்கமமாகின்றன. அப்போது சிவ விழிப்பு ஏற்படுகிறது.

சிவ விழிப்பு வந்ததும் ஜீவன் என்ற நிலையில் இருந்த அதற்கு ஜீவன் என்ற பெயர் கலைந்து விடுகிறது. வெட்டவெளியெல்லாம் அது தெரிகிறது. எங்கெங்கிருந்து உயிர்கள் எது - எது வேண்டினும் அங்கங்கிருந்து சிவன் அந்த உயிர்களுக்கு ஆறுதல் அளிக்கிறது என்ற இரகசியத்தை அறிகிறது. அறிகிறதோடு மட்டுமல்லாமல் அதைக் காணுகிறது. சிவ விழிப்பு வந்த பிறகு ஜீவ விழிப்புக்கும், உலக விழிப்புக்கும் வேலையில்லாமல் போகிறது. இந்தச் சிவ விழிப்பு வந்தவுடன் மற்ற உயிர்களுக்கு உலக விழிப்பு, ஜீவ விழிப்பு நிலையை வழங்குவதற்கான ஒரு சித்தி கிடைக்கிறது.

''சி'' என்றால் சிவம். அது ஆடாத, அசையாத நிலையில் இருக்கிறது. நிலைத்த பெரிய ஒன்று அது. யாராலும் அதை அசைக்க முடியாது. அதற்கு நிகரான இன்னொன்று இல்லை. அது இல்லாத இடம் எதுவும் இல்லை.

"சி" - இந்த எழுத்தில் ஒன்று உள்ளது. அந்த "சி" என்ற எழுத்தை விழிக்கச் செய்து சிகரத்தை உகரம் என்ற சாவியினால் திறக்கப் பெற்றால் எங்கும் நிலைக்களனாய், நிலைத்த மகா பிரம்மாண்ட - பிரம்மாண்டமான எல்லையற்ற, காணக் கண் கோடி வேண்டும் என்ற நிலையில் ஒன்றுள்ளது.

"சி" என்ற சிகாரம். இந்த "சி" என்ற சிகாரத்தை அறிவதற்குச் சாகாக் கல்வி கற்க வேண்டும். சாகாக் கல்வியில் சாகாக் கலையுள்ளது. அதை உணர வேண்டும். உணர்ந்து கண்டு அறிய வேண்டும். அதனுள் மூன்று சக்திகள் உள்ளன. அது சாகாத்தலை, வேகாக்கால், போகாப்புனல்.

"சி" சிரசின் உச்சியில் உள்ளது. "சி"-வெட்ட வெளியின் மைய தளத்தில் உள்ளது.

ஆதி மூலத்தில், அந்தரங்கத்தில், அந்தரங்கமாய் யாராலும் நெருங்க முடியாததாய், எந்தத் தத்துவத்தாலும், அதை நெருங்க முடியாததாய், நாதத்தால் நெருங்க முடியாததாய், "அது" அதுவாகி அதுவே கடவுளாகி நிற்கும்.

அதுவை விளக்க எழுத்தில்லை. சொல்ல வார்த்தை தெரியவில்லை. அந்தச் சிவ விழிப்பில் பெற்ற இரகசியங்களை வெளியிட அதிகாரமில்லை.

சிவ விழிப்புக்குப் பிறகு சாயுச்யம் கிட்டுகிறது.

"வ" - "வ" என்பது வகாரம் என்பதாகும். வகாரம் சிகாரத்திலிருந்து வெளிப்படுகிறது. ஒரு காலத்திற்குப் பிறகு சிகாரத்திற்குச் சென்று ஒடுங்குகிறது. வகாரம் சிகாரத்தில் ஒடுங்கிய பிறகு வகாரத் தன்மை அதிலிருந்து கலைந்து விடுகிறது. இரண்டும் ஏகமாய், ஏகாட்சரமாய், ஏகாக்ரமாய், ஏகானந்த நிலையிலே இருக்கும். பிறகு சூன்ய காலம் முடிந்த பிறகு சிகாரம், வகாரத்தைத் தட்டி எழுப்பி வகார சக்தியும் தன்னிலிருந்து தந்து வகாரமாய் வெளிப்படும். அதன் பிறகு தான் அது இயங்கும் சக்தியாகி ஓங்கார நாதத்தை மென்மையாக வெளிப்படுத்தும் "ஓங்காரம்" ஒலித்துக் கொண்டிருக்கும். அது ஒலிக்க ஒலிக்க வெட்டவெளி விரிந்து கொண்டே வரும். வெட்ட

வெளியிலிருந்து ஒளி வந்து கொண்டே இருக்கும். அது ஒலிக்க - ஒலிக்க ஆகாயம் வந்து கொண்டேயிருக்கும். அது ஒலிக்க - ஒலிக்க காற்று வந்து கொண்டேயிருக்கும். அது ஒலிக்க - ஒலிக்க அக்னி வந்து கொண்டேயிருக்கும். அது ஒலிக்க - ஒலிக்க நீர் வந்து கொண்டேயிருக்கும்.

அதற்குப் பிறகு அண்ட கோளங்கள் வந்து கொண்டேயிருக்கும். அது ஒலிக்க - ஒலிக்க ஜீவ ராசிகள் தோன்றும். அது ஒலிக்க - ஒலிக்க ஜீவ ராசிகளின் இயக்கங்கள் வெளிப்படும். அது ஒலிக்க - ஒலிக்க அது ஒலிக்க - ஒலிக்க ஜீவராசிகள் வாழத் தொடங்கும்;

ஆதி அந்தமெல்லாம் அதன் ஜீவனில் வைக்கப்படும். அது ஒலிக்க - ஒலிக்க ஜீவ ராசிகள் அழத் தொடங்கும். சிரிக்கத் தொடங்கும்.

அது ஒலிக்க - ஒலிக்க எல்லாவற்றிலும் மாயை நிரம்பி நிற்கும். பதினெண் குணங்கள் மலரத் தொடங்கும்; இக சுகம், பர சுகம் இரண்டு நிலையும் தனியாகப் பிரியும்.

அது ஒலிக்க ஒலிக்க உயிர்கள், உலகம், உணர்வுகள், கலைகள் மற்றும் எல்லாம் பொலிவற்று விளங்கும்.

ஆனந்த பைரவி, முகாரி, பூபாளம், உச்சக்கட்டத்தில் இருள், கசப்பு, இனிப்பு வெளிப்படும். அன்பும், பகையும் நாடகத்தை நடத்தும்.

இன்று இந்த உலகம் இப்படித்தான் உள்ளது.

சிவ விழிப்பில் எட்டு, இரண்டு என்று சொல்கின்ற அகரம், உகரம் வெளிப்படும். பதினெண் சித்தர்கள் இந்தத் தத்துவத்தை நன்கு அறிந்துள்ளார்கள்.

சிவ விழிப்பு நிலை பெற்றவர்கள் 15% அந்த ஜீவ விழிப்பு நிலையிலேயே இந்த உலகில் நடமாடுவார்கள். அவர்களை யாராலும் கண்டு கொள்ள இயலாது. அவர்கள் எப்போதும் ஆசீர்வதிப்பார்கள்.

சிவ விழிப்பு இருப்பதால் தான் உலகில் இருந்தே கடவுளுடன் கலந்திருப்பார்கள், கடவுளுடன் பேசுவார்கள், கடவுளைக் கண்டு கொண்டேயிருப்பார்கள். எல்லாம் தெரிந்தும் மௌனமாய்

இருப்பார்கள். இந்தச் சிவ விழிப்பு பெற்றவர்கள் இன்று இந்த உலகில் 7,8 பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மங்கலமாய், மா மங்கலமாய், சுபமாய், மகா சுபமாய், மகா சிவ சுபமாய், ஆனந்தமாய், மகா ஆனந்தமாய், மகா சிவ ஆனந்தமாய் எல்லாம் கண்டு, எல்லா நிலையும் கடந்து ஏகானந்தத்தில் பரசிவ ஆனந்தத்தில், வெட்ட வெளியாய் உலகில் சிவ விழிப்பிலிருந்து இந்த உலகில் தன் சிவ விழிப்பைக் காண்பார்கள்.

சந்தோஷத்திற்கு அதிபதி இவர்கள். இவர் யாருக்கு வேண்டு மென்றாலும் சிவ சந்தோஷத்தை, ஆனந்த சந்தோஷத்தை எந்த நிலையிலும் தர இயலும். தர இயலும்.

ஜெக விழிப்பு மூலாதாரத்தில் தோன்றும். அது தோன்றுவதற்கு முன்பு செஞ்சுடர் தோன்றும்.

ஜீவ விழிப்பு ஆக்ஞை சக்கரத்தில் வெளிப்படும். அது நீலச் சுடர். அந்த நீலச் சுடர் எல்லா ஜீவனையும் அறியும், ஓங்கார நாதம் கேட்கும். அங்கே ஒரு கதவு இருக்கிறது. அது திறக்கப்பட்ட பிறகு மூன்றாவது கண் வெளிப்படும். அதில் ஜீவ விழிப்பு வரும் போது சப்த பிரம்ம தரிசனம் கிடைக்கும். கபால வாசல் ஒன்றுள்ளது. அங்கே சிவ விழிப்பு தோன்றும்.

*மூலாதார விழிப்பு - செஞ்சுடர்*

*ஆக்ஞை சக்கர விழிப்பு - நீலச் சுடர்*

*சிவ விழிப்பு - வெண் சுடர்*

மூன்றும் ஒன்றன் பின் ஒன்றாக வரும். இந்த மூன்று விழிப்புகள் மனித இடத்திலிருந்து தான் வரவேண்டும் என்ற அவசியமில்லை. மிருகம், தாவரங்கள் இவைகளிடமிருந்தும் வரலாம். மனிதனிடமிருந்து கூட விழிப்பு வரலாம். வராமலும் இருக்கலாம்.

ஓரறிவில் தொடங்கி எங்கும் தோல்வியடையாமல் தடங்கல் இல்லாமல் ஒவ்வொரு படியாக மனிதப் பிறவிக்கு வந்து மூன்று விழிப்பும் பெற்று எல்லையற்ற ஒன்றில் சங்கமமாகும் ஜீவன்களும் உள்ளன.

சிவ விழிப்புக்குச் சான்றாக இதோ விவரிக்க முடியாத, விலக்க இயலாத மகா வெட்டவெளி ஜோதி - மனித உருவத்தில் 12000

ஆண்டுகள் முன் பாரதத்தில் மராட்டிய மண்ணில் நடமாடிக் கொண்டிருந்தது. அதன் பெயர் "ஞானேஸ்வர மகராஜ்". அது புனிதமானது. புனிதங்களுக்கெல்லாம் புனிதமானது. தமிழில் சொல்லப் போனால் தூய்மையானது. தூய்மைகளுக்கெல்லாம் தூய்மையானது. ஒரு பொருளின் மெய்ஞ்ஞானத் தூய்மையைப் பார்க்க வேண்டும் என்றால் அதை 1000 தடவை அதற்கான பக்குவத்தைச் செய்து அதன் மெய்ஞ்ஞானத் தூய்மைக்குக் கொண்டு வர வேண்டும்.

தூய்மையான ஒன்றே ஒன்று உள்ளது. அது ஒன்றுதான் இருக்கிறது. அந்த ஞானிக்கு ஈடு இணையான இன்னொரு ஒன்று இல்லவே இல்லை. அது தான் -

"வெட்ட வெளி"

ஞானேஸ்வர மகராஜ் அந்த அளவிற்கு அந்த வெட்டவெளியைத் தரிசிக்கும் நிலையும், அதோடு கலக்கும் நிலையும் தூய்மையாக இருந்தது. தூய்மைக்குள் தெய்வம் உள்ளது. சுத்தம் சோறு போடும். அசுத்தம் அழ வைக்கும். அவர் எல்லாவற்றிலும் பிரம்மத்தைப் பார்த்தார். அவர் பார்க்கும் போது எருமைமாடு, காக்கை மற்ற எல்லா மிருகங்களும், மரம், கொடி, செடி எல்லாவற்றிலும் - "எல்லாம் பிரம்மமாய்" இருப்பதை சத்திய நிலையில் பார்த்தார்.

ஞானேஸ்வர மகராஜ் தன்னைத்தான் அறிந்தவர். எல்லோருக்கும் ஜீவ விழிப்பு கொடுத்தார், சிவ விழிப்பு கொடுத்தார். பிரம்ம நிர்வாணம் யார் ஒருவர் அடைந்தாரோ அவர் ஜீவ விழிப்பு கொடுக்க முடியும். வெட்டவெளி ஆக்ஞை சிலருக்கு உள்ளது. அவர்கள் ஜீவ விழிப்பு உள்ளவர்களுக்குச் சிவ விழிப்பு கொடுக்கிறார்கள். அந்தச் சிவக் கண்ணைத் திறக்கிறார்கள். அவரே ஞானேஸ்வர மகராஜ். ஞானேஸ்வர மகராஜ் போன்ற ஆத்ம ஞானிகள் எத்தனையோ ஆண்டுக்கு ஒரு முறை தான் பூமிக்கு வருகிறார்கள். வாழ்க ஞானேஸ்வர மகராஜ்.

அருட்பிரகாச வள்ளலார் பிறக்கும் போதே சிவ விழிப்பில் பிறந்தார். ஏழாம் ஆண்டு சிவ விழிப்புப் பெற்றார். இறைவனுடைய வல்லமையெல்லாம் அவரை வந்து அடைந்தன. இறைவனை அடைய ஒரே மார்க்கம் "ஜீவ காருண்யம்" என்பதைத் தன் சிவ விழிப்பில் உணர்ந்தார். அந்த எங்கும் நிறைந்த மெய்ப் பொருள் ஆரம்ப காலத்தில்

முருகப் பெருமானாக காட்சியளித்தது. பிறகு அதுவே தன் எதார்த்த நிலையாக அருட்பெருஞ்ஜோதியாகக் காட்சி அளித்தது. பரஞானம் பெற்றார். பரமானந்தம் பெற்றார். அவருடைய அகவல், திருவடிப்புகழ் வசனப் பகுதி. யாவும் மரணத்தை வெல்லும் ஆற்றல் படைத்தவை. அவருடைய எல்லா வல்லமைகளையும் இவை வெளிப்படுத்துகின்றன.இறந்த மனிதனை எழுப்புகின்ற வல்லமை ஒரே சமயத்தில் பல இடங்களில் தன் பணிகளை ஆற்றுகின்ற வல்லமை இவருக்கு இருந்தது.

இவர் நாமத்தில் சத்தியமும், இறை சக்தியும் நிறைந்திருந்தது. இவர் நாமத்தை யார் சத்திய நிலையில் நின்று சொல்லுகிறார்களோ அதற்கு ஏற்றவாறு மற்ற ஜீவ ராசிகளும் பணியும்.

ஒரு சமயம் ஒருவர் இராமலிங்க சுவாமிகளைப் பார்க்க வந்து கொண்டிருந்தார். அவர் எதிரே ஒரு நாகப் பாம்பு வந்து கொண்டிருந்தது. இராமலிங்க சுவாமிகளின் மீது சத்தியம். தீண்டாதே என்றார். அந்த நாகம் திரும்பிச் சென்றது. வந்தவர் இராமலிங்க சுவாமிகளைப் பார்த்தார். நடந்ததை இராமலிங்க சுவாமிகளே அவரிடம் சொன்னார். பெயர் சொன்னாலே ஜீவன்கள் எல்லாம் கட்டுப்படுகின்றது என்றால் சுவாமிகளின் சிவ விழிப்பு வல்லமை எத்தகைய சிறப்புடையதாகும்.

ஒரு இரவில் கருங்குழி என்ற இடத்தில் தங்கி அகல் விளக்கின் அருகேயிருந்து அகவலை எழுதினார். விளக்கின் எண்ணை தீர்ந்து விட்டது. சுவாமிகள் அருகில் உள்ள குவளையிலிருந்த தண்ணீரை விளக்கில் விட்டு விளக்கு எரித்த அருளாற்றல் ஜீவ விழிப்பு உள்ளவர்களுக்கு உண்டு. இறுதியில் மற்றவர்கள் போல் மரணம் எடுக்காது, பிணமென்ற பெயர் எடுக்காது. சூரையன் காட்டிலே கொண்டு போய்ச் சுட்டிடாது தன்னைப் பார்த்துக் கொண்டார். தான் மறைவதற்கு ஒரு சில நாழிகைகளுக்கு முன் எல்லாவற்றையும் அழைத்தார். தான் மறையப் போகும் செய்தியைச் சொன்னார். ஒரு கூரை வீட்டிற்குள் நுழைந்தார். கதவைத் தாழிட்டார். வெட்ட வெளியில் இரண்டறக் கலந்தார். சிவ விழிப்பு பெற்ற பிறகு அந்தச் சிவமே அவரை அழைத்துச் செல்கிறது.

அவருடைய சாஸ்வத மந்திரம் இதுதான்.

*அருட் பெருஞ்ஜோதி. அருட்பெருஞ்ஜோதி*
*தனிப்பெருங்கருணை. அருட்பெருஞ்ஜோதி*

கௌதம புத்தர் 40 ஆண்டுகள் கடுமையாகக் காடு, மேடு எல்லாம் அலைந்து மெய்ஞ்ஞானப் பொருளைத் தன் சிந்தையில் ஏற்றி ஆகாயத்தைப் பார்த்த வண்ணமாகவே காடுகளிலும், மேடுகளிலும் அலைந்தார். பின்பு திரிந்தார். அலைவதற்குக் காரணமான சக்திகள் ஓய்ந்து விட்டன. எந்த ஒன்றுக்காக நாடி-நாடி அலைந்தாரோ அந்த அலையும் சக்தி அவரிடம் ஓய்ந்து விட்டது.

திரிந்தார். காடுகள், மலைகள் எல்லாம் திரிந்தார். கபிலவஸ்துவெல்லாம் தேடினார். கபிலவஸ்து கடந்து மற்ற எல்லா இடங்களிலும் தேடினார். திரிந்தார். தேடுதல் சக்தியும், திரிதல் சக்தியும் ஓய்ந்து விட்டன. அவரிடமிருந்த இகத்தின் சக்தியெல்லாம் ஓய்ந்து விட்டன. தேவையில்லா சக்திகளெல்லாம் ஓய்ந்து விட்டன.

அரண்மனையில் சுக போக வாழ்விலிருந்து வாழ்ந்து பேரழகும் அன்பும் நிறைந்த மனைவியையும், தெய்வ வடிவத்தில் இருக்கும் பச்சிளங் குழந்தையையும் விட்டு எந்த ஒன்று அவரை 40 ஆண்டுகள் தேடச் செய்ததோ அந்த ஒன்று அவரின் எல்லாச் சக்தியும் வெளிப்பட்ட பிறகு அவருள்ளே தெரிந்தது.

அவருக்கு ஜீவ விழிப்பு தந்து எதிர்காலத்தில் வரும் பல்லாயிரம் ஆண்டுகள் வரும் மனிதர்களின் துன்பத்தைத் தீர்க்கும் வழி முறைகளை அவரை அழைத்து வந்த அந்த ஒன்று அவர் கேட்ட கேள்விக்குப் பதிலாகத் தந்தது. அதே ஒன்று போதி மரத்தின் அடியில் ஞானம் பெற்ற பிறகு அவருக்குச் சிவ விழிப்பு கொடுத்து, மகா நிர்வாணத்தைப் பெற்ற பிறகு அவருக்குச் சிவ விழிப்பு கொடுத்தது.

மகா நிர்வாணத்தை அடையும் மதி நுட்பத்தையும் கொடுத்தது. அவர் எல்லா ஜீவன்களுக்கும் ஜீவ விழிப்பு கொண்டு வரும் ஆற்றலைப் பெற்றிருந்ததால் - மனிதனுக்குச் சேர வேண்டிய அல்லது அடைய வேண்டிய மகா நிர்வாண தத்துவ சித்தாந்தத்தை, வித்தையை அவர் போதனையில் இரகசியமாக வைத்து எல்லோருக்கும் தந்தார். இன்னும்

தந்து கொண்டிருக்கிறார்.

மேலும், அவர் பெரும் பாவங்களைச் செய்து வரும் ஜீவனுக்கு கூடப் பாவ விமோசனம் தந்து அந்த மகா நிர்வாண தத்துவ சித்தாந்த வித்தையை அருளியுள்ளார். அம்பாபாலி என்ற கணிகையைப் புனிதமாக்கிப் பிராயச் சித்தங்கள் கொடுத்தார். அதன்படி அவள் நடக்க மகா நிர்வாண தத்துவ சித்தாந்த வித்தையை அவளுக்கு வழங்கி அருள் ஆசி வழங்கியுள்ளார். இது ஜீவ விழிப்பின் இரகசியமாகும்.

திருவண்ணாமலை சேஷாத்திரி சுவாமிகள் அதி அற்புதமான ஆன்மிகச் சக்ரவர்த்தி. அவர் ஒரு நாள் திருவண்ணாமலையில் ஒரு சாலையோரத்தில் ஆகாயத்தைப் பார்த்த வண்ணம் அமர்ந்திருந்தார். திடீரென்று, தன் கையை மேலே தூக்கி அதோ போகின்றான் விட்டோபா என்று ஆகாயத்தை நோக்கிக் காட்டினார். அந்தச் சமயத்தில் விட்டோபா போளூரில் ஜீவ சமாதி அடைந்தார். அவர் ஆத்மா வெட்ட வெளியில் கலப்பதற்காகச் சென்று கொண்டு இருக்கும் போது திருவண்ணாமலையில் சேஷாத்திரி கண்டு சொன்னார்.

இது சிவ விழிப்புக்குத் தக்க சான்றாகும். வெளியில் நடமாடும் ஜீவன்களையும், சித் சக்திகளையும் காணும் ஆற்றல் சிவ விழிப்பு உள்ளவர்களுக்கு உண்டு.

**சந்தோஷம்**

எந்த வினையை எவன் செய்தானோ, அவன் அந்த வினையில் வரும் மறுவினையை அனுபவித்தே தீர வேண்டும். அந்த வினை முற்றிலுமாக அனுபவித்த பிறகே, அந்த வினை அவனை விட்டு விலகி விடும். பிறகு ஆயிரம் முறை வருந்தி, வணங்கி அழைத்தாலும் அந்த வினை - அவனைப் பற்றாது.

# அற்புதம், அதிசயம்

கடவுள் என்று ஒன்றுமில்லை. எல்லாமே கடவுள்.

வானை, மண்ணை, தகனத்தை, உன்னை, ஊரை, நுண்ணிய திருவருள் சக்தியை வணங்கலாம், வணங்காமலும் இருக்கலாம்.

என்றும் விழிப்பாய் இருப்பாய். ஜீவ விழிப்பில் இரு. அங்கிருந்து சிவ விழிப்புக்குச் செல். சிவ விழிப்பாய் இரு. அங்கிருந்து எல்லாவற்றையும் பார்.

தெரிவதெல்லாம் சிவம், காண்பதெல்லாம் சிவம். உணர்வதெல்லாம் சிவம், கேட்பதெல்லாம் சிவம், பார்ப்பதும், பார்க்கப்படுவதும் - சிவம். அவ்வாறு என்றால் பார்ப்பதும் ஒன்றுமில்லை. பார்க்கப்படுவதும் ஒன்றுமில்லை. இரண்டுமே ஒன்றுக்குள் மறைந்து விடுகிறது.

ஜீவ யாத்திரையில் அற்புதங்கள், மர்மங்கள் ஆகியவை யாத்திரையில் செல்ல - செல்ல கிட்டே வரும். நெருங்கி வரும். அவைகள் தங்களை யார் என்று அறிமுகப்படுத்திக் கொள்ளும். இன்னும் செல்ல - செல்ல யாத்திரைக்கு உதவி புரியும். யாத்திரையை வாழ்த்தும்.

அந்த ஜீவ யாத்திரைக்கான இரகசியங்களின் கதவுகள் திறக்கப்படும். ஜீவ இரகசியம் புரிய வரும்.

அற்புதம் - கதவு திறக்கப்படும். அங்குச் செல்ல ஆயிரம் - ஆயிரம் கோடி அற்புதங்கள் கொட்டிக் கிடக்கும். உனக்கு வேண்டிய அற்புத வல்லமையைப் பெறலாம்.

அங்கிருந்து செல்ல - செல்ல - செல்ல மர்மங்களின் மணிக்கதவு திறக்கப்படும். அங்கே சென்றால் மர்மங்கள் வெளிப்படும். உனக்கு அவைகள் தேவை.

அதிசயங்கள் கதவு திறந்த பிறகு, உனக்கு வேண்டிய அதிசயங்களின் வல்லபத்தைப் பெற்று விட்டால் அதன் வல்லமையினால் அற்புதங்களின் கதவைத் திறந்தால், அற்புதம்

உள்ளே நுழைந்தால் அந்த அற்புத வல்லபத்தை எடுத்துக் கொண்டு, மர்மங்கள் கதவைத் திறந்தால் அதன் வல்லபத்தினால் ஜீவ இரகசியத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

ஜீவ இரகசியம் தெரிந்ததும், சிவ விழிப்புக்குச் செல்ல முனைந்து, ஜீவ இரகசியம் தெரிந்ததும் ஜீவ ஜோதி தரிசனம் கண்டால், அதனுள்ளே சென்று சிவ விழிப்பைப் பெற்றால்; சிவ விழிப்பு வந்ததும் ஜீவ விழிப்பு தேவையற்றதாகி விட்டது. ஜெக விழிப்பு தேவையற்றதாகி விட்டது. சிவ விழிப்பு வந்ததும் பயணங்களெல்லாம் ரத்தாகி விடும்.

பயணம். எல்லாம் சித்தமாகி விடும். அந்தச் சித்துகள் வாகனமாகி சிவசிந்தூரத் தேராகி, சூரிய பிரகாசத்தில் அறிவு வெளியிலே, மாணிக்கத்தால் ஆன இரத்தினத் தேரில் சிவ யாத்திரை மேற்கொள்வாய்.

சிவ விழிப்பிலே சக்தி தரிசனம் பெறுவாய். அது உனக்குச் சிவ தரிசனம் காட்டும். அது உன்னைச் சிவ தரிசனத்திற்கு அழைத்துச் செல்லும். இப்போது உனக்கு எந்த வல்லபமும் வேண்டா. தேர் மறைந்து விடும். அனந்த கோடி யுகங்கள் அனந்தமாய் சிவ நாமத்துடன், இந்த ஏகப் பெருவெளியில் என்றும் இன்பமாய், இன்பத்துள் இன்பமாய், ஆனந்த வெளியில் அருட்சிவமாய் ஜீவர்களுக்குக் காட்சியளிப்பாய்.

சந்தோஷம்

எவன் ஒருவன் தன் ஆத்மாவை அறியும், தரிசிக்கும் கல்வி கற்கின்றானோ, அந்தக் கல்விக்குச் சாகாக்கல்வி என்று பெயர். அத்தகையோரின் ஜீவ யாத்திரை சுபமாக சுகமாக நடக்கும். அதற்கு இறைவன் ஆசிகள் உண்டு.

# கடவுளின் மகா விழிப்பு

கடவுள் விழிப்பாக இருக்கிறார். அவருக்கு மறதி, தூக்கம், சோகம் ஏதுமில்லை. கடவுள் மகா விழிப்பில் இருக்கிறார். அவருக்கு நெருங்கியவர்கள், அன்னியர்கள் என்று யாருமில்லை. ஜீவன்களில் அன்னியோன்யம் ஏதுமில்லை. கடவுள் மகா சிவ விழிப்பில் இருக்கிறார். அவருக்கு எதைப் பற்றியும் சிந்திக்க அவசியமில்லை. சிந்தனைக்கு அப்பால் அவர் உள்ளார். கடவுள் காலம் கடந்த சிவ மகா மேரு விழிப்பில் உள்ளார். அவர் மகா தூய்மையானவர். அவரே அவர்.

கடவுள் காலம் கடந்து கற்பனை கடந்து கபோதி நிலையற்ற மகா மண்டலேஸ்வரர்; மகா கபாலீஸ்வரர்; மகா ஈஸ்வரர் நிலை கொண்டவர். எல்லா மண்டலங்களின் படைப்புத் தலைவர் கடவுளேயாகும். அதனால் அவர் மகா மண்டலேஸ்வரராகிறார். அதற்கு அப்பால் சென்று பிரம்மாண்ட மகா மண்டலேஸ்வரர் நிலையும் அவருக்கு அவர் தாமே தந்து கொண்டது.

கடவுள் திருவருள் விழிப்பில் எல்லா ஜீவன்களுக்கும், பக்குவத்தைத் தந்து பரிபக்குவ நிலைக்கு அழைத்துச் சென்று இக சுகம் காட்டி, இக சுகம் விலக்கி, அதனதன் உள் ஜீவ சுகத்தைக் கொடுத்து அதை அனுபவிக்கச் செய்து அதனிலிருந்து அதை விலக்கி, பரமானந்த பெரும் சுகம் தந்து, அதைச் சுவைக்க, அதில் திளைக்க, அதனுள் அம்மயமாக இருக்கச் செய்து பிறகு அதனிலிருந்து அழகாக மகா பரிபூரண நிலைக்கு அழைத்துச் சென்று சுகாதீத நிலைக்குக் கொண்டு வந்து தன் ஆதி மூல சுகத்தை அதாவது கடவுள் சுகத்திற்குக் கொண்டு வந்து கட்டித் தழுவித் தன்னுள் கரைத்து, தன்னுள் இரண்டற்ற நிலையில் கலந்து கொள்ள என்றும் எங்கும் கடவுள் சுகமாய் ஜீவ நிலை கடந்து சிவ - சிவமாய் சிவமயமாய் மகா குண்டலினி மையத்தில் சிரித்துக் கொண்டே மகா சிவ மேரு விழிப்பில் இருந்து கொண்டே, மகா சிரிப்பு ஒலியில் ஆனந்த - ஆனந்தமாய், அனந்த - அனந்தமாய், ஆனந்த - அனந்த சயனத்திலே, அதற்கு அப்பால் எழுத்தாக்க ....

**சந்தோஷம்**

# மனிதா - உனக்குத்தான் இது

மனிதா - என்று உன்னை அழைத்தவுடன் உனக்குக் கோபம் வருகிறது. நீ மனிதன் தானே! மனிதனை - மனிதா என்று அழைக்கக் கூடாதா? ஒன்றை நீ தெரிந்து கொள். எல்லாவற்றையும தெரிந்து கொள்ளும் ஆற்றல் உன்னிடம் உள்ளது. அதை இறைவன் உனக்குக் கொடுத்து இருக்கிறார். அவ்வளவு ஆற்றல் நிறைந்த உன்னை மனிதா! என்று அழைக்கும் போது - ஏன்? உனக்குக் கோபம் வருகிறது. உன்னையே உனக்குப் பிடிக்கவில்லையா? ஏன் பிடிக்கவில்லை?

ஞானிகள் தாங்களே தங்களை விரும்புகிறார்கள். தாங்களே தங்களைத் திருமணம் செய்து கொள்கிறார்கள். தங்கள் உச்சியிலிருந்து மச்சு சுகத்தை அனுபவிக்கிறார்கள். கபாலத்திலிருந்து கபால மோட்சம் பெறுகிறார்கள். உன்னை உனக்குப் பிடிக்க வேண்டும். உன்னையே நீ விரும்ப வேண்டும். உன்னால் எல்லாம் முடியும். எல்லாம் முடியும் என்பதை உணர்ந்தவுடன் நீ மனோ நிலைக்கு வந்துவிடாதே. அதர்மத்தில் இறங்கி விடாதே. அந்த நிலைக்கு வந்தால் உன்னால் எதுவும் முடியாது.

இதைத் தெரிந்து கொள். இதனால் உனக்குச் சொல்லித் தரவேண்டிய அவசியமில்லை. இருந்தாலும், இன்றைய கால கட்டத்தில் அவனவன் அவன் ஆத்மாவில் உணர வேண்டியதை தரிசிக்க வேண்டியதை உய்ய வேண்டியதை - மற்றவர்கள் சொல்லித் தெரிய வேண்டிய காலம் வந்து விட்டது.

தன்னைக் குழந்தைக்குக் காட்டுகிறாள் - அம்மா. தந்தையைக் காட்டுகிறாள் - அம்மா. குழந்தையை உருவாக்கி வெளிக் கொண்டு வந்தது - அம்மாதான். ஆனால், குழந்தை தாய்க்கு என்ன காட்ட முடியும்? அம்மாவால் முடியாதது குழந்தையால் முடிகிறதா? ஆனால், வரலாறு பேசுகின்றதே!

ஆதிசங்கரர், தன்னைத்தன் தாய்க்கு மும்மூர்த்திகளைக் காட்டினார். சக்தியைக் காட்டினார். சாயுச்யத்தைக் கொடுத்தார். திருவாரூர் தட்சிணாமூர்த்தி சுவாமிகள் - தன் தாய், தந்தைக்கு மோட்சத்தைத் தந்தருளினார். கடவுளைக் காட்டி, முக்தியைக் காட்டினார்,

கொடுத்தார். இவ்வாறு ஞானக்குழந்தைகள் தங்களைப் பெற்றவர்களுக்குக் கடவுளைக் காட்டியது - முக்தியைக் கொடுத்தது. இங்கு அம்மாவின் பணி சிறப்பு உடையதா? குழந்தையின் பணி சிறப்புடையதா? கூடு இல்லாமல் வீடு இல்லை. வீடு இல்லாமல் கூடு இல்லை.

எங்கும் நிறைந்திருப்பது ஒன்றே ஒன்று. அது கடவுள். அது உள்ளதா? இல்லதா? என்று ஆய்வு நடத்த எந்த மனிதனாலும் இயலாது. நாத்திக வாதம் மனிதனை அழிக்குமே தவிர அவனை வளர வைக்காது. நாத்திகர்களை நம்பினால் சர்வமும் நாசம்தான். உள்ளது கடவுள். அதுவே எல்லாம்.

கடவுள் இயற்கையை வெளிப்படுத்தியது. கடவுளிலிருந்து இயற்கை வெளி வந்தது. அது மனிதனுக்குத் தெரியும். அந்த இயற்கையில் பல ஆயிரம் கோடி இரகசியங்கள், விதிமுறைகள், மர்மங்கள், இயக்கங்கள், வழிகாட்டுதல்கள், நுண்ணிய சக்திகள் அதன் பேரியக்கங்கள், மர்ம இயக்கங்கள் எந்த மனிதனாலும் நெருங்க முடியாத அளவிற்கு உள்ளன.

எத்தனையோ கோடி ஆண்டுகள் ஆனாலும் மனிதன் இன்னும் இயற்கையை முழுமையாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. தெரிந்து கொள்ளவில்லை. மனித நிலையிலிருந்து பார்த்தால் மனிதன் மட்டும்தான் தெரிவான். இயற்கையை அணுகுவதற்கு - இயற்கை உணர்வு, இயற்கை சிந்தனை, இயற்கை நியதிகளைக் கவனித்து அப்படியே நடத்தல், இயற்கையனாதல் (அம்மயமாதல்).

இயற்கையிலிருந்து பேருண்மை வெளிப்படுகிறது. அதுவே சத். சத்திலிருந்து சித் வெளிப்படுகிறது.

சத் நிலைத்த சக்தி.

இந்த சத்திலிருந்துசித் என்ற இயங்கும் சக்தி வெளிப்படுகிறது.

சித்திலிருந்து - எல்லா அற்புதமும் வெளிப்படுகிறது.

பூரணம், பூரணமற்றது. ஒளி, இருள், இன்பம்,துன்பம், ஆனந்தம் இன்னும் பல.

சித் - இங்கிருந்து அடுத்த நிலை அடைகிறது. அதுவே பேரானந்தம்.

சித்துக்கு - இயற்கை விளக்கம் என்று பொருள் கொள்ளலாம்.

ஆனந்தத்திற்கு - இயற்கை இன்பம்.

அடுத்தபடியாக, இதிலிருந்து பஞ்சபூதங்கள் வெளிப்படுகிறது.

முதலில் ஆகாயம் விரிந்தது.

அதிலிருந்து காற்று வந்தது.

அந்தக் காற்றிலிருந்து அக்னி வந்தது.

அந்த அக்னி மறைமுகமாக மகாவிழிப்பு நிலையிலிருந்தது.

அந்த அக்னி நெருப்பை வெளிப்படுத்தியது.

அக்னியிலிருந்து நீர் வெளிப்பட்டது.

வெண்மையிலிருந்து குளுமை.

- இதுதான் இயற்கையின் இரகசியம்.

அக்னி எப்போது வேண்டுமானாலும் வெளிப்படும். எப்போது வேண்டுமானாலும் மறையும். அக்னியில் இலட்சம் பிரிவுகள் உண்டு. பிறப்பதற்கும் அக்னி வேண்டும், இறப்பதற்கும் அக்னி வேண்டும், இறக்காமல் இருப்பதற்கும் அக்னி வேண்டும், சிற்றின்பத்திற்கும் அக்னி வேண்டும். பேரின்பத்திற்கும் அக்னி வேண்டும். குண்டலினி புறப்படுவதற்கும் அக்னி வேண்டும், அங்கிருந்து குண்டலினி அடுத்த நிலை அடைந்த பிறகு வெப்பம் மறைந்து விடுகிறது. குண்டலினியிலிருந்து வெளிப்படுகின்ற வெப்பம் (the power of sakthi) சக்தியின் வெப்பமாகும்.

நீர் - உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதது. உயிர் போவதற்கும் நீர் இன்றியமையாதது.

பூமி - நீரிலிருந்து வெளிப்பட்டது. இது உள் அக, புற நிலையிலிருந்து வெளிப்பட்டது.

பூமி வந்தது. பூமியிலிருந்து எல்லா ஜீவ ராசிகளும் வரத் தொடங்கின. அந்த ஜீவ ராசியில் மனம் வெளிப்பட்டது. அந்த மனத்திற்குள்ளே பதினெண் குணங்கள் வெளிப்பட்டன. மனத்திற் குள்ளே இன்பம், துன்பம் குடி கொண்டது.

இயற்கை இன்பம், இயற்கை விதி, இயற்கை பேருண்மை, இயற்கை அறிதல், இயற்கை உணர்தல் ஆகியவற்றை அறிய நமக்கு மெய்ஞ்ஞானப் பெரு விழிப்பு சக்தி தேவைப்படுகிறது. அந்த மெய்ஞானப் பெரு விழிப்பு சக்தி பெறுவதற்கு தவம் வேண்டும். அந்த தவத்தில் தான் மெய்ஞ்ஞானப் பெரு விழிப்பு சக்தி வெளிப்படும்.

மெய்ஞ்ஞானப் பெரு விழிப்பு - நமக்கு பிரம்ம ஞானத்தைக் காட்டுகிறது. பிரம்ம ஞானம் - பிரம்மத்தைக் காட்டுகிறது. பிரம்மம் எல்லையற்றதைக் காட்டுகிறது. எல்லையற்றது - எல்லையற்ற சந்தோஷத்தைக் கொடுக்கிறது.

ஜீவர்கள் - ஜீவ இயக்கம் தொடங்குவதற்கு முன்பு நாதவிந்து இயக்கம் - பேரியக்கமாக மாறி எங்கும் நிறைந்து செயல்படுகிறது. இந்த நாத விந்து விழிப்பிற்குப் பிறகு ஜீவ உற்பத்தி வருகிறது. ஜீவனுள்ளே ஜீவ விழிப்பு சக்தி வெளிப்படுகிறது. பிந்துவிலிருந்து ஒளி, இருள், அகண்டம், உள்ளொளி, வெளி ஒளி, சூரிய பிரகாசம், அறிவொளி மற்றும் ஆயிரக்கணக்கான, வகையான ஒளிகள் வெளிப்படுகின்றன.

அந்த ஒவ்வொரு ஒளியிலும் வினை உண்டு. வினைப்பயன் உண்டு. பயன்களிலிருந்து இன்பம் உண்டு. அந்த ஒவ்வொரு இன்பமும் உயிர்களால் அனுபவிக்க முடியும். ஆனால், விண்ணிலிருந்து வருகின்ற ஆயிரக்கணக்கான எண்ணிலடங்கா ஒளிக்கதிரிலிருந்து வருகின்ற இன்பங்களை ஒரு ஜீவனால் அனுபவிக்க முடிகின்றதா?

**நாதம்**

நாதத்திலிருந்து நாதம் வருகிறது, சப்தம் வருகிறது, ஒலி வருகிறது, இசை வருகிறது, நுண்ணிய ஒலி வருகிறது, கேட்கும் ஒலி, கேளா ஒலி வெளி வருகிறது. நாதம் உயிரை மீட்டும், தேகத்திலிருந்து உயிரை விலக்கும், நாதம் கோபத்தைக் கொடுக்கும், ஆக்கம் கொடுக்கும். அழிவைக் கொடுக்கும். இன்பத்தைக் கொடுக்கும்,துன்பத்தைக் கொடுக்கும் நாதம் - மனதை அமைதிப்படுத்தும்,துன்பம் கொடுக்கும், மனதை ஆறுதல் படுத்தும். நாதம் - சாபத்தைக் கொடுக்கும், சாபத்தை வாங்கும். நாதம் பிராணன் சம்பந்தப்பட்டது. அது குண்டலினியை எழுப்பி உச்சிக்குக் கொண்டு வந்து மச்சு சுகத்தைக் கொடுக்க வல்லது.

இயற்கை உணர்வினனாதல் தத்துவம் நாதத்தில் அடங்கியுள்ளது.

**இன்பம் :**

இன்பத்தை ஐந்து வகையாகப் பிரிக்கலாம்.

1. கடவுள் இன்பம்
2. இயற்கை இன்பம்
3. ஜீவ இன்பம்
4. சுவையற்ற உலக இன்பம்
5. தானானந்த இன்பம்

இவ்வுலக மனிதர்கள் ஏன் ஜீவர்கள் எல்லாம் - ஜீவ இன்பத்தில், உலக இன்பத்தில் மூழ்கிக் கிடக்கின்றன. அந்த இன்பத்தைத் தாண்டி அவைகளால் வர இயலவில்லை. மூன்று இன்பங்களையும் ஒன்றன்பின் ஒன்றாக அனுபவித்த ஜீவன்கள் ஏதாவது உண்டா?

ஜீவ இன்பத்தை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

1. அதர்ம இன்பம்
2. தர்ம இன்பம்

தர்ம இன்பம் சுவைப்பதற்குக் கால தாமதமாகும். நெறிமுறைகள் கடைப்பிடிக்க வேண்டும். சத்தியத்தில் நிற்க வேண்டும். சித்தத்தைச் சிவன்பால் ஒடுக்க வேண்டும். இயற்கை இன்பம் அமரத்துவம் வாய்ந்தது. காலங்காலமாய் சுவைத்துக் கொண்டு இருக்கலாம். காலம் கடந்தும் சுவைத்துக் கொண்டும் இருக்கலாம். அந்தர் ஆத்மாவும், ஜீவ ஆத்மாவும் இதில் கலந்து நிற்கும்.

இந்த இயற்கை இன்பத்தைச் சுவைப்பதற்கு, தேகத்துப் புறப்பொருள் கருவிகள் தேவையில்லை.துரியம், துரியாதீதம், சிதாகாசம் - அங்கேயுள்ள வெண்சுடர் இந்த இன்பத்தைத் துய்க்கும்

**கடவுள் இன்பம்**

கடவுளே இன்பமானவர். அதில் கலந்து விட்டால் நீயே இன்பம்

1. கடவுள் இன்பம் - சாயுச்யம்
2. இயற்கை இன்பம் - முக்தி

3. ஜீவ இன்பம் - நல் இன்பம்

4. செயற்கை இன்பம் - அழிவு

ஜீவ இன்பம் உலகாயுத இன்பத்தைத் தாண்டிய நல் இன்பம். இவைகளுக்கு எல்லாம் தேவைப்பட்ட, தேவைப்படாத அழிவு சக்தி வாய்ந்த இன்பம் உண்டு. அது செயற்கை இன்பம். மனிதன் செயற்கை இன்பத்தில் ஆர்வம் காட்டுகின்றான்.

**கடவுள்**



# சொல்லுமய்யா ஆண்டவனே

*போவதும், வருவதும் வாழ்க்கையா*
*அழுவதும், சிரிப்பதும் வாழ்க்கையா*
*இறப்பதும், பிறப்பதும் வாழ்க்கையா*
*ஆண்டவனே சொல்லுமய்யா (2)*

*உண்பதும், உறங்குவதும் வாழ்க்கையா*
*சுவைப்பதும், சுகிப்பதும் வாழ்க்கையா*
*தேடுதலும், திரிதலும் வாழ்க்கையா உன்னைத்*
*தேடுதலும், திரிதலும் வாழ்க்கையா?*
*தேனைக்காண அலைவதும் வாழ்க்கையா?*
*நீ சொல்லுமய்யா கடவுளே நீ சொல்லுமய்யா தெய்வமே*
*(போவதும்)*

*ஆணுடன், பெண்ணும் ஆவதும் வாழ்க்கையா*
*அண்டமெல்லாம் சுற்றுவதும் வாழ்க்கையா*
*பிண்டத்தைச் சுவைப்பதும் வாழ்க்கையா?*
*பித்தர்களாய் வாழ்வதும் வாழ்க்கையா?*
*சித்தர்களாய் உச்சியிலே இருப்பதும் வாழ்க்கையா?*
*நாளும் சிதைந்து, சிதைந்து அழுவது வாழ்க்கையா?*
*(போவதும்)*

*காண்பதும் கேட்பதும் வாழ்க்கையா கடவுளைக்*
*காண்பதும் கேட்பதும் வாழ்க்கையா*
*பிணமாய் அங்கு எரிவது வாழ்க்கையா*
*பேய் உலகில் நொந்து சிரிப்பதும் வாழ்க்கையா?*
*சோகத்தின் முடிவு வாழ்க்கையா*
*போகத்தின் முடிவு வாழ்க்கையா இல்லை*
*யோகத்தின் முடிவு வாழ்க்கையா ஐயா*
*சொல்லுமய்யா ஆண்டவனே (போவதும்)*

*ஆசைக்காக உழைப்பது வாழ்க்கையா*
*பொய்யும், புரட்டும் கலப்பது வாழ்க்கையா*
*என்னே இது வாழ்க்கை?*

இதுக்காக தானா நான் அங்கிருந்து
வந்தேன் வந்தேன் (போவதும்)

உணர்வதும் உணர்வதும் வாழ்க்கையா
கேட்பதும் காண்பதும் வாழ்க்கையா
கேளிக்கைக்குள்ளே வாழ்வது வாழ்க்கையா
நல்லதும், கெட்டதும் வாழ்க்கையா
நாயாய் உண்பதும் வாழ்க்கையா
சொல்லுமய்யா ஆண்டவனே சொல்லுமய்யா.
(போவதும்)

உன் சுந்தரத்தைக் காண்பது வாழ்க்கையா? சுந்தரத்தின்
திருவருளைப் பெறுவது வாழ்க்கையா? உன்
சந்தோசத்தைஷத்தைப் பெறுவது
வாழ்க்கையா? உன்னுள்
சாயுச்சயமாவது வாழ்க்கையா?
உன் சப்தம் என்னை அழத்துப் போவது
வாழ்க்கையா?
ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம் என்று ஆனந்தமாய்
இருப்பதற்குச் சொல்லுமய்யா
ஆண்டவனே சொல்லுமய்யா.

(போவதும்)

**சந்தோஷம்**

ஜெபம் - மனதிற்கு
புண்ணிய காரியம் - தேகத்திற்கு
தவம் - ஆத்மாவிற்கு

# நிக்ரகம், அனுக்கிரகம்

கடவுள் என்ற ஒன்று உண்டு என்று உணர்ந்தோரும், காண்போரும் உய்யப் பெற்றோரும், தொடர்ந்து சொல்லி உள்ளனர். பலர் பிரகாசப் படுத்தியுள்ளார்கள்.

கடவுள் என்ற சொல்லுக்குள்ளே உள்ள அதி சக்தி வாய்ந்த, யாராலும் இது வரை முழுதும் விவரிக்க முடியாத ஒன்றை மனித மூளைக்குள் நிரம்பியதை எழுத்தாக்க இயலாது

கடவுள் - இதன் பொருள் ஆத்மாவினாலே உணரப் பட வேண்டியதொன்று. மனதினாலோ, சிற்றறிவினாலோ, தேகத்தின் புறப் புற உறுப்புகளாலோ கண்டு கொள்ள இயலாது. பஞ்சேந்திரியங்களாலும், கர்மேந்திரியங்களாலும் இதை ஆய்வு நடத்த இயலாது. கடவுள் என்ற ஒன்று எங்கும் உள்ளது. அது எல்லா நிலையிலும் தன் பணியை ஆற்றிக் கொண்டிருக்கிறது. அது இல்லையென்றால் இந்த ஜீவன்களும் இல்லை, பஞ்ச பூதங்கள் இல்லை, இன்ப - துன்பமில்லை, அழுகையும் - சிரிப்புமில்லை, எதுவுமேயில்லை.

கடவுள் நல்லவரா, கெட்டவரா என்று ஆய்வு நடத்த இயலாது. நீ நல்லது செய்தால் உனக்கு நன்மை செய்வார். நீ கெட்டது செய்தால் உனக்குத் தீமை செய்வார். ஆகவே அவரை நல்லவரென்றும் சொல்ல இயலாது, கெட்டவர் என்றும் சொல்ல இயலாது. எல்லாவற்றிற்கும் நடு நாயகமாக வீற்றிருக்கிறார். ஒரே சமயத்தில் எவ்வளவோ ஜீவன்கள் பிறக்கின்றன. அதே சமயத்தில் எவ்வளவோ ஜீவன்கள் உடலை விட்டுப் பிரிகின்றன.

கடவுள் காக்கும் தெய்வமாகவும், நன்மை செய்யும் தெய்வமாகவும் இருக்கிறது. அதே போல் தீமை செய்யும் போதும் துன்பத்தைக் கொடுக்கிறார். ஒரே சமயத்தில் ஒரு ஜீவனுக்கு நிக்கிரகம் செய்கிறார், அடுத்த சமயத்தில் அனுக்கிரகம் செய்கிறார். நிக்கிரகம் - துன்பம் கொடுத்தல், சிதைத்தல் அனுக்கிரகம் - நன்மை செய்தல், ஆசி வழங்குதல், வாழ வைத்தல்.

சான்றாக ஒரு தம்பதியினர் தனக்குக் குழந்தை வேண்டும் என்று

நீண்ட நாள் சிவபெருமானை நோக்கித் தவம் இருந்தனர். சிவ பெருமான் தோன்றி உனக்கு அறிவுள்ள 16 வயது குழந்தை தேவையா? அல்லது 100 வயது உள்ள மூடக் குழந்தை தேவையா என்று கேட்டார்.

அவர்கள் அறிவு உள்ள குழந்தை தான் வேண்டும் என்று சொன்னார்கள். அவ்வாறே குழந்தை பிறந்தது. குழந்தையைச் சீராட்டி, பாலூட்டி வளர்த்தார்கள். குழந்தைக்கு 16 வயது வந்தது.

சிவபெருமானுடைய கட்டளைப் படி எமதரும ராஜா, குழந்தையில் உள்ள ஜீவனை அழைத்துச் செல்ல வந்து விட்டார். அதை உணர்ந்த அந்தப் புத்தி சாலியான குழந்தை சிவபெருமான் திருவடிகளைச் சிக்கென்று பற்றிக் கொண்டது.

எமதரும ராஜா தன் சக்தியைப் பயன்படுத்திக் குழந்தையில் உள்ள ஜீவனை அழைத்துச் செல்ல முயற்சி செய்தார். உடனே சிவபெருமான் வெளிப்பட்டு எம தருமராஜாவைச் சம்ஹாரம் செய்தார். அப்போது எமதரும ராஜா மீண்டும் வாழ வழி வேண்டும் என்று சிவபெருமான் திருவடியைப் பிடித்து வேண்டினார். நான் தருமபுரத்தில் எழுந்தருளியுள்ளேன். அங்கு வந்து எனக்குத் தவத்தோடு பூஜை செய் என்று அருளிப் போந்தார். அவ்வாறே எம தரும ராஜாவின் மகா சக்தி தருமபுரம் சென்று சிவபெருமானுக்குப் பூஜை செய்தது.

உடனே பூஜை முடிந்ததும் ஒரு நாள் சிவபெருமான் எம தருமராஜாவுக்கு அனுக்கிரகம் செய்தார். ஆசிவழங்கினார். ஆகவே, இறைவனுக்கு நிக்கிரக நிலையும் உண்டு, அனுக்கிரக நிலையும் உண்டு. ஜீவர்கள் எந்தத் தவறும் செய்யாமல் தூய்மையோடு பகவானின் அனுக்கிரகத்தை நாடித் தவம் செய்தால், அவர்களின் ஜீவ யாத்திரை மிகச் சிறப்பாக ஒளி பொருந்திய யாத்திரையாக நிறைந்து, மேற் செல்லும்.

அந்த ஜீவ யாத்திரையில் கடவுள் நிக்கிரகம் செய்யும் வகையில், ஜீவர்கள் நடந்து கொள்ளுதலைத் தவிர்த்தல் - ஜீவர்களுக்கு நன்று. ஆகவே, எல்லாம் வல்ல திருவருள் பெருங்கருணை கொண்டு அனாதியான மூல வஸ்துக்கு, அந்தரங்க ஆதி மூலத்திற்கு, கடவுளுக்கு நிக்கிரக சிந்தனையும் உண்டு அனுக்கிரக நிலையும் உண்டு.

சந்தோஷம்

# ஒரு ஜீவ யாத்திரையின் பிரம்ம ஞானப் பிரதிபலிப்பு

உங்களுக்குப் புரியாத உங்களால் ஏற்க முடியாத சித்தாந்தத்தை வெளிப்படுத்துகின்றேன். மாதம் ஒரு முறை 2 மணி நேரம் எங்காவது உட்கார்ந்து அழுங்கள். தேவைப்பட்டால் ஒருநாள் முழுதும் அழுங்கள். இரவும், பகலும் அழுங்கள். உற்றார் உறவினர்கள், நட்புகள் மார்பில் சாய்ந்து கொண்டு அழுங்கள்.

தேம்பித் தேம்பி அழுங்கள், விசும்பி - விசும்பி அழுங்கள். பெருமூச்சு விட்டுக் கொண்டு அழுங்கள், சப்தமிட்டு அழுங்கள். கண்ணீர் நன்றாக வரவேண்டும். மூக்கு சளி, தொண்டை கண்ணீர் நன்றாக வரவேண்டும். மனச் சுமையெல்லாம் ஓடிவிட வேண்டும்.

அழுங்கள், கதறிக் கதறி அழுங்கள். கண்ணீர் விட்டு அழுங்கள். யாரையாவது கட்டிக் கொண்டு அழுங்கள். தனிமையில் போய் அழுங்கள். ஓலமிட்டு அழுங்கள். ஒய்யாரமாக அழுங்கள். அசிங்கமாக அழுங்கள். அருவறுப்பாக அழுங்கள். கோபத்தோடு அழுங்கள். பொறுப்போடு அழுங்கள். விரக்தியோடு அழுங்கள். முணுமுணுத்துக் கொண்டு அழுங்கள். பாடிக்கொண்டு அழுங்கள். உட்கார்ந்து கொண்டு அழுங்கள். நடந்து கொண்டு அழுங்கள். நின்று கொண்டு அழுங்கள். வானத்தில் எதையாவது பார்த்துக் கொண்டு அழுங்கள். படுக்கையில் படுத்துக் கொண்டு அழுங்கள். தலையணையில் குப்புறப்படுத்துக் கொண்டு தலையணை நனையும் வரை அழுங்கள். ஆசைகள் தீரும் வரை அழுங்கள். கஷ்டங்கள் எல்லாம் வீழ்ந்து நொறுங்கும்படி அழுங்கள். இன்னும் அழுங்கள்.

அழுவதை நிறுத்தி விட்டீர்களா? ! இப்போது இன்னும் அழுங்கள். பலர் அழுவதில் சுகம் காண்பார்கள். அந்தக் காலத்தில் ஒப்பாரி என்று உண்டு.

இப்போது ஒப்பாரி அழிந்து விட்டது. மற்றவர்களுக்கு ஒப்பாரி சொல்லப் போவார். தங்கள் வாழ்க்கை ஒப்பாரி சொல்லி அழ மாட்டார்கள். அழும்போது மணியைப் பார்த்துக் கொண்டு அழாதீர். அந்தக் காலத்தில் யாராவது இறந்து விடடால், அழுவதற்கு ஸ்பெஷலிஸ்ட் இருப்பார்கள்.

அவர்களைக் காசு கொடுத்து அழைத்து வந்து அழ வைப்பார்கள்.

மௌனமாக அழு, நாலு வீடு கேட்கும்படி அழு. தொண்டை உடையும்படி அழு. உங்கள் உடலில் உள்ள, மனதில் உள்ள எல்லாத் துன்பங்களும் வெளியே வந்த பிறகு, விதரணையான அறிவு பிரகாசம் வெளிப்படும். உடம்பு தக்கையாக இருக்கும். உடலில் ஒரு குளிர் வரும். உடம்பெல்லாம் குளிர் தோன்றும். கண்கள் தெளிவாகத் தெரியும். பல நோய்கள் குணமாகி விடும். எல்லாவிதமான இறுக்கங்களும் மறைந்துவிடும். மனிதன் நிதானமாக இருப்பான். நிம்மதியாக இருப்பான். அறிவினாலே வரும் பிரச்னைகளை எளிதாகத் தீர்த்துக் கொள்வான். நல்ல சிந்தனை வரும்.

அழுது முடிந்த பிறகு அழுகை ஒன்று தோன்றும். அந்த அழுகையைக் காத்துக் கொள்ளுங்கள். உங்கள் உள்ளே உள்ள அருவறுப்பான செயல்களும், எண்ணங்களும் அருவறுப்பான அழுகை மூலம் வெளிவந்து விடும். வாழ்வதற்காக அழுங்கள். வளர்வதற்காக அழுங்கள். உங்களுக்காக அழுங்கள். அழுது - அழுது இறைவனைக் கண்டவர்கள் ஏராளம். "வாய்விட்டுச் சிரித்தால் நோய்விட்டுப் போகும்" என்பது பழைய மொழி. "மனம் விட்டு அழுதால் மாளா சுகம்" என்பது இன்றைய மொழி (அர்த்தமுள்ள மொழி, முதிர்ந்த மொழி)

சிரிப்பதிலிருந்து கிடைக்கும் பயனை விட அழுவதில் கிடைக்கும் பயன்கள் அதிகம். ஆண்கள் உள்ளுக்குள்ளே அழுவார்கள். பெண்கள் உள்ளுக்குள்ளும், வெளிக்குள்ளும் அழுவார்கள். அழுவதில் பெண்கள் கெட்டிக்காரர்கள். அழுதே காரியத்தைச் சாதிப்பதில் பெண்கள் கெட்டிக்காரர்கள்.

நீலிக்கண்ணீர், முதலைக் கண்ணீர், சாதகக் கண்ணீர், திருட்டுக் கண்ணீர், உண்மைக் கண்ணீர், உபத்திரவக் கண்ணீர், ஊமைக் கண்ணீர், சுத்தக் கண்ணீர், அசுத்தக் கண்ணீர், அழகுக் கண்ணீர், யோனிக் கண்ணீர், சிவ கண்ணீர், சவக் கண்ணீர், சாத்திரக் கண்ணீர், தோத்திரக் கண்ணீர், பழைய கண்ணீர், படுபழைய கண்ணீர், இருபது ஆண்டுகளுக்கு முன்பு இருந்த கண்ணீர், நிகழ்காலக் கண்ணீர், எதிர்காலக் கண்ணீர், வற்றிப் போன கண்ணீர், ஜீவநதிக் கண்ணீர், சிவந்த கண்ணீர், வெண்மைக் கண்ணீர், உப்புக் கண்ணீர், உப்பு சப்பற்ற கண்ணீர், அழுத்தமான கண்ணீர், திரவ கண்ணீர், கெட்ட

அதிர்வுக் கண்ணீர், கொடுக்கும் கண்ணீர், துக்க கண்ணீர், வேதனைக் கண்ணீர், விபரீதக் ண்ணீர், வித்தகக் கண்ணீர், ராஜதந்திரக் கண்ணீர், பழிவாங்கும் கண்ணீர், சிந்தனைக் கண்ணீர், அருள் கண்ணீர், அவஸ்தைக் கண்ணீர், பிரசவக் கண்ணீர், சம்போகக் கண்ணீர், யோகக் கண்ணீர், யாகக் கண்ணீர், அன்புக் கண்ணீர், பொறாமைக் கண்ணீர், சிரிப்புக் கண்ணீர், மூடச் சிரிப்புக் கண்ணீர், முத்துக் கண்ணீர் உணர்வுக் கண்ணீர், பசிக் கண்ணீர் பெண்ணின் பிரதிட்டைசக் கண்ணீர், நோய்க் கண்ணீர், உபாதைக் கண்ணீர், கடைசிக் கண்ணீர், முதல் கண்ணீர், இறுதி யாத்திரைக் கண்ணீர், இகக் கண்ணீர், பரக் கண்ணீர், பரசிவக் கண்ணீர், சாயுச்யக் கண்ணீர், சந்தோஷக் கண்ணீர், சுபக் கண்ணீர், அசுபக் கண்ணீர், செய்திக் கண்ணீர், செய்திக்குச் செய்திக் கண்ணீர், தூக்கக் கண்ணீர், கனவுக் கண்ணீர், கொட்டாவிக் கண்ணீர், நினைவுக் கண்ணீர், பார்வைக் கண்ணீர், காரக் கண்ணீர், சோரக் கண்ணீர், சூத்திரக் கண்ணீர் - இதைப் போன்று எத்தனையோ கோடிக் கண்ணீர்கள் உள்ளன.

பேச்சுக் கண்ணீர், பேச்சற்ற கண்ணீர், காதல் கண்ணீர், கருத்துக் கண்ணீர், கருத்தழிந்த கண்ணீர், கபோதிக் கண்ணீர், கோலக்கண்ணீர், அகோலக் கண்ணீர், எதிர்பார்ப்புக் கண்ணீர், ஏமாற்றுக் கண்ணீர், மங்கலக் கண்ணீர், மனம் நிறைந்த கண்ணீர், மனமுடைந்த கண்ணீர், வாழ்வுக் கண்ணீர், வீம்புக் கண்ணீர், பிராயச்சித்தக் கண்ணீர், அடிமைக் கண்ணீர், ஆண்டான் கண்ணீர், என்னுள் உன்னை உணர்ந்து பார்க்கும் கண்ணீர்.

ஒவ்வொரு கண்ணீருக்கும் ஒவ்வொரு ப்ராப்பர்டி உண்டு. கேரக்டர்ஸ்டிக்ஸ் உண்டு. வாசனை உண்டு. நடத்தைகள் உண்டு. குணாதிசயங்கள் உண்டு. சில கண்ணீர் காய்ந்துவிடும். சில கண்ணீர் காயாது. மென்மையான கண்ணீர் உண்டு. அழுத்தமான கண்ணீர் உண்டு. சிலர் ஒத்தைக் கண்ணில் அழுவார்கள். ஒத்தைக் கண்ணில் மட்டும் நீர் வரும். சிலர் கண்ணீர் புளிக்கும், சிலர் கண்ணீர் உப்புக் கரிக்கும். சிலர் கண்ணீர் இனிக்கும். சிலர் கண்ணீர் தித்திக்கும். சிலர் கண்ணீர் துவர்க்குமாம். சிலருக்குக் கண்ணீரைப் பார்த்தவுடன் கண்ணீர் வந்துவிடும். சிலர் மற்றவர்களை அடிமைப்படுத்துவதற்காகக் கண்ணீர் விடுவார்கள். கண்ணீருக்காகக் கண்ணீர், கண்ட கண்ணீர், காணாத கண்ணீர், சிலர் அழுவார்கள். ஆனால் கண்களில் கண்ணீர் வரவே வராது.

கலைந்து போன கண்ணீர், காய்ந்து விட்ட கண்ணீர், பாலைவனக் கண்ணீர், மறுபிறவிக் கண்ணீர், இப்பிறவிக் கண்ணீர், கடந்தபிறவிக் கண்ணீர், பிறந்த குழந்தையின் கண்ணீர், மூச்சுப் போகும்போது கண்ணீர், மூதேவிக் கண்ணீர், ஸ்ரீதேவிக் கண்ணீர். ஜீவன்கள் தங்கள் யாத்திரையில் ஒவ்வொரு வகையான கண்ணீரையும் வடித்துக் கொண்டே செல்கின்றன. அடுத்ததாக அழ வந்த காரணம் இல்லாமல் - அழ மனிதர்கள் இல்லாமல் - அழுவதற்கு நிகழ்ச்சிகள் இல்லாமல் - அழ ஒன்றுமில்லாமல் - அழுவதற்கே வகை வழியில்லாமல் அழுகை கடந்துவிட்ட ஜீவர்களும் பத்துகோடியில் இருபதுபேர் இருப்பார்கள்.

அழுகைக்கு இப்பாற்பட்ட மனிதர்களும் உள்ளனர். அழுகையில் உள்ள மனிதர்களும் உள்ளனர். அழுகைக்கு அப்பாற்பட்ட மனிதர்களும் உள்ளனர். இந்த மூன்று வகை மனிதர்களில் நீ யார்?

சோகத்தில் அழுபவனும் உண்டு. சுகத்தில் அழுபவனும் உண்டு. தரித்திரத்தில் அழுபவனும் உண்டு. கோடீஸ்வர அழுகையும் உண்டு. கோபுரத்தார் அழுகையும் உண்டு, குப்பை மேட்டு அழுகையும் உண்டு. சிரிப்புக் கலந்த அழுகையும் உண்டு. நீளமான, ஆழமான, அகலமான அழுகை சிந்திக்க வைத்து - அகங்காரத்தைக் குறைக்கும் - அற்புதமானது. முழு அழுகை அழுதவர்கள் ஞானியாகிவிட முடியும். முழு அழுகை அழுகின்றவர்கள் உடல் ஒளி உடலாக மாறிவிடும்.துக்கம், தூக்கம், விகல்பம் அற்று - கல்ப தேமாகிவிடும்.

இளைஞர்களே, எதிர்காலத்தில் எல்லா அழுகையும் அழப் போகிறீர்களா? எந்த அழுகைக்கான பணியை இப்போது செய்யப் போகிறீர்கள்? நீங்கள் உங்கள் முதுமையில் அழுவதற்கான பணியை இப்போது செய்யப் போகிறீர்களா? நீங்கள் முதுமை யில் ஆனந்தமாய் இருப்பதற்கான பணி செய்யப் போகிறீர்களா. இன்று நீங்கள் செய்யும் பணி முதுமையில் உங்கள் வாழ்வை நிர்ணயிக்கும்.

உங்கள் மேல் மாடி காலியாக வைத்துக் கொண்டு சைட் அடித்தல், சீட்டி அடித்தல், இருசக்கர வண்டியை வைத்துக் கொண்டு அருவறுப்பான பயங்கரமான சப்தங்களை வெளிப்படுத்திக் கொண்டாட்டம், களியாட்டம் போட்டுக் கொண்டு ஊர் ஊராகத் தெருத் தெருவாகச் சுற்றிக் கொண்டு இருக்கப் போகிறீர்களா? உயர்ந்தவர்களின் வெறுப்பை எட்டிப் பிடித்துக் கொள்ளப் போகிறீர்களா? இளமையில்

முதுமையாகப் போகிறீர்களா? அல்லது முதுமையில் இளமையாக இருக்கப் போகிறீர்களா?

உங்கள் நாடி நரம்புகளை வீணாக்கிக் கொண்டு, குருதியை நீங்கள் பாழ்படுத்திக் கொண்டு சமூகத்தில் உயர்ந்தவர்களின் வெறுப்புக்கு ஆளாக விரும்புகிறீர்களா?

நீங்களே உங்கள் எதிர்காலத்தில் தலையில் கை வைத்துக் கொண்டு நொந்து நொந்து அழப்போகிறீர்களா? அல்லது தங்கக் கட்டிலில் வைர முடி அணிந்து கொண்டு மங்களமாகச் செல்லப் பிள்ளையாக வாரிசு இல்லாதவர்களை இணைத்து இன்புறப் போகிறீர்களா?

அல்லது கோடிக்கணக்கான மக்களைச் சிரிப்போடு வாழ வைத்து அவர்களின் கண்ணீரைத்துடைத்து எல்லோரும் உங்களை வணங்கும்படி வாழப் போகிறீர்களா?

இந்த வினாவை உங்களுக்கு விட்டு விடுகிறேன். எனக்கு விடை வேண்டா. உங்களுக்கான வினையை இன்றே தொடங்குங்கள்.

ஜீவன்கள் தன் ஜீவ யாத்திரையில் மேற் குறிப்பிட்ட எல்லா கண்ணீரையும் வடித்து முடிக்கின்றன.

**சந்தோஷம்**

*புழுக்கத்தை வென்றவன் ஞானி*
*புழுக்கத்தை வைத்துப் புழுங்கிக் கொண்டிருப்பவன் - அஞ்ஞானி.*

# கடவுள் வழி படுதல்

கடவுளை வழிபட்டால் தான் சந்தோஷம் கிடைக்குமா...? சந்தோஷம். யாரைய்யா உங்களைக் கடவுளை வழிபடச் சொன்னது. கடவுள் என்பது எங்கு இருக்கிறார் என்று தெரியவில்லை. அவர் யார் என்று தெரியவில்லை. அவருக்கு எத்தனை மூக்கு, எத்தனை கண்கள் என்று தெரியவில்லை. மனித உடம்பாக இருந்தால் நுரையீரல், இருதயம் அது, இது எல்லாம் இருக்கும். அது repair ஆனால் யார் repair பண்ணுவான்னு தெரியவில்லை. இது எல்லாம் ஒரு Abstract. ஆனால் ஒன்றே ஒன்று உள்ளது. அந்த ஒன்றே ஒன்று நம்முடைய அறிவுக்கும், மற்றைய உணர்விற்கும் தெரிய வொண்ணாமல் இருக்கிறது. ஆனால் அது தான் அனைத்தையும் செய்கிறது. அந்த ஒன்றைச் சிந்திப்பது, அதைச் செயல்படுத்துவது மிகவும் சிரமம்.

சிவ வாக்கியர் ஒழுங்காக ஒன்று சொல்கிறார். ஆகவே, கடவுள் இருக்கிறாரா இல்லையா என்று கவலைப்படாதே. அவர் நல்லவரா, கெட்டவரா என்று கவலைப்படாதே. ஆனால் ஒன்று உள்ளது. அந்த ஒன்றை வழிபட்டுக் கொண்டே செல்.

கடவுள் வழிபாடு இல்லாமலே சத்தியமாக நட. மற்றவர்களுக்கு எந்தக் கெடுதியும் செய்யாதே. உனக்கும் கெடுதி செய்து கொள்ளாதே. தர்மத்தோடு நட. எது உன்னால் செய்ய முடியுமோ? உன் குடும்பத்திற்குச் செய்ய முடியுமோ? உன் உறவுகளுக்கு என்ன செய்ய வேண்டுமோ? உன் உறவுகளுக்கு ஏற்றவாறு செய். அடுத்து, அயலானுக்கு என்ன செய்ய வேண்டுமோ செய். பஸ்சிலோ, ரயிலிலோ போகும் போது அடுத்த பயணிக்கு என்ன செய்ய வேண்டுமோ செய். இல்லையென்றால் அமைதியாக இரு. இப்படி உன் கடமையை முறையாகத் தர்ம நெறியிலே சத்ய நெறியிலே நெறியாக நின்று கொண்டு செய்து கொண்டு இரு. உன் தேகத்திற்கும் செய். அப்படி இருந்தாலே கடவுளின் ஆசீர்வாதம் கிடைக்கும். இறைவனின், இயற்கையின் ஆசீர்வாதம் கிடைக்கும். என்றும் இன்புற்று வாழ்வாய். கடவுளை வழிபட விரும்பினால் வழிபாடு உன்னுடைய பொறுப்பு. அதனால் கடவுளை வழிபட்டாலும் சரி வழிபடா விட்டாலும் சரி. உனக்கு வேண்டிய சந்தோஷத்தையோ, துக்கத்தையோ கொடுத்துக் கொண்டிருப்பார்.

காரணம் நல்லது செய்தால் சந்தோஷம். தீயது செய்தால்..... அந்த நிலையிலே கடவுளை வழிபட்டாலும் சரி வழிபடாவிட்டாலும் சரி. தர்ம நிலையில் நில். உனக்கு எல்லா சந்தோஷமும் கிடைக்கும். வெற்றி.

## சந்தோஷம்

ஒரு ஞானியின் கைவண்ணம் 1000 - 1000 ஆண்டுகளுக்கு மலர்ந்து நிற்கும். அவர் திரு உள்ளம் சிவத்தின் திருவுளமாகும். சிவத்தின் திருவுள்ளப் பாங்கினை ஜீவர்களால் அறிய இயலாது. சாட்சி-சித்தி வளாகத்தில் வள்ளல் பெருமான் செய்த தீஞ்சுவைத் தண்ணீர் வெளிப்படுத்திய பேருண்மை இங்கு மலர்ந்திருப்பதை, எல்லோரும் அவர் தம் கண்களாலும், அரிய தவத்தாலும், ஞானத்தாலும் அதன் அருள் வல்லபத்தைக் காணுகிறார்கள். கண்டு வருகிறார்கள். அவர் ஏற்றி வைத்த தீபம் இன்னும் அணையாமல் எரிந்து கொண்டிருக்கிறது.

ஜீவன் சிவ விழிப்பிற்கு வந்த பிறகு திரும்பிப் பார்க்கிறது. எப்போதும் ஜீவனுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கும் ஒன்று ஜீவனுக்குச் சிநேகிதராகும். இப்படி எல்லா ஜீவன்களுக்கம் சந்தோஷம் கொடுத்துக் கொண்டிருக்கும் அதன் பெயர் மகாத்மா. மகாத்மா சொல்லுவதைக் கடவுள் செவிமடுக்கும். மகாத்மா வேண்டுதல் படி ஒன்றையும் விடாது செய்து தரும்.

# கடவுளின் கட்டுப்பாட்டில்

கல்யாணங்கள் எத்தனையோ கோடி, பிறப்புகள் எத்தனையோ கோடி, மரணங்கள் எத்தனையோ கோடி. கல்யாணம், பிறப்பு, மரணம் எல்லாம் சகஜமாக இருக்கும். இந்த மூன்றும் ஒரு ஜீவனுக்கு இருக்கின்றன. அழுகின்றான், சிரிக்கின்றான்? இதைத் தவிர இவ்வுலகில் ஒன்றுமில்லை. கடைசியில் கடவுளே கதியென்று ஒடுங்கி விடுகின்றான்.

கடவுள் இஷ்டப்பட்டால் தான் நமக்கு உதவி செய்ய முடியும். இல்லாவிட்டால், ஆணிவேரை அசைத்து விடுகின்றார். இறைவனை விட சூட்சும- சித்தாந்தத்தைத் தெரிந்தவர் யாருமிலர். ஆகவே, அவன் இஷ்டப்படி செய்யட்டும் என்று அவனுடைய சந்நிதானத்தில் மௌனமாய்க் கிடப்பதே சிறந்தது.

கடவுளை அறிதல். உணர்தல். முழுமையாக அறிந்ததும் இப்படிப் பிரமிக்கத் தகுந்த மெய்ப்பொருள் எங்கும் நிறைந்திருக்கிறது. இறைவனை மௌனமாக வணங்குவது உத்தமம். சொல்லாலோ, கருத்தாலோ வணங்குவது தேவையில்லை.

6 மாதம் அல்லது 3 மாதம் சாதனை செய்ய வேண்டும். உடலில் உள்ள சக்தியெல்லாம் சோர்ந்து போகும் படி அவனுடைய பாவங்களையெல்லாம் சமர்ப்பித்து விட வேண்டும்.

ஜீவன் 60,70 ஆண்டுகளாக நடத்திய நாடகங்கள், போட்ட வேஷங்கள் எல்லாம் எங்கேயோ மறைந்து போய் விடுகின்றன. எல்லாம் வீண், எல்லாம் பொய், எல்லாம் தேவையற்றவை என்ற நிலை வருகிறது.

அங்கங்கள் சோர்ந்து, உடல் சோர்ந்து, மனத்தில் உள்ள ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள எவ்வளவு எத்தனங்கள் செய்தாலும் கடைசியில் தோல்வியை அடைந்தவுடன் எதுவும் சதமில்லை. இறைவனே சதம் என்ற நிலைக்கு அந்த ஜீவன் வந்து சேர்கிறது.

ஒரு ஜீவன் மனத்தில் எழுந்து நிற்கின்ற ஆசைகளை எல்லாம் இறைவன் நிறைவேற்றி வைத்தார் என்றால் இறுதியில் அந்த ஜீவன் பல கோடி பிறவியெடுத்து, ஒவ்வொரு பிறவியிலும் இமாலய அளவிற்குத் துன்பத்தை அனுபவிக்க வேண்டிய நிலை வரும்.

அந்த ஜீவனுக்கு 80, 90 வயதான பிறகு முழுமையான அறிவு - பேரொளி வந்த பிறகு இறைவனைத் தண்டனிட்டு, மண்டியிட்டு அழுது புரளும். அந்தப் புலம்பலின் மையக் கருத்து இதுதான். - "கடவுளே என் மனதில் எழுந்து, அலைந்த அதர்ம ஆசைகளை ஏன் நீ நிறைவேற்றினாய்? இந்த மூட ஜென்மம் வேண்டியதெல்லாம் ஏன் தந்தாய்? இது நியாயமா? எனக்கு மீளாத் துன்பத்தைக் கொடுத்தது நீ செய்த தந்திரமா அல்லது சூழ்ச்சியா? இனி, நான் உன்னிடம் எதுவும் வேண்டேன்."

"என் மனதில் எழும் ஆசைகளை நிறைவேற்ற வேண்டா. இந்த நிர்மூல ஜீவன் கேட்கும், அனைத்தையும் கடவுளே உன் பெருங்கருணை கொண்டு எதையும் நிறைவேற்றி வைக்காதே. இப்போதே நான் உன் திருவடியில் பிராண தானம் செய்து விடுகின்றேன். இறைவா! என்னை ஏற்றுக் கொள்."

"அடுத்த பிறவியில் என்னைக் கல்லாய்ப்படை. என் வாயை ஊமையாக்குவதை விட, என் மனதை ஊமையாக்கு. உன் திருவடியில் வீழ்ந்து கிடக்கும் பைத்தியமாக என்னை மாற்று."

"என்னைச் சாம்பலாக்குவதை விட என் மனதையும், அதன் ஆசையையும் சாம்பலாக்கு. உன் அருளன்றி எனக்கு வேறு எதுவும் வேண்டா."

"எனக்கு எந்த ஒரு சுகமும் வேண்டா, வெற்றியும் வேண்டா, எதுவும வேண்டா. உன் அடியில் நான் இருக்க வேண்டும். உன் அருகில் நான் இருக்க வேண்டும் - என்று ஜீவன்கள் இறைவனிடம் தன் கருத்தைக் கண்ணீர் மல்கிக் கசிந்துருகி இடைவிடாது வேண்டிக் கொண்டு இருக்கின்றன.

ஜீவ யாத்திரையில் ஒவ்வொரு ஜீவனும் உணர்வதற்கான சிறப்பு மிக்க திருவாய்ப்பை ஜீவனுக்கு அதுதான் தரும். கோயிலே கதி, கோபுரமே கதி, கர்ப்பகிருகமே கதி, சந்நிதானமே கதி, சாந்நித்தியமே கதி, கடவுளே கதி - இதுவே யாத்திரையில் வெற்றி பெறும் ஜீவன்களின் வேத கோஷங்களாகும்.

## சந்தோஷம்

# ஈசனும், ஆசானும்

இது சத்தியம். சத்தியம். சத்தியம். இந்தச் சத்தியம் உன்னிடம் பேசும். நீ வாழ வேண்டிய முறைகளை உனக்குச் சொல்லிக் கொடுக்கும். நீ சுகத்தோடு வாழ, சுகப் பாதையைக் காட்டி, பெரும் சுகத்தோடு கலந்திடும் இரகசியத்தைச் சொல்லிக் கொடுக்கும்.

நீ - நீயில்லை. நான் - நானுமில்லை. இரண்டையும் படைத்த அது - நீ என்பதை உனக்குச் சொல்லிக் கொடுத்து - அனுபவத்திற்கு உன்னை ஆசானாக்கும். ஆசான் என்றாலே நீ ஈசன்தானே. ஆசானும், ஈசனும் ஒன்று என்று சித்தர்கள் ஈசனைப் பார்த்துக் கொண்டே - ஆசனாய் இருந்து பேசுகின்றார்கள். ஆசானுக்கு ஈசன் தரிசனம் கொடுக்கின்றான்.

தத்துவங்களையெல்லாம் கழட்டிவிட்டு ஈசனும் ஆசானும் இரண்டறக் கலந்து விடுகிறார்கள். முதலில் ஈசன்தான் ஆசானைப் பார்த்துச் சிரிக்கின்றார் - ஆசானின் மௌனத்தைக் கலைக்கிறார். ஆசானின் மௌனத்திற்குள்ளே - ஈசன் - ஆசானுக்கு தரிசனம் கொடுக்கிறார். ஆசானை மறந்தவன் ஈசன் இல்லை. ஈசனை விட்டவனும் ஆசான் இல்லை. ஆகவே, ஈசன் - மனிதன் அறியா மகத். ஆசான் - மனிதனுக்குத் தெரியும், மனிதனை மனிதனுக்கு அறிய வைக்கும், மனிதன் வடிவில் நடமாடும். ஈசன் ஆவார். ஆகவே, பதினெட்டை நீக்கு; ஐந்தை ஒருமைப்படுத்து. இரண்டிலிருந்து விலகி மூன்றை ஒரு மையத்திற்குக் கொண்டு வந்து நான்கைக் கடந்து, ஆறுக்கு அழைத்து வந்து நிற்கச் செய்து ஏழில் பரசாந்தம் அடைந்து; எட்டுக்குள் கைலாயம் கண்டு; ஒன்பதுக்குள் கபால ஜோதியைக் கண்டு; பத்தில் பரவெளியில் பரவெளியாய்க் கலந்து கலந்து.... சிதம்பரத்திலே நடராஜப் பெருமான் திருஆலயமுள்ளது. அங்கே சபாநாயகர் வீற்றிருக்க வில்லை. நின்றிருக்கிறார். ஈசனே கதியென்று எந்நாளும் நான் இருக்கின்ற காரணத்தினால் - அவன் தன் கதியாளனைச் சேர்த்துக் கொண்டு அவனுக்குத் தெரியாதவற்றைச் சொல்லிச் சொல்லிக் கொடுக்கின்றார். சொல்லுதல் இல்லை - சொல்லிச் சொல்லி கொடுக்கின்றார். தன்னை அடைகின்ற மார்க்கத்தையும் சொல்லிக் கொடுக்கின்றார். தன் கதியாளனை

அன்போடு அழைத்துச் செல்லுகின்ற அருள் தன்மையும், காட்டுகின்ற காட்சியும் சொல்லாமல் கொடுக்கின்றான்.

நடராஜப் பெருமான் திருஆலயத்தில் - கனக சபையில் - எம்பெருமான் ஒற்றைக் காலில் நின்றுகொண்டு இருக்கிறார். ஆனந்தத் தாண்டவத்தில் வலக்காலைக் கீழே ஊன்றி, இடக்காலை வலக் கால் முட்டிக்கு மேல் தூக்கி அதாவது - நிலைத்த பிரம்மம் உணர எங்கும் பிரம்மம் மேல் எழுந்து நிற்கக் குமிழ் சிரிப்பு வருகிறது. இடக்காலில் நீண்ட நேரம் நிற்க முடியாது. வலக் காலில் நீண்ட நேரம் நிற்க முடியும். பெண்கள் கூட நிற்கும் போது வலக் காலை ஊன்றி இடக் காலை தனது வலக் காலின்மீது வைத்துக் கொண்டு பேசுவார்கள். சில்லு விளையாடும் பழக்கம் ஒன்று உண்டு. பெண்கள் விளையாடுவார்கள். ஆண்களும் விளையாடுவார்கள். சில்லு விளையாடும்போது இடக்காலைத் தூக்கி வலக் காலால் ஒவ்வொரு கட்டமாகத் தாண்டுவார்கள். இயற்கையிலே இப்பழக்கமுள்ளது. கனக சபைக்கு அப்பால் கோவிந்தராஜப் பெருமாள் சன்னதிக்கு எதிரே ஒரு மண்டபமுள்ளது. கனக சபைக்கு நேரே நடராஜனைத் தரிசிக்க ஏற்றவாறு உள்ளது. அது சுமார் 50 அடி நீளம் இருக்கும். அங்கே அந்த மண்டபத்தில் பல்லாயிரம் கோடி ஆண்டுகளாக ஞானிகள், தன்னை அர்ப்பணித்த பக்தர்கள், சரணாகதிகள், ஆத்ம சாதகர்கள், கவலை கொண்டோர், பெரும்துன்பம் உள்ளவர்கள், பெரும்துயரத்திற்கு ஆளானவர்கள் கண்கலங்கி நிற்பவர்கள், கதிகலங்கி நிற்பவர்கள், அப்பர், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், இராமலிங்க சுவாமிகள் இன்னும் பலர் வந்திருக்கிறார்கள். மாணிக்க வாசகர் இந்த மண்டபத்தில் நடந்து நடந்து ஜோதியை அடைந்தார். அப்படி நடந்த இந்தத் திரு இடத்தில் தினம் தினம் உட்கார்ந்து பேச்சுக் கடந்த நிலையில் இருந்தாலே போதும்! உன் வினை நீங்கும், உன் பழிகள் நீங்கும், உன் சாபங்கள் நீங்கும், நீ என்ற பதம் உன்னை விட்டு நீங்கி விடும். இந்த அற்புதமான ஈசன் திருவடி பெற்ற இந்தத் திருஇடத்திற்கு ஈடு இணை உண்டு என்று சொல்லுவார் இன்னும் வரவில்லை - இனியும் வரப்போவதுமில்லை.

## சந்தோஷம்

# திரும்பிப் பார்

ஜீவன் திரும்பிப் பார்க்கிறது. ஜீவன் தனக்குள்ளே தானே திரும்பிப் பார்க்கிறது. தான் தனக்கு எந்த உருவம் கொடுக்கப் பட்டு இந்த மண்ணுலகத்திலிருந்து விண்ணுலகம் கால் எடுத்து வைக்கும் வரை அந்த உருவங்கள் புகுந்து வெளி வந்து மீண்டும், எந்தெந்த உருவங்களில் தான் நுழைந்து வெளி வந்து, நுழைந்து, வெளி வந்து, அத்தனை உருவங்களையும் பார்த்துப் பார்த்து - நாமா இப்படி? நாமா இங்கு இருந்தோமென்று உயிர் வெளியில் நின்று சற்று நேரம் தொடர் நோக்கில் நின்ற வண்ணமாய் இருந்தது.

தான் எந்தெந்த உருவத்தில் நுழைந்து வந்ததோ அந்த உருவங்கள், அந்த உருவங்களின் மொத்த தொகுப்பெல்லாம், அதன் அருள் பார்வையில் பட்டுக் கொண்டிருந்தது.

அது ஜீவ வெளியிலிருந்து சிவ வெளிக்கு வந்த பிறகு அத்தகைய ஆற்றல் ஜீவ அனுபூதி பெற்ற பிறகே அதற்குக் கொடுக்கப்படுகிறது.

திரும்பிப் பார்க்கிறது. திரும்பிப் பார்க்கிறது. திவ்வியப் பெரு வெளியில் பிரவேசிக்கிறது. பரசாந்த மௌன நிலைக்கு அழைத்துச் செல்லப் படுகிறது.

**சந்தோஷம்**

அடித்தவனும், அடிபட்டவனும் அன்போடு ஒன்றுக்கொன்று கட்டிக் கொண்டு அழுகின்ற வினை இந்த ஜீவ யாத்திரையில் நடக்கும்.

# குரல்

ஒவ்வொரு ஜீவனுக்கும் அல்லது ஜீவ உடலுக்கும் உயிர்க்குரல், உறவுக்குரல், சந்தோஷக்குரல், உபாதைக் குரல், தரிசனக் குரல், மனோ குரல், பிரமிப்புக் குரல், மரணக்குரல், தரிசனக் குரல், மௌனக் குரல், சாயுச்யக் குரல், பரசாந்த மௌன நிலை, மங்களக் குரல், சித்தர்கள் குரல், முக்தர்கள் குரல், அபலைக் குரல், அசுபக் குரல் போன்ற குரல்கள் உள்ளன.

அந்தந்த நேரத்தில், அந்தந்த ஜீவன் அந்தந்த நிலையை அடையும் போது அந்தந்தக் குரல் அதனிலிருந்து வெளிப்படுகிறது. குழந்தை பிறந்ததும் அழுகிறது. அது வாழும் குரல். அது மங்களக் குரல், அது இன்பக்குரல், குழந்தை பிறந்த பிறகு அழும் குரலும், அது முதுமையடைந்த பிறகு மரணமடையும் போது அழும் குரலும் வித்தியாசமானது. இரண்டும் ஒன்றல்ல.

ஜீவ யாத்திரையின் வளர்ச்சியின்போது அதி முன்னேற்றத்தின் போது எழும் குரல் வேறுபட்டது. குரலுக்குள் குரல். அந்த இரண்டாவது குரலுக்குள் இன்னொரு குரல். அந்தக் குரலுக்குள் இன்னொரு ஒலி. அந்த ஒலிக்குள் ஓலக்குரல். அந்த ஓலக் குரலுக்குள் சுப குரல், சோகக் குரல், மரணக் குரல், பேரிடிக் குரல். அந்தக் குரலுடனே செல்லும் போது பரசிவக்குரல், பரமானந்தக் குரல், சாயுச்சியக் குரல் எல்லாம் அந்த ஆத்ம நாதத்திற்குள்ளே அதாவது அந்த ஜீவனுக்குள் உள்ளன. அந்த ஜீவனின் ஒவ்வொரு நிலையையும் வெளிப்படுத்தி அனுபவ நிலையிலே சென்று கொண்டிருக்கிறது. இது நாத ஜீவ யாத்திரை. இந்த யாத்திரையை முடிப்பதற்கு ஒரு நிமிடமாகலாம், ஓராயிரம் ஆண்டுகள் ஆகலாம்.

இந்த ஜீவ யாத்திரையை ஒரே பிறவியில் முடித்துக் கொண்டு சாயுச்சிய நிலை அடையும் ஜீவனும் உள்ளது. ஒரு கோடிக்கு மேலான பிறவிகள் எடுத்து இந்த உலகத்தில் பல்லாயிரம் கோடி ஆண்டுகள் இருந்து கைலாயத்தின் கதவு சாத்துவதற்கு முன்பு கடைசி ஜீவனாகக் கைலாயத்திற்குச் செல்லும் ஜீவனுமுண்டு. வெட்ட வெளியில் கலக்கும் ஜீவனுமுண்டு.

ஆகவே, ஜீவ யாத்திரையின் நிலையை, காலத்தை, பிறப்பை, அதனதன் நிலைக்கு ஏற்றவாறு அந்த அது எப்படித் தீர்மானித்து

இருக்கிறதோ அதன் படியெல்லாம் முறையாகப் பரசாந்தத்தோடு நடத்திக் கொண்டிருக்கிறது.

ஆழ்ந்த யோக சாதனத்தின் வல்லமையால் தன் மரணக்குரலைத் தானே கேட்கலாம். கசாப்புக் கடைக் காரன் ஆட்டை வெட்டும் போது ஆட்டின் மரணக்குரலைக் கேட்கலாம். வேடன் அம்பை மான் மீது எய்யும் போது மானின் உயிர் போகும் போது அதன் மரணக் குரலைக் கேட்கலாம். கோழியைக் கொல்லும் போது கோழி கத்துகிறதே அதன் கடைசிக்கத்தல் மரணக்குரலாகும். புலி, மானை அடித்துக் கொல்லுகிறது. அந்த மானின் ஜீவன் வெளியேறுகிறதே அதன் மரணக்குரலைக் கேட்கலாம். பெரிய விபத்து நடக்கும் போது மனிதன் ஜீவன் பிரிகிறதே அப்போது அந்த மரணக்குரல் கேட்கும். பேரிடிகள் வானத்திலிருந்து விழும் போது அப்போது உயிர் பிரியும் ஜீவன்களின் மரணக் குரலைக் கேட்கலாம். யானையைச் சிங்கம் கொல்கிறது. யானையின் ஜீவன் பிரியும் போது யானையின் மரணக் குரலைக் கேட்கலாம். கீரிப்பிள்ளை பாம்பைப் பிடித்துக் கடைசியில் கடிக்கிறது. அப்போது அந்தப் பாம்பின் மரணக்குரலைக் கேட்கலாம். மலைப் பாம்பு ஆட்டையோ, மாட்டையோ விழுங்கும் போது, அப்போது அந்த ஆடு (அ) மாட்டின் மரண ஒலியைக் கேட்கலாம். ஈப்புலி (ஈக்கு புலி) என்ற ஜீவன் உள்ளது. அந்த ஈப்புலி ஈயைப் பிடிக்கும் போது அந்த ஈ மரண ஒலியை வெளியிடும். அப்போது மரணக் குரலைக் கேட்லாம். ஏராளமான எறும்புகள் ஓரிடத்தில் இருக்கலாம். அந்த வீட்டுக்காரர் அதன் மீது மண்ணெண்ணெய் விடும்போது அந்த எறும்பின் மரண ஒலியைக் கேட்கலாம். ஒரு எறும்பு கடிக்கும் போது அந்த எறும்பைப் பிடித்து இரண்டு விரலால் அதை நசுக்கும் போது அந்த மரண ஒலியைக் கேட்கலாம்.

சூன்ய காலம் வந்து கொண்டிருக்கிறது, பிரளயம் வந்து கொண்டிருக்கிறது, உலகம் அழிந்து கொண்டிருக்கிறது. உலக அழிவு - அந்த 3 3/4 நாழிக்குள் உலகத்திலுள்ள எல்லா வகையான ஜீவன்களின் மரண ஒலியைக் கேட்கலாம். அப்போது அந்த மரண ஒலியைக் கேட்பவர் யாராக இருக்க முடியும்?

வாழை மரத்தை வெட்டும்போது வாழை மரத்தின் ஜீவன் வெளியேறுகிறதே அப்போதே மரண ஒலியைக் கேட்கலாம். புல்லைப் பிடுங்கும் போது, கீரையைப் பிடுங்கும் போது, செடி, கொடிகளைப்

பிடுங்கும் போது, மரங்களை வெட்டும் போது அந்தந்த ஜீவன் அந்தந்த நிலையிலிருந்து வெளியிடுகின்றதே அந்த மரண ஒலியைக் கேட்கலாம்.

இகத்தில் ஜீவன்கள் வெளிப்படுத்தும் கடைசி ஒலி மரண ஒலியாகும். பிறப்புகளை அறுத்துக் கொண்டு பிறப்பற்ற நிலைக்கு வரும் போது அந்தக் கடைசிப் பிறவியில் அந்தக் கூட்டிற்குள்ளே இருக்கும் ஆத்மா வெளியேறும் போது மங்கள ஒலி, கெட்டிமேளக் குரல், புல்லாங்குழலின் ஞானக்குரல், பரமேஸ்வரரின் டமகரக் குரல், பார்வதி தேவியின் வீணைக் குரல், நாரதரின் தம்புராக் குரல், நந்தி பகவான் தவில் குரல், எல்லாம் பேரின்பமாய், பேரருளாய், பரசிவநாத வழியில் பரம்பொருளே வந்து அந்த ஆத்மாவை அழைத்துச் செல்லும்.

அதனால் தான் இத்தகைய ஆத்மா பிரியும் போது மேலிருந்து தங்க ரதம் வந்ததாகவும், அதில் ஏறிச் சென்றதாகவும் ஒரு கருத்து நிலவுகிறது.

எல்லாருக்கும் யாத்திரை முடிகிறது. யாத்திரை முடியாதவர்கள் யாருமில்லை. ஆனால் யாத்திரை அவரவர் நிலைக்கு ஏற்றவாறு அதுவின் அதன் முடிவோடு அது நடக்கிறது.

**சந்தோஷம்**

தொடுதல் என்றால் விதியைத் தொடுதல், அறிவைத் தொடுதல், ஜீவனைத் தொடுதல், பிறவியைத் தொடுதல், ஜீவனுக்குள்ளே உள்ள ஒளியைத் தொடுதல், அந்த ஒளிக்கு ஆதாரமாய் இருக்கின்ற அண்ட அருள் சக்தியைத் தொடுதல், அந்த அண்ட அருள் சக்தி மூலம் பரவெளியைத் தொடுதல், பரவெளி தொடுதல் மூலம் சிவத்தைத் தொடுதல், சிவத்தின் மூலம் சிவானந்தத்தைத் தொடுதல்.

# ஜீவ நாதம்

ஜீவனின் அவலக் குரலுக்கு மதிப்புக் கொடு. அந்தக் குரலைக் கேட்டு, அந்தக் குரலின் மூலம் அந்த ஜீவன் வெளிப்படுத்தும் கருத்தை உணர்ந்து அதன் அதி முக்கியக் கருத்தை உணர்ந்து, பூர்த்தி செய்யக் கற்றுக் கொள். ஒவ்வொரு ஜீவனுள்ளும் கவலைக்குரல், ஓலக்குரல், மரணக்குரல், ஜீவ - துடி துடிப்புக்குரல், பெருந்துன்ப - பேரழிவுக்குரல் உள்ளது.

ஜீவ நாதம் வெளிப்படுவதை நீ சாதாரண நிலையில் இருக்கும் போது உன்னால் உணர முடியாது. உன்னிடம் உள்ள மாயை, அகங்காரம், கர்மா அதை உணர முடியாதபடி தடுத்து விடும். ஆகவே உன் ஜீவன் மூலம், உன்னுள் உள்ள ஜீவ நாதம் மூலம் அந்த ஜீவனின் நாதத்தைக் கண்டு கொள்.

உன் ஜீவ நாதமும் எதிர் ஜீவ நாதமும் ஒன்றுக்கொன்று பழகலாம். இப்படி எல்லா ஜீவ நாதமும் பழக முடியும். இதன் விளைவு சந்தோஷம். ஜீவ பேதங்கள் விலகும். ஜீவ விபரீதங்கள் விலகும்.

ஜீவன் ஜீவனோடு வாழும் வாழ்வு பரிணமளிக்கும். சுத்த வாழ்வு கிடைக்கும்.

நீ சுத்த நிலையிலிருந்து அகங்காரம் நீக்கி, முழு மாயையை நீக்கினால், உன் ஜீவனை நீ அறிவாலும், தவத்தாலும் கண்டு கொள்ளலாம். இப்போது இந்த உலகில் எல்லா மனிதர்களுமே, மாயை, வித்யா மாயை, அவித்யா மாயை, மாமாயை போன்ற எல்லா விதமான மாயைகளோடும் அகங்காரம், மமகாரம், ஆணவம் கலந்து, இந்த உலகத்தைப் பார்க்கிறார்கள். இந்த உலகத்தில் பேசுகிறார்கள்.

இவற்றிலிருந்து தன்னை முழுமையாக விலக்கிக் கொண்டு சுத்த அறிவோடு, சுத்த புத்தியோடு சுத்த நினைவோடு, சுத்த நிலையில் ஜீவ நாதம் கேட்பது, உணர்ந்து கேட்பது, அவைகளுக்கு வரும் உயிருக்கு உயிரான இடையூறுகளை நீக்குவது ஜீவ யாத்திரையின் சாதனையாகும். அழகான, அற்புதமான வினையாகும்.

இதைத் தான் வள்ளல் பெருமான் ''ஜீவகாருண்யமே மோட்சத்தின் திறவு கோல்'' என்று அருளியுள்ளார்.

இந்த ஜீவ நாதப் பழக்கம் கைவல்யமான பிறகு, எல்லா ஜீவனோடும் பழகலாம். கடந்த காலத்தில் ஞானிகள், யோகிகள், சித்தர்களெல்லாம் எல்லா ஜீவனோடும் பேசியிருக்கிறார்கள். அவர்களுடைய துன்பத்தை நீக்கியிருக்கிறார்கள்.

ஜீவ நாத அன்பு ஒரு வியக்கத் தகுந்த அத்தியாவசியமான திருவருள் சாதனையாகும்.

ஜீவ நாத அன்பில் நீ வெற்றி பெற்றால், உனக்குப் பகையுமில்லை. இன்பமுமில்லை. துன்பமுமில்லை. இரண்டையும் கடந்து விடுவாய். பிறகு உனக்கு இந்த உலகம் தேவையற்றதாகி விடும். எல்லா ஜீவனும் உன்னை வாழ்த்தும். வணங்கும்.

வல்ல நாட்டுச் சித்தர், திருக்குற்றாலக் காடுகளில் சென்று கொண்டு இருக்கும் போது, காட்டில் உள்ள மிருகங்களிடம் பேசுவார்; அவைகளும் இவரிடம் பேசும்.

சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் எல்லா ஜீவனோடும் பேசுவார். மரம், செடி, கொடிகளோடு கூடப் பேசுவார்.

ஸ்ரீ அன்னை எல்லா ஜீவனோடும் பேசுவார். ஸ்ரீ இராம கிருஷ்ண பரம ஹம்சர் எல்லா ஜீவனோடும் பேசுவார். ஆதி சங்கரர் மகா அற்புத சிவ ஞான ஜீவ ஆற்றல் பெற்றிருந்தார். அவர் பஞ்சபூதங்களிடம் பேசுவார்.

இப்படி யோகிகள், ஞானிகள், சித்தர்கள் எல்லாம் எல்லா ஜீவனோடும் பேசுவார்கள்.

ஜீவன் வெளியிடும் ஜீவ நாதத் துன்பத்தை நீக்குதல் வியக்கத் தகுந்த திருவருள் சாதனையாகும். இந்த ஒன்றில் வெற்றி பெற்றால் யாத்திரை மிக விரைவில் நிறைவேறுவதற்கான வல்லபத்தைப் பெறுவாய்.

இதையே தான் பகவத் கீதையில் கர்மயோகம் பேசுகிறது.

ஞான கர்ம சந்நியாச யோகம் அறுதியிட்டு விளக்குகிறது. ஒரு நாள் ஒரு நாய்க்குட்டி இரவில் குரைத்துக் கொண்டிருந்தது. இரவு முழுதும் குரைத்துக் கொண்டிருந்தது. அங்கு நான்கு பேர்கள்

இருந்தார்கள். எல்லோரும் இதைக் கேட்டார்கள். அதில் விவரம் புரிந்த ஒருவரும் இருந்தார். அவர் அந்த ஜீவ நாதக் கருத்தை உணர்ந்து, அந்த குரலைக் கேட்டு அமைதியாக இருந்தார்.

பொழுது விடிந்தது, நாய்க்குட்டி தொடர்ந்து அழுதது. ஜீவ நாதத்தில் கைவல்யமான அவர் வெளியே வந்தார். அந்த நாதக் குரலை உணர்ந்து, அதைத் திருப்தி செய்தார்.

அந்த ஜீவன் அழகாக, பாசமாக, அன்பாக, அதைத் திருப்தி செய்த அந்தப் பெருமாளைப் பார்த்துக் கொண்டிருந்தது.

ஒரு நாள் ஞானி ஒருவர் சென்று கொண்டிருந்தார். அங்கே ஒரு பாம்பு அழுது கொண்டிருந்தது. தன் மெல்லிய குரலில் தன் துன்பத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. சென்ற ஞானி, அந்தப் பாம்பின் வாயைப் பிடித்து அதனுள் இருந்த ஒரு முள்ளை மெதுவாக எடுத்துத் தூக்கி எறிந்தார். பாம்பின் வலி நீங்கியது. பாம்பு தன் வேகத்தையும் கொத்துகின்ற குணத்தையும் விட்டு விட்டு, மனத்தின் கையால் கை கூப்பி அவரை வணங்கியது. இவ்வாறு எவ்வளவோ சான்றுகள் உள்ளன.

சந்தோஷம்

*மனதை ஒடுக்குவது சோகம்*
*மதியை ஒடுக்குவது காமம்*
*சிவகதியைத் தடுப்பது அகங்காரம்*
*விதியை அடக்குவது சற்குருவிடம் சரணாகதி*

**யாத்திரைக்கு வாகனம் வேண்டும். ஜீவன் என்ற ஒரு சூக்கும சக்திக்கு ஒரு வாகனம் வேண்டாமா? அதுதான் உயிர்க்கூடு.**

# ஒரு கொசுவின் குரல்

ஒரு கொசு இல்லை. இல்லை. பல கொசுக்கள் வந்து வந்து காதில் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தன. சுவாமிஜி நாதப் பிரியர். நாதக் காதலர். அவருக்கு நாதானந்தமும் தெரியும். ஞானானந்தமும் தெரியும். நாத பிரம்மமும் தெரியும். பர நாதமும் தெரியும். சிவ நாதமும் தெரியும். அருள் நாதமும் தெரியும். பரசிவ நாதமும் தெரியும். மாயா நாதமும் தெரியும். ஜீவ நாதமும் தெரியும் வெட்ட வெளியும் தெரியும். அந்தச் சுவாமிஜியிடம் போய், அவர் காதின் அருகே ரீங்காரமிட்டுக் கொண்டிருந்த பல கொசுக்களில் ஒரே ஒரு கொசு சோகக் குரலில் அவர் காதினருகே சென்று, அந்தக் குரலைக் கொடுத்துக் கொண்டிருந்தது.

சோக நாதத்தை ஒலித்துக் கொண்டிருந்தது. அந்தக் கொசுவின் நாத சோகமும் தெரிந்தது. அந்தக் கொசுவின் சோக நாதத்தால் அதன் முழு வாழ்க்கையும் தெரிந்து கொண்டிருந்தது. அதன் சோக நாதம் வெளிப்பட - வெளிப்பட அந்தச் சோகத்தில் கொசுவின் உபாதையும் வெளிப்பட்டது. துன்பங்கள் வெளிவந்தன. கடவுளின் தாகமும் வெளி வந்தது. அடுத்த ஒரு சில நொடிகளிலேயே சுவாமிஜி அதனுள்ளிருந்து பெரும் விழிப்பு சக்தியை வெளிப்படுத்தினார். தன் அருள் நாதத்தால் அதன் மரண நாதத்தை ஐக்கியப்படுத்தி அதன் மரணச் செய்தியைக் கேட்டறிந்தார். உலக காருண்யம் சுவாமிஜியிடமில்லை. ஜீவகாருண்யம் - சுவாமிஜியிடம் குறைந்திருந்தது. அவரிடமிருந்தது ஜீவ முக்தி காருண்யம். ஒரு ஜீவனின் கர்மாக்களையெல்லாம் நீக்கி விட்டு ஆத்ம நிலைக்கு அழைத்து வந்து பரமாத்மாவோடு இரண்டறக் கலக்கச் செய்தலிலே அவருடைய ஜீவகாருண்யம் இருந்தது.

**கொசுவின் மரணச் செய்தி**

நான் எனக்குக் கொடுக்கப்பட்ட மூன்று நாட்கள் வாழ்க்கையில்- ஒரு வேப்ப மரத்தின் மீது உட்கார்ந்தேன் அதன் புனிதக் காற்றால் மேன்மையடைந்தேன். ஒரு அரச மரத்தில் உட்கார்ந்தேன் அதன் வித்யா சக்தியால் எது நன்மை? எது தீமை என்பதை அறிந்தேன். அதனால் மனித மலங்களிலும், கழிவுப் பொருட்களிலும், துர்நாற்றம் தரும் பொருட்களிலும்- சென்று அமரும் புத்தி என்னிடமிருந்து அறவே விலகி விட்டது. ஒரு கொலை காரன் முதுகில் உட்கார்ந்தேன். மீண்டும் அந்த

புத்தி எனக்கு வந்து விட்டது. அதனால் அழிகின்றேன். ஒரு மகா சித்தரின் சமாதியில் உட்கார்ந்தேன். அந்தச் சமாதியை சுற்றிப் பாடிப் பாடி, ஆடிப் பாடிச் சுற்றி, சுற்றி வந்தேன். அந்தச் சமாதியிலிருந்த சித்தர் என் குரலைக் கேட்டார். உங்களிடம் வரச் சொன்னார்.

அதில் இன்னொரு செய்தி 4 1/2 நிமிடத்தில் நீ இந்தக் கூட்டை விட்டு விடப் போகிறாய். கூட்டுக்குள் இருக்கும் பறவை பறந்து விடப் போகிறது. இது மரணத்திற்கு விடும் செய்தியன்று. என்னிலிருந்த ஆத்மப் பறவை பறக்கப் போகிறது. நான் இன்னொரு கூட்டிற்குச் செல்ல வேண்டுமா? கடவுளிடம் கலக்க முடியுமா? எனக்கு விமோசனம் தேவையன்று. தன் மரண நாதத்ததால், சோக நாதத்தால், அந்திம அந்த நாதத்தால், கடைசி நாதத்தால் இடைவிடாது ஒலித்துக் கொண்டு இருந்தது.

சுவாமிஜி கேட்டார். அந்தக் கொசு கொசுவிலிருந்து விடுபடுவதைத் தெரிந்து கொண்டார். கொசு கொசுவிலிருந்து விடுபட்டுக் கொசுவின் வடிவத்தில் அந்தக் கொசுவில் உள்ள ஜீவன் மனித ஜீவன் நிலைக்கு வந்திருப்பதைத் தரிசித்தார். தன் ஆத்ம ஜோதியால் அந்தக் கொசுவின் மரண நாதத்தைச் சுத்தப்படுத்தினார். கொசுவின் ஜீவனை அதன் கபாலத்திற்குக் கொண்டு வந்தார். அந்தக் கபாலத்திலிருந்த கொசுவின் ஜோதி எல்லையற்ற ஒன்றுக்குள் சென்று எல்லையற்றதாகிவிட்டது.

கொசு இருக்கும் போது அருள் உடல், அன்பு உடல், பிரணவ உடல், பரஞான சத்திய உடல், மோன நிலை யாரிடம் சென்று முறையிடுவது என்ற அதி நுட்பமான திருவருள் நுணுக்கம் தெரிந்த நிலை எல்லாம் அடைந்திருந்தது. அதற்குள்ளே அது படியேறி விஸ்வப் பிரபஞ்சத்தில் வெளிபட்டது. அதன் சோக நாதம் ஸோக நாதமாக மாறியது. கடைசியாக அந்தக் கொசு தன் கபாலத்திலிருந்து வெளிப்படும் போது தன் சற்குரு காதினிலே "உய்ய அதன் உள்ளத்தில் ஓங்காரமாய் அமைந்த" ஓங்கார நாதத்தைப் பரவெளியெல்லாம் கேட்கும்படி பரவெளியில் கலந்தது.

அந்த உடலுக்குள் அல்லது கூட்டிற்குள் உள்ள ஜீவன்-ஜீவனின் ஒளி வெளிப்பட்டு-வெளிப்பட்டு ஜீவப் பேரொளி வெளிப்படும்போது அதன் ஆத்ம தத்துவம் மேலோங்கி நிற்கும். அந்த ஜீவ - ஒளி 3 1/2 அடி

வெளிப்புறத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கும். ஜீவ தத்துவம் ஒடுங்கி அதன் பிறகு ஆத்ம தத்துவம் மேலோங்கும் போது ஆத்ம பிரகாசம் வெளிப்படும். அந்த உடலில் தத்துவங்கள் விலக்கப்பட்டு, குணங்கள் அறவே நீக்கப்பட்டிருக்கும். அந்தக் கூட்டின் விதியிலிருந்து விலக்கப்பட்டு சுத்த சிவ தத்துவ நிலைக்கு வந்து சேரும். அதை யார் செய்வது? அதுவே அதைச் செய்து கொள்ளுமா? அதை அந்தப் பரசிவம் செய்யுமா?

அதற்கு அதைக் கேட்டால் தெரியும், அல்லது பரசிவத்தைக் கேட்டால் தெரியும். ஜீவ யாத்திரை முடிந்த பிறகு அங்கு சென்று அதைக் கேள் ........ ஜீவ யாத்திரை முடிந்த பிறகு பதில் தானாகவே கிடைக்கும். கொசு மனிதனுடைய இரத்தத்தைக் குடிக்கும் போது அதுக்கு அது உணவு. அது உண்ணும் சுகம் அடைகிறது. மனிதன் அதை ஓங்கி அடித்தால் அது அழுகிறது. உணவு உண்ணும் போது அது சுகமான குரலால் ஒலிக்கிறது. அது அடிபட்டு - ஜீவன் பிரியும் போது முதலில் அலறல், சோகக்குரல், அதற்குப்பிறகு மரணக்குரல். அந்தக் குரல் அதன் தேகத்திலிருந்து வெளிப்பட்டு வெட்ட வெளியில் கலக்கும் போது ஒரு குரல். அதன் குரல் மாறுபடுகிறது.

ஜனிக்கும் போது ஒரு குரல், சுகம் பெறும் போது ஒரு குரல், மரணத் துன்பம் ஏற்கும் போது அலறல். சோகக்குரல், மரணக்குரல், வெட்டவெளியில் கலக்கும் போது ஒரு குரல். அதே குரல் மாறுபட்டு அலறல் குரல் - எப்படியும் பிழைத்திடலாம் என்ற நம்பிக்கைக் குரல், சோகக் குரல்-நம்பிக்கையற்ற நிலை ஆனால் எதிர்பார்ப்புடன் கூடிய நம்பிக்கைக் குரல். மரணக் குரல் நம்பிக்கை கடந்த இனி நிச்சயம் போய் விடுவோம் என்ற குரல். ஜீவன் உடலை விட்டுப் பிரிந்த பிறகு ஒலிக்கின்ற குரல் வெட்டவெளிக்குரல். இதற்குத் தேகமில்லை. இத்தனையும் எந்த மனிதனாவது கேட்டு இருப்பானா? அத்தனை ஒலியும் தனக்கும் உண்டு என்று தெரியுமா? ஆனால் ஞானிகளுக்குத் தெரியும்.

ஏனென்றால், தேகத்தை விட்டு ஜீவன் பிரிந்த பிறகு ஒலிக்கின்ற ஒலியை மனிதனால் எந்தக் கருவியாலும் பதிவு செய்ய முடியாது. இதுதான் கேளா ஒலி. இந்தக் கேளா ஒலியைக் கேட்பவர்கள் ஞானிகள்.

### சந்தோஷம்

# ஒரு பெண்ணின் சோகக் குரல்

கடவுளுக்குத் தெரியும் இன்று அழகாக யௌவனமாக இருக்கும். மங்கை நாளை அழகு இழந்து, பருவம் இழந்து, நோயினால் பீடிக்கப்பட்டு, நடக்க முடியாமல், தரையில் உட்கார்ந்து கொண்டு அழும். அந்த மங்கையைக் கண்டு பரிதாபப்படுவதா, கண்டிப்பதா? அந்த அழகை அந்த யௌவணத்தை, யௌவன சக்தியை கடவுள் நோக்கிச் செலுத்தி இருந்தால், இன்று அழுவதற்கு வேலையில்லை. பரிதாபப் படுவதற்கு வேலையில்லை. கண்டிப்பதற்கு இடம் இராது. இது இளைஞனுக்கும் பொருந்தும். என்னடா வாழ்க்கை இது? என்ன உருவம் இது? என்ன உலகம் இது?

உருவத்திற்குள்ளே உதவும் சக்தியும் உள்ளது. உதவாத சக்தியும் உள்ளது. ஓடவும் முடியாமல், ஒளியவும் முடியாமல், அன்பு காட்டவும் முடியாமல், இந்த சூழ்நிலையில் காட்டும் அன்பும் கேலிக் கூத்தாகும். இந்தச் சூழ்நிலையை நினைத்து உறவுகள் போவதையும், நடப்பதையும் கண்டு கோபத்தைக் காட்டவும் முடியவில்லை. கோபம் காட்டினால் யாரிடம் போய் இருப்பது? யார் நமக்கு அத்தியாவசியமான உதவிகளைச் செய்வார்கள். படைத்தவனை நோவதா? நம்மையே நாம் நொந்து கொள்வதா! எது செய்தாலும் பயனில்லை. என்ன செய்வது என்றும் புரியவில்லை.

எட்டு அடிக் குச்சுக்குள் என்னென்னமோ, 60 ஆண்டுக்குள் நடந்து கொண்டிருக்கிறது. எட்டு அடிக் குச்சு வீழ்வது எப்போ? என் துன்பம் தீர்வது எப்போ? எனக்கு ஆறுதல் சொல்பவர் யார்? என் கண்ணீர் இன்று என்னைப் பார்த்து கேலி செய்கிறது. சரணடைய வேண்டியதைச் சரணடைய வேண்டிய நேரத்தில் சரணடையாமல் ஆடக் கூடாத ஆட்டம் ஆடியதால், போடக் கூடாத வேஷம் போட்டதால் இந்த நிலை. இனி என்னால் ஆடவும் முடியாது. ஆடவும் மனமில்லை. என் ஆட்டத்தைக் கண்டு நானே அவமானப் படுகின்றேன்.

என்னுள் கடவுள் சாட்சிப் பொருளாக இருக்கிறார். ஒரு சின்னப் பாத்திரத்தைக் கூட நகர்த்த முடியாத நான், எனக்கு நானே, எனக்கும்-எல்லோருக்கும் சாட்சிப் பொருளாக உள்ளேன்.

இன்று கடவுளும், நானும் ஒரே பணியைத் தான் செய்கின்றோம். கடவுள் ஆனந்தமாய்ச் செய்கிறார், நான் கண்ணீரோடு செய்கின்றேன்.

# ஒரு ஜீவன் அழுகிறது

**ஒரு ஜீவன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது? எப்படி அழுகிறது?**

தனக்காக அழுகிறதா? அடுத்தவனுக்காக அழுகிறதா? கடவுளுக்காக அழுகிறதா? அழ வேண்டுமே என்பதற்காக அழுகிறதா? அழுதால் பயனுண்டு என்ற நிலையில் அழுகிறதா? ஆசையாக அழுகிறதா? அவலத்தோடு அழுகிறதா? ஆழமாக அழுகிறதா? வானளாவிய நிலையில் அழுகிறதா? கூட்டத்தோடு அழுகிறதா? தனித்துச் சென்று தன்னந்தனியே அழுகிறதா? தவறாக அழுகிறதா? சரியாக அழுகிறதா? தத்துவத்திற்காக அழுகிறதா? வித்தக நிலையிலே அழுகிறதா? விபரீதமாக அழுகிறதா? விவேகத்தோடு அழுகிறதா? வீணாக அழுகிறதா? விரிசல் கண்டு அழுகிறதா? இங்கு வாழ்வில்லையே என்று அழுகிறதா? இந்த உலக வாழ்வுக்காக அழுகிறதா? உறவு களுக்காக அழுகிறதா? அந்த உலகைக் காண அழுகிறதா? அந்த வாழ்க்கை பெற முடியவில்லையே என்று அழுகிறதா? தன் அழுகையை மற்றவரிடம் சொல்லிச் சொல்லி அழுகிறதா? அழும் காரணத்தை மறைத்துக் கொண்டு அழுகிறதா? அதன் அழுகைக்கு ஆறுதல் கிடைத்தால் அழுகை நின்று விடுமா? அதன் அழுகையை நிறுத்துதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்?

தானாகவே நிறுத்திக் கொள்ளுமா? மனிதன் தான் நிறுத்த வேண்டுமா? மனிதனால் நிறுத்த முடியுமா? அதன் விதியால் அதை நிறுத்த முடியுமா? விதிக்கு அப்பாற்பட்ட அழுகையா? கடவுளால் நிறுத்த முடியுமா?

**ஏன் அழுகிறது? ஏன் அழுகிறது?**

காரணத்திற்காக அழுகிறதா? அப்படியென்றால் காரணத்தைக் காரியப்படுத்தலாமே. காரியத்திற்காக அழுகிறதா? அப்படியென்றால் காரணம் கலைந்ததும் காரியம் நின்று விடுமே எதற்காக அழுகிறது? ஏன் அழுகிறது? அது அழுவது அதற்கே தெரியுமா? விழிப்பிற்குள் விழிப்பில் இருந்து விதேகமாய் அது அழுகிறதா? அதன் அழுகைக்கு ஆதி உள்ளதா? அந்தம் உள்ளதா?

**ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

இந்த அழுகை அதற்கு அவசியம் தானா? அது அழுவதால் மற்ற ஜீவன்களுக்குப் பாதிப்பு உண்டா? பஞ்ச பூதங்களுக்குப் பாதிப்பு உண்டா? அது அழுவதால் அதன் பயணம் நின்று விடுமா? (அ) தொடருமா? (அ) வேகப்படுத்தப்படுமா? அதன் அழுகை யாருக்குக் கேட்கிறது? சப்த மிட்டு அழுகிறதா? ஓலமிட்டு அழுகிறதா? ஒய்யாரமாய் அழுகிறதா? ஓங்காரத்தில் மகா ரூபமாய் அழுகிறதா? மாணிக்கமாய் அழுகிறதா? காலத்தோடு அழுகிறதா? காலம் கடந்து அழுகிறதா?

**அழுகிறது. அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

மற்ற ஜீவன்களால் இதன் அழுகையைக் கண்டு கொள்ள முடியுமா? கண்டு கொள்ள முடிகிறதா? அழுவதே இதன் தொழிலா?அழுவதால் இதற்கு என்ன பயன்? ஆனால் அழுகிறது.

**ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

அழுவதின் இரகசியம் என்ன? இது தானாக அழுகிறதா? யாராவது இதை அழ வைத்தார்களா? இந்த அழுகை என்றும் அரைப்புள்ளிதானா? அல்லது இதற்கு முற்றுப்புள்ளி உண்டா? இதன் அழுகையை யாரிடம் போய்ச் சொல்லுவது? இது அழுது முடிந்தால் இதற்கு என்ன பயன்? பார் போற்றும் அழுகையா? பார் தூற்றும் அழுகையா? பரம் போற்றும் அழுகையா? பரம் தூற்றும் அழுகையா?

**ஒரு ஜீவன் அழுகிறது. எதற்காக அழுகிறது? ஏன் அழுகிறது?**

இதற்கு முன் இவ்வாறு அழுதிருக்கிறதா? அப்படியென்றால் அந்த அழுகை எப்படி நிறுத்தப்பட்டது? இதற்கு முன் இது அழவில்லையென்றால் இதுவரையில் அழாத அது இப்போது மட்டும் ஏன் அழுகிறது? எல்லாப் பிறவிகளிலும் நுழைந்து, நுழைந்து பார்த்து வந்த இது அப்பிறவியிலெல்லாம் அழாது இப்பிறவியில் மட்டும் இது அழுவானேன்? இது ஊமை அழுகையா? உயர்ந்தோர் அழுகையா? உத்தமர் அழுகையா? ஞானியின் அழுகையா? சித்தரின் அழுகையா?

**ஒரு ஜீவன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

அழச் சொன்னது யார்? அதுவே தனக்காக அழச் சொல்லிக் கொண்டதா? இதை யார் அறிவார்? யார் இதற்கு விடை காண்பார்? அந்த

விடையைச் செயல் படுத்துவது யார்? அந்த வல்லமை யாரிடம் உள்ளது?

**ஒரு ஜீவன் அழுகிறது. அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

அதனிடம் நெருங்கி இந்த வினாவைக் கேட்க யாருக்குச் துணிச்சல் உள்ளது? யாருக்குத் தீர்க்க தரிசன ஆற்றல் உள்ளது? இதை அணுகும்பொழுது அதன் அழுகையைக் கேட்டு அணுகியது அழாமல் இருக்க வேண்டுமே! அதுவும் அழத் தொடங்கி விட்டால்! நிலைமை என்ன ஆவது? அதன் அழுகையை நிறுத்தவதா? இதன் அழுகையை நிறுத்துவதா?

**ஒரு ஜீ வன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

வந்து கொண்டிருக்கும் கேள்விகளெல்லாம் அதன் அழுகையை நிறுத்தும் திருவருள் படைத்துள்ளதா? இந்தக் கேள்விகளெல்லாம் அதன் அழுகையை அதிகப் படுத்துமா? கேள்வி விடையைக் கொடுக்குமா? (அ) விடையே கேள்விக் குறியாகி விடுமா? இந்த ஜீவ அழுகை கேள்விக் குறியான அழுகையா? கேவல யோகமாகிய கேசரி யோகத்தின் அழுகையா?

**ஒரு ஜீவன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

எங்கிருந்து அழுகிறது? அது எப்பொழுது அழத் தொடங்கியது? யுசோகத்தோடு அழுகிறதா? சுகத்தோடு அழுகிறதா? சுபத்தோடு அழுகிறதா?

**ஒரு ஜீவன் அழுகிறது. எதற்காக அழுகிறது? ஏன் அழுகிறது?**

தேகத்தின் பகுதிகளைப் பயன்படுத்தி அழுகிறதா? தேகக் கருவிகளைப் பயன்படுத்தாமல் அழுகிறதா? தேகத்திலிருந்து விலகி அழுகிறதா? தேகத்திற்கு அப்பால் சென்று அழுகிறதா? அழுது விட்டு மீண்டும் இது தேகத்திற்கு வருமா? வந்து அழுகிறதா? வராமலே அழுகிறதா? எந்த தேகத்தோடு அழுகிறது? ஓரறிவிலிருந்தா? (அ) 4 அறிவிலிருந்தா? (அ) 6 அறிவிலிருந்தா? எந்த அறிவிலிருந்து அழுகிறது? (அ) அறிவிற்கு அப்பால் சென்று அருள் நிலையில் நின்று அழுததா? அதன் அழுகை

அருள் அழுகையா? சிற்றறிவு அழுகையா? பேரறிவு அழுகையா? அன்பு அழுகையா? அருள் அழுகையா? இக அழுகையா? அக அழுகையா? வெட்ட வெளி அழுகையா? எந்த அழுகை?

**ஒரு ஜீவன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

ஏக்கத்தோடு அழுததா? ஏமாந்து அழுததா? சோ.....ர்ந்து போய் அழுததா? சூத்திரப் பாவையாக அழுததா? சூத்திரத்தில் இருந்து விடுபடத் தெரியாமல் அழுததா? பரஞானத்திற்காக அழுததா? சிதாகாச நிலையில் அழுததா? பர சாந்த மோனநிலையில் அழுததா?

**ஒரு ஜீவன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**
**ஒரு ஜீவன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

உள்ளுக்குள்ளே அது அழுததா? வெளியே வந்து அழுததா? உள்ளும், வெளியிலும் இருந்து கொண்டு அழுததா? கண்டதற்காக அழுததா? காணப்போவதற்காக அழுததா? அதன் வினையை அழுகை என்று யார் சொல்லியது? இது அழுது கொண்டிருப்பது எல்லா ஜீவன்களிலுமிருக்கும் அந்தரங்க மூல சக்திக்குத் தெரியுமா? அப்படியென்றால் இதைப் போன்று கோடானு கோடி பிரபஞ்சங்களில் இருக்கும் ஜீவன்களில் எத்தனையோ ஜீவன்கள் இதைப் போன்று அழுது கொண்டிருக்கலாம் அல்லவா? காலங் காலமாய் இது நடந்து கொண்டிருக்கிறதா? இன்றுதான் அழத் தொடங்கியுள்ளதா?

**ஒரு ஜீவன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது?**

இது இயக்க வினையின் அழுகையா? நிலைத்த பிரம்ம சக்தியின் அழுகையா? இருள் அழுகையா? ஒளி அழுகையா? நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனுக்காக அழுகிறதா? (அல்) மரணத்திற்காக அழுகிறதா?

**ஒரு ஜீவன் அழுகிறது. ஏன் அழுகிறது? எதற்காக அழுகிறது? ஒரு ஜீவன் அழுகிறது. ஒரு ஜீவன் அழுகிறது. ஒரு ஜீவன் அழுகிறது. ஏன்? ஏதற்காக? அழுகை தொடருகிறது.**

**சந்தோஷம்**

# வேதனை நீங்க

நாயைக் கண்டால் மனிதன் கல்லெடுத்து அடிக்கின்றான். கல்லால் அடிபட்ட நாய் - அந்த நாய் தன்னை அடித்தவன் சடலமானதும் அவனை இழுத்துச் சென்று கொத்திக் கொத்திக் குளறுகிறது. மரத்தை வெட்டிய மனிதனை - அந்த மனிதனுக்கு அவன் வெட்டிய மரமே அவனை இடுகாட்டில் சுட்டெரிக்கிறது. அவன் கடைசி யாத்திரைக்கு வாகனமாகப் பயன்படுகிறது. அவன் வைத்த பூந்தோட்டம் தான். அது தரும் பூக்கள் தாம் கடைசியாக அவன் சடலத்திற்கு மாலையாக வந்து சேர்கிறது. அவன் இழுத்து வாரிக் கட்டிய துணியை வெட்டியான் அவிழ்த்து விடுகிறான். அவன் பேசிய பேச்சு, செயல்கள் எல்லாம் சாம்பல் ஆகின்றன.

போனவனுக்குத் தெரியாது. வந்தவனுக்குத் தெரியும். வந்தவனுக்கு இதைப் போதித்தால் அவனும் இதைப் பற்றிக் கவலைப் படுவதில்லை. நடப்பவன் இவன். நடத்துவது இயற்கை. இந்த இயற்கைச் செயலால் மனிதனுக்கு உணர்வுகள் ஏற்படுவதில்லை. அந்த உணர்வு விளக்கத்தில் உண்மை புலப்படுவதுமில்லை. அதனால் மனிதன் தனக்கு நடக்கப் போவதைப் பற்றித் தான் என்றுமே கவலைப் படுவதில்லை.

இப்படிப்பட்ட நிலை எல்லாக் காலங்களிலும் நடந்து கொண்டு இருக்கிறது. ஆகவே, நீ பார்ப்பவை யெல்லாம் உன்னை ஒரு நாளைக்குப் பழி வாங்கும். ஏமாந்து விடாதே. எதையும் எள்ளி நகையாடாதே. எதிலும் தூங்கி விடாதே. ஜீவ யாத்திரை என்ற அமுத நூலைக் கொண்டு நீ விழித்துக் கொள். உன் வேதனை நீங்கும்.

**சந்தோஷம்**

# விளங்க வேண்டியது

ஒரு ஜீவனுக்கு என்னென்ன கருத்துகள் தெரிய வேண்டும். விளக்கம் பெறல் வேண்டுமென்று வள்ளல் பெருமான் சிறப்பான குறிப்புகளைத் தருகிறார்.

1. திரு விளங்க வேண்டும். (அருள் வெளிப்படல் வேண்டும்)
2. ஜீவன் சிவயோகம் புரிதல் வேண்டும். அதனால் வரும் சித்தியெல்லாம் ஜீவனுக்கு விளக்கம் பெறல் வேண்டும்.
3. சிவம் என்ற ஏகமான அனாதியான மூல வஸ்து ஒன்று உள்ளது. அதைப் பற்றி ஞானம் வேண்டும். சிவஞான நிலை விளங்க வேண்டும்.
4. சிவம் என்ற ஏக மெய் ஆதிமூலத்தைப் பற்றிய அனுபவம் ஜீவனுக்கு விளங்க வேண்டும்.
5. திருத்தில்லை, திருச்சிற்றம்பலத்தில் நடைபெறும் கடவுளின் மெய்ஞ்ஞான திருக்கூத்து ஜீவனுக்கு விளக்கம் பெறல் வேண்டும்.
6. ஒளிக்கெல்லாம் சிறந்த திருவிளக்கு. அதாவது லலாடத்தில் அணையாது எரிகின்ற அருள் விளக்கு தெரிய வேண்டும்.
7. இந்த ஜீவனைத் தாங்கி இருக்கின்ற உருவம் மெய்ஞ்ஞான நிலையில் விளக்கம் பெறல் வேண்டும்.
8. தேகத்திற்குள் இருக்கின்ற உயிர் தன் பேரொளியை வெளிப்படுத்தி, உயிர் விளங்க வேண்டும்.
9. அந்த உயிரொளி அதிலிருந்து வரும் மெய்ஞ்ஞான இறையுணர்வு விளக்கம் பெறல் வேண்டும்.
10. இந்த உலகம், அந்த உலகம், எல்லா உலகமும் எப்படி இயங்குகிறது, எப்படி இயங்க வைக்கப்படுகிறது, அதன் நோக்கம், அதன் தோற்றம், அதன் முடிவு ஆகியவை ஜீவனுக்கு விளங்க வேண்டும்.
11. சக்தி, பராசக்தி, பேரருள் வடிவமானது. அந்தச் சக்தி மகிழ்ந்து ஜீவனுக்குள் தன் விளக்கத்தை அருள்பாலித்தல் வேண்டும்.
12. சாகாத கல்வித் தரம் அறிதல் வேண்டும்.
13. வேகாத கால் உணர்தல் வேண்டும்.
14. சாகாத் தலை அறிதல் வேண்டும்.
15. தனி அருளால் உண்மை நிலை அடைதல் வேண்டும்.

சந்தோஷம்

# பால் நினைந்து ஊட்டும்

பால் நினைந்து ஊட்டும், தாய் போல் அந்த ஜீவன்களுக்கு கடவுள் - கண்ணாக இருந்து, அதற்கு ஏற்ற வினைகளை இறைவன் ஆற்றுகிறார். ஒரு நொடியில் கோடானு கோடி ஜீவன்களைப் படைக்கின்றார். அவைகளின் பசிகளைப் போக்குகின்றார். அவைகளுக்கு வரும் துன்பங்களை நீக்குகிறார். அவைகளுக்கு வரும் எல்லாப் பிரச்சனைகளையும், சோதனைகளையும் விளக்கமறச் செய்து விலக்குகிறார்.

இந்த நிலையில், இந்த உலகில் ஒரே ஒரு கடவுள் நிலையில் இருக்கும் ஜீவ உறவு - "அம்மா". அவள் கருவுற்றதிலிருந்து ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணியும், ஒவ்வொரு மணித் துளியும், அந்தத் தன் கருவில், வயிற்றில் இருக்கும் உருவை நினைத்து - நினைத்து, பார்த்துப் பார்த்துச் சந்தோஷம் அடைகிறாள்.

சிற்சில சமயங்களில் வேதனையும் இருக்கும். அதை இன்ப - வேதனையாக எண்ணி அனுபவித்துக் கொண்டு இருக்கும். வேதனையைச் சுகமாக மாற்றி, இன்பமாக மாற்றி, அதையும் ஆர்வத்தோடும், ஆசையோடும், அன்பாகவும் அனுபவித்துக் கொண்டு இருக்கும் உறவு - "**அம்மா**"

பத்து மாதங்களிலும், பத்தாயிரம் தேக சோர்வுகளும், தேக நலிவுகளும், தேக உபாதைகளும் வரும். வரலாம். அவைகளை யெல்லாம் பேரின்பமாக நினைத்து ஒரு கோடி சோகத்தையும் விடாது ஆசையோடு அனுபவித்துக் கொண்டு இருப்பவள் - அம்மா.

அவள் முகத்தில் பேரழகு வரும். அவள் நெஞ்சங்களில் குதூகலமும், மகிழ்ச்சியும் பொங்கி வழியும். தன் வாழ்க்கையையே தன் தேகத்தையே, வாழ்வின் காலத்தையே வயிற்றில் வளரும் ஜீவனுக்கு அர்ப்பணித்து விடும் உறவு - அம்மா.

பத்து மாதம் கடந்ததும், அந்தக் குழந்தை வெளி வருவதற்குள் தாய் எவ்வளவோ வேதனைப் படுகிறார். சிற்சில சமயங்களில் குழந்தை நிலை மாறி கை வெளியே வருவதுமுண்டு. அப்போது மரண அவஸ்தை அந்தத் தாய் படுகிறாள். அந்தச் சமயத்தில் புற உலகில் அழாது,

அழுகைக்குள் அழுது கொண்டு இருப்பாள்.

குழந்தை வெளி வரும் வரை அவள் படும் பெருந் துன்பத்திற்கு எல்லையே இல்லை. வாழ்வா? சாவா? என்பது கேள்விக் குறியாகும். கடந்த காலத்தில் குழந்தை பெற முடியாமல் அல்லது பெற்றுக் கொண்டு இருக்கும் போதே - இறந்து போன தாய்கள் ஏராளம். ஏராளம்! இந்த நிலையில் குழந்தையைப் பெற்றெடுத்த தாய்; குழந்தையைத் தவிர வேறு எதுவும் நினைப்பதில்லை.

குழந்தைக்குப் பால் கொடுக்க வேண்டும். குழந்தைக்கு மற்ற உயிரினத்தால் எந்தத் தீங்கும் வரக் கூடாது என்று எண்ணிக் கொண்டு அழுத்தமாகவும், அழகாகவும் ஒரு முனைப்போடு குழந்தைக்காக வினைகளைச் செய்து கொண்டிருப்பாள்.

தாய் அடுக்களையில் வேலை செய்து கொண்டிருப்பாள். குழந்தைக்குப் பால் கொடுக்கும் நேரம் வந்ததும், குழந்தை பசியால் வாடுமே என்று நினைத்து எல்லா வினையையும் அப்படியே போட்டு விட்டு, குழந்தைக்குப் பால் ஊட்ட ஓடோடிச் செல்வாள். பால் கொடுப்பாள்.

பால் நினைந்து ஊட்டும் தாயினை விடச் சாலச் சிறந்தது - கடவுள் என்று மாணிக்க வாசகர் கடவுளின் பெருங் கருணையை நினைந்து, உணர்ந்து, நிகழ்ந்து, கண்ணீர் மல்கிப் பாடுகிறார்.

*பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்*
*பரிந்து நீ பாவியேனுடைய*
*ஊனினை உருக்கியுள்ளொளி பெருக்கி*
*உலப்பிலா ஆனந்தமாய*
*தேனினைச் சொரிந்து புறம் புறந்திரிந்த*
*செல்வமே சிவபெருமானே*
*யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்*
*எங்கெழுந் தருளுவதினியே!!*

*- மாணிக்க வாசகர்.*

ஆகவே, எல்லாவற்றிற்கும் படைப்புத் தலைவர் கடவுள் என்றால், இந்த ஜீவர் படைப்புக் கடவுள் - இந்த மண்ணுலகில் தாயாகும். தாயின் ஆற்றலைச் சொல்லுக்குள் புகுத்த இயலாது.

பால் நினைந்து ஊட்டும் - இது கடவுளின் தன்மையை வெளிப் படுத்துகிறது. இதில் ஒரு ஐயம் தோன்றுகிறது. ஐயமில்லா வாழ்வே ஆன்மிக வாழ்வு. இருந்தாலும் ஜீவ விழிப்பு உள்ள ஜீவர்களுக்கு எழும் ஐயமிது. கர்ம வினையைச் செய்கிறது. ஜீவன் - தன் விதியைத் தானே எழுதுகிறது. ஜீவன் தன் ஜீவ யாத்திரையைத் தானே நடத்துகிறது. ஜீவன் என்ற ஒன்று அறிந்து, ஜீவ யாத்திரையைப் பற்றி உணரும் போது வெளிப்படுகிறது.

ஆனால் இன்னொரு கருத்தும் நிலவுகிறது. அதாவது எல்லாமே கடவுள், கடவுளே எல்லாம், அவரே காரணம் - அவரே காரியம், அவரே காரியம் - அவரே காரணம்.

காரண- காரியங்களுக்கு முதலாளி அவரே. இப்படி இருக்கும் போது ஜீவ யாத்திரை நடத்துவது கடவுளா? ஜீவர்களா? என்ற ஐயம் எழுவது, ஜீவ உலகிலிருந்து பார்க்கும் போது நியாயமாகத் தோன்றுகிறது. இந்த ஐயத்திற்கு விடை காண்பது ஜீவ விழிப்பு உள்ள ஜீவர்களுக்குத் தேவையில்லை. யாத்திரை - அது அதனதன் நிலைக் கேற்றவாறு வினையாற்றிச் செல்லுகிறது.

சிவ விழிப்பு வந்த பிறகு இந்த ஐயம் - இது போன்ற எல்லா ஐயங்களும் கண் இமைக்கும் நேரத்தில் காணடைந்து விடும். நினைப்பு, மறப்பற்ற நிலைக்கு வந்து சேரும்.

சந்தோஷம்

ஐக்கியம் என்பது ஜீவன் - ஜீவனோடு ஐக்கியமடைதல், ஜீவன் ஆத்மாவோடு ஐக்கியமடைதல், ஆத்மா - ஆத்மாவோடு ஐக்கியமடைதல், ஆத்மா - பரமாத்மாவோடு ஐக்கியடைதல், நாதம் - ஜோதியோடு ஐக்கியமடைதல், சிவம் - சக்தியோடு ஐக்கியமடைதல், ஆத்மானந்தம் - பரமானந்தத்தோடு ஐக்கியமடைதல்.

# சிவ - அன்பு

ஆயிரங்கோடி சூரியப் பிரகாசம் ஒன்று சேர்ந்து ஒரு மையப் புள்ளியில் நிறைந்து இருக்கின்ற ஒன்று. பல்லாயிரம் கோடி சூரியனைப் படைத்துப் பரிணாமம் அளிக்கின்ற ஒன்று. ஆதிமூல அனாதியான மெய்ஞ்ஞான வஸ்து, எங்கும் நிறைந்த வெளியில் எந்த மெய்ப் புள்ளியில் இருக்கின்றதோ அது ஆடாது, அசையாது மகா மௌனமாய் நிலைத்த பெருங்களனாய், ஆனந்தமாய் உள்ளது.

அகண்ட பெரிய, விஸ்வப் பேரறிவாய் உள்ளது. மகா மங்கலப் பெரு விழிப்பாய் உள்ளது. இப்போது எழுதப்பட்டு இருக்கின்ற சொற்களெல்லாம் அதைப் பற்றி அறுதியிட்டுக் காட்டுவது - கோடி-கோடி பல்லாயிரங் கோடி, பல இலட்சம் கோடி, பல கோடி கோடி மைலுக்கு அப்பால் நின்று அதைப் பார்த்துச் சொல்வதற்கு ஒப்பாகும். அதைச் சொல்லால் சொல்ல இயலாது. அதற்குப் பெயர் சிவம்.

அது பல்லாயிரங் கோடி சூரியனைப் படைத்து, பிரகாசிக்க வைத்து, இந்தப் பிரபஞ்சங்களுக்குப் பணியாற்ற வைத்துள்ளது. இதனிடம் யாரும் நெருங்க முடியாது. இதைப் பற்றி நெருங்கி, இதைப் புகழ்ந்து, இதை வணங்கிக் கொண்டு இருப்பது எதுவோ, அது இதனில் சங்கமமாகி விடும்.

அதனுள் மகா இரகசிய சிவ அன்பு உள்ளது.

நிலைத்த நிலையாக இருப்பது சிவம். சக்தி நிறைந்தது, குறைந்து - குறைந்து இருக்கும். கலைந்து விடும், இல்லாமல் போய் விடும், மறைந்து விடும். ஆனால் சக்தி சிவத்திடம் ஒடுங்கி விடும். ஆனால் சிவம் எதனிடமும் ஒடுங்காது.

**சந்தோஷம்**

# அறிஞனும், முட்டாளும்

இந்த உலகிற்கு அறிஞர்களும் தேவை. முட்டாளும் தேவை. அறிஞர் ஆற்றும் பணியை முட்டாள் ஆற்றுவதில்லை. முட்டாள் ஆற்றும் பணியை அறிஞன் ஆற்றுவதில்லை. முட்டாள் ஆற்றும் பணியைப் பற்றி அறிஞன் கவலைப் படுகின்றான். அறிஞன் ஆற்றும் பணியைப் பற்றி முட்டாள் கவலைப்படுவதில்லை.

ஆனால் அதே சமயத்தில் அறிஞன் ஆண்டவனைப் பற்றி அறிவால் தெரிந்து கொள்வான். ஆனால் முட்டாளுக்குள் ஆண்டவனே, இவனுள்ளே வந்து தன்னைக் காட்டிக் கொள்வார். இந்த நிலைக்குப் பிறகு அறிஞனும் முட்டாளின் யோசனையைக் கேட்கும் நிலை வந்து சேரும்.

முட்டாள் துன்பத்தைத் தன் காலால் போட்டு மிதிப்பான். துன்பத்தில் வெற்றி காண்பான். ஆனால் இன்பத்தை முழுமையாகச் சுவைக்கத் தெரியாது.

அதே சமயத்தில் அறிஞன் துன்பத்தைப் பெரியதாக்கி அணு-அணுவாக முழுமையாக அனுபவிப்பான். தன் கற்பனையால் அதை இமய மலையாக்கி அழுது கொண்டு இருப்பான். அவன் கண்ணீரை முட்டாள் துடைப்பான். அந்த முட்டாள் இகத்திற்கு மட்டுமே முட்டாளே தவிர, பரத்தில் அவன் யதார்த்தமான மனிதன். உண்மையான மனிதன்.

இதனைப் படைத்த இறைவனுக்கு நன்றி.

**சந்தோஷம்**

# வித்தைகள் மூன்று

பாரதத்தில் பழைய தர்ம நெறிமுறை ஒன்று உண்டு. பன்னெடுங் காலமாக, பாரத மக்கள் அந்தத் தர்ம நெறி முறையைக் கடைப் பிடித்து வாழ்க்கையில் வெற்றி பெற்று இக-பர சுகங்களை முழுமையாக அனுபவித்த காரணத்தால், எல்லாம் வல்ல கடவுளைக் கண்டு அதனோடு சங்கமமான காரணத்தால் -

*வாழ்வெல்லாம் கடவுள் மயம்,*
*வாழ்வெல்லாம் ஆனந்த மயம்,*
*வாழ்வெல்லாம் அன்பு மயம்,*
*வாழ்வெல்லாம் அருள் மயம்.*

என்ற பேருண்மையை உணர்ந்து அம்மயமாய் இருந்து சத்சித்தானந்த வெள்ளத்தில் சதுராடிச் சதுராடிச் சந்தோஷித்திருந்தனர். ஆகவே, கடவுளைக் காணும் வெற்றி முறைக்குப் பழைய தர்ம நெறி என்ற பெயர் வந்தது.

இந்த உலகம் முழுவதிலும் இன்றைய கால கட்டத்திற்கு மட்டுமன்று. எக்காலத்திற்கும் இதுவே சிறந்த முறை என்று இதன் வழியே வந்து வெற்றி பெற்ற சித்தர்கள், யோகிகள், மறைமகா முனிவர்கள், ஆத்ம ஞானிகள் பிரகடனப் படுத்தி உள்ளார்கள். இம்முறையின் வழியில் தான் இன்றைய ஆத்ம ஞானிகளும் வந்து கொண்டிருக்கிறார்கள். நாளைக்கும் வரப் போகிறார்கள்.

இந்தப் பழைய தர்ம நெறிமுறை மூன்று வித்தைகளைச் செப்புகிறது.

*1. ஆத்ம வித்தை 2. ஸ்ரீ வித்தை 3. மகா வித்தை*

**1. ஆத்ம வித்தை :**

தன்னையறிதல், பூரணமாதல், தன் ஆத்மாவைத் தரிசித்தல், ஆத்ம ஆனந்தத்தில் திளைத்தல்.

**2. ஸ்ரீ வித்தை :**

ஸ்ரீ வித்தை என்பது இந்த உலகப் பேரியக்கங்களையும், இந்தப்

பிரபஞ்சங்கள் எப்படி வந்தன? பஞ்ச பூதங்கள் எப்படி வந்தன? ஒளி, ஒலியெல்லாம் எங்கிருந்து வந்தன. இப்போது அவை எப்படி இயங்குகின்றன.

மந்திரங்கள், இயந்திரங்கள், ஜீவன், ஜீவமுக்தி, இவை யெல்லாவற்றிற்கும் காரணமான அந்த ஆதி சக்தி எது? யார்?

அதை அந்த சக்தியைக் கொண்டு உணர்ந்து எல்லா வற்றையும் கண்டு பிரம்மாண்டத்திற்குள் பிரம்மாண்டமாய் இருத்தல்.

**3. மகா வித்தை**

ஸ்ரீ வித்தை வெற்றி பெற்ற பிறகு, மகா வித்தை அறிதல். சிவம் என்ற ஆதிமூல மெய்ப் புள்ளியை, நிலைத்த பெரும் சக்தியைக் காணல். இந்த வித்தையின் மூலம் வெட்ட வெளி ஐக்கியம், பேரின்பம் அடைதல், பிறவி அறுத்தல், எல்லாமொன்று என்று உணர்தல்.

ஜீவ யாத்திரைக்கு இந்த மூன்று வித்தைகளை அறிதல் அவசியமாகும். ஆனால் இந்த யாத்திரையில் செல்லச் செல்ல மூன்று வித்தைகள் தானே, ஜீவனுக்குள்ளே பிரகாசிக்கும். விதி வெற்றி கிடைக்கும்.

மகா வித்தையில் ஜீவ யாத்திரை நிறைவு செய்யப் படுகிறது.

எந்த ஜீவனாலும் இந்த ஜீவனைப் புறக்கணிக்க முடியாது. அவ்வாறு புறக்கணித்தால் இந்த உலகில் இந்த உலகத்து இன்ப - துன்பம் அனுபவிக்கும சூழல் வந்தே தீரும்.

**சந்தோஷம்**

# கடவுள் - நல்லவரா? கெட்டவரா?

கடவுள் நமக்கு நல்லவரல்லர். அவர் நமக்கு கெட்டவரல்லர். ஏனென்றால், நாம் பல நாட்கள் எவ்வளவு வகையான சந்தோஷம் அடைந்திருப்போம். உணவு சுகம், உறைவிடம் சுகம், உறவு சுகம், தேக சுகம், பண சுகம் இத்தனை சுகங்கள் கொடுத்திருக்கிறாரே! அவர் கெட்டவரா? கெட்டவர் என்றால் கொடுப்பாரா? உண்மையறிவு உள்ளவன் புரிந்து கொள்வான். பொய் அறிவு உள்ளவன் குழம்பி விடுவான்.

அவர் நல்லவரென்றால் ஆயிரக் கணக்கான தோல்விகளைக் கொடுத்திருக்கிறாரே, துக்கங்கள், துன்பங்கள், துயரங்கள், விபத்துகள், நோய்கள், கொடிய நோய்கள், பிரச்சனைகள், வேதனைகள் என்று கண்ணீரில் வீழ்த்தி இருக்கின்றாரே?!

எல்லாவற்றையும் கொடுத்து அனுபவிக்க வைத்திருக்கிறாரே அவர் நல்லவரா? ஆகவே, கடவுள் கெட்டவரல்லர், நல்லவரல்லர். இதனால் இறைவனைக் கெட்டவரென்று முடிவு செய்து விடாதே. எல்லாவற்றிற்கும் - எல்லாவற்றிற்கும் - எல்லாவற்றிற்கும் முதலாளி அவர்தான். அதிபதி அவர் தான். இருப்பது ஒன்றே ஒன்று. அவர்தான் கடவுள். அவரை விட்டு யாரும் விலகவும் முடியாது. விலக்கவும் முடியாது. ஆகவே, அவர் எதைக் கொடுத்தாலும் மிக சந்தோஷமாக அவரைத் தண்டனிட்டு வணங்கி மகா சந்தோஷத்தோடு ஏற்றுக் கொள்ளும் பக்குவத்தை உனக்குள் பயிற்சி கொடு. இதை விட வேறு ஒரு உபாயம் கிடையாது.

“இந்த பயிற்சியால் உன்னை அறியாமலேயே நீ நல்லவனாவாய்;

இந்த பயிற்சியால் உன்னை அறியாமலேயே நீ நன்மை செய்வாய்;

இந்த பயிற்சியால் உன்னை அறியாமலேயே நீ மௌனத்திற்கு செல்வாய்;

இந்த பயிற்சியால் உன்னை அறியாமலேயே நீ எது உள்ளதோ, எது படைத்ததோ, எது நம்மை ஏற்றதோ அதை உணர்வாய்.

நீ எது - எது வேண்டுமென்று நினைத்தாயோ அதுவெல்லாம் மிகச் சாதாரணமானது; வெறுக்கக் கூடியது; அருவருப்புள்ளது, தேவையில்லாதது, துன்ப மயமானது கடவுளைக் காண முடியாது செய்யும் ஆற்றலைப் பெற்றது. அது நம்மை நரகத்திற்கு அழைத்துச் செல்லும் அரக்கன் என்பதை அனுபவத்தில் அனுபவமாவாய். இதைத் தான் ஞானிகள் செய்கிறார்கள். ஜீவ யாத்திரையில் வெற்றி பெற இந்த அருள் நுணுக்கம் உனக்குத் தேவைப்படுகிறது. கடவுள் நல்லவரா? கெட்டவரா?

## சந்தோஷம்

சில சமயங்களில் ஜெகமே ஜீவனுக்குச் சுகமாக இருக்கிறது சில சமயங்களில ஜெகமே ஜீவனுக்குச் சுமையாக இருக்கிறது. சோகமாக இருக்கிறது. ஒரு நிலைக்கு வந்தபிறகு ஜீவன் இந்த இரண்டையும் சிந்திக்கத் தொடங்குகிறது? இருப்பதா? போவதா என்ற வினா ஐயமாக மாறுகிறது. முந்நாள் துன்பத்தைக் கண்டு ஜீவன் போய் விடலாம் என்று நினைக்கிறது. நேற்றைய இன்பத்தை அனுபவித்தது அந்த ஜீவனின் நினைவுக்கு வருகிறது. இருக்கலாம் என்று தோன்றுகிறது. என்ன செய்யலாம்? இந்த நிலைக்கு ஜீவனைக் கொண்டு வந்து நிறுத்திய - அது - அந்த அது - ஜீவனை வேடிக்கை பார்க்கிறது. நீங்கள் மட்டும் விதிவிலக்கா என்ன?

# முடிச்சு

ஜீவ யாத்திரையில் ஒரு கால கட்டத்தில் ஜீவன், தான் ஜீவன் என்பதை உணரும், கண்டறியும். அதன் பிறகு அதற்குக் கடவுள் பற்றிய நினைவு வேகம் வரும்.

அந்த நினைவு வேகம் ஜீவனை வேறு எந்த வேலையும் செய்ய விடாது. அந்தக் கடவுள் நினைவு, சமாதியில் அழுத்தி விடும். இது ஜீவ விழிப்பிற்கு முன்பும் நடக்கலாம். ஜீவ விழிப்பிற்குப் பின்பும் நடக்கலாம்.

நமது அறிவினால் இப்படி நடப்பது நியாயமா? நியாயம் இல்லையா என்று கண்டு தேர்வு செய்ய இயலாது. ஆகவே, எல்லாமே அந்த அது திருவுள்ளப் பாங்கின்படியே செய்து கொண்டிருக்கிறது.

எங்குப் பார்த்தாலும் வினைகள், வினைக்குள்ளே வினை, வினைக்கு வெளியே வினை, தொடர் வினைகள், தொட்ட வினைகள், கூட்டு வினைகள், கூடா வினைகள், சிதைக்கும் வினைகள், வளரும் வினைகள் - இவ்வாறு எண்ணிலடங்கா மனித சக்தியினாலோ, எத்தனத்தினாலோ கண்டு தேற முடியாத நிலைகளின் வினைகள் அணுவிலும், அகண்டத்திலும், அண்டத்திலும், பிரம்மாண்டத்திலும், வினைகள். வினைகள். வினைகள்.

முடிச்சுப் போடுபவன் ஒருவன், முடிச்சை வேர் அறுப்பவன் ஒருவன்,, முடிச்சை ஏற்பவன் ஒருவன், முடிச்சைக் களைபவன் இன்னொருவன் - இது என்ன விந்தை?

அந்த விந்தைக்குள்ளே பொதிந்து கிடக்கும் மர்மங்கள் தான் என்ன?

யாரிடம் இதைக் கேட்பது? வேறு யாரிடம் இதன் பதிலைப் பெறுவது?

முடிக்க முடியாது. அப்படியே அடுத்த படிக்குச் செல்லுகின்றேன்.

சந்தோஷம்

# காதலி - காதல்

ஆண்டாள் காதலி - நாராயணன் காதலன். மாணிக்கவாசகர் காதலி - பரமேஸ்வரன் காதலன். ஆழ்வார்கள் காதலிகள் - பாண்டு ரங்க விட்டலர் காதலன். நீ காதலி நான் காதலன். இது தான் உண்மை. துவைத ஏகானந்த உண்மை. இரண்டு நிலை உள்ள ஒரு நிலைப்பட்ட ஆனந்தம்.

மீராபாய் கண்ணனைப் பார்த்தாள். அவன் உருவத்தைப் பார்த்தாள். ஆண் உருவத்திற்குள் இருக்கின்ற பிரம்ம நிலையைப் பார்த்தாள். அந்தப் பிரம்ம நிலைக்குள் உள்ள பர சிவானந்த ஆதி மூலத்தைப் பார்த்தாள். அதைப் பார்த்துக் காதலித்தாள். காதலித்தாள். காதலித்துக் கொண்டே காதலித்தாள். காதலுக்குள் புகுந்து கொண்டு காதலித்தாள். காதலானாள். காதலானாள்.

காதலியானாள், இன்பமானாள், இறக்கை பிறந்தது ஆதி மூலம் எதுவோ - காதலித்ததும், காதலிக்கப்படுவதும், காதலானால் - அந்தக் காதலாகும் வினை வியக்கத் தக்கதாக இருந்தது. இந்த வியக்கத்தக்க வினையைக் கீழ் உலக மக்களால் உணர இயலாது. இந்த வினை எல்லையில்லாக் காலம் தொடர்ந்தது. இரண்டும் ஒன்றானது. காதல் என்றால் ஒன்றாதல். ஒன்றாகும் வினையே காதல். எதனோடு எது ஒன்றியதோ அந்த ஒன்றிய ஒன்றும் ஒன்றப்பட்டதும் ஒன்றியது. இரண்டும் இரண்டற்ற நிலையை அடைகிறது.

இரண்டற்ற நிலை எப்போது வரும்? அழியப்போவதும் சிதையப் போவதும், மறையப் போவதும், நிலை கலையப் போவதும் ஆகிய ஒன்றும் அழியா நிலை பெற்றதும், அமரத்துவமானதும், கல்பமானதும், வெட்டவெளியானதும் ஆகிய ஒன்றும் ஒன்றோடு ஒன்று கலக்க இயலாது. ஒன்றோடு ஒன்று காதலிக்க இயலாது. அந்தக் காதலுக்குப் "பொருந்தாக் காதல்" என்று பெயர். பொருந்தாக் காதல் இது திருந்தாக் காதல். சக்குபாய், சுவாமி ஏகநாத் போன்ற மற்ற ஞானிகள் பகவானைக் காதலித்தார்கள். காதலில் இன்பம் உள்ளது. பேரின்பம் உள்ளது. எல்லையற்ற இன்பமுள்ளது. எதனாலும் மாசுபடுத்த முடியாது. கொள்ளையடிக்க முடியாது. நிச்சயமான, நிர்மலமான பேரின்பமுள்ளது முன்னே சொன்னவர்கள் காதலித்தே பேரருளாளர்கள் ஆனார்கள்.

ஆண்டாள் கண்ணனைப் பார்த்தாள். அவன் கடவுள் என்று கண்டு கொண்டாள். இந்த உலகில் பருவமடைந்த ஆண், பெண்ணைப் பார்க்கிறான். பெண், ஆணைப் பார்க்கிறாள். அது சிற்றின்ப நோக்கத்தோடு தான், பேரின்ப நோக்கத்தோடு இல்லை. நாளெல்லாம் பார்க்கிறது, கனவெல்லாம் பார்க்கிறது, நித்திரையில் பார்க்கிறது, சிந்தனையில் பார்க்கிறது. முடியவில்லையென்றால் அழுகிறது. அழுகையில் பார்க்கிறது. துடி துடிக்கிறது.

அந்தத் துடி துடிப்பில் காதலைப் பார்த்தாள். காதலியைப் பார்த்தாள். காதலி என்பது பெயர்ச் சொல்லாகும். வினைச் சொல்லாகும். இப்படிப் பல ஆண்டுகள் பார்த்த அந்த இரண்டும் ஒன்றுக்குள் ஒன்றாக இருக்கும். அந்த ஜீவனின் ஆத்மாவை அந்த இரண்டும் பார்ப்பதில்லை. அவைகளின் பார்வை உலகளவில் நின்று விடுகிறது. அந்தப் பார்வை - ஆண் பார்வை, பெண்ணுக்குள் இருக்கின்ற ஜீவனைச் சென்று அடைந்து அந்த ஜீவன் ஆத்மாவை அடைந்து அந்த ஆத்மாவுக்குள் சங்கமமானால், ஆணுக்குள் இருக்கின்ற ஆத்மா சங்கமமானால் அந்த இரண்டும் அமரத்துவம் பெறும்.

ஆத்ம சங்கமம், தேக சம்பந்தப் பிரியர்களிடம் சேராது. இரண்டில் ஒன்றான ஆத்ம சங்கமம் பரம் பொருளுக்குத் தன்னை நிவேதனம் செய்து விடுகிறது. அது சாயுச்ய நிலை அடையும். சாலோப நிலை அடையும். சாரூப நிலை அடையும். சாமீப நிலை அடையும்.

மூன்று நிலையும் அடைந்து அதற்கு அப்பால் பரசிவ ஆனந்த சிவ ஐக்கிய நிலை வந்து சேரும். அதற்குக் காதல் யோகம் என்று பெயர். பேரின்பம் உண்டு, அமைதி உண்டு, மௌன நிலை, எதிலும் ஒட்டா நிலை, உறவுகள் வேண்டா நிலை உண்டு. உலகை உதறிவிட்டுக் காதலிப்பதும், காதலித்ததும், காதலிக்கக் காத்திருப்பதும் கூடிக் கலந்து காதலிக்கும் காதல் இன்பத்திலே ........................ சொல்வதற்குச் சொல் இல்லை.

ஏ! மனிதனே. நீ காதலிக்கும் போது உன் பார்வை தேகத்திற்குள்ளே நின்று விடுகிறது. அந்தப் பார்வையில் ஆத்ம சக்தி இருந்தால் - அந்த ஆத்ம சக்தி நீ காதலிக்கும் ஒன்றுடன் சங்கமமாகும் அல்லவா? இந்நிலை வந்தால் காதல் தோல்வியில்லை. காதலுக்கும் பயமில்லை. காதலில் காலமில்லை, கோலமில்லை. ஆகவே, பல கோடி

ஆண்டு காலமாக மனிதப் பார்வை - காதல் பார்வை, தேகத்தையும், மனத்தையும் பற்றி வருகிறது. அதன் விளைவு துன்பம். துன்பம் இதைக் காதலென்று சொல்ல இயலாது. சாதலைக் காதலாக்கும் சாதல் - காதல்.

ஜீவ யாத்திரையில் சாதல் - காதல் விளக்கப்படுகிறது. நடக்கிறது. அந்தச் சாதல் - காதல், காதல் - சாதல் ஆகிறது. இந்தச் சாதல் - காதல், காதல் - சாதல், சித்தாந்தத்தை ஜீவ யாத்திரை கடந்து செல்கிறது. ஒவ்வொரு பிறவியிலும் இந்தச் சாதல் - காதல் நடைபெறுகிறது. காதல் - சாதல் நடைபெறுகிறது.

ஜீவ யாத்திரையில் இந்த நிலையில்தான் ஜீவன் பாடுபடுகிறது. இறைவனை அடைகின்ற காலம் நீடிக்கப்படுகிறது. இந்த சித்தாந்தத்தில் ஜீவன் வெற்றி பெற்றால் ஜீவ யாத்திரை முடிவடைகிறது. காலம் குறுக்கிடுகின்ற நிலை கிடையாது.

சந்தோஷம்

# பிணைப்பு

பிணைப்பு ஜீவ யாத்திரையில் ஒரு முக்கியமான கட்டம் ஜீவ யாத்திரை தொடங்கி ஜீவ யாத்திரை முடியும் வரை பிணைப்பு, இணைப்பு, விரிவு, விலக்கல் நீக்கலாகிய வினைகள் இங்கு உண்டு. காரணம் தோன்றுவதும் அதிலிருந்து காரியம் விளைவதும் பிறகு காரியமாவதும் இப்படி முடிவில்லாச் செயலாக இந்த உலகில் நடந்து கொண்டிருக்கிறது. காரணம் - காரிய மூலமாகவும், அதன் விளைவு இன்ப-துன்பமாகவும், பந்தம் என்ற பிணைப்பு வினையில் விளைகிறது. பந்தம் அறுக்கும் வினையின் வினை ஜீவனுக்குத் தேவைப்படுகிறது.

ஒரு பந்தம் வந்து விட்டால் அது தொடர்ந்து பந்தம்-பந்தம் பந்தங்களாகவே மாறிக் கொண்டு இருக்கின்றது. ஒன்று கோடியாகிறது. அது எளிது. மிக எளிது. ஆனால் கோடியை ஒன்றாக்குவது கடினமான வினை. அதற்குப் பல பிறவிகள் எடுக்க வேண்டியிருக்கிறது. விதையொன்று - மரங்கள் பல. ஒவ்வொரு மரமும் ஆயிரம் விதைகள் கொடுக்கின்றது. இலட்சக்கணக்கான மரங்களாகின்றன. கோடியை ஒன்றாக்குவது மிகச் சிரமம். அதே வினைதான் ஜீவ யாத்திரை.

ஒன்றைக் கொடுத்தாலே வினை வருகிறது. ஒன்றை வாங்கினாலும் வினை வருகிறது. ஜீவன் கூட்டுக்குள் சென்ற பிறகு வாங்காமலும் இருக்க முடியாது. கொடுக்காமலும் இருக்க முடியாது. பூமியின் மீது உட்கார்ந்தாலும் வினை வரும், நின்றாலும் வினை வரும், படுத்தாலும் வினை வரும், பிடித்தாலும் வினை வரும், பேசினாலும் வினை வரும், மௌனமாக இருந்தாலும் வினை வரும், இல்லறத்தாராய் இருந்தாலும் வினை வரும், துறவியாய் இருந்தாலும் வினை வரும், வினையை ஒவ்வொரு ஜீவனும் விரட்டிக் கொண்டேயிருக்கும். அந்த வினையிலும் காரணமும், காரியமும் பற்றிக் கொண்டு இருக்கும்.

*காரணம் - மனைவி காரியம் - கணவன்*
*காரணம் - ஆகாயம் காரியம் - பூமி*
*காரணம் - விந்து காரியம் - நாதம்*
*காரணம் - அருவம் காரியம் - உருவம்*
*காரணம் - அந்தர்முகம் காரியம் - பகிர்முகம்*
*காரணம் - தலைவன் காரியம் - அதைச் செயல்படுத்தும் சேவகன்.*

காரணமும், காரியமும் ஒன்றுக்கொன்று பிணைந்து பிணைந்து செயல்படுத்தும் வினையாகி, விதியாகி, விதியிலிருந்து வெளிப்பட்டு இன்ப - துன்பமாகி, உலக வாழ்வாகி, உலக வாழ்க்கையாகி எங்கும் நிறைந்துள்ளது. எல்லா ஜீவனுள்ளும் கலந்து நிற்கிறது.

இந்த முடிவில்லாப் பேரியக்கத்திற்கு ஒரு முடிவு. இந்த முடிவில்லா யாத்திரைக்கு ஒரு இறுதி இடம். முடிவில்லா வினைக்கு. ஒரு முடிவான வினை. முடிவில்லா காலத்திற்கு ஒரு எல்லைக் கோடு. முடிவில்லாக் காட்சிக்கு ஒரு கடைசிக் காட்சி. முடிவில்லா இந்த இக வாழ்விற்கு முடிவான ஒரு தூய்மையான பூரண வாழ்வு. முடிவில்லாப் பேச்சுக்கு முடிவான மந்திரப் பேச்சு. முடிவில்லாத நடைக்கு நிறைவான ஒரு பிரம்ம ஞான சூரியோதயம். முடிவில்லா வாசிக்கு ஒரு நிறைவான சிவா. முடிவில்லா இந்தப் பிரபஞ்ச இயக்கத்திற்கு ஒரு முற்றுப் புள்ளி உருண்டோடி வருகிறது. அதுவே ஞான யாத்திரையின் நிறைவில் வாழ்வு அளிக்க வருகிற அமுதக் கடல்.

இங்கே நீ - நீ யார் என்பதை எல்லா நிலையிலும் மிகத் தெளிவாக ஐயமற்ற நிலையில் - உனக்குள் ஆனந்தமாய் அருள் சார்ந்த யோக நித்திரையில் அனந்த சயனத்தில் சிவ மகா விழிப்பில் இருப்பதைக் கண்டு ஒன்றுக்குள் ஒன்றாய் இருக்கும் நீ. உனக்கு நீயும் - நீயும். நீயற்ற நிலையில் முத்தங்கள் எல்லையில்லாமல் வெளிப்பட்டுக் கொண்டேயிருக்கும். அதற்கு மட்டும் என்றைக்குமே முற்றுப் புள்ளியில்லை. அது மட்டும் எல்லையற்றதாகி நிற்கிறது. முத்தத்தில் என்ன கிடைக்கிறது? தீர்க்க தரிசனமுள்ள பேரருள் நிறைந்த சிவானந்தம் கிடைக்கிறது. அதற்காக எத்தனை கோடி ஜீவ யாத்திரை வேண்டுமென்றாலும் மேற்கொள்ளலாம்.

சந்தோஷம்

# ஜீவ ப்ரிதி

ஜீவ ப்ரிதி என்பது ஜீவ யாத்திரைக்கு அவசியம் தேவை. ஒரு ஜீவனை, தன்னை அண்டிய ஜீவனை, தன்னைப் பெற்று வளர்த்த ஜீவனை, தனக்கு உதவி செய்த ஜீவனை, தனக்காக இந்த உலகில் இருக்கின்ற ஜீவனை, எங்கும் இருக்கும் ஜீவனை, அதன் பரிபக்குவத்திற்கு ஏற்றவாறு ப்ரிதி செய்து அல்லது திருப்தி செய்து அந்த ஜீவனுக்கு ஆறுதலைத் தந்து ஜீவ யாத்திரையின் அருள் ஒளியோடு செல்ல வைக்கிறது.

இதனால் திருப்தி ஏற்றுக் கொண்ட ஜீவன்கள், திருப்தி செய்கின்ற, ப்ரிதி செய்கின்ற ஜீவனின் வாழ்த்துகளைப் பெறும். ஜீவன்களின் வாழ்த்துகளைப் பெற்றால் அண்டவெளி சக்தி தானாகவே புற நிலைக்கு வந்து சேரும்.

ஜீவர்களுக்குப் ப்ரிதி செய்த ஜீவன் அந்தச் சக்தியை, அதன் வினையை உணரும், உணர்ந்தே தீரும். ஜீவப் பிரகாசம் வெளிப்படும். அது சிவ பிரகாசத்தைத் தொடுவதற்கு அதனோடு கலப்பதற்கு வேகமாகச் செல்லும்.

ஜீவப் ப்ரிதியில் அல்லது ஜீவனை ஆறுதல் படுத்துகின்ற அல்லது ஜீவனின் சோகத்தை நீக்குகின்ற அல்லது ஜீவனுக்குப் பிரம்ம ஞான கருத்துகளை அருள் நிலையில் நின்று மறை முகமாக அந்த ஜீவனின் புருவ மத்தியிலிருந்து போதித்தலாகிய வினைகள் ஜீவப் பிரகாசத்திற்கு ஏற்ற வகைகளாகும். அந்த வினையை முழுமையாக ஆற்றும் போது ஜீவனுக்குள்ளே ஜீவனைக் காணலாம். தன் ஜீவனைத் தானே காணலாம்.

இந்த வினையை ஆற்றுவதற்கு ஒரு நிபந்தனை உள்ளது. அதாவது, ஜீவப் பிரகாசம் செய்யப் போகின்ற, செய்வதற்கு ஆர்வமுள்ள ஜீவன்கள், இறைவன் படைத்த - இந்த உலகில் எந்த ஜீவன் மீதும் (தன் மீதும்) கோபமோ, பகையோ, வெறுப்போ, புறக்கணித்தலோ, தள்ளுதலோ கூடாது. கூடவே கூடாது. இது ஜீவ யாத்திரையின் வேகத்தைக் குறைக்கும். ஜீவப் பிரகாசத்தின் குணங்கள் வெளி வராமல் செய்து விடும்.

ஜீவப் பிரகாசத்திற்கு ஒரு படி - ஜீவ நேயம்; ஜீவ அன்பு ; ஜீவ காருண்யம். இவைகளில் நாம் வெற்றி பெற வேண்டும்.

ஈசன் எனக் கருதி எல்லா உயிரையும் நேசத்தால் நீ நினை. இறைவன் படைத்தவைகளைக் குறை கூறாதே, வெறுக்காதே, ஒதுக்காதே, பகை கொள்ளாதே, சிதைத்துக் கொள்ளாதே. அந்தப் பணிகள் வெற்றி பெற்றால் ஜீவானந்தம் உனக்குக் கிடைக்கும். ஜீவானந்தம் - ஒன்றும் சாதாரணமான ஒன்றல்ல.

இத்தனை கோடி பிறவியெடுத்தும், மலை-மலையாய்த் துன்பங்கள் அனுபவித்து, தன்னையே வெறுத்து, தன்னைச் சிதைத்துக் கொண்டு, போக வழி தெரியாமல், தனக்கு உதவி செய்பவர்களைத் தேடிக் கண்டு பிடிக்கத் திறன் இல்லாமல் பல இலட்சம் ஆண்டுகள் துன்பத்தை அனுபவித்து, துயருற்ற ஜீவன்களுக்கு ஜீவன் என்ற விருது விலகுவதற்கு முன்பு ஜீவ ஆனந்தம் கிடைப்பதற்குக் கடவுள் தந்த பரிசாகும்.

இதற்காக எல்லா ஜீவன்களும் ஏங்கிக் கொண்டிருக்கின்றன. சிவ ஆனந்தத்திற்கு முன் ஜீவன் அனுபவிக்கும் பேரின்பம் ஜீவ ஆனந்தமாகும். இது சித் இன்பமாகும்.

சித் இன்பம் - மிக நுண்ணிய ஜீவனுக்குள்ள சக்தி அதிலிருந்து வெளிப்பட்டு கல்ப நிலைக்கு வந்து கடவுளுடைய திருக்கண் பார்வையால் ஜீவனின் குருட்டு திறக்கப்பட்டு அதற்குக் கொடுக்கப்பட்ட ஆனந்தத்தை அதையே மிக நுண்ணர்வால் அனுபவிக்கச் செய்தல். அதாவது, அதன் இன்பத்தை அதுவே அனுபவிக்கச் செய்தல்.

அதற்கு முன் அந்த ஜீவன் கண்ட சிற்றின்பமெல்லாம் மாற்று இன்பமாகும். இன்னொன்றின் துணை கொண்டு அவைகள் மாயா இன்பத்தை அனுபவித்து ஜீவ யாத்திரையை நீட்டித்துக் கொண்டன. இதற்குத் துவைத விக்ன இன்பம் என்று பெயர். ஜீவானந்தத்திற்கு "ஏக நிர்விக்ன இன்பம்" என்று பெயர்.

ஜீவ விழிப்புக்கு முன்பு வருவது ஜீவ ப்ரிதி. எல்லாம் ஒன்றே என்ற பரஞான கடவுள் தத்துவத்தை ஜீவ ப்ரிதிக்குப் பிறகு ஜீவானந்தத்தைச் சுவைத்த பிறகு அந்த ஜீவன் பெறுகின்ற மகோன்னத பரிசு இதுவேயாகும்.

### சந்தோஷம்

# இடைக்காட்டுச் சித்தர்

**காப்பு**
**கலி விருத்தம்**

*ஆதி யந்தமில் லாதவ னாதியைத்*
*தீது றும்பவத் தீப்படு பஞ்சுபோல்*
*மோதுறும்படி முப்பொறி யொத்துறக்*
*காத லாகக் கருத்திற் கருதுவாம்.*

ஜீவ யாத்திரை சிதாகாசப் பேரொளி கொண்டு ஜீவ யாத்திரையில் வெற்றி கண்டு பரகதி அடைந்து சிறப்புப் பெற்ற சித்தர் - இடைக் காட்டுச் சித்தர் ஆவார். இவருடைய வாழ்க்கைக் குறிப்பையும் இவர் அடைந்த அனுபவங்களையும், மக்களுக்குச் சித்தர் கூறும் அருளுரைகளையும் உங்களுக்கு வெளிப் படுத்துவதால் உங்கள் ஜீவ யாத்திரை உயர் மெய்ஞ்ஞான நிலையில் வெற்றி கண்டு வாழ்வாங்கு வாழ்வீர்கள் என்று நாங்கள் நம்புகிறோம்.

இடைக் காட்டுச் சித்தர் தொண்டை மண்டலத்தில் இடையன் தீட்டு என்ற ஒரு கிராமத்தில் இடையராக வாழ்ந்தார். சித்தரைப் பற்றிப் பல விதமான கருத்துகள் கர்ண பரம்பரைச் செய்திகள் பலவாக நிலவுகின்றன.

சித்தர் மதுரைக்குக் கிழக்கில் உள்ள இடைக் காட்டில் பிறந்தவர் எனக் கருதுபவரும் உள்ளனர். இவர் மலையாள நாட்டில் உள்ள இடைக்காடு என்ற ஊரில் வாழ்ந்தவர் என்றும் சிலர் பேசுகின்றார்கள். இவர் பொதிகை மலைச் சாரலில் ஒரு சமயம் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தார். நவநாத சித்தர்களில் ஒருவர் தவம் செய்வதற்காக அம்மலைக்கு வந்திருந்தார். ஒரு நாள் அந்தச் சித்தர் இடைக்காடு சென்று பால் கேட்டார். இடைக்காட்டுச் சித்தர் அவருக்கு வேண்டிய பால் கொடுத்து அன்போடு உபசரித்தார்.

அது மட்டும் அன்று. அவருக்கு ஞான உபதேசம் செய்து தன் தவ சக்தியும் கொடுத்துச் சென்றார். அவர் சித்தரானார். இவர் பெரிய ஞானி ஆன காரணத்தால் ஒரு சமயம் இவர் தவமிருந்த போது 12 ஆண்டுகள் இங்கு மழை இருக்காது என்ற செய்தியை அறிந்தார்.

அதனால் தான் மேய்த்து வரும் ஆடுகளுக்கு எருக்கிலை, வரகு தானியத்தைக் கொடுத்து உண்ணப் பயிற்சி கொடுத்தார். மேலும், அவர் ஒரு வீடு கட்டினார். அந்த வீட்டில் வரகு அரிசி, சேறு ஆகியவற்றைச் சேர்த்து வீடு கட்டினார்.

எருக்கிலை தின்ன காரணத்தினால் ஆடுகளுக்குச் சில சமயம் அரிப்பு வருவதுண்டு. அவைகள் சுவரில் உராய்ந்து கொள்ளும். அப்போது சுவரில் உள்ள வரகு அரிசி கீழே வீழும். ஆடுகள் அதை உண்ணும்.

12 ஆண்டுகள் நிறைவுறும் காலம் வந்தது. ஊரில் உள்ள மக்கள், ஆடு, மாடுகள் எல்லாம் அழிந்தன. இதைக் கண்ட நவகிரகங்கள் ஊரே அழிந்திருக்கும் போது இவர் மட்டும் ஆடுகளோடு இருக்கிறாரே என்று ஐயம் கொண்டு இவர் வீட்டுக்கு வந்தனர்.

வந்த நவகிரகங்களை இடைக்காட்டுச் சித்தர் அன்போடு வரவேற்று பால் கொடுத்து, வரகு அரிசி தான்யங்கள் கொடுத்து உண்ணச் செய்தார். அவர்கள் உண்டதும் படுத்துத் தூங்கி விட்டார்கள். அந்தச் சமயத்தில் இடைக்காட்டுச் சித்தர் நவகிரகங்களை மாற்றி வைத்தார். மழை நன்றாகப் பெய்து, ஊரெல்லாம் மழை வெள்ளம் வழிந்து ஓடியது. ஊரெல்லாம் செழித்தது.

நவகிரகங்கள் எழுந்தன. காரணத்தைக் கண்டு கொண்டனர். மீண்டும் பழைய நிலைக்கு மாறி வந்தனர்.

இடைக்காட்டுச் சித்தர் சரீரம் என்ற வைத்திய நூலை இயற்றினார். இவர் போக மகரிஷியின் மாணக்காராவார். இடைக் காட்டுச் சித்தர் காலம் கடைச் சங்கமாகும்.

திருவள்ளுவர், கபிலர், குலசேகர பாண்டியன் முதலானோர் இவரின் சம காலத்தவராவர்.

இவர் விஷ்ணு அவதாரம் என்றும் சொல்கிறார்கள். ஏதோ காரணத்தினால் சங்கம் அழியச் சாபமிட்டார். விஷ்ணு பத்து அவதாரம் எடுத்து உள்ளார். அந்தப் பத்து அவதாரத்தில் யாரை வணங்குவது என்று சிலர் கேட்டனர். ''ஏழை, இடையன், இளிச்சவாயன்'' என்று கூறிச் சென்றார்.

இவர் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடியதால் அவனுடைய காலம் என்று சொல்லலாம். இவர் மழையில் நனைந்த படி ஒற்றைக் கால் மீது மற்றொரு கால் வைத்து ஆட்டை அழைக்கப் பாடினார். அவ்வமயம் நரிகள் அந்த ஆட்டைத் தின்பதற்கு மறைந்திருந்தன. இவருடைய குரலைக் கேட்டதும் பதுங்கி ஓடத் தொடங்கின. இதையறிந்த இடைக் காட்டுச் சித்தர் நரிகளே நீங்கள் அஞ்சி ஓடாதீர்கள் என்று கூறினார்.

காப்பு, தாண்டவராயன், கோனார் கூற்று, நாராயணக் கோனார் கூற்று, கண்ணிகள், பலரோடு கிளத்தல், நெஞ்சோடு கிளத்தல், அறிவோடு கிளத்தல், சித்தத்தோடு கிளத்தல், குயிலோடு கிளத்தல், மயிலோடு கிளத்தல், அன்னத்தோடு கிளத்தல், புல்லாங்குழல் ஊதல், பாலோடு கிளத்தல், கிடை கட்டுதல் ஆகிய தலைப்புகளில் 130 பாடல்களை இடைக்காட்டுச் சித்தர் அருளினார்.

அவர் தன் அனுபவத்தைச் சொல்லுகிறார். 1008 வட்டம் என் சிரசுக்குள் கண்டேன். அந்த வட்டத்துள்ளே நின்ற மகத்துவத்தின் சக்தியைக் கண்டேன். 108 சூரிய பிரகாசத்தைப் பார்த்தேன். அதன் பிறகு என் சந்தேகம் அனைத்தும் தீர்ந்தன.

மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்ற அந்தக் காரணங்களை ஆடுகளாகவும், அஞ்ஞானத்தைக் காடாகவும் கருதித் தவம் என்ற வாளால் அவற்றை வீழ்த்தினார். தான் என்றும் சாவாது இருந்திட கோட்டையும் கட்டினார்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்பதை ஆடுகளாகப் பேசுகிறார். சுவை, ஒளி, ஓசை, ஊறு, நாற்றம் இவையாவும் காடுகள். இந்த ஐம்புலன்களும் சுவை, ஒளி, ஓசை, ஊறு, நாற்றம் என்ற காட்டில் மேய்கின்றன. அவற்றை ஓட்டினார். ஓட மறுத்ததை வாட்டினார்.

ஏகவெளிக்குள்ளே ஓட்டினேன். யோக ஒளிக்குள்ளே ஓட்டினேன். இந்த இரண்டு பற்றுகளையும் விட்டு விட்டேன். எல்லோரிடமும் நட்புக் கொண்டேன். அமுதப் பாலை உட்கொண்டேன். சிற்றின்பம் அறவே நீக்கினேன். மற்ற பேரின்பத்தைக் கண்டேன். சிற் பரஞ் சேர்ந்திட, தற்பரஞ் சார்ந்திட்டேன்.

அண்ணாக்கை ஊடே மடித்து அமுது உண்டேன். எல்லாக் கருத்தையும் கண்டு கொண்டேன். விண்ணாளும் மொழி கொண்டு பூஜை கொண்டேன். மண்ணை ஆளுகின்ற பஞ்ச பூதத்தைக் கண்டேன். மாயா விகாரங்கள் யாவையும் *துரத்தி* விட்டேன்.

"ஓம்" என்ற விண்ணொளி மொழியைக் கொண்டேன். லௌகீக வாழ்வே வேண்டாம் என்று விட்டேன்.

யோகங்கள் அனைத்தும் புரிந்தேன். ஐந்து யோக நூல்கள் கண்டேன். ஆராதாரங்களைப் பார்த்தேன். அவைகளின் காரணமான ஆதியனைத் தேடிக் கண்டு கொண்டேன். என்று தன் அனுபவங்களைப் பேசுகிறார். மீண்டும் இடைக்காட்டுச் சித்தர் தான் கண்ட பேரின்பங்களை விளக்குகிறார்.

- ஏ!அன்பு மனிதனே ஆதி பகவானான் இறைவனை அன்பால் நினைத்தால், பரகதி சோதி மயமானது, அது உனக்குச் சொந்தம்.
- எங்கும் நிறைந்த பொருளை *எண்ணி - எண்ணிப் பணிவாயானால்* உனக்குப் பரகதி கிடைக்கும்.
- அல்லும், பகலும் இறைவனைத் தேடினால் நீ பூரணமாவாய். மோட்ச நிலை கிடைக்கும்.
- நீ ஒன்றைப் பற்றி அதைப் பிடித்துக் கொண்டிருந்தால் உனக்கு உண்மை வசப்படும். அந்த நிலை தன்னில் நேர்மை அறிவாய்.
- நீ எவ்வளவு பெரிய மனிதனாக இருந்தாலும், எல்லாம் பெற்றிருந்தாலும், கடவுள் அருள் இல்லையென்றால் எதுவும் இல்லாதவனுக்கு ஒப்பாவாய்.
- தேவருடைய உதவியின்றி எதையும் பெற்றுக் கொள்ள இயலாது. கடவுள் தாயைக் காட்டிலும் அன்பானவர். கடவுள் பால் அன்பு உள்ளவர்களிடம் கடவுள் நீங்காது இருப்பர். அவர் முக்திக்கு வித்தானவர். மூலப் பொருளானவர். அத்தகைய சக்திக்கு உறவானவர். அவரைத் துதிப்போமாக.
- இறைவனுடைய திருப் பாதத்தை அன்போடு வணங்கினால், உன்னுடைய துன்பமெல்லாம் உன்னை விட்டு ஓடி விடும்.
- கண்ணாலும், கால்களாலும், புலன்களாலும் அறிய முடியாத

கடவுளை நீ பற்றினால் உன்னுடைய புலன்கள் எல்லாம் உன்னை வாழ்த்திச் சிறப்பிக்கும்.

* அதோ பார் என்று சுட்டியும் காண முடியாத சூன்யமான கடவுளை நீ பிடிப்பாயானால், உனக்குச் சமமானவர் யாருமில்லை.

* ஜோதி ஒரு நற்பொருள். அந்தப் பொருளைப் போற்ற வேண்டும். அப்படிப் போற்ற வில்லையென்றால் உனக்கு முக்தி நிலை கிடையாது.

## பலரோடு கிளத்தல்

* கண்ணுள் மணியே சுருதியே, பர ஒளியே, விண்ணின் மணியே, விளக்கு ஒளியே, உணர்ந்து - உணர்ந்து போற்றி, மனம், வாக்கு, தேகம் என்ற பொறிகளுக்கு எட்டாத இறைவனை நெஞ்சமது சேவித்து வணங்க வேண்டும்.

* முக்காலம் கடந்த கதிர் ஒளியை உள்ளத்தால், சலிப்பின்றி வணங்கு.

* கடவுள் பாலின் சுவை போன்று இருக்கிறார். பழத்தில் மது போன்றும், நல்ல நூல்களின் நுண் பொருளாகவும் இருக்கிறார். அந்த நுண் பொருளை வணங்குவோம்.

* கடவுள் மூவர் ஆற்றலுக்கும் அப்பாற்பட்டவர். முக்கனியின் சுவை போன்றவர். சர்க்கரையானவர். அவரை வணங்குங்கள்.

* தூய்மையான மறைப் பொருளைச் சுகமளிக்கும அமிர்தத்தை அன்புடன் நாளும் நிலை பெறப் போற்றுவீர்.

* சராசரத்தைத் தந்த கனிவான மூலப் பொருளை, பராபரத்தைப் பற்றி வணங்குங்கள்.

* மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகியவற்றைப் படைத்த வெட்ட வெளியைக் கண்ணாரக் காண, கருத்து இசைந்து வணங்குங்கள்.

* மெய்ப்பொருளை நாளும் பேரார்வத்தோடு வணங்குங்கள்.

* எங்கும் நிறை பொருளை உன் உள்ளே துதித்து உணர்வு அடைந்து வணங்குங்கள்.

## நெஞ்சோடு கிளத்தல்

* இந்த உலகத்தை எல்லாம் ஒரு குடைக் கீழ்க் கொண்டு வந்து, காமியம் வைத்து அரசாளினும் எந்தப் பயனுமில்லை.
* ஏ! மனிதனே! பெண் ஆசையோ அல்லது ஆண் ஆசையோ கொண்டு திரிந்தால், கடவுள் நினைவு உனக்கு வரவே வராது. அந்த விதியே உனக்கு இல்லை.
* மேய்ந்து திரிகின்ற உன் ஐம்புலன்களை மனமே ஒழுங்கு படுத்து. அதை நல்வழிக்கு அழைத்துச் செல்.
* மனமே! பெண்ணிலும், மண்ணிலும் ஆசை கொண்டு எங்கும் திரிந்தால் உனக்கு முக்தி வாய்க்காது.
* பொய்யான கல்வி கற்காமல் பொருளின் மீது மயக்கம் கொள்ளாமல் மனமே! நீ மெய்ஞ்ஞானக் கல்வியை விரும்புவாயாக.
* ஏ! மனமே! பேய்க் குணம் போல, பேருலகின் மீது இச்சை வைத்து நாய், நரி போல் அலைந்தாய். நன்மை உண்டோ?
* மனமே! இரும்பைக் காந்தம் இழுக்கிறது. அது போன்று பல பொருள்களில் பற்று வைத்து அலைகிறாய். அதனால்எ ன்ன பயன்? சொல்!
* கற்ப நிலையால் கற்ப காலம் நடந்தால், சொற்ப நிலை, மற்ற நிலை, சூட்சுமம் காண்பாய்.
* ஏ மனமே! நீ யோகம் மட்டும் செய்.
* ஏ மனமே! நீ சாகாது இருப்பதற்குரிய கல்வியைக் கற்றுக் கொள். அதுவே மெய்க் கல்வியாகும்.
* அறிவே வா! கேள் நான் சொல்வதை! எல்லாப் பொருளையும் தன் எண்ணப்படி படைத்த வல்லான் தன்னை வகுத்து அறி, நீ புல்லறிவே!
* ஓங்காரத்தைக் கண்டறிதல் வேண்டும். அது அகங்கார மற்ற இடமாகும். ஓங்காரத்தில் உறுதி காண்பாயாக.

## அறிவொடு கிளத்தல்

* எல்லாப் பொருள்களையுமெண்ணப் படி படைத்த வல்லாளன் தன்னை வகுத்தறி நீ புல்லறிவே.

* கட்புலனுக் கெவ்வளவுங் காணா திருந்தெங்கும் உட்புலனாய் நின்றவொன்றை உய்த்தறி நீ புல்லறிவே.
* விழித்திருக்கும் வேளையிலே விரைந்துறக்க முண்டாகும் செழித்திலங்கும் ஆன்மாவைத் தேர்ந்தறி நீ புல்லறிவே.
* மெய்யிலொரு மெய்யாகி மேலாகிக் காலாகிப் பொய்யிலொரு பொய்யாகும் புலமறிநீ புல்லறிவே.
* ஆத்துமத்தின் கூறான அவயவப்பேய் உன்னுடனே கூத்துப் புரிகின்ற கோளறிவாய் புல்லறிவே.
* இருட்டறைக்கு நல் விளக்காய் இருக்குமுன்றன் வல்லமை அருட்டுரையில் நிறுத்தி வினைக் காகுநீ புல்லறிவே.
* நல்வழியிற் சென்று நம்பதவி யெய்தாமல் கொல் வழியிற் சென்று குறுகுவதேன் புல்லறிவே.
* கை விளக்குக் கொண்டு கடலில் வீழ்வார் போல் மெய் விளக்கின் னுள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே.
* வாசிக்கு மேலான வான்கறியுன் னுள்ளிருக்க யோசிக்க மேற்கதிதான் உனக்கரிதோ புல்லறிவே.
* அன்னையைப் போலெவ் வுயிரும் அன்புடனே காத்து வரும் முன்னவனைக் கண்டு முத்தியடை புல்லறிவே.

## சித்தத்தோடு கிளத்தல்

* சித்தமே நீ வருக. அஞ்ஞானம் போயிற்று என்று பாடுக.
* பரமானந்தம் கண்டோம் அன்று பாடுக.
* மெய்ஞ்ஞானம் வாய்த்தது என்று பாடுக.
* மேலேறிக் கொண்டோம் என்று பாடுக.
* துன்பம் இனி இல்லை என்று பாடுக.
* துயரம் இனி இல்லை என்று பாடுக.
* சித்தமே பாடுக.
* ஆணவங்கள் அற்றோம் என்று பாடுக.
* தொல்லை வினை நீங்கியது என்று பாடுக.

* பரஞ்ஜோதியைக் கண்டோம் என்று பாடுக.
* ஐம்பொறிகள் கண்டோம் என்று பாடுக.
* அறிவே பொருள் ஆனது என்று பாடுக.
* செம்பொருள் வாய்த்தது என்று பாடுக.
* ஒரு தெய்வீகம் கண்டோம் என்று பாடுக.
* மூவாசை விட்டோம் என்று பாடுக.
* பர முக்தி நிலை சித்தி நிலை பெற்றோம் என்று பாடுக.
* தெய்வத்தின் மீது ஆசை வைத்தோம் என்று பாடுக.
* இந்த ஜகத்தை ஒழித்தோம் என்று பாடுக.
* பாழ் வெளியை நோக்கியே பாடுக.
* வாழ்விடம் என்றெய்தோம் என்று பாடுக.
* வள்ளல் (கடவுள்) நிலை சார்ந்தோம் என்று பாடுக.
* எல்லாப் பொருள்களும் எல்லாவற்றிலும் காணலாம் என்று பாடுக.
* இந்த உலகமெல்லாம் அழியும் என்று பாடுக.
* அழிவு இல்லாதது ஆதி என்று பாடுக.

## குயிலோடு கிளத்தல்

* காரணங்கள் நான்குக்கும் அடங்கினவே. அடங்கினவே.
* கெட்ட காமங்கள் ஒடுங்கினவே. ஒடுங்கினவே.
* சரணங்கள் ஒரு நான்கும் கண்டோம் என்றே.
* முழு சந்தோஷமாகக் கூவு குயிலே.
* உலகம் முக்காலம் என்று ஊது குயிலே.
* எங்கள் உத்தமனைக் காண்பது அரிது என்று ஊது குயிலே.
* எழுபவ மகன் றிட்டோம் நாம் என்று பாடு குயிலே.

## மயிலோடு கிளத்தல்

* மயில் ஞானத்தைக் குறிப்பது.
* மயிலே நீ ஆடு. ஆடு மயிலே.

* எங்கள் ஆண்டவனைப் பாடி ஆடு மயிலே.
* இந்தக் கூடு போவதற்கு முன்னே பரகதி கொள்ளும் மயிலே.
* என்றும் நீ மூல நெறியில் நில்லு மயிலே.
* இல்லறமே துன்பம் என்று ஆடு மயிலே.
* பக்தி இல்லாதவர்க்கு முக்தியும் இல்லை, சித்தியுமில்லை என்று ஆடு மயிலே.
* துறவறம் தான் சிறந்தது என்று ஆடு மயிலே.
* நாதாந்த வெட்ட வெளியைத் தினம் நாடு மயிலே.
* வரும் காலனைத் துரத்தி ஓட்டு மயிலே.
* காய்ந்த இரும்பு நிறம் காட்டுதல் போல் ஆத்மாவை உணர்ந்து நிற்பாயாக.
* மனம் என்னும் மாடு அடங்கினால் முக்தி தானே வந்து சேரும்.
* கோபத்தைக் கொன்று விட்டால் எல்லாம் உனக்குச் சித்தியாகி விடும்.
* ஆசை உன்னிடமிருந்து மாண்டு விட்டால் இந்த அண்டத்தையெல்லாம் நீ அறிவாய்.
* மூலப்பதியை நீ அறிய வேண்டும்.
* பற்று தான் பிறப்பை உண்டாக்குகிறது. பற்று அற்ற நிலையில் நீ இரு.
* உன் உள்ளே உள்ள பிரம்மத்தின் மீது நீ இச்சையை வைக்க வேண்டும்.
* வேக வைத்த விதை விளையாது. பக்தி அற்றவர்கள் பரகதி அடைய மாட்டார்கள்.
* காதால் கேட்க முடியாத மறை மந்திரத்தைக் குருவால் கேட்டு அறிந்து கொள்.
* ஏ மனிதனே! கண்டு கிடைக்கிற பதவி எது தெரியுமா? சிவகதி. ஆகவே சிவகதியை அடைவாயாக.

## பால் கறத்தல்

* சாவாது இருந்திடச் சாதனை செய்.
* உன் சிரசுக்குள் நீ இருக்கச் சாதனை செய்.
* வேகாது இருந்திடச் சாதனை செய்.
* வெட்டவெளிக்குள்ளே நீ நிற்கச் சாதனை செய்.
* உன் தொல்லை வினைகளை நீக்கிடச் சாதனை செய்.
* நாறாது இருப்பதற்குச் சாதனை செய்.
* மேலும் நெடுநாள் இருப்பதற்குச் சாதனை செய்.
* என்றும் மாறாமல் இருப்பதற்குச் சாதனை செய்.
* தலை மண்டையில் இறை வினைக்கான சாதனை செய்.
* உலகத்திலிருந்து விலகச் சாதனை செய்.
* கலசத்தில் அமுதம் மிகச் சாதனை செய்.
* ஏப்பம் விடாமல் சாதனை செய்.
* எமனை விலக்கச் சாதனை செய்.
* பரசிவத்திடம் சார்ந்திடக் கலந்திடச் சாதனை செய்.

## இடை கிளத்தல்

* இரு வினைகளை வெளியேற்றி விடு.
* உன் மனம் என்னும் மாட்டை அடக்கி விடு.
* என்றும் தவத்தில் ஆழ்ந்து விடு.
* அகங்காரத்தை அகற்றி விடு.
* மும் மலங்களை ஒதுக்கி விடு.
* உள்ளே உள்ள மலங்களையும் நீக்கி விடு.
* மும்மலத்தையும் நீக்கி விட்டால் முக்காலத்தையும் நீ அறிவாய்.
* இந்திரியங்கள் வினையிலிருந்து விலகி விட்டால் உனக்கு இனி மரணமில்லை.
* தேகம் என்ற மாட்டைக் கண்டு விட்டால், உனக்கு என்றும் மோசமும், நாசமும் இல்லை. முக்தியே.

## அடுத்தது

- ✱ உன் தலைக்கு மேலே பிரம்மரந்திரத்தின் பேரொளி ஒன்று உள்ளது. அதைப் பார்.
- ✱ வாய் பேசாதிருந்து பெரும் நிஷ்டையில் ஆழ்ந்து விடு.
- ✱ தலையில் கமலச் சேவை தெரிந்து கொள்க. திருந்திடுக. இதுவே முக்திக்கு, சித்திக்குத் தந்திரமாகும்.
- ✱ உன் மெய் அறிவால் அனைத்தையும் அறிவாயாக.
- ✱ மெய் - மெய் - மெய்யறிவு இதிலே நீ நில்.
- ✱ உன் கண்ணாடிக்குள் இதைக் கண்டு பார்த்துத் தெளிந்திடுக.
- ✱ சூன்யமாய் இருக்கின்ற பெரும் கடவுளை உனக்குச் சுட்டிக் காட்டுபவர்கள் எங்கு இருக்கிறார்கள்?
- ✱ உன் புத்தி சூக்குமத்தால் அதைக் காண்பாயாக.
- ✱ நித்தியமான ஒன்று அது கடவுள். அது நிச்சயமாக உள்ளது. உணர்ந்திடுக.
- ✱ சக்தியும், பரமும் உன்னுள்ளே உள்ளது. அதை அடையப் புறப்படு.
- ✱ மோனத்திலிருந்து சாதனை செய். உனக்கு எல்லாம் வெற்றி.

இடைக்காட்டுச் சித்தர், மக்கள் அடைய வேண்டிய கதி சிவகதி என்ற பரகதியாகும். நாதாந்த வெட்டவெளி யெல்லாம் உண்டு. அங்குச் சென்றிடுக என்கின்றார். இடைக்காட்டுச் சித்தர் இது காரணப் பெயராகும். சித்தர் பெருமான் தன் ஜீவ யாத்திரையை சித்தர் யாத்திரையாக மாற்றி அதில் வெற்றி கண்டார். பிறகு எல்லா ஜீவன்களின் ஜீவ யாத்திரையை வழி நடத்திச் செல்லச் சேவை செய்தார்.

சிததர் பெருமாள் அனுபவக் கருத்துகள் தான் மேலே தரப்பட்டு உள்ளன.

ஜீவ யாத்திரையின் வெற்றி உங்களுக்கே.

**சந்தோஷம்.**

# மகா ஜீவ யாத்திரை

ஜீவ யாத்திரை தொடங்குகிறது. இந்த உலகிற்கு ஆத்மா வெளிப்படுகிறது. பரிசுத்த, பரிபூரண நிலையில் வருகிறது. பிறகு அது பரிசுத்த பூரண நிலைக்கு வந்து எய்துகிறது, பிறகு அது பரிசுத்த நிலைக்கு வருகிறது, பிறகு சுத்த நிலைக்கு வருகிறது, பிறகு சுத்தமும், அசுத்தமும் இல்லா நிலைக்கு வருகிறது, ஜீவனாக மலருகிறது. ஜீவனாக வந்ததிலிருந்து அதன் யாத்திரை தொடங்குகிறது.

அதற்கு உருவம் வேண்டும் அல்லவா? உலகத்தில் வளர்ந்து, முளைத்து, பயன் தந்து வீழ்ந்து விடும் மரம், செடி, கொடிகள் உருவம் எடுக்கிறது. புல், பூண்டு செடியாக இருக்கிறது. செடியிலிருந்து கொடி உருவத்தில் வருகிறது. கொடியிலிருந்து மரங்கள் வடிவங்கள் எடுக்கின்றன. மகா மரங்கள் வடிவங்கள் ஏற்கின்றன.

சில மரங்கள், 5000 ஆண்டுகள் கூட மண்ணுலகில் இருப்பதுண்டு. ஒரு வாரம், ஒரு மாதம் இருக்கின்ற புல், பூண்டுகள் உண்டு.

அதன் நிலையிலிருந்து, அமீபா உருவம் எடுக்கிறது. புழு உருவம் தாங்குகிறது. இந்த நிலைகளிலே அவை உணவிலே இன்பம் கண்டு மகிழ்கின்றன. காற்றிலும், மழையிலும், வெயிலிலும் அவைகள் காய்கின்றன. சுகம் அடைகின்றன. இருந்த இடத்திலிருந்து ஆடுகின்றன. புயலில் சேதம் அடைகின்றன. மனிதனால் வெட்டப் படுகின்றன. மிருகங்களால் விபத்துகள் விளைகின்றன. அவைகளும் இன்ப-துன்பம் உணர்கின்றன.

அந்தத் தாவர சங்கமத்தில் இருக்கும் ஜீவன்கள் இறைவனை உணர்கின்றன. அதற்கும் இறைவனைத் தெரியும். அதற்கும் இறையானந்தம் உண்டு. அதற்கும் மொழிகள் உள்ளன. அவைகளும் ஒன்றுக்கொன்று பேசுகின்றன.

மரம், செடி, கொடிகள் - மனிதனிடம் பேசுகின்றன. ஞானிகளிடம் பேசுகின்றன. சித்தர்களிடம் பேசுகின்றன. யோகிகளிடம் பேசுகின்றன. நல்லவர்களிடம பேசுகின்றன.

அவைகளுக்கு மூலப்பதி - "ஆணிவேர்". ஆணிவேர் தான் அவைகளுக்கு உறும் இன்ப-துன்பங்களை அனுபவிக்கிறது.

ஆத்மாக்கள் ஜீவ நிலை அடைந்ததிலிருந்து, ஜீவ நிலையிலிருந்து விலகிக் கடவுள் நிலை பெறும் வரை அதை அந்த ஜீவனை ஒரு கூட்டிலிருந்து அழைத்து வந்து இன்னொரு கூட்டிற்குள் நிறுத்துவது அண்டவெளி சக்தியாகும்.

ஜீவன் தானாக ஒரு கூட்டிலிருந்து வெளிப்பட்டு இன்னொரு கூட்டிற்கு நுழையாது. நுழையுவம் .முடியாது. ஒரு தேகத்தை அண்டவெளி சக்தி மூலம் அழைத்து வந்து ஜீவனை வெட்டவெளியில் - ஜீவ வெளியில் வைக்கப்பட்ட பிறகு, அங்கிருந்து வெட்ட வெளி சக்தி - ஜீவனை இன்னொரு தேகத்திற்குக் கொண்டு வந்து நிறுத்தி, தேகத்திற்கும், பிராணனுக்கும் தொடர்பு தந்து இயக்க வைத்து வெளி வருகிறது.

அந்த ஜீவன்களில் இருக்கின்ற விதி தன் பணியை ஆற்றுகிறது. இதைப் பிறப்பு, இறப்பு என்று சொல்வதுண்டு. பிறப்பு, இறப்பு - ஜீவ தத்துவத்தில் மிகக் குறிப்பிடத் தக்க நிலையில் செயல் படுகிறது.

ஜீவ சித்தாந்தத்தில் பிறப்பை அறுக்க வேண்டும். மரணமில்லாப் பெரு வாழ்வு வாழ வேண்டும். மரணத்திலிருந்து தப்பிக்க வேண்டுமென்று ஞானிகள் பேசுகிறார்கள். அறிவியலில் உயர் நிலையில் உள்ள ஜீவ அறிஞர்கள் கூட மரணத்தை வெல்ல வேண்டும். சாகா நிலை வேண்டுமென்று ஏதோ செய்து இறுதியில் வெற்றி கரமான தோல்வி தழுவி மரணத்திற்குள் சென்று விடுகிறார்கள்.

மனிதர்கள் சிலர் இயற்கை எதை அளிக்கிறதோ அதை ஏற்கிறார்கள். அதற்கு மாறாகச் செயல் படுவதில்லை. இயற்கை விதித்த விதிக்கு மாறாகச் செயல்படும் மனிதர்களும் உண்டு. இயற்கை நியதியை, இயற்கையை ஏற்றுக் கொண்டு அப்படியே செயல் படுகிறவர்களும் உண்டு. இயற்கையிலிருந்து விலகிச் செயற்கை இன்பத்தை நாடிச் சென்று அதனால் அழிவுற்று, சிதைந்து போய் மீண்டும் இயற்கைக்குச் செல்ல அறிவு நிலையில் இருப்பவர்களும் உண்டு.

இந்த எதிர் மறையாளர்கள் மீண்டும் - மீண்டும் பிறந்து, மீண்டும் - மீண்டும இறந்து, இப்பணியைத் தொடர் பணியாக வட்டப் பணியில் மாட்டிக் கொள்வதுமுண்டு. மரண துன்பத்தில் ஒரு புழு அடையும் துன்பம் எல்லையற்றது. ஒரு புழுவை எடுத்து வெயிலில் போடுகிறான். அது படும் துன்பத்தை, துடி துடிப்பைக் கொடுமையான வேதனையைக் கண்டு கொள்ளும் காருண்ய அறிவு, மனித நிலையில் உள்ள மனிதனுக்கு இல்லை. அல்லது போதாது.

தண்ணீரிலிருந்து தரையில் தூக்கி எறிந்த மீன், 2 அடி, 3 அடி உயரத்திற்குத் துள்ளித் துள்ளி எழுகிறது. அது காற்று இல்லாமல், நீரில்லாமல் மரணத்தில் போராடுகிறது. அதற்கு அமைதி அளிப்பவர் யார்?

ஒரு பன்றியைப் பிடித்து அதன் கழுத்தைப் பல முறை அறுத்து - அறுத்துத் துன்புறுத்துகிறார்கள். அது வெளிப்படுத்தும் மரணக் குரலை யார் அறிவார்கள்?

ஒரு நல்ல பாம்பைப் பிடித்து உயிரோடு அதன் தோலை உரிக்கிறார்கள். அது வெளிப்படுத்தும் மரணக் குரலை யார் அறிவார்கள்? யார் அதற்கு ஆறுதல் கொடுப்பார்கள். அதற்கு ஆறுதல் கொடுப்பதற்கு இறைவன் யாரையும் கொடுக்கவில்லை.

உயிரோடு மனிதர்களை, உயிர்களைத் தீயிட்டு எரிக்கிறவர்களை அது ஒரு நொடியில் ஆயிரக் கணக்கான மரணத் துடி-துடிப்பை அறிபவர்கள் யார்?

மனிதன் தன் சுகத்திற்காக ஆடு, மாடுகளை இரக்கமின்றி வெட்டுகின்றான். அது நாடி, நரம்பு, சதைகள், குருதி, மனம் மற்ற எல்லா உறுப்புகளும் மரண துன்பத்தில் படாத பாடு படுகிறது. இதை யார் அறிவார்கள்? இறைவனுக்கு இது தெரியும். கடவுள் அறிந்தே இத்தகைய அமைப்பை ஏற்படுத்தியுள்ளார்.

குயவன் தான் படைக்கும் ஆயிரம் பானைகளையும் உடைப்பான். மீண்டும் செய்வான். நாம் தான் இதைச் செய்கின்றோம். இதை உடைக்கலாம் என்பான். ஆனால் இந்தப் பானை படும் துன்பத்திற்கு இந்தக் குயவன் என்ன ஆறுதல் சொல்லப் போகின்றான்.

அதே போன்று ஜீவனை மங்களகரமாக, நல்ல இயற்கைச் சூழ்நிலையில் ஊரே கூடி இருக்கும் திருநாளில் அழைத்துச் செல்வதும் உண்டு. இதுவும் அண்டவெளியின் ஏற்பாடாகும்.

வந்தார். வளர்ந்தார். இன்ப- துன்ப வாழ்க்கையை நிறைவு செய்து கொண்டார். வயது வந்தது. முதுமை வந்தது. முதுமைக்கு முதுமை வந்தது. கிடந்தார். அழகாகக் காற்று பிரிந்தது. மரணத்தில் துடி-துடிப்பு இல்லை.

தூங்குகையில் வாங்குகின்ற மூச்சு சுழி மாறிப் போவதுண்டு.

சில ஜீவன்கள் மூதாதையர் ஈட்டிய பொருள் இருந்தும், தன் வீட்டை விட்டுப் பக்கத்து வீட்டுத் திண்ணையில் தானே பாழ் அடைந்து அர்த்தமற்ற நிலையில் படுத்துக் கிடந்து காலத்தைப் போக்குவதுமுண்டு.

ஜீவ யாத்திரையில் அந்த ஜீவன்கள் சந்திக்கும் கோடானு கோடி இன்பங்கள், துன்பங்கள், அனுபவங்கள், காட்சிகள் ஒவ்வொன்றும் மாறுபட்டது. வித்தியாசமானது. சொல்லொணா நிலையில் உள்ளது.

மனிதக் கற்பனைக்கு வராதது. வளராதது. யார் அறியப் போறார் - இறைவன் பெருநிலையை.

மரணத்தில் எப்படித் துடிதுடிப்பானோ பேராடுவானோ அப்படியே பிறப்பிலும் உண்டு. அதைத் தான் வேடிக்கையாக ஞானிகள் பேசுகிறார்கள்.

"இறப்பில் - பிறப்பு உண்டு", "பிறப்பில் - இறப்பு உண்டு"

இறப்பு - பிறப்பு இந்த இரு நிலையைக் கடந்தவன் ஞானி. அவன் திரு நிலை பெறுவான்.

ஜீவன் தன் யாத்திரையை இந்த உலகில் தொடங்குகிறது. அது ஒரு தேகத்தைப் பெற்று இறுதி தேகத்தில் மனித உருவம் கொண்டு வந்து அந்த மனித உருவில் நின்று பல உள் மாற்றங்களைப் பெற்று, அந்த மாற்றத்திற்குப் பிறகு திருஉருவ மாற்றம் கண்டு தெய்வமாகிறது.

அந்த தெய்வம் வெட்டவெளியில் ஒன்றாகி விடுகிறது. ஜீவனின் பரிணாம வளர்ச்சி, அதன் நிறைவு இதுவேயாகும்.

மாணிக்க வாசகர் அருளிய திருவாசகத்தில் ஜீவன் பெறும் தேகங்களை வகைப்படுத்துகிறார்.

*1. புல்*
*2. பூண்டு*
*3. புழு*
*4. மரம்*
*5. பறவை*
*6. பாம்பு*
*7. கல்*
*8. மனிதர்*
*9. பேய்*
*10. கணங்கள்*
*11. ஆற்றல் மிகு அசுரர்கள்*
*12. முனிவர்கள்*
*13. தேவர்கள்*
*14. சாயுச்யம்*
*15. வெட்டவெளி*
*16. பேரானந்த நிலை(அ) பேரின்ப நிலை (அ) பரசிவானந்த நிலை*

மாணிக்க வாசகர் பேசுகிறார். இறைவனே! உன் பொன்னான திருவடிகளைக் கண்டு வீடுற்றேன் (பேரின்பம் அடைந்தேன்). இந்நிலை அடைவதற்கு, நான் உய்வதற்கு ஓங்காரமாய் நிற்கின்ற மெய்யே! விமலா! நுண்ணியனே, பொய் உலகத்திலிருந்து என்னை மீட்டு வந்து மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச் சுடரே, இன்பப் பெருமானே, அஞ்ஞானத்தை அகற்றிடும் நல்லறிவே, அனைத்து உலகையும் ஆக்குவாய், அழிப்பாய், அருள்வாய் நீ. ஆகவே, நீ அருள் தருவாயாக.

தேனே அமுதே, சிவபுரனே, பெருங்கருணைப் பேரருளே, ஆரா அமுதே, ஒளியானே, அன்பர்க்கு அன்பனே, ஆருயிராய் நின்றானே, என்னை ஆட்கொண்ட சோதியனே, ஆதியனே, எந்தை பெருமானே, புண்ணியனே, காண்பதற்கரிய பேரொளியே, நுண்ணுணர்வே, உண்ணாரமுதே, நள்ளிரவில் நட்டம் பயின்றாடும் நாதனே,

தில்லையுட் கூத்தனே - நான் உன்னைப் போற்றுகின்றேன். வணங்குகின்றேன். இவ்வாறு எங்கும் நிறைந்த மெய்ப் பொருளை பரசிவ சத்திய நிலையில் நின்று மெய் உருக, ஊனுருக, ஒளி விளங்க, உயிர் விளங்கப் போற்றும் அல்லது வணங்கும் அருள் சிவ குணம் உயர்ந்த மெய்ஞ் ஞானிக்கே கிடைக்கிறது.

சாதாரண மக்கள் இந்நிலைக்கு வர இயலாது. ஆக ஒவ்வொரு மனிதனும் வாழ்வாங்கு வாழ வேண்டுமென்றால் என்றும் ஜீவ யாத்திரை வெற்றி அடைய வேண்டுமென்றால் தவம் புரிதல் வேண்டும். தவமே இறையருள் பெறுவதற்குச் சிறந்த சாதனம்.

### சந்தோஷம்

# மகாத்மாவின் மகத்துவம்

இதுதான் நடந்தது. இதை நடத்தியது சித்தர் சுவாமிகள். சித்தர் சுவாமிகளின் தவப்புதல்வி சந்நியாசம் மேற்கொண்டு மாற்று மதத்தில் சாதனை செய்து கொண்டிருந்தார். அவள் சாத்வீகமானவர். கடவுளே கதியென்று சாதனையில் ஆழ்ந்திருந்தார். அவரின் பெயர் மணி.

1965-ஆம் ஆண்டு அவர் நோய்வாய்ப்பட்டிருந்தார். டைபாய்ட் உச்சக்கட்டத்தில் இருந்தது. இறங்கவேயில்லை. அவள் நோயின் வாய்க்குள் இருந்தாள். நோய் அவளை விழுங்கிவிடத் தயாராக இருந்தது. மருத்துவர்கள் இவள் மூன்று மணி நேரம்தான் உயிரோடு இருப்பாள் என்று சொல்லவே அங்கிருந்த நிர்வாகிகள் அவளை அப்புறப்படுத்தி ஒதுக்கி வைத்து விட்டார்கள்.

திரை போடப்பட்டது. அருள் தந்தையை அழைத்து இறக்கப் போகிறவர்களுக்குக் கொடுக்கின்ற மந்திர ஜெபத்தை ஜெபிக்க ஏற்பாடு செய்து விட்டர்கள். அவர்களைப் பொறுத்தவரை மணி மரணம் அடைந்து விட்டாள். அப்போது அந்தக் கணத்தில், சித்தர் சுவாமிகள் மணியின் முன்பு எதார்த்த உருவத்தில் அப்படியே தோன்றினார்.

“என்னம்மா படுத்துக் கொண்டு இருக்கிறாய்?” என்று கேட்டார் சுவாமிகள்.

மணி : காய்ச்சல் என்று சொல்லுகிறார்கள்.

சுவாமிகள் : என்ன செய்தது?

மணி : எனக்கு ரொம்ப டைபாய்ட் அதிகமாக இருக்கிறது. இங்கு கொண்டு வந்துபோட்டு விட்டார்கள்.

சுவாமிகள் : நல்லாப் போய்விடும். படுத்துக்கோ அம்மா.

சிரித்துக் கொண்டே மணியின் முழு உருவத்தை ஊடுருவிப் பார்த்தார். தன் அருட்சக்தியை அவள் உடலுக்குள் பாய்ச்சிவிட்டு, சிரித்துக் கொண்டே மறைந்து விட்டார். இது கனவு அல்ல. நினைவு. அடுத்த பத்து நிமிடத்தில் காய்ச்சல் இறங்கிவிட்டது. புதிய சக்தி அவள் உடலில் பாய்வதை அவள் உணர்ந்தாள்.

மருத்துவர்கள் இவளைச் சோதித்தார்கள். காய்ச்சல் முற்றிலும் இறங்கி விட்டது. புதிய தெம்புடன் நடமாடத் தொடங்கினாள். சுகமடைந்தாள். ஞானிகள் முன்பு மருத்துவர்கள் கணக்குப் பொய்த்துவிட்டது.

மற்றுமொரு நிகழ்ச்சி. 1994-ஆம் ஆண்டில் நடந்தது. திருச்சி அமெரிக்கன் மருத்துவமனையில் ஒரு மேஜர் அறுவை சிகிச்சை நடந்தது. தையல் போட்ட இடத்தில் புண் ஆறவில்லை. தையல் பிரிந்து விட்டது. அப்போது மணி படாதபாடு பட்டாள். துன்பத்தின் விளிம்புக்குப் போய்க் கொண்டிருந்தாள்.

அப்போது மீண்டும் சித்தர் சுவாமிகள் அவள் முன் தோன்றினார். கைகாட்டி ஆசி வழங்கினார். சிரித்துக் கொண்டே சென்று விட்டார். அதன் பிறகு டாக்டர் உடனே வரவழைக்கப்பட்டார். தையல் மீண்டும் போடப்பட்டது. மனிதனால் நினைக்கமுடியாத அளவிற்குத் தானாக குணமாகிவிட்டது. ஞானிகள் தரிசனம்துன்ப விமோசனம். அவள் குணமானாள்.

மீண்டும் ஒரு நிகழ்வு. 15, பிப்ரவரி 1999 ஒரு விபத்து நடந்தது. அதுவும் பரங்கிப்பேட்டை அருகே. மூன்று பேர் அமரும் சீட். இவர் நடுவில் அமர்ந்திருந்தாள். இவளது இடப்பக்கம், வலப்பக்கம் இரண்டு பேர் அமர்ந்திருந்தார்கள். பஸ் சென்று கொண்டிருந்தபோது, திடீரென்று விபத்து நடந்தது. பத்து பேர் இறந்து விட்டார்கள்.

விபத்து நடந்து கொண்டிருக்கும் போது சற்குரு இவளின் தலையைத் தொட்டார். அவள் தப்பித்தாள்.

அடுத்தது ஒரு அதிசய நிகழ்ச்சி. இந்தப் பெரு ஆபத்தின் விளைவாகத் தலைவலி தோன்றியது. மண்டை வெடித்து விடும் அளவிற்குப் பொறுக்க முடியாத வலி. இறைவன் திருநாமத்தைச் சொல்லிக் கொண்டேயிருந்தார். ஆலயத்தில் இருப்பது பழக்கம்.

தலையைத் தூக்க முடியாமல் இருந்தது. அப்போது சித்தர் சுவாமிகள் வெளிப்பட்டார். அவள் கையைப் பிடித்துத் தூக்கினார். பிறகு அவளுக்கு நல்லாசி வழங்கிவிட்டுச் சென்றார். தலைவலி போய்விட்டது.

இவ்வாறு சித்தர் சுவாமிகள் இவளுக்கு மட்டுமல்ல. தம்முடைய சீடர்களுக்கும் அன்பர்களுக்கும் எங்கெங்கிருந்து துன்புறுகிறார்களோ, அங்கெல்லாம் சென்று அவர் துன்பத்தை களைந்து விடுவது அவருடைய அருட் கருணையாகும்.

சித்தர் சுவாமிகள் இந்த உலகத்திலிருந்து புறப்பட்டு வெட்டவெளியோடு ஐக்கியமான பிறகு மேற்சொன்ன நிகழ்வு நிகழ்த்தியவைகளாகும்.

ஆகவே, சித்தர்கள், யோகிகள், ஆத்ம ஞானிகள், சாயுச்யர்கள், பூத உடலை விட்டுப் பல ஆயிரம் ஆண்டுகள் பூவுலகில் மாந்தர்களுக்கும், மற்ற ஜீவன்களுக்கும் உறும் இடையூறுகளைப் பூவுலகில் தாங்கள் இருந்த உருவில் வந்து அவர்களின் துன்பங்களை நீக்கிவிட்டுச் சென்று விடுவது அவர்களின் ஜீவகாருண்யமாகும்.

தங்கள் சிவ கருணையினால் ஜீவர்களுக்கு உறும் இடையூறுகளை நீக்குகின்ற பணி - எல்லா சித்தர்களாலும் முடியும்.

ஜீவ யாத்திரை செல்பவருக்கு யாத்திரை வெற்றி பெறச் செய்வார்கள்.

சீரடி சாய் பாபா மற்றும் பாரதத்திலுள்ள என்றோ மறைந்த ஆயிரக்கணக்கான சித் புருஷர்கள் பலர் இன்றும் ஜீவர்களுக்கு வரும் துன்பங்களைக் களைந்து கொண்டிருக்கிறார்கள்.

இவர்களின் ஜீவ யாத்திரை முடிவு உள்ள போதும் - தான் நினைத்த மாத்திரத்தில் உருவங் கொண்டு தங்கள் ஜீவ கருணை வெளிப்பாட்டால் ஜீவர்களின் சோகங்களை நீக்கி மீண்டும் அந்த உருவத்திலிருந்து விலகிப் பரத்தில் ஆனந்தமாய் இருப்பர்.

எல்லா சித்தருடைய வரலாற்றையும் புரட்டிப் பார்த்தால் இவ்வுண்மையை அறிவால் கண்டு கொள்ளலாம். தவத்தால் கண்டு கொள்ளலாம். வெட்டவெளி மூலம் தெரிந்து கொள்ளலாம். உன் ஆத்மாவின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

சந்தோஷம்.

# பொது

ஒரு சிறு குழந்தை. அந்தக் குழந்தை 80 ஆண்டுகள் இவ்வுலகில் இருக்கப் போகிறது. அந்த 80 ஆண்டுகள் அது ஆற்ற இருக்கின்ற வினை, அது அனுபவிக்கப் போகும் இலட்சக் கணக்கான சந்தோஷம், அதே போன்று அது படப் போகும் இலட்சக் கணக்கான துன்பங்கள் எல்லாம் அதனுள்ளே விதி என்ற தலைப்பில் கற்பூரத்தில் நெருப்புப் போன்று வைக்கப் பட்டு உள்ளது. ஆகவே, இன்பமும் - துன்பமும் ஒரு மனிதன் உள்ளே பக்கத்துப் பக்கத்திலே வைக்கப்பட்டுள்ளன. அது அந்தராத்மா மேற்பார்வையில் உள்ளது.

அந்தந்தக் காலத்தில், அந்தந்த வினைகள் நடைபெறும். அந்தந்தக் காலத்தில் சுகங்களும், துக்கங்களும் ஜீவன் அனுபவிக்கும். ஜீவன் காலம் - அவைகள் மொத்த வினையை வைத்தே கணக்கிட முடியும். வினைகள் எல்லாம் முடிந்த பிறகு வினையற்ற நிலைக்கு வந்த பிறகு, இந்த உலகத்தில் ஜீவனுக்கு வேலையில்லை. வெட்ட வெளிக்குச் சென்று விடும். இந்தப் பிறவியின் கர்மா முடிந்த பிறகு, கூட்டைப் போட்டு விட்டு ஜீவன் ஜீவ வெளிக்குச் சென்று விடும். அடுத்து ஒரு கூட்டை நோக்கிப் பிறகு புறப்பட்டு விடும்.

எல்லாம் வெட்டவெளியின் சித்தத்தின் படி நடை பெறுகிறது. அதுவே தர்மத்தைப் படைத்து உள்ளது. அதர்மத்தைப் படைத்து உள்ளது. அதுவே எல்லா நியாயத்தையும் படைத்துள்ளது. அதன் மேல் பழி இல்லாமல் தர்ம நெறிப்படி அது நடக்கிறது.

ஜீவ யாத்திரை தொடங்கி நிறைவேறும் வரை உள்ள வழி முறைகள் ஒவ்வொரு ஜீவனுக்கும் ஒவ்வொரு முறையில் கொடுக்கப் படுகிறது. ஒரு அணுவாவது ஒன்றுக் கொன்று வேறுபட்டிருக்கும். ஜீவன் ஜீவ விழிப்பிலிருந்து சிவ விழிப்புப் பெற்ற பிறகு, கடவுளிடம் ஐக்கியம் அடையும் திரு நேரத்திற்கு 2-3 ஆண்டுகளுக்கு முன்பே அந்த ஜீவன் பிரியும் நேரம், அதன் உடல், அதன் தகனம், எல்லாவற்றையும் முன் கூட்டியே ஏற்பாடு செய்கிறது. சுப நிலையில், சுபயோகத்தில் ஏற்பாடு செய்கிறது.

அப்போது மழைக் காலமாக இருந்தாலும் மழை நின்று விடும். கோடைக் காலமாக இருந்தாலும் கதிரவன் வெப்பம் குறைந்து - பிறகு

இல்லாததாகி விடும். இதன் இறுதி நேரத்தில் இறுதித் தேருக்கான மரங்கள் 3-4 ஆண்டுகளுக்கு முன்னே முளைத்து விடுகின்றன. வளர்ந்து விடுகின்றன. அந்தத் திரு நேரத்தில் அவை வெட்டப் படுகின்றன. தேர் செய்யப் படுகின்றன. அந்தத் துண்கள், திரவியங்கள், அக்னிகள், குச்சிகள், மட்டைகள் மற்றவைகள் அந்த ஜீவனுக்கான கடைசிப் பார்வை, கடைசி மூச்சு, கடைசிச் சொல், கடைசிச் சுகம், கடைசிச் சோகம், கடைசிக் கருத்து, கடைசி இறையுணர்வு எல்லாம் முறையாக அமைக்கப்பட்டுள்ளன.

இரண்டு நாட்கள் முன்பே பூக்கள் மலர்ந்து விடுகின்றன. சுப நேரம் வருகிறது. சுபயோகம் வருகிறது. ஜீவன் இறை ஐக்கியம் அடைகிறது. இறைவன் அருள் சக்தி சிவ விழிப்புக்குக் கொண்டு செல்ல அந்த ஜீவனை அன்பாக அழைத்துச் செல்கிறது.

அருவத்திற்குள்ளே உருவம், உருவத்திற்குள்ளே அருவம். ஒரு நோக்கில் வெட்ட வெளியில் நின்று பார்த்தால், அருவம், உருவம் ஒன்றே. ஒன்றேயாகும். உருவம் - சூக்கும சக்தி கொண்டுள்ளது. புறநிலைப் பொருள் கொண்டு தன் வடிவத்தை அது காட்டுகிறது. கோபுரத்தை வணங்குகின்றோம். கை கூட்பித் தொழுகின்றோம். ஆனால் கோபுரம் கட்டுவதற்காகப் பயன்படுத்தப் பட்ட 1000 மூட்டை சிமெண்ட், 400 இலட்சம் கற்கள், இரும்புகள் செம்புகள் ஆகியவற்றை ஒரே இடத்தில் அடுக்கி இருந்தால் அதை வணங்குவோமா? வணங்க முடியுமா? அவைகளைக் கொண்டு கோபுர உருவம் கட்டப்படுகிறது. உள்ளே இருக்கின்ற அருவம் உரு வடிவில் இருக்கிறது. அருவத்தைக் காட்டுகிறது.

ஒரு வெள்ளை எருக்கன் வேரை நாம் வணங்க மாட்டோம். வெள்ளை எருக்கனில் விநாயகர் செய்தால் அதை வணங்குகின்றோம். உருவம் அருவத்திலிருந்து வந்தது தான். இந்த மெய்ஞ்ஞான இரகசிய விழிப்பு தத்துவம், சிவ விழிப்பில் உள்ள சிவத்திற்குத் தெரியும். அதனால் தான் பெரியவர்கள் "உருவம் சிதையேல்" என்று சொல்கிறார்கள். உருவத்தை மதிக்க வேண்டும். அந்த உருவம் வெட்ட வெளியில் சமைக்கப்பட்டது. இங்கே அனுப்பியுள்ளது. வெட்ட வெளியில் ஒரு உருவம் உள்ளது. அது பரசிவ உருவமாகும்.

ஒரு மனிதனுக்குக் கொடுக்கப்படும் துன்பங்களை அனுபவிக்க அதற்கான சக்தியும் கொடுக்கப் பட்டுள்ளது. சில ஜீவன்களுக்கு அந்தச் சக்தி இல்லாததால் அவை தற்கொலை செய்து கொள்கின்றன. அது போன்றே ஒரு ஜீவன் இன்பத்தை நுகர்வதற்கும் பேரானந்தத்தை அனுபவிப்பதற்கும் தேகத்தில், மனதில் சக்தி தேவை. அந்தச் சக்தியும் ஜீவனுக்குக் கொடுக்கப் பட்டுள்ளது.

எவ்வளவோ, ஆசையை மனதில் கற்பனையில் வளர்த்துக் கொள்ளலாம். அத்தனையும் அனுபவிக்கச் சக்தி வேண்டும். சக்தியால் சுவை வெளிப்படும். சுவை சுகமாக அனுபவிக்கப் படுகிறது. கடவுள் சுகத்தைக் காட்டுவதும் சக்திதான். ஆத்ம சுகத்தைக் காட்டுவதும் சக்திதான்.

இந்த உடம்பில் 96 தத்துவங்கள் உள்ளன. இந்த உடம்பு முழுதும் உள்ள அத்தனைப் பகுதிகளிலும் முழுமையான இன்பம் நிறைந்துள்ளது. 31/2 கோடி மயிர் துவாரங்களில் இன்பம் உள்ளது. உடம்பில் உள்ள அத்தனை செல்களில் சுகம் உண்டு. மனம் முழுதும் சுகம். பிராணன் முழுதும் சுகம். சிற்றறிவு சுகம். பேரறிவு சுகம். சிதாகாச அறிவு சுகம். நாவில் சுகம். பேசுகின்ற நாதத்தில் சுகம். கையில் சுகம். கை அசைவில் சுகம். காலில் சுகம். கால் அசைவில் சுகம். தேகமெல்லாம் சுகம்.

ஸ்தூல தேக சுகம். சூக்கும தேக சுகம். காரண தேக சுகம். காரண சுகம். காரிய சுகம். மகா காரணத்திலே உள்ளே இருக்கின்ற ஜீவனில் சுகம். ஆத்மாவில் சுகம். ஆத்மானந்தத்தில் சுகம். பரமாத்மாவில் சுகம். பரமாத்மானந்த சுகம். எல்லாமே சுகம். எங்கும் சுகம்.

எல்லா சுகமும் ஏகமாகி, ஏக ஆனந்த சுகம். ஆயிரம் கடலுக்கு ஒப்பான சுகம் உள்ளது. அந்தச் சுகத்தை இது வரை யார் முழுதாக அனுபவித்துள்ளார்கள். அனுபவிக்கப் போகிறார்கள். பர ஞானிக்கு முடியும். சற்குருவுக்கு முடியும். கடவுளால் முடியும். வெட்ட வெளியால் முடியும்.

ஆனால் விதி என்கிற கர்மா மனிதனை, மற்ற ஜீவன்களை வழி நடத்திச் செல்கிறது. இகத்தில் இன்ப துன்பமுண்டு. மேலே உள்ளது போன்று ஒவ்வொரு செல்லிலும், தேகத்தில் உள்ள ஒவ்வொரு அணுப் பகுதியிலும் துன்பமுள்ளது. எறும்பு கடித்தாலும் சோகம். நோயினால் சோகம். இரணம், சீழ் வந்தால் சோகம். வருத்தம். நோயினால் உன்

உறுப்புகள் கொடுமையாகப் பாதிக்கப் பட்டால் கண்ணீர். இவ்வாறு ஜீவன்கள், உடம்பு, பிராணன், மனம் ஆகிய எல்லாமே முழுத் துன்பம் நிறைந்தவை. இவைகளுக்குள் உள்ள எல்லாத் துன்பங்களும் விஸ்வ ரூபமெடுத்து வெளி வந்தால், ஜீவன்களுக்குத் துன்பம் கொடுத்தால் அதனால் தாங்கிக் கொள்ள முடியுமா? முடியாது.

இரண்டு, மூன்று துன்பங்கள் அனுபவிக்கும் போதே மனிதன் அலறுகின்றான். விதி முடிவு தேவதைக்கு அழைப்பு விடுகின்றான். மனிதனைப் போன்றே சில மிருகங்கள் தானே தற்கொலை செய்து கொள்கின்றன. மீண்டும் அடுத்த பிறவி எடுத்து இரண்டு பங்குத் துன்பத்தை அனுபவித்தே தீர வேண்டும்.

யாரொருவர் இயற்கையைப் பார்த்துக் கொண்டே இருக்கிறார்களோ அவர்களுக்கு இன்ப-துன்பமில்லை. யாரொருவர் தன் ஆத்மாவை அந்தர் முகமாகப் பார்த்துக் கொண்டி ருக்கிறார்களோ அவர்களுக்கு இன்ப-துன்ப உபாதைகள் இல்லை. யாரொருவர் சற்குரு முன்பு அமர்ந்து சரணாகதி நிலையில் உள்ளார்களோ அவர்களுக்கு விதியில்லை.

இந்த இகத்தில் இன்ப-துன்பம் வேண்டா என்று யார் உள்ளார்களோ அவர்களுக்குக் கண்ணீரும் கிடையாது, கவலையுமில்லை, சிரிப்புமில்லை, கும்மாளமுமில்லை. அவர் பேரானந்தத்தில் அமைதியாக எங்கும் அமர்ந்திருப்பார். எல்லாப் பிரபஞ்சங்களிலும் இருப்பது ஒன்று. அந்த ஒன்று இரண்டற்ற வினையை ஆற்றுகிறது. அந்த ஒன்று அமைதியாய் நிலைத்த இயக்கமாய் மலை போல் ஆனந்தமாய் உள்ளது. அதிலிருந்து அது தன்னை இன்னொரு வடிவமாக்கிக் கொள்கிறது.

இயங்கும் சக்தி, மகா சக்தி, ஆனந்த வள்ளி, அற்புத சக்தி, மேரு சக்தி, ஸ்ரீ சக்தி - வெளிப்புறத்தில் ஓங்கார ரூபமாய், ஒய்யாரமாய் இந்தப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து, அண்ட கோளங்களில் வெளிப்படுத்தி, பஞ்ச பூதங்களைக் கொண்டு வந்து உருவங்களைப் படைத்து, ஜீவன்களை அதில் புகுத்தி கோடானு கோடி ஆண்டுகளாகச் சோகமும், சுபமும் நிறைந்த நாடகங்களைத் தன் அரங்கில், தன் முன்னிலையில் அது நடத்துகிறது. அவரவர் செய்த கர்மா விதியாக அந்த ஜீவ யாத்திரையில் நடந்து கொண்டிருக்கிறது.

## சந்தோஷம்

# வா-வா-வா

ஒன்று உள்ளது. அது ஒன்று தான். அந்த ஒன்றுக்குள் தான் நாம் எல்லோரும் உள்ளோம். அந்த ஒன்று இன்னொன்றை நமக்காக வெளிப்படுத்துகிறது. ஒன்றிலிருந்து வந்து கொண்டிருக்கும் அந்த ஒன்று, நமக்கு எல்லாச் சுகத்தையும், வல்லமையையும், எல்லாக் கருத்துகளையும், அமோகமாகத் தந்து நம்முடைய முயற்சி இல்லாமலே அது நமக்குள் புகுந்து அழகாகப் பேரறிவோடு, திருவுளச் சக்தியினால் திருவருளாகப் பணியாற்றுகிறது.

அதற்கு "அருள் வல்லபம்" என்று பெயர். ஒடுங்கி நிலை பெற்ற உத்தமர் உள்ளம் - ஜீவனுக்குக் கிடைத்தால் அந்த ஒன்றிலிருந்து வருகின்ற திரு வல்லபம் அந்த ஜீவனுக்குச் சிறப்பைத் தருகிறது.

ஜீவ விழிப்புத் தருவதும் அதுதான். ஜீவ சுகத்தைத் தருவதும் அதுதான். ஜீவப் பிரகாசத்தைத் தருவதும் அது தான். சிவ விழிப்புத் தருவதும் அதுதான்.

அந்த அருள் வல்லபத்தை அயராது சிந்தித்தல், மற்றொரு வினையின்றிச் சிந்தித்தல், மற்றொரு நினைவின்றிச் சிந்தித்தல், மயக்கமின்றிச் சிந்தித்தல் வேண்டும்.

அதன் பிறகு அறிவைக் கடந்து, அருள் நிலை வந்து சேரும். அந்த அருள் வல்லபத்தால் எதையும் நோக்கி வினையாற்றும் வல்லபம் பெற்று(ற) வல்லவனுக்குள் பிரம்மாண்ட அந்தர் முக தியானம் கைவல்யமாகும்.

ஆகவே, அந்த ஒன்று எங்கு உள்ளதோ அந்த ஒன்றில் உறைந்து விடு.

அந்த ஒன்றில் நீ உறைந்த பிறகு, அது தானாகவே உன் முயற்சிகளைத் தூக்கி எறிந்து விட்டு, உன் கால்கள், கைகள் அறிவு மற்ற எல்லாவற்றையும் அழைத்து ஏறுமுகத்திற்கு உன்னை அழைத்துச் செல்லும்.

அருளால் எதையும் பார். அருளால் எதையும் பார். தானாகவே எல்லாம் நடக்கும். உன்னை வழி நடத்தும். தானாகவே அது உன்னை

வழி நடத்திச் செல்லும் போது உனக்கு எல்லாம் வெற்றியே. எல்லாம் அமுத வெற்றிகள், எல்லாம் ஆனந்த வெற்றிகள், எல்லாம் சின்மயானந்த வெற்றிகள், எல்லாம் திருவருள் சிவ வெற்றிகள்.

யாராகவோ இருந்த நீ - யார் யாராகவோ இருந்த நீ - எங்கெல்லாமோ அடிபட்டு, அவமானப்பட்டு, தற்கொலைக்குத் தயாராக இருந்த நீ, யார் யாரையோ அழ வைத்த நீ - இன்று யார் நீ?

இவ்வளவு ஆனந்தத்தோடு இந்தக் கேள்வியை நான் கேட்கின்றேன். இந்தக் கேள்வி உன்னிடம் கேட்கும் போது உனக்குச் சுகம் வருகிறதா? அல்லது இந்தக் கேள்வியைக் கேட்கக் கேட்க உனக்குச் சுகத்தின் மேல் சுகம் வந்து சேர்கிறதா?

மகத்தான சுகத்தின், மகா சக்கரவர்த்தி நீயல்லவா. ஆகவே, கடவுளை நாடு! திருவருள் கிடைக்கும். விண் சுகம் பெறுவாய். அருளால் எதையும் பார். எல்லாம் உனக்கு வெட்ட வெளிச்சமாகும். இயற்கையின் அந்தர் இரகசியங்கள் எல்லாம் உனக்கு வெட்ட வெளிச்சமாகும். உன்னைப் பற்றித் தெரியாத நீயே உனக்கு வெட்ட வெளிச்சமாவாய்.

வா. வா. வா. அருள் உலகத்திற்கு வா. அன்பு உலகிற்கு வா. கடவுள் உலகிற்கு வா. பரமானந்த சுபவெளி உலகிற்கு வா. யாத்திரை இன்பமாய் நடைபெறும். எது உனக்கு வேண்டுமோ அதை நீ அடைவாய்!

**வா. வா. வா.**

**சந்தோஷம்**

*பெண்ணார்தம் ஆசை தன்னை விட்டு வந்தால்*
*பேரின்ப முத்தி வழி பேசுவேனே -உரோமரிஷி ஞானம்*

# ஜனனம், மரணம்

இந்த இரண்டும்தான் இந்த உலகிற்கு அற்புதமான பெரும்பணியாற்றுகின்றன. இந்த இரண்டும் ஒன்றோடு ஒன்று இணைந்ததுதான். ஒன்றில்லாமல் ஒன்றில்லை. இது மனிதனால் படைக்கப்பட்டது அன்று. இது வரை மனிதன் இதனிடம் நெருங்கவில்லை. இனியும் நெருங்க முடியாது. ஏனென்றால், மனிதனுக்கு இதையறியும் ஆற்றல் கொடுக்கவில்லை. மனிதனுக்கு மட்டுமல்ல வேறு எந்த உயிருக்கும் இதையறியுமாற்றல் கொடுக்கப்படவில்லை. இதைத் தன் ஆளுகைக்குக் கொண்டுவர அன்றிலிருந்து இன்றுவரை எத்தனையோ கோடி-கோடி மக்கள் முயற்சிக்கிறார்கள். உழைக்கிறார்கள். கடைசியில் இவர்கள் மரணத்திற்குப் பலியாகி விடுகிறார்கள். தோல்வி இவர்களை முத்தமிடுகிறது.

அவ்வாறு என்றால் ஞானிகள் பேசும் மரணமில்லாப் பெருவாழ்வு என்பது பொய்யா? அவர்கள் சத்திய சீலர்களாயிற்றே? சத்யத்தால் வளர்ந்த தெய்வமாயிற்றே. உண்மைதான். ஞானிகள், கருவிலே திருவுற்று, கர்மாவில்- உயர் மெய்ஞ்ஞான நிலைக்குக் கொண்டு சென்று, அந்த உயர் மெய்ஞ்ஞானப் படியில் ஏறிச் சென்று சிதாகாச வெளியிலமர்ந்து இருக்கின்ற காரணத்தால் இவர்கள் மரணம் கடந்து விடுகிறார்கள். அல்லது இவர் மரணம் இவர்களுக்கு வழிவிடுகிறது.

மரணம் உற்ற நண்பனாக ஞானிகளுக்கு ஞானியாய், சித்தர்களுக்குச் சித்தராய், யோகிகளுக்கு யோகியாய், அன்பிற்கு அன்பாய், அருளுக்கு அருளாயிருந்து செயல்படுகிறது. ஒரு சிலர் சொல்லியபடி அந்த மரணம் கேட்டு நடந்துள்ளது. ஒரு சில ஆத்ம ஞானி பேச்சை, கட்டளையை மரணம் நிறைவேற்றுகிறது. அவர்களுக்கு மரணம் உற்ற நண்பன். அதே போன்று, ஆத்ம ஞானிகள் மரணத்திற்கு நிறைய உதவி செய்து இருக்கிறார்கள். பொதுவாக, அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் விதிகளை மீறுவதில்லை.

ஒரு வீட்டில் ஒரு ஆத்ம ஞானி இருக்கின்றான். அந்த ஆத்ம ஞானிக்கு நெருங்கியவர்கள், அணுக்கத் தொண்டர்கள், ஜீவன் இன்னும் 2 மணி நேரத்தில் பிரியப் போகிறது என்ற நிலை வரும் போது மரணம்

அந்த வீட்டில் உள்ள ஆத்ம ஞானிக்குச் சொல்லி விடும். உடனே ஆத்ம ஞானி மெதுவாக அந்த வீட்டை விட்டுச் சென்று விடுவார்.

மரணம் வருவதை ஒருக்கால் அந்த வீட்டில் உள்ளவர்கள் அவர் நோய் மூலம் தெரிந்து கொண்டால், அவர்கள் அந்த ஆத்ம ஞானியிடம் மரணத்தில் இருந்து காப்பாற்றும்படி கெஞ்சுவார்கள், அழுவார்கள். ஆனால் அந்த ஆத்ம ஞானி மரணத்திற்குச் சாதகமாகச் செயல்படுவாரே ஒழிய அவர்கள் பேச்சைச் சிறிதும் கேட்க மாட்டார். மரணம் வராது தடுக்கும் ஆற்றல் இவர்களுக்கு இருந்தாலும் அதைச் சிறிதும் பயன் படுத்த மாட்டார்.

அப்பர், இராமலிங்க சுவாமிகள், திருமூலர், திருஞானசம்பந்தர் இவர்கள் எல்லாம் பல ஆண்டுகளுக்கு முன்பு இறந்த உடலை மீட்டு வித்து ஜீவ வெளியில் உள்ள அதே ஜீவனைக் கொண்டு வந்து அந்த உடலுக்குள் புகச் செய்து பழைய மனித நிலையில் கொண்டு வந்து விட்டிருக்கிறார்கள்.

இது அவர்களின் அளவிடற்கரிய கடவுள் தயவைக் காட்டுகிறது. கடவுள் - ஆத்ம ஞானிக்கு அல்லது சற்குருவுக்குத் தயவாக உள்ளார். அந்தக் கடவுள் தயவில் கடவுளின் வல்லமை நிறைந்துள்ளது. அவர்கள் கடவுள் வல்லபம் பெற்றிருக்கின்ற காரணத்தால் மனிதன், மாமனிதன், தெய்வங்கள் ஆற்ற முடியாத வல்லபம் இவர்களிடம் இருப்பதால் இந்தத் திருவினையைச் செய்கிறார்கள்.

சித்தர்கள் வீழ்கின்ற தேகத்தை அல்லது அதனுடைய வீழ வைக்கும் சக்தியைத் தேகத்திலிருந்து விலக்கி, கல்ப தேகமாக மாற்றும் உபாயத்தைக் கொண்டுள்ளார்கள். அதற்காக அவர்கள் சாதனை செய்வதில்லை. அந்த சித்தானாகவே வந்து சேர்கிறது.

| | |
|---|---|
| பிறப்பு - இன்பம் | இறப்பு - துன்பம் |
| பிறப்பு - வரவு | இறப்பு - செலவு |
| பிறப்பு - இன்பம் | இறப்பு - இன்பம் |
| பிறப்பு - துன்பம் | இறப்பு - துன்பம் |
| பிறப்பு - சமம் | இறப்பு - சமம் |
| பிறப்பு - மரணம் | இறப்பு - ஜனனம் |

| | |
|---|---|
| பிறப்பு - ஜனனம் | இறப்பு - மரணம் |
| பிறப்பு - வாழ்க்கை | இறப்பு - நிர்மூலம் |
| பிறப்பு - நிர்மூலம் | இறப்பு -வாழ்க்கை |
| பிறப்பு - ஆரம்பம் | இறப்பு - முடிவு |
| பிறப்பு - முடிவு | இறப்பு - தொடக்கம் |
| பிறப்பு - பூஜ்யம் | இறப்பு - பூஜ்யம் |
| பிறப்பு - வெளியேறல் | இறப்பு - உள்ளேவருதல் |
| பிறப்பு - இன்பமற்ற - துன்பமற்ற நிலை | இறப்பு - இரண்டும் அற்ற நிலை |
| பிறப்பு - காரணம் காரியமற்ற நிலை | இறப்பு - காரணம், காரியம் சம்ஹாரம் |
| பிறப்பு - காரண காரியம் சம்ஹாரம் | இறப்பு - சொர்க்கம் எய்தல் |

இதை அறிந்து கொள்வது சிரமம்.
பொறுத்திருங்கள்
உணருங்கள்

**சந்தோஷம்**

அதற்குப் பிறகுதான் ஜீவன்கள் தன் யாத்திரையில் திருப்பு முனை பெறுகிறது. அதற்குப்பிறகு நல்ல காரியங்கள் செய்கிறது. அகங்காரம் ஒடுங்குகிறது. மாயை போதும் உனக்குக் கொடுத்த சோதனை என்று பெருங் கருணை கொண்டு அந்த ஜீவனிடமிருந்து விலகி விடுகிறது.

# மரணத்திற்கு முன் மனிதனின் 16 மரணங்கள்

இயற்கை படைத்த நியாயமான ஒரு மனிதனுக்கு, வயது முதிர்ந்த மனிதனுக்கு அவன் ஜீவன் முழுமையாகப் பிரிவதற்கு முன்பு அவனுள்ளே 16 மரணங்கள் நடக்கின்றன.

அவையாவன :

1. தூக்கம் செத்துப் போதல்.
2. மூளை உயிரணுக்கள் சாதல்.
3. சூட்சும நாடியின் அதிநுட்ப உயிரணு வெளியேறல்.
4. அவனுள்ளேயுள்ள மூலாதாரத்தில் இருக்கும் அண்டவெளி சக்தி அவனிலிருந்து விடைபெறல்.
5. நாக்கு தடுமாறுதல், அடிக்கடி நாக்கைக் கடித்துக் கொள்ளுதல்.
6. இயற்கை படைத்த நியதிகளிலிருந்து அங்கப் பகுதிகள் விலகித் தாறுமாறாகச் செயல்படல். உதாரணமாக கையில் சாப்பாடு எடுத்து வாய்க்குக் கொண்டு போகும் போது, அந்த உணவு வாய்க்குப் போய்ச் சேராது. முகவாய்க் கட்டைக் கருகிலோ, உதட்டிற் கருகிலோ போகும் போது கை தட்டி உணவு அங்கேயே கொட்டி விடும். சமயத்தில் நம்முடைய கைகளே நம் கண்ணைக் குத்தி விடும்.
7. மரணத்தின் முந்தையபடி மரண விக்கல் வரல். அது இதயத்தின் கதவைத் திறத்தல் என்று பொருள்.
8. பஞ்ச பூத தத்துவத்தில் நீர் ஒன்று. சுத்த நீர் அவனுக்கு மரணத்தைக் கொடுப்பதுண்டு. திரவமான அது திடப் பொருளாகிக் கட்டியாகி அவன் உயிர் ஸ்தானமாகிய தொண்டையில் நின்று கொள்வதுண்டு. கபம் கட்டுதல்.
9. அதற்குப் பிறகு உலகியல் உணர்வுகள் குளறி விடுதல். சுவைமாற்றம், மனோமய இறப்பு, பஞ்ச சோகங்களில் இது ஒன்று. வந்தவர்கள் யார் என்று தெரியாமல் உறவு தடுமாற்றம் ஏற்படும்.

10. தன்னுணர்வு மாற்றமுமுண்டு. அதாவது சிறுநீர், மலம் வெளிப்படும் போது அதனை உணராது உடம்பால் அதைத் தொட்டுக் கொண்டு இருத்தல், அந்த சிந்தனையே இல்லாது இருத்தல்.

11. சொப்பன ஸ்தானம் விகல்பமாதல், பேதலித்தல். நேற்று கனவில் எருமை மாட்டில் எமன் வந்தான். அவர்கள் வந்தார்கள், இவர்கள் வந்தார்கள் என்று கனவு நிலை பேதலித்துப் பேசுதல்.

12. சாக்கிர நிலையில், சாக்கிர ஸ்தானத்தில் அதோ என்னென்னவோ தெரிகிறது. தென்னை மட்டை வீழ்ந்து கிடக்கிறது என்று என்னென்னமோ சொல்வார்கள். சாக்கிர ஸ்தானமும் போய் விடுகிறது.

13. சுழுத்திலும் மரண மாற்றம் வெளிப்படும். மரணத்தின் அறிகுறி வெளிப்படும்.

14. துரியம் கலைந்து விடும். அதனால் ஏதேதோ பேசிக் கொண்டிருப்பார்கள். கடவுள் சிந்தனை இராது. துரியாதீதமும் ஒடுங்கி அதனுடைய சக்தியும் வெளியேறி விடும்.

15. எல்லாவற்றையும் வெளியேற்றி விட்டு, சப்த நாடிகளை ஒடுங்கச் செய்து இடகலை, பிங்கலை ஒரு நாடியாக்கி, ஏக நாடியாக்கி ஒரு நொடியில் செல்வதும் உண்டு. மெல்ல, மெல்ல ஒரு மணி நேரத்தில் செல்வதும் உண்டு. மூன்றே முக்கால் நாழியில் ஜீவன் செல்வதும் உண்டு.

16. முழுமையாக எல்லாம் வெளியேறிய பிறகு ஒரு சில பேருக்கு வெப்பம் ஒரு சில மணி நேரம் தேகத்தில் இருப்பதுண்டு. அதுவும் கலைந்து விடும். சிலருக்கு உயிர் பிரிவதற்கு முன்பு வெப்பம் கலைந்து விடும். அதற்குப் பெயர் தான் சவம்.

பாமர மனிதனுடைய மரணத்தின் நிலை இது. மனிதன் தான் இறப்பதற்கு முன்பு 16 வகையான மரணத்தைச் சந்திக்கின்றான். இது ஒரு நொடியில் நடப்பதுண்டு. அந்த ஒரு நொடிக்குள் ஏன் அரை நொடிக்குள்ளேயே இந்த 16 வகையான மரணமும் வந்து விடுவதுண்டு.

# ஜீவன் புறப்பாடு

கண் திறப்பு - ஒரு ஜீவன் ஒரு கூட்டிற்குள் சென்றதும் திறப்பு நிகழ்ச்சி நடைபெறுகிறது. அதற்கு முன்னால் பிராணப் பிரதிஷ்டை. இவை இரண்டையும் வைத்துத் தான் கோயிலில் கும்பாபிஷேகத்தின் போது கண் திறப்பு, பிராணப் பிரதிஷ்டை செய்யப்படுகின்றன.

ஜீவன் தேகத்திலிருந்து வெளியேறும் போது - அபானனும், பிராணனும் விழிப்பு நிலைக்கு வந்து சேரும். பிராணன் மேலே செல்லும் ஜீவன் அதனுடனே வெளியேறும். அப்போது, இருதயம் கொஞ்சம் - கொஞ்சமாக நிற்கத் தொடங்குகிறது. வாய், நாக்கு கொஞ்சம் - கொஞ்சமாகக் கருப்பாகும். கண் இருளும், பார்வை திடீரென்று சிலருக்குக் குறையும். சிலருக்குக் கொஞ்சம்- கொஞ்சமாகக் குறையும்.

தேகம் முழுதுமுள்ள ஜீவ ஒளிக்கதிர்கள் சுருங்கி ஜீவன்கள் மையப் புள்ளிக்கு வந்து சேரும். அப்போது கால் இருப்பது தெரியாது, கை இருப்பது தெரியாது, கொஞ்சம் - கொஞ்சமாக எல்லா நினைவும் குறைந்து கொண்டே கடைசியில் ஒரு மையப் புள்ளிக்கு வந்து சேரும்.

பிராணன் மகா விழிப்புடன் ஜீவனோடு வெளியே செல்லும். அந்த விழிப்புச் சக்தியோடு தேகம் முழுதும் ஒரு வெப்பம் காணும். அந்த வெப்பத்திற்கு மரண -வெப்பம் என்று பெயர்.

ஆகவே, அங்கமெல்லாம் நிரம்பிய ஜீவனின் ஒளிக்கதிர்கள் கொஞ்சம் - கொஞ்சமாகப் பின் வாங்கிக் கொண்டு ஜீவன் மையப் புள்ளிக்கு வந்து சேரும். பிராண சக்தியோடு ஜீவன் வெளியேறிக் கொண்டு இருக்கும். இருதயம் கொஞ்சம் கொஞ்சமாக நிற்கத் தொடங்கும். ஜீவன் உடலை விட்டு வெளியேறிய பிறகும் தேகத்தில் சிறிது நேரம் வெப்பம் இருக்கும்.

இந்தச் சமயத்தில் நாத சக்தி, அதாவது பேத சக்தி தேகத்தை விட்டு விலகி விடும். புற உலகம் மறக்க வைக்கப்படும். மனிதனில் உள்ள எல்லா வகையான நினைவுகள், உணர்வுகள், கருத்து விழிப்புகள் எல்லாமே அந்த தேகத்தை விட்டுச் சென்று விடும்.

மூளையில் உள்ள உயிர் அணுக்கள் இறந்து விடும். மூளையும் செத்து விடும். மூளையின் உள்ளே கண்ணுக்குத் தெரியாத ஒரு வேர்

உண்டு. அந்த வேர் சிரசிலிருந்து வெளியேறி விடும். அதற்குப் பிறகு பிராணன், அபானன் மகா விழிப்புக்கு வந்த பிறகு பிராணன் சென்று விடும். அபானன் வேலை செய்யத் தொடங்கும்.

தனஞ்செயன் என்ற நாடி சுக்கிலம், சுரோணிதம் என்ற உயிர் தளத்தை உடைத்து எறியும். அதன் பிறகு தேகம் முழுதும் பிண நாற்றம் வீசத் தொடங்கும்.

இந்த நிகழ்ச்சி சாதாரணமாக 1/2 நொடியில் நடக்கலாம் அல்லது நான்கு மணி நேரம் நடக்கலாம்.

விபத்து நடக்கும் போது இங்குச் சொல்லப்படும் அத்தனை நிகழ்ச்சிகளும் மண்டை உடைபடும் போது, இருதயம் உடையும் போது அக்கணமே நடைபெறும்.

ஜீவன் தேகத்தை விட்டுப் பிரியும் போது, முக்கால் வாசி பிரியும் போது இரத்த ஓட்டம் நின்று விடும். வாய் பிளந்து விடும் சிலருக்கு; சிலருக்குக் கண் திறந்து நிற்கும்.

அங்க முழுதும் உள்ள ஜீவன்களுடைய ஒளிக்கதிர் பின் வாங்கத் தொடங்கும். உடனே மனம் செயலற்று நின்று விடும்.

16 வகையான மரணங்கள் முடிந்த பிறகு தான் அதற்குச் சவம் என்ற பெயர் இட வேண்டும்.

நான்கு, ஐந்து, ஆறு அறிவு உள்ள ஜீவன்களுக்கு இம்முறை தான் உள்ளது. அதாவது, குட்டி போடும் ஜீவனுக்கும் இம்முறையில்தான் ஜீவன் பிரிகிறது. ஜீவன் அணுவிலிருந்து வெளிப்பட்ட பிறகு, தேகத்தில் அந்த ஜடத்தின் தலையெழுத்து அழிக்கப்படுகிறது. சிலருக்கு விதி அடங்கிய வினை விலகிய பிறகு தலையெழுத்துகள் மறைந்து விடும்.

ஒரு மரண- பிராண மூச்சு கடைசியாக வரும். எல்லாம் போய், முடிந்த பிறகு அந்த மரண மூச்சு தேகத்திலிருந்து முழுமையாக வெளியாகி விடும்.

பிராண சக்தியின் மூலம் ஜீவன் தேகத்திலிருந்து பிரிந்து செல்லும் போது புண்ணியம், பாவ சக்திகள் ஜீவனோடு சென்று விடும்.

வெட்டவெளியில் உள்ள ஜீவ வெளி திறக்கும். இந்த ஜீவன் அங்கே சென்று விடும்.

இந்த ஜீவன், தேகமெல்லாம் நிறைந்திருக்கும் தேக ஒளி பின் வாங்கும். மூளையின் உயிர் அணுக்கள் இறப்பு, 16 மரணங்கள் வருவது, ஜீவன் வெளியேறுவது, ஜீவன் வெட்டவெளி செல்வது ஆகிய எல்லா வினையும் ஜீவன் நடத்தவில்லை. மகத்தான சக்தியொன்று ஜீவனைப் பற்றி ஜீவ வெளிக்கு அழைத்துச் சென்று வைக்கிறது.

ஜீவப் பிரகாசம் உள்ள ஜீவன்களையும் அந்தச் சக்திதான் அழைத்துச் செல்கிறது.

இந்த மரணத்தில் ஒன்பது முறைகள் உள்ளன. ஞானிகளுக்கு ஒரு வகை, அவதாரப் புருஷர்களுக்கு ஒரு வகை, தெய்வங்களுக்கு ஒரு வகை, உத்தமர்களுக்கு ஒரு வகை, பாவிகளுக்கு ஒரு வகை, சத்தியவான்களுக்கு ஒரு வகை, அதர்மம் செய்தவர்களுக்கு ஒரு வகை, தர்மவான்களுக்கு ஒரு வகையென்று பல வகையுண்டு.

இந்த ஜீவன் - அவைகள் அந்த தேகத்தில் இருக்கும் போது ஆற்றிய வினைகளுக்கு ஏற்றவாறு, உடலில் உள்ள 9 துவாரங்களில் ஏதாவது ஒரு வழியில் வெளியேறும்.

கண்கள் மூலம் வெளியேறுதல், காது மூலம் வெளியேறுதல், மூக்கு மூலம் வெளியேறுதல், வாய் மூலம் வெளியேறுதல், தொப்புள் மூலம் வெளியேறுதல், குறியின் மூலம் வெளியேறுதல், மல துவாரத்தின் வழியே வெளியேறுதல். ஆனால் சாயுச்சியமடைந்த ஜீவர்களுக்கு, ஆத்ம ஞானிகளுக்கு, வெட்ட வெளியில் இரண்டறக் கலக்கும் சிவ ஆத்மாக்களுக்குத் தலையில் உள்ள உச்சம் தலையில் உள்ள பிரம்மரந்திரத்தின் வழியே வெளி ஏறும்.

**சந்தோஷம்**

# கல்ப சக்தி

ஜீவன் தேகத்தை விட்டு விலகிய பிறகு அது ஆண் நிலையும், பெண் நிலையும், தான் எந்த உருவத்தில் இருந்தோமோ அந்த உருவ உணர்வைத் தன்னிலிருந்து விலக்கி விடும். அப்போது அந்த ஜீவன் ஆணும் இல்லை, பெண்ணும் இல்லை, அலியும் இல்லை.

ஒரு காலத்திற்குப் பிறகு, அதற்கு இடப்பட்ட காலத்திற்குப் பிறகு, அண்டவெளி சக்தி அந்த ஜீவனை ஜீவ வெளிக்குக் கொண்டு வந்த பிறகு முன்பு தேகத்திலிருந்து ஆற்றிய வினைக் கேற்றவாறு அது எந்த உருவத்திற்குச் செல்ல வேண்டும் என்று தீர்மானிக்கப்படுகிறது.

சென்ற தேகத்தில் கொடுக்கப்பட்ட ஆண் உருவமோ, பெண் உருவமோ இப்பிறவியிலும் கொடுக்கப்படுகிறது. பெண்ணாகப் பிறந்தது அலியாகப் பிறக்கலாம் அல்லது அலியாகப் பிறந்தது பெண்ணாகவும் பிறக்கலாம். இப்போது இருக்கின்ற ஆண், பெண் உருவமே கிடைப்பதற்குச் சதமில்லை.

ஜீவ யாத்திரை தொடக்கத்திலிருந்து யாத்திரை முடிவு வரை எத்தனையோ தடவை ஆண் உருவம் எடுத்து இருக்கும். எத்தனையோ தடவை பெண் உருவம் எடுத்திருக்கும். எத்தனையோ தடவை அலி உருவம் எடுத்திருக்கும்.

அலியைப் பார்த்துக் கேலி செய்யும் அல்லது துன்புறுத்தும ஆண், பெண் உருவங்கள் அடுத்த தங்கள் பிறவியில் நிச்சயம் அலியாகப் பிறக்கும். அதே துன்பத்தை நான்கு மடங்கு அதிகமாக அனுபவிக்கும். அதே போன்று பெண், ஆணுக்குத் துன்பம் கொடுத்தாலும், எல்லையில்லாத் துன்பம் கொடுத்தாலும் உருவங்கள் மாற்றப்படும். அந்தத் துன்பத்தைப் பல முறை அதிகமாக அனுபவிப்பார்.

ஆகவே, உன் ஜீவ யாத்திரை சாந்தமாகவும், சந்தோஷமாகவும் நடைபெற வேண்டும் என்றால் இயற்கை தந்த எந்த உருவத்தையும் எள்ளி நகையாடாதே, ஏளனப் படுத்தாதே, துன்புறுத்தாதே. ஒவ்வொரு உருவத்திலும் இயற்கை ஒரு கல்ப சக்தியைக் கொடுத்து உள்ளது.

நீ எந்த உருவத்தை எள்ளி நகையாடினாயோ, உன்னால் பாதிக்கப்பட்ட உருவத்தில் உள்ள கல்பசக்தி உன்னுள் உள்ள கல்ப

சக்தியை அழைத்துக் கொள்ளும். நீ விகல்பமாவாய். நீ விபரீதமாவாய். நீ வீணாகி விடுவாய்.

உனக்கு ஏன் வீண் வம்பு. அந்தந்த உருவங்கள் அந்தந்தப் பணிகளை அந்தந்த நிலையில் அந்தந்தக் காலத்தில் ஆற்றிக் கொண்டிருக்கிறது.

நீ உன் யாத்திரையில் வெற்றி பெறுவாயாக. உருவங்களில் எதுவும் உயர்ந்தது அன்று. தாழ்ந்ததும் அன்று. எல்லாம் சமம்.

அந்தந்த வினைகளை ஆற்றுவதற்கு அந்தந்த உருவங்கள் அந்தந்த ஜீவன்களுக்குத் தரப்படுகிறது.

**சந்தோஷம்**

இன்னும் சொல்லப்போனால் எல்லா ஜீவன்களுக்கும் இப்படி ஒரு சூழ்நிலை வருவதுண்டு. இந்தச் சூழ்நிலைக்குப் பிறகு தான் ஜீவன்கள் தன் யாத்திரையின் அடுத்த படிக்குக் கால் எடுத்து வைக்கிறது. வாழ்க்கையில் வரும் சோகக் கட்டங்கள் உச்ச நிலைக்குச் சென்று, அதன் முழு அனுபவத்தை ஜீவன் கண்டு பெற வேண்டும் என்பது இறைவனின் கருத்தாகும்.

# திரு உருவ மாற்றங்கள்

ஜீவ யாத்திரையில் ஜீவன்கள் அந்தந்தக் கூட்டில் வாழும் போது, அதற்கு அந்திமக் காலம் வரும் போது அஞ்சுகின்றன அல்லது பயப்படுகின்றன. அந்திமக் காலம் வருவதற்கு முன்பே அவைகளுக்குப் பயம் வந்து விடுகிறது. அந்த அந்திமக் காலம் வராமல் இருப்பதற்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அவையெல்லாம் செய்கிறது. அந்திமக் காலத்தைத் தடுப்பதற்கு ஜீவர்களால் முடியவில்லை.

ஜீவ தத்துவத்தின் முதலும், முடிவும் ஒவ்வொரு கூட்டிற்குள் உள்ளன.

மரண பயம் - பாம்பு, பசு, புலி போன்ற எல்லாவற்றிற்கும் உள்ளது. அது - அது எடுத்த உருவங்களில் அது - அது அங்கேயே இருக்க விரும்புகிறது. அந்திமக் காலம் வந்தால் தான் அவைகளுக்குப் பதவி உயர்வு உண்டு. அடுத்த அறிவுள்ள கூடு கிடைக்கிறது. இறுதியில் மனித உருவத்திற்குள் வந்து சேர்கிறது. மனித உருவத்திலிருந்து வாழும் போது அது அந்த உருவத்திற்குள் 51 மாற்றங்களை அடைகிறது.

அந்த 51 மாற்றங்களும் ஜீவன்களுக்கு ஒரே கூட்டிற்குள் இருந்து கொண்டே 51 வகையான உயர் பதவிகள் பெற்று, மனித உருவத்திலிருந்து மகேஸ்வர உருவமாகி அது ஆனந்தமாய், அற்புதமாய் நூற்றுக் கணக்கான உள் மாற்றங்கள் பெற்று அந்திமக் காலம் கடந்து ஆனந்தமாய் மெய்ஞ்ஞானப் பொருளிடம், அனாதியான மூல வஸ்துவிடம், கடவுளிடம், சிவத்திடம் சங்கமமாகிறது.

இந்த மனித உருவத்திலிருந்து 51 பதவி உயர்வுகளைப் பெற்றுக் கொண்டு இருக்கும் போது அந்திமக் கால பயம் அறவே நீங்கி விடுகிறது. அந்திமக் கால பயம் அறவே நீங்குவதற்குக் காரணம் அது பெறும் ஒவ்வொரு பதவி உயர்வையும், மனித உருவத்தில் இருந்து கொண்டே வெட்ட வெளியின் இரகசியங்கள், வெட்ட வெளியில் தாம் எப்படி இருக்கப் போகின்றோம், வெட்டவெளி ஆனந்தம், சங்கமத்தின் இயல்புகள், பயன்கள் ஆகியவை ஒன்றன் பின் ஒன்றாக அனுபவத்தில் அவைகளுக்குத் தெரிவிக்கப்படுகின்றன.

இந்தக் கருத்துகள் அவைகளுக்கு அனுபவ பூர்வமாகத் தெரிந்த

பிறகு, அந்திமக் கால பயம் அறவே நீக்கப்படுகிறது. அந்த நிலை எப்போது வரும் என்பதை எதிர் பார்த்த வண்ணமாக அவைகள் இருக்கின்றன.

சிவ ஜீவன்கள் மனித உருவத்தில் இருக்கும் போது அந்தச் சிவ நிலை பெற்ற அது - தானே ஒரு காலத்தை நியமித்து, தானே கூட்டை விட்டு முறையாக, அழகாக, சுகமாக, சொகுசாக, சுபமாக எல்லோரையும் பார்த்து விட்டு, அங்குள்ள எல்லோருக்கும் ஆனந்தத்தை அள்ளி வழங்கி விட்டு வெட்டவெளியில் ஜோதி சொரூபமாய்க் கலப்பதுண்டு.

ஒவ்வொரு சிவவெளியின் வல்லபங்கள் வந்து சேர வேண்டுமென்றால் இந்த உருவ வல்லபத்திற்கேற்றவாறு திரு உருவ மாற்றம் அவசியம்.

அந்தந்த வல்லபங்கள் பெறுவதற்கான தகுதிகளை அந்தந்தத் திரு தேகம் பெற்ற பிறகு தான், அந்தந்த வல்லபங்கள் அந்தத் திரு தேகத்திற்கு வந்து சேர்கின்றன.

<u>51 மாற்றங்கள்:</u>

1. திடீரென்று மெய்ஞ்ஞான அருட்கனல் வெளிப்படுதல்.
2. அகங்காரம், மமகாரம் நீங்குதல்.
3. மாயை, மாமாயை, வித்யா மாயை, சுத்த மாயை ஆகியவை வெளியேறுதல்.
4. தேகத்திலிருந்து அமங்கல சக்தியை வெளியேற்றி விடுதல்.
5. சுப தேகம் பெறுதல்.
6. சூன்னிய தேகம் பெறுதல்.
7. பரசாந்த மௌன நிலையடைதல்.
8. முக்குணங்களைக் கடந்து நிர்குண நிலைக்கு வருதல்.
9. காமியார்த்த நிலை கடந்து நிஷ்காமிய நிலைக்கு வருதல்.
10. அநேக, அநேக பேதங்கள் என்ற ஜீவ தத்துவத்திலிருந்து விலகி ஏகம், ஏகானந்தம், ஏக சொரூபம், ஏக கடவுள் எல்லையற்ற ஒன்று என்ற பிரம்ம இரகசியங்களைக் காணல். அம்மயமாகத் திருஉருவ மாற்றம் கொள்ளல்.

11. அஞ்ஞான விழிப்புத் திரை விலகல்.
12. எல்லா ஜீவன்களையும் தனதாக எண்ணுதல்.
13. மகா ஜீவகாருண்யம் விழிப்புற்று, செயல்படத் தொடங்குதல்.
14. அதனால் வரும் பயன்கள் - ஜீவ விழிப்புப் பெறுதல்.
15. காலத்தின் வல்லமையிலிருந்து விலகுதல்.
16. விதி அந்த ஜீவன் விழிப்பற்ற நிலையில் குருடாக இருக்கும். விதி தன் விருப்பப்படி இயக்கியது. இப்போது ஜீவன் விழிப்பு நிலைக்கு வந்த பிறகு, தன் நிலைக்கேற்றவாறு விதியை மாற்றிக் கொள்ளுதல்.
17. மகா பரிசுத்த தேகம் பெறுதல்.
18. பூரண தேகம் பெறுதல்.
19. மகா பரிபூரண தேகம் பெறுதல்.
20. ஓங்காரம் வடிவமாதல்.
21. அருள் வடிவம் பெறுதல்.
22. பிண்ட தேகம், அதன் சக்திகளெல்லாம் விலக்கப்பட்டு முழுமையாக அண்ட தேகமாக மாற்றம் பெறுதல்.
23. ஒளி உடலாக மாற்றல்.
24. சாயுச்சிய தேகம் பெறுதல்.
25. அனைத்தையும் அறியும் பேராற்றல் பெறல்.
26. சிவ ஞானம் அடைதல். ஓஜஸ், தேஜஸ் பெறுதல்.
27. மாயா நாதம் சுத்திகரிக்கப்பட்டு, மகா அருள் நாதம் பெற்று ஓங்கார நாதமாய் விளங்குதல்.
28. தான் விரும்பிய பிறவி எடுக்கவும், தான் விரும்பிய தாய், தந்தையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவும் வல்லபம் பெறுதல்.
29. தாய், தந்தைக்கு முக்தி அளித்தல்.
30. மற்றவர்களுக்கு மரணத்தை நீட்டி வைத்தல்.
31. இறந்தவர்களை உயிர்ப்பித்தல்.
32. முழு இயற்கை மாற்றம் ஏற்றல்.

33. விதேக நிலையடைதல்.

34. எல்லாம் சாஸ்வதம். தானும் சாஸ்வத தேகம் பெறுதல்.

35. இளமை, இடைப்பருவம், முதுமை, உறவு, பாசம், இவைகளைத் துறந்து மெய்ஞ்ஞான சிவஜோதியாய் அந்தப் புனித தேகத்திற்குள்ளே வாழ்தல்.

36. தேகம் அஞ்ஞான உருவமாயிருந்து, அவைகளிலிருந்து அறவே விலக்கப்பட்டு, தேகம் பல திருவுருவ மாற்றங்கள் பெற்று இறுதியில் சொரூப முக்தி பெறுதல். அந்த உருவத்திற்கே முக்தியுண்டு. ஆத்ம முக்தி, சொரூப முக்தி ஆகிய இரண்டையும் பெறுதல்.

37. அது விரும்பிய காலம் மண்ணுலகில் இருக்கலாம்.

38. தேகத்திலிருந்து விலகி வெட்டவெளியில் சஞ்சரித்து விட்டு மற்ற வெளியில் உலாவி விட்டு, மீண்டும் அந்தத் தேகத்திற்கு வந்து விரும்பிய காலம் இருக்கலாம்.

39. பல திருவுருவ மாற்றங்கள் பெற்ற பிறகு, சிவ ஞானப் பதவி அடைகிறது. அஞ்ஞான தேகங்களால் நம்ப முடியாதவைகள் எல்லாம் சிவஞான தேக அருளாற்றல் பெற்று ஆனந்தமாய் இருத்தல்.

40. வினைகள், எதிர் வினைகள், பயன்கள், எதிர்ப் பயன்கள் எதுவுமில்லா ஒரு திரு நிலைக்கு வந்தடைதல்.

41. காலமறிதல், காலத்தை வாசிக்குமாற்றல் வந்து சேர்ந்து அதிலே எல்லாக் காலத்தையும் வாசித்தல். ஒவ்வொரு ஜீவனுடைய காலத்தை வாசித்தல், அறிந்துணர்தல். எல்லா ஜீவன்களின் விதியையும் வாசிக்கும் நிலை வந்து அடைதல்.

42. மரணமில்லாப் பெரு வாழ்வு வல்லபம் பெறுதல்.

43. எல்லாம் கடவுள், எல்லாம் பூரணம், எல்லாம் பேரழகு, எல்லாம் பேரறிவு, எல்லாம் சுகம், எல்லாம் அனந்தம், எல்லாம் ஆனந்தம், எல்லாம் மகா சுபம், எல்லாம் இன்ப மயம் என்ற இரகசியம் உடைக்கப்பட்டு எல்லாம் அந்த ஜீவனுக்குச் சொத்தாக வந்தடைகின்றன.

44. நவதுவார சேஷ்டைகள் அல்லது வினைகள் முற்றிலுமாக விலக்கப்படல்.

45. மிக இரகசியமானது, இது எல்லோருக்கும் வாய்ப்பு இல்லை ஏதோ ஒன்று, இரண்டிற்குத் தான் வருகிறது. அது இது தான். தேகத்திலிருந்து பரிசுத்தமான தெய்வீக தேகத்திலிருந்து தேகி வெளியேறிய பிறகு பல நூறு ஆண்டுகள் ஆன பிறகு, அதே தேகத்தோடு பிறவி இல்லாமல், அதே தேகம் மூலத்தோடு தோன்றுதல் அல்லது வெளிப்படல். இந்த ஜீவர்களுக்கு, இவ்வுலகிற்கு நன்மை செய்தல் பிறகு அப்படியே மறைதல். தோன்றல், மறைதல், வெட்டவெளியிலிருந்து வெளிப்படல், ஜீவர்களின் அஞ்ஞானக் கண்ணிற்குப் புலப்படல். மீண்டும், வெட்ட வெளியில் மறைதலாகிய வல்லபம் பெறுதல்.

46. ஜீவன்கள் எல்லாம் இது பெற்ற சிவ ஒளி தேகத்தை வணங்குதல். இதன் அருளுக்காகக் காத்திருத்தல், சாதனை செய்தல் என்ற அருள் திருமாற்றம் பெறுதல். அதற்கு முன்பு தன்னையறிதல், தன்னை வணங்குதல், தனக்குள்ளே தான் இருத்தல், தவம் புரிதல், தவம் கடத்தல் ஆகிய மாற்றங்கள் அடைதல்.

47. தத்துவ நிக்கிரகம் செய்து கொள்ளல்.

48. மௌனம், பிண்ட வெளி மௌனம், அண்ட வெளி மௌனம், மகா மௌனம், பிரம்ம மௌனம், வெட்டவெளி மௌனமாகிய மௌனம் ஒன்றன் பின் ஒன்றாக வந்து அந்தத் தேகத்தில் மௌன திரு உருவ மாற்றம் வழங்குதல். அதன் பிறகு, மௌன ஆனந்தத்தில் சுவைத்திருத்தலாகும்.

49. இதற்கு மேலும் படைப்பின் இரகசியம், மரணத்தின் இரகசியம், சத்தியத்தின் இரகசியம், அந்தத் தேகத்திற்கு அறிவிக்கப்படும். இந்த மாற்றம் எல்லையற்ற ஒன்றாகும்.

50. இரண்டற்ற நிலை பெற்று ஏகத்தில் ஏகமாய் இன் சுகத்தோடு சுபமாதல்.

51. பஞ்ச பூதங்கள் - இவைகள் சாதனைக்குத் துணை புரிதல்.

### சந்தோஷம்

# ஐக்கியம்

ஐக்கியம் - என்ற சொல் இன்று எல்லோருக்கும் தெரியும். எல்லோரும் அந்த வார்த்தையை எல்லாச் சமயங்களிலும் பயன்படுத்துகிறார்கள். ஆனால், ஐக்கியம் என்ற சொல் ஒவ்வொரு ஜீவனுக்கும் ஒருமுறைதான் வருகிறது. ஐக்கியம் போன்ற ஐக்கியமில்லாத வினைகள், மனோ ஆர்வத்தாலும், விதியின் வசத்தாலும், மனிதனின் கற்பனையாலும் ஒளிக்கப்படுகிறது. உலகம் ஏற்காது. ஆனால் உள்ளங்கள் ஏற்கும்.

பகவத் கீதையில் கண்ணன் - எல்லா ஜீவன்களையும் தன்னுள் ஐக்கியப்படுத்தியுள்ளான். கண்ணனே - எல்லா ஜீவன்களையும் ஐக்கியப்படுத்தி விட்டான். ஆகவே, கண்ணனின் மேற் பார்வையில் தான் ஜீவ யாத்திரை நடைபெறுகிறது. காதலுக்கு ஒருவன் அவன் - கண்ணன். காதல் என்ற வினைக்கு ஐக்கியம். அது எல்லையற்ற நிலையில் எல்லையற்றதாகி எல்லையற்றதோடு ஐக்கியமடைந்து, ஐக்கியம் கடந்து எங்கும் நிறைந்த சிவமாய் உள்ளது. அதுவே காதல். அந்தக் காதலைப் பற்றித் தான் திருஞான சம்ப்ந்தர் பேசுகிறார். ஆகவே காதல் என்ற சொல்லுக்குப் பரமானந்த ஐக்கியம் என்று பொருள்.

**பரமானந்த ஐக்கியம் :**

பரமானந்த ஐக்கியம் புனிதமானது. இந்த இக புனிதத்திலே ஒரு கர்ம வினையின் பயன் துளி எங்கேயாவது ஒட்டிக் கொண்டு இருக்கும். பரமானந்த ஐக்கியத்தில் அது இல்லை. இல்லவேயில்லை.

பரமானந்த ஐக்கியத்தை நோக்கித் தான் இந்த ஜீவன் யாத்திரை செய்கிறது. சிதா காச வெளியில் தனக்குள்ளே தான் நின்று இகத்தில் உள்ள எல்லாம் கலந்து பரசாந்த மோன நிலையில் பரத்தின் வாசலைக் கண்டறிந்து அங்கே ஜீவன் யாத்திரையை நிறைவு செய்கிறது.

இது எனக்குச் சொந்தம். நான் அதற்குச் சொந்தம். இரண்டு சொந்தங்களின் சங்கமத்தில் வந்தது வசந்தம்.

(இது + அது = சங்கமம்)

**சந்தோஷம்**

# பிரம்ம நிர்வாணம்

ஜீவ யாத்திரையில் பிரம்ம நிர்வாணம் அதி முக்கியப் பங்கு வகிக்கிறது. இந்நிலை அடைவதற்கு அந்த ஜீவன் பட்ட நிலைகளைக் கவனிக்கின்றோம், மீளாச் சோகத்தில் நாம் இருக்கிறோம்.

பிரம்ம நிர்வாணம் அடைவதற்கு முன்பு பிரம்ம ஸ்திதி படியைக் கடக்க வேண்டும். இந்த பிரம்ம ஸ்திதி, பிரம்ம நிர்வாணம், மகா நிர்வாணம் என்ற கருத்துகள் ஒரு போதும் ஜீவ விழிப்பில்லாத ஜீவன்களுக்குப் புரியவே புரியாது. உலக அளவில் வேண்டுமென்றால் அந்த ஜீவன் தேகக் கோட்டில் மகா மேதைகளாக இருக்கலாம். அறிவாளிகளாக இருக்கலாம். தங்களின் அறிவாற்றல் வல்லமையை ஜீவ விழிப்பு வரை கொடுத்துக் கொள்வதில்லை. தங்கள் ஜீவ விழிப்பை விழித்துக் கொள்ளவும் செய்வதில்லை.

இந்தப் புரியாத கருத்துகளை ஜீவ யாத்திரையில் வெளிப்படுத்தியே தீர வேண்டும். அதன் நியதியும் அதுதான். புரிந்ததோ புரியவில்லையோ மகா நிர்வாணம் அல்லது பிரம்ம நிர்வாணம் பற்றிய செய்திகளை வெளிப்படுத்தியே தீர வேண்டும். இது ஜீவ யாத்திரையின் விதியாகும். இதைப் படிக்கின்ற எல்லா மனிதர்களுக்கும், படிக்காதவர்களுக்கும் ஜீவ விழிப்பு வந்தே தீர வேண்டும். இந்தக் கருத்துகளை வாசிப்பவன் மாயை அகங்காரம் கொண்ட மனம் சம்பந்தப்பட்டிருப்பானானால் ஒருக்கால் ஒதுக்கலாம், வெறுக்கலாம். உலக விவகாரங்களில் புத்தியைச் செலுத்துவதனால் இது வியந்ததாகப் படாமலும் இருக்கலாம். தங்கத்தையே பார்த்திராத ஒருவனுக்குத் தங்கத்தைக் காட்டினால், தங்கத்தையே அவன் உதாசீனப் படுத்துவான். அது போன்றுதான் அந்த ஜீவன் கடைசியில் பெறப் போகின்ற மாபெரும் நிலையை இங்கு விளக்கினால் அந்த ஜீவன் அந்த நிலையை உதாசீனப்படுத்தும்.

கடல் தன்னிடம் எவ்வளவு நீர் வந்து வீழ்ந்தாலும், எத்தனை நதிகள் வந்து கலந்தாலும் வேண்டாம் போ போ என்று மறுத்து ஒதுக்குவதில்லை. வா வா என்று அப்படியே ஏற்றுக் கொள்கிறது. ஆனால் அது தன் நிலையிலிருந்து மாறுவதில்லை. அது போல் விருப்பங்கள் வரும் போது அதை ஒதுக்கி விட்டுத் தன் நிலையில்

இருந்து சாந்தி அடைய வேண்டும். விருப்பங்களை விரும்புபவனுக்குப் பிரம்ம முக்தி கிடைக்காது. இச்சையற்றவன் எல்லா இன்பங்களையும் துறந்தவன்.

உலகத்தில் எந்தப் பொருள் மீது பற்று வைத்தாலும் அது இச்சை. ஆசை இல்லாதவன், இச்சை இல்லாதவன், இந்த உலகில் எல்லா இன்பங்களையும் விட்டு விட்டவன், இன்பம் என்னதென்பது அற்றவன், துறவு நிலை கொண்டவன், எனது என்ற நிலையற்றவன், என் பிள்ளை என் பேத்தி, என் பேரன் என்பார்கள். அந்த எனது என்பது அற்றவன், எனது என்பது இல்லாதவன், எனது என்ற புத்தி இல்லாதவன், அகப்புறப்பற்று இல்லாதவன், யான் என்பது அற்றவன், நான் நான் நான் நான் என்ற ஒரு அதிகார வர்க்க புத்தி இல்லாதவன், ஆளுகின்ற புத்தி இல்லாதவன், எல்லோரையும் அரவணைப்பு இல்லாமல் கொடூரமாக நடத்துகின்ற புத்தி இல்லாதவன் எவனோ அவனே சாந்தி அடைகிறான். எல்லாம் ஒன்றே, யாவும் ஒன்றே என்ற சாந்தி நிலைக்கு வந்தால் சாந்தியாகிறான்.

எவன் ஒருவன் சாந்தியாகி விட்டானோ அவன் ஒருவன் மட்டுமே மற்றவர்க்குச் சாந்தி கொடுக்க முடியும். அமைதி கொடுக்க முடியும். ஆகவே சாந்தி அடைய வேண்டுமென்றால், நீ பேரமைதி கொள்ள வேண்டும் என்றால், நீ நிம்மதி அடைய வேண்டுமென்றால் எல்லாவற்றையும் உன்னுள் இருந்து நீக்கி விடு. ஆசையை நீக்கி விடு. வெறி பிடித்த உன் பற்றை நீக்கி விடு. வெறியற்ற நிலைக்கு வா. நீ உலகத்தில் பார்க்கின்ற எல்லா இன்பங்களிலிருந்தும் விடுபடு. அது உன்னை மயக்கும். உன்னைக் கொஞ்சும், உன்னைக் குலாவும். அது உனக்கு எல்லா விதமான கிளு கிளுப்பையும் கொடுக்கும். அதிலே நீ மயங்கி விடாதே. அது பின்னால் உனக்குத் துன்பத்தைக் கொடுக்கும்.

ஆகவே மனிதனே! நீ இன்ப துன்பங்கள் எல்லாவற்றையும் துறந்து விடு. எல்லாமே என்னுடையது, எல்லாமே என்னுடையது என்ற சொல்லை நீக்கி விடு. நீ யார்? உன் நிலை ஏன் உனக்குச் சொந்தமில்லை. உன்னால் எதுவும் சொல்ல முடியாது. இயலாது. உன்னால் பகவானைப் பற்றிச் சிந்திக்கக் கூட முடியாது. இந்நிலையிலே எனது எனது என்று சொல்லுகின்றாயே, எனது எனது என்ற சொல்லும் ஒரு நாள் உனக்குப் பகையாகவும் மாறலாம். உன்னை அழிக்கலாம், வீழ்த்தலாம். அது உன்னை அவமானப்படுத்தலாம். எப்படி வேண்டுமானாலும் அது

உன்னை ஆட்டிப் படைக்கலாம். எனது என்பது உனக்குப் பகையாக இருக்கலாம், நண்பனாக இருக்கலாம். நீ எனது என்று நினைக்கும் எல்லாம் உனக்குச் சந்தோஷத்தைக் கொடுத்து விடும் என்று நினைக்காதே. நீ நினைக்கும் எனது என்பது சாதாரணமானது அன்று. நீ நினைக்கும், நீ சொல்லும் வேதங்கள் இறைவன் உன்னைப் பார்த்துக் கேலிச் சிரிப்பு சிரிக்கின்றான், ''அடே முட்டாள் எனது எனது என்று சொல்லுகின்றாய், அது நாளை வந்து உனக்குப் பகையாக உயிரைக் குடிக்கப் போகிறதே என்று''.

அதற்குப் பிறகு அடுத்த நிலையில் சென்று தான் கெட்டான் தன் நாமம் கெட்டான் தலைவன் தாள் பணிந்தான். யான் - நான் என்பது அற்றான். தான் என்ற அகங்காரம், மமகாரம், ஆணவத்தை விட்டு விட்டான். அதைத் தடுத்து விட்டான். தான் இப்படிப்பட்டவன். தன்னை யாரும் ஜெயிக்க முடியாது என்று நினைக்கின்றானே அதுவும் அந்த நிலை. யான் - நான், யான் - நான், யான் - நான் என்று சொல்லிக் கொண்டு அலைகின்றாயே, ஏமாளியே உன்னைப் பற்றிப் பெருமை அடித்துக் கொள்ளுகின்றாயே, உண்மையின் வல்லமை உனக்குத் தெரியாது. சத்தியத்தின் வல்லமை உனக்குத் தெரியாது. தர்மத்தின் வல்லமை உனக்குத் தெரியாது. அன்பின் வல்லமை உனக்குத் தெரியாது. தவத்தின் வல்லமை உனக்குத் தெரியாது.

இறைவனுடைய பெருமையை அறிய மாட்டாய். எங்கும் நிறைந்து நிற்கின்ற அருட் சக்தி உன்னுள் இயங்குவதை நீயே அறிய மாட்டாய். நாளை நீ இருக்கின்றாயா? இல்லையா? என்பது உனக்குத் தெரியாது. நாளை இந்நேரம் நீ எப்படியென்றும் உனக்குத் தெரியாது. ஆகவே, யான் - யான், நான்-நான்-நான் என்று சொல்லிக் கொண்டு திரியும் அறியாமை நிறைந்த பைத்தியம் நீ. ஏ! முட்டாளே! நாளையை அறியாத அறியாமை நிறைந்த மனிதனே! எதுவும் தெரியாத நீ எப்படி எனது - எனது என்று சொல்லுகின்றாய். இதையெல்லாம் புரிந்து கொண்டால் இந்த யான், நான் என்பதை நீக்கி விட்டால் பிறகு உன் உலகம் அற்புதமான உலகமாக மாறும்.

இந்த யான், நான் என்ற இரண்டையும் நீக்கி விட்டால் பார்ப்பது எல்லாம் ஞான ஒளியாய்ப் பார்ப்பாய். அந்தப் பொருளுக்கப்பால், பொருள்களிடம் ஞான ஒளி வீசும். அதைக் காண்பாய். அதில் இருக்கும்

உண்மைகளை அறிந்து கொள்வாய். ஆகவே அன்பு மனிதனே! நான்கு நிலைகளிலிருந்தும் உன்னை விடுவித்துக் கொள். அந்தச் சூக்குமத்தை அறிந்து கொள்.

ஆகவே இச்சையை நீக்கி விடு. பிறகு இகத்தில் எல்லா இன்பங்களையும் துறந்து விடு. எல்லாம் என்னுடையது என்ற கருத்தினையும் உன்னுள் இருந்து அறவே நீக்கி விடு. நான்-நான் என்று சொல்லுவதை, திமிர் பிடித்து உன்னைக் கெடுக்கின்ற போகமான அந்த நிலையை உன்னுள் இருந்து துரத்தி விடு என்று கிருஷ்ண பரமாத்மா சொல்லுகிறார்.

பிரம்ம ஸ்திதி - இதை அடைந்தோர் பிறகு மயங்குவதில்லை. எல்லா இன்ப துன்ப இச்சையிலிருந்தும் நீக்கும். எல்லாம் எனது என்ற பற்றை நீக்கும். யான்-யான், நான்-நான் என்ற நிலையிலிருந்து விலக்கும். அந்த நிலையை எவர் பெற்றாரோ அவர் சாந்தி அடைகிறார். நீ சாந்தி நிலை பெற்ற உடனே, சாந்தி அடைந்தவுடனே, இந்த உலகியல் செயல், இந்த இகத்தில் உள்ள செயல் எதுவும் உன்னைச் சாந்தியிலிருந்து விலக்க முடியாத நிலை. சாந்தி நிலை பெற்ற பிறகு நீ பிரம்ம ஸ்திதி அடைகிறாய். பரசாந்த மோன நிலை - பிரம்ம ஸ்திதி. அதனால்தான் ஸ்ரீ கிருஷ்ணர் சாந்தி என்ற ஒரு நிலையைச் சொல்கிறார். பரசாந்த மோன நிலை. பரம் என்றால் வெட்டவெளி. எவ்வளவு அழகாக இனிமையாக எதையும் வெளிக்காட்டிக் கொள்ளாமல் அது இருக்கிறதே அது மோன நிலை. அது பரசாந்த மோன நிலை. பரசாந்த மோன நிலை வந்தால் இங்கு பகல்-இருள் இல்லை. பிரம்ம ஸ்திதி பெற்றவன் எதற்கும் எங்கும் மயங்குவதில்லை, மயங்கமாட்டான். பரசாந்த மோன நிலைக்குக் கிருஷ்ணர் கொடுக்கின்ற தலைப்பு பிரம்ம ஸ்திதி. எதற்கும் பணத்தினாலும், பதவியினாலும், மோகத்தினாலும், முகஸ்துதியினாலும், துவேஷத்தினாலும் அவன் மயங்க மாட்டான். மயக்க நிலை அவனிடமிருந்து முற்றிலும் விலகி விடுகிறது. எந்தக் காரணத்தைக் கொண்டும் மீண்டும் மயக்கம் அவனிடம் வருவதில்லை. பரசாந்த மோன நிலைக்கு வந்து விட்டவன் ஜீவன் பிரிந்து, அடுத்த நிலை வருவதற்கான அந்த இறுதிக் காலத்திலும் இதில் நிலை கொள்வோன் பிரம்ம நிர்வாண நிலை அடைகிறான். இந்தப் பரசாந்த மோன நிலையில் இருக்கிறானே, அந்த நிலைக்கு வந்து விட்டானே, அந்த நிலைக்குத் தன்னை அர்ப்பணித்து விட்டானே, அந்தப் பரசாந்த மோன நிலை

அவனை முழுமையாக ஏற்றுக் கொண்டு, அவனை முழுமையாகத் தன் அன்பிற்குள் வைத்துக் கொண்டதே அந்த நிலை வந்தவுடனே இவன் பிரம்ம நிர்வாண நிலை அடைகிறான் என்று கிருஷ்ணர் பிரம்ம நிர்வாண நிலையை விளக்குகிறார்.

பிரம்ம ஸ்திதி பெற்றவர்களுக்குப் பெறப் போகிறவர்களுக்கு இன்ப துன்பங்கள் எல்லாம் சமமாகத் தெரியும். வெற்றி தோல்வி சமமாகத் தெரியும்.

பிரம்ம ஸ்திதியில் இன்ப துன்பங்கள் எல்லாம் மறைந்து விடும். இன்ப துன்பங்களை எல்லாம் ஒடுக்கியவன் அல்லது அந்தப் படிகளைத் தாண்டியவனுக்குப் புற உலக முயற்சிகள் எதுவும் தேவை இல்லை. எதிர் அடியான பலன்களும் அவனுக்குக் கிடையாது. இந்த இன்ப துன்ப இச்சை கடந்தவர் எங்கு வேண்டுமென்றாலும் செல்லலாம். இவர்கள் நிச்சய புத்தி உள்ளவர்கள், முக்குணங்களைக் கடந்தவர்கள் ஆவார்கள். பொருள் பற்றுதல் இல்லாததனால் இவர்களுக்கு இரு பற்றும் கிடையாது. மனத்தினால் அல்லலுறும் சக்தி இவர்களுக்கு என்றுமே கிடையாது. இவர்கள் கர்மம் பிரம்ம கர்மம் ஆனதனால் இந்திரிய கர்மம் இவர்களுக்குக் கிடையாது. பிரம்ம கர்மம் செய்வதனால் இவர்கள் சதாசிவ நிலையை அடைவார்கள். சமமான புத்தியுடன் கர்மமற்ற கர்மமான பிரம்ம கர்மத்தை நிஷ்காமிய நிலையில் புரிகிறார்கள். மோகமும், போகமும் இவர்களுக்கு இல்லை. ஆதலால் இவர்கள் மகா சுப நிலை அடைகிறார்கள். அதுவே பிரம்ம ஸ்திதி.

இருந்த வினை முற்றிலுமாகக் கழிந்த பிறகு எதிர் வினை இல்லாத போது அல்லது வரும் வினை பூஜ்யமாகும் போது இவர்கள் பிரம்ம ஸ்திதியை அடைகிறார்கள். இவர்களுக்கு எல்லாமே வெட்டவெளிச்சமாகிறது. அதனால் வெட்ட வெளியும் வெளிச்சமாகிறது. பிரம்ம ஸ்திதி நிலையில் வெட்ட வெளி வெளிச்சத்தில் பிரம்ம கர்மத்தைச் செய்வதனால் அதுவும் பிரம்மானந்தத்தில் செய்வதனால் மகா சுந்தர நிலை எய்துகிறார்கள். கொஞ்சம் கொஞ்சமாக இந்த வினையாற்றும் போது மனம் கடைசியில் இல்லாததாகி விடுகிறது. மனமற்றவனுக்கு மரணமில்லை. மரணமற்றவன் மகேசனாவான்.

பிரம்ம ஸ்திதியில் ஒரு அமரத்துவ நிலை கிடைக்கிறது. இந்தப் பிரம்ம ஸ்திதி அதைப் பிரம்ம நிர்வாண நிலைக்கு அழைத்துச் செல்கிறது. பிரம்ம ஸ்திதி பிரம்ம அனுபவங்களை அடைகிறது. பிரம்ம நிர்வாணத்தில் பிரம்ம அனுபவங்கள் கிடைக்கிறது. பிரம்ம ஸ்திதியில் சங்கல்பம் பூரணமாகிப் பரிபூரணமாகிறது. பிரம்ம நிர்வாணம் சங்கல்பம் கடந்த நிலையில் பிரம்மாண்டமாய்ப் பிரம்மாண்டமாய் மகா பிரம்மாண்டமாய் ரூபம் எடுக்கிறது. பிரம்ம நிர்வாணம் வந்து கொண்டு இருக்கும் போது சிவ விழிப்பு வந்தெய்துகிறது. பேரறிவு நிலை பெரும் சுகம். சிவ நிலை, சாக்கிரத்தில் சாக்கிர நிலை, சிவ தரிசன நிலை, சிவானந்த நிலை, சிவ அனுபூதி ஆகியவை இந்தப் பிரம்ம நிர்வாணத்தில் கிடைக்கிறது. அவைகளை அது தன் சிவ விழிப்பில் தெரிந்து கொள்கிறது.

பிறக்கும் போது பிரம்ம நிர்வாணம் அடைந்தவர்கள் ஞானேஸ்வர மகராஜ், வடலூர் இராமலிங்க சுவாமிகள், கோவிந்த பகவத்பாதர், பத்ம பாதர், ஷிரடி சாயிபாபா. இன்னும் எத்தனையோ ஆயிரம் பிரம்ம நிர்வாணம் அடைந்தவர்கள்! பிரம்ம நிர்வாணம் இது ஒன்றுபட்ட நிலை ஆகும். இந்நிலை அடைந்தவர்கள் அருகில் இருந்தாலே பிரம்ம ஸ்திதி தானாகவே வந்து அடைகிறது. லாப நஷ்டம் எதுவுமில்லை. முக்தியைப் பெறுகிறார்கள்.

கர்மமற்ற கர்மத்தைப் புரிந்து கொண்டு இருக்கும் இந்தப் பிரம்ம நிர்வாணம் கர்மமற்றதாய், ஏதுமில்லாததாய், ஏக சொரூபத்தில் ஏகமாய், எங்கும் நின்றிலங்கும். இங்கு ஜீவ யாத்திரை முடிவதற்கான சங்க நாதம் ஒலிக்கிறது. அதுவே ஓங்கார நாதம். அதுவே பிரம்ம நாதம். அதுவே சின்மயானந்த நாதம். அதுவே சிவநாதம். அதுவே ஜெயநாதம்.

ஜீவ யாத்திரையில் பிரம்ம ஸ்திதி மிக முக்கியமானது. ஜீவ யாத்திரை முடிவில் இந்நிலையை எல்லோரும் எய்துகிறார்கள்.

**சந்தோஷம்**

# "சி"

இறைவனிடம் வந்து விட்டால் அல்லது இறைக் கனல், ஞானக் கனல் மனிதனிடமிருந்து பொங்கினால், வெளி வந்தால் நோய்கள், தீய குணங்கள், தேக பலகீனங்கள், மரண பயம், அடிமைத் தனம் மற்ற துன்பமெல்லாம் மறைந்து விடும்.

மெய்ஞ்ஞான உணர்வு வந்து விட்டால், மெய்ஞ்ஞான உணர்வு பிரகாசத்தில் வெளி வந்தால் உலகம் அதனிடமிருந்து விலகி விடும். மனிதனுடைய தலையாய குணம். கொல்லாமை என்ற குணம் அவனிடம் வந்து விடும்.

சதா சர்வ காலமும் மனிதன் தன் புத்தியை மெய்ஞ்ஞான ஒளி பொருந்திய நிலையில் மேலோங்கி இருக்குமாறு தன்னை இருத்திக் கொண்டு தவம் புரிதல் வேண்டும். சற்குருவாக விளங்குபவர் கோடானு கோடி மக்களுக்கு ஆசி வழங்குவார். சற்குருவிடம் சரணடைந்து விட்டால், இறைவனிடம் சரணடைந்ததற்கு ஒப்பாகும்.

மேலும் இறைவனிடம் சரணடைய வேண்டிய தேவையும் இல்லை. இதுவே போதும். சற்குரு வெட்டவெளியில் ஆனந்தமாய் இருப்பார். உலகைக் காத்து மகிழ்வார். அத்வைதமாய், ஆனந்தமாய் இருப்பார். உன்னையும் ஆனந்தமாக்கி, உன் வாழ்வையும் தன்னிடம் அழைத்துக் கொண்டு வாழ்க்கையையும் ஆனந்தமாக்குவார். கடவுளிடம் உன்னை அழைத்துச் செல்வார்.

இந்தத் திருக்கோயில் எப்போதும் அருட்கோயிலாக இருக்கும். உள்ளம் ஆத்ம ஞானத்தில் இருக்கும். கர்மா (விதி) சற்குருவிடம் இருக்கும். ஜீவன் அடைய வேண்டிய சிவகதி அதுவும் சற்குருவிடமே இருக்கும். ஆத்மா கடவுளிடம் இருக்கும். இவ்வுலகில் ஏதும் இராது. சற்குரு நிர்குண நிலையில் இருக்கின்றார். நிராமயம் அவர் சொத்து. அவர் நிச்சயமானவர். இதுவே அவர் நிலை. எல்லாவற்றிலும் நின்று இருப்பது ஒன்று. அதுவே 'சி'. அது உன்னிடம் தன்னைக் காட்டிக் கொள்ள வேண்டுமே தவிர, அதை உன்னால் அறிய முடியாது. சிகரத்தின் இரகசியம் எல்லா இரகசியத்தைக் காட்டிலும் உயர்ந்தது. உன்னால் அதை வெளிப்படுத்த இயலாது. அது தான் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும். அது எங்கும் இருக்கிறது. அதுவே எல்லாம். அது மகா விழிப்போடு சகலமுமாய், மகா சாந்தமாய், சத்தியமாய்ப் பரம சந்தோஷமாய். எங்கும் சாட்சிப் பொருளாய் உள்ளது.

இதை உணர்ந்து கண்டவன் அம்மயமாகின்றான். அது வரையிலும் தர்க்கமும், ஆர்ப்பாட்டமும், ஆவேசங்களும் ஜீவனிடம் இருந்தே தீரும். அது ஒன்றேயாகும். இன்னொரு "சி" கிடையாது. இரண்டற்ற ஒன்று அது.

இராப் பகலற்ற இடத்தைப் படைத்து அங்கும்-இங்கும், எங்கும் ஆனந்தமாய் உள்ளது. அந்த "சி"யை உன் சிரசின் உச்சிக்குள் அல்லது உன் மச்சுக்குள் சென்று சிந்தனை செய். மச்சு சுகம் கிடைக்கும். எச்சில் சுகமற்றுப் போகும்.

ஏகானந்தத்தில் ஏகமாய், ஏகத்தில் ஏகாந்தமாய் காலமற்று, மனமற்று, மாயை அற்று, சுத்த பரசிவானந்த நிலையில் சின்மயமாய் சிதாகாச வெளியில் சிங்காரமாய் ஆனந்த சயனத்தில் அனந்த கோடி பேரின்ப வெள்ளத்தில் பேசா மௌனமாய் சித் உருவாய் சுக - ஆரம்பப் பெரு வெளியாய் மனம், வாக்கு எட்டாத பேரின்பமயமாய் என்றும் பூரணமாய் நிறைந்து நிற்கிறது. அதுதான் "சி".

இந்த "சி" என்ற மகத்தான ஒன்றைத் தவத்தாலும், அன்பாலும், சற்குரு ஆசியாலும், பூரண சரணாகதி யாலுமே அணுக வாய்ப்புண்டு.

மனிதன் மாண்டு விடுவான். மறந்து விடுவான். நினைவற்று விடுவான். பேராசை - பேராசை மயமாய்ப் பிறந்து - பிறந்து இக - இன்ப - துன்பங்களில் அழுந்தி என்றும் உழன்றுக் கொண்டிருப்பான். இதுவே மனிதன். தெய்வம் அப்படியல்ல.

### சந்தோஷம்

*இருட்டறை மூலை யிருந்த குமரி*
*குருட்டுக் கிழவனைக் கூடக் குறித்துக்*
*குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி*
*மருட்டி யவனை மணம்புரிந் தாளே. - 1693*

*சாயுச் சியம்சாக் கிராதீதம் சாருதல்*
*சாயுச் சியம் உப சாந்தத்துத் தங்குதல்*
*சாயுச் சியம்சிவ மாதல் முடிவிலாச்*
*சாயுச் சியமனத்து ஆனந்த சக்தியே -திருமூலர் 1513*

# அனுமதிக்காதீர்கள்

(1) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும், உங்கள் தொப்புளில் கை வைக்க அனுமதிக்காதீர்கள்.

(2) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் தலையில் கை வைக்க அனுமதிக்காதீர்கள்.

(3) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் முகத்தில் மற்றவர்கள் முழுக் கையை வைக்க அனுமதிக்காதீர்கள்.

(4) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் உங்கள் தொண்டையைத் தொட அனுமதிக்காதீர்கள்.

(5) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் உயிர் நாடிகளைத் தொட அனுமதிக்காதீர்க்ள. இரு புருவங்களுக்கு இடையே உயிர் நாடிகள், புறங்காலுக்கு இடையே உயிர் நாடிகள் மற்றும் பல உயிர் நாடித் தலங்கள் உள்ளன.

(6) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் புருவ மத்தியைத் தொட கட்டாயம் அனுமதிக்காதீர்கள். உறவு, நட்டு யாராக இருந்தாலும் சரி.

(7) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் பிடரியைத் தொட அனுமதிக்காதீர்கள். மெய்ஞ்ஞான உலகத்து எழுச்சி விழிப்பு விளக்கம் தோன்றுதல் அந்த இடத்தில் தான்.

(8) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் உங்களுடைய மர்ம தலங்களைத் தொடவோ, பார்க்கவோ நிச்சயம் அனுமதிக்காதீர்க்ள.

(9) யாரையும், எந்தக் காரணத்தைக் கொண்டும் உங்கள் அலைவு சக்தியை கண்டு கொள்ளவோ, கணக்கிடவோ அதைப் பற்றி விளக்கம் கூறுவதற்கோ அனுமதிக்காதீர்கள்.

(10) யாரையும், எந்தக் காரணத்தைக் கொண்டும் உங்களுடைய மூலாதாரத்தைத் தொடுவதற்கோ, ஸ்பரிச தீட்சை கொடுப்பதற்கோ அனுமதிக்காதீர்க்ள. மனிதர் அவ்விடத்தைத் தொட்டால் அவ்விடம் பேதலித்து விடும். உங்கள் வாழ்க்கை நசிந்து விடும்.

(11) உங்கள் விதியின் வல்லமையில் துர்சக்தி, துர்புக்தி வேகமாக உங்களுள் ஒரு நொடியில் பாய்ந்து உங்கள் வாழ்வைப் பாழாக்கி விடும். எக்காரணத்தைக் கொண்டும் உங்கள் விதியில் கை

வைக்க யாரையும் அனுமதிக்காதீர்கள்.

(12) எந்தக் காரணத்தைக் கொண்டும், யாருக்காகவும் கடவுளை நிந்தனை செய்யாதீர்கள். தூற்றாதீர்கள். நீங்கள் படும் ஒவ்வொரு துன்பத்திற்கும் ஒவ்வொரு அசைக்க முடியாத காரணம் உள்ளது. காரணத்தை அறியாது கதறுகிறீர்கள். காரணம் அறிந்தால் மௌனமாவீர்கள்.

கடவுளை மௌனத்தால் வணங்குங்கள். கடவுளை மௌனத்தால் போற்றுங்கள். கடவுளை மௌனத்தால் தண்டனிடுங்கள். மாயையால் வணங்காதீர்கள். அகங்காரத்தால் வணங்காதீர்கள். பொய்யால் வணங்காதீர்கள். சூதாக வணங்காதீர்கள்.

கடவுளை வணங்குங்கள், தவத்தால் வணங்குங்கள். அன்பால் வணங்குங்கள். இந்தப் பணி உங்கள் இறுதி மூச்சு வரை தொடர்ந்து நீடிக்கட்டும்.

(13) ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் உங்களை யாரும் தொடா வண்ணம் நீங்கள் உங்களைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

(14) யாரையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் உங்கள் ஆத்ம நாதத்தைத் தொட்டு விடாது பார்த்துக் கொள்ள வேண்டும்.

(15) கடவுளை அறியாதவர்கள், காணாதவர்கள், கடவுள் தரிசனம் பெறாதவர்கள், உணராதவர்கள், நினைக்காதவர்கள் ஆகிய எல்லோரும் தங்களைக் கடவுள் என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

இன்றைய மனிதனால் யாரையும், யாருடைய விதியையும் மாற்ற முடியாது. பேச்சைக் கண்டு மயங்கி விடாதே. அது பெரும் பள்ளத்தில் தள்ளி விடும்.

உங்கள் சிவ யாத்திரையின் போது சித்துகள் வரும். அசித்துகள் விலகி விடும். அஷ்டமா சித்துகள் வரும். ஆனால் சிவம் பல மர்மங்களைத் தனக்காக வைத்திருக்கிறது. அதை யாரிடமும் வெளிப்படுத்தாது.

மனிதன் தாறுமாறாகத் தம்பட்டம் அடித்துக் கொள்கின்றான். அது அவனுடைய அறியாமை. மற்றவர்களுடைய விதியோ, துர்புத்தியோ, துர்நாற்றங்களோ துர்சக்தியோ உங்களிடம் வரச் சற்றும் அனுமதிக்காதீர்கள்.

## சந்தோஷம்

# அனுமதியுங்கள்

(1) ஆத்ம ஞானிகள் அருள் அலைவு சக்திகள் உங்கள் மீது படும்படி அனுமதியுங்கள்.

(2) மூலிகையின் அலைவு சக்திகள் உங்கள் மேல் பட அனுமதியுங்கள்.

(3) உங்கள் ஜீவன் விழிக்க, விழிப்புற்று நிற்க அனுமதியுங்கள்.

(4) உங்களிடம் ஞான சக்தி வளர, வினையாற்ற அனுமதியுங்கள்.

(5) சற்குரு ஆசி உங்கள் லலாடத்தைத் திறக்க அனுமதியுங்கள்.

(6) ஆகாயத்தில் அசரீரி கேட்கும். பர நாதம் வெளிப்படும். அது உங்களுக்காக வெளிப்படுகிறது. அதைக் கேட்க அனுமதியுங்கள். அதைக் கேட்கத் தயார் செய்து கொள்ளுங்கள்.

(7) வெட்டவெளியில் விளையாடும் சித் சக்திகளைக் காண நீங்கள் அனுமதியுங்கள்.

(8) உங்கள் பாவ வினைகள், சாப வினைகள் உங்களிடமிருந்து விலக அனுமதியுங்கள்.

(9) அண்டவெளி சகதியைக் காண நீங்கள் ஜீவ விழிப்பு பெற வேண்டும். எங்கும் நிறைந்த பரசாந்த மௌனத்தை உங்களுக்குள் வர அனுமதியுங்கள்.

(10) வெட்டவெளியில் உங்கள் தேகத்தைக் கிடத்துங்கள். உங்கள் புத்தியை விலக்கி விடுங்கள். உங்கள் உலக அனுபவம் ஞானத்திற்கு உதவி புரிய இயலாது. அதை உங்களிடமிருந்து விலக அனுமதியுங்கள்.

(11) பிரம்மரந்திரத்தின் ஜவ்வு விலகிடும். அதை விலக அனுமதியுங்கள்.

(12) கபாலத்தில் ஜோதியுள்ளது. அதைக் காண உங்களை நீங்களே அனுமதியுங்கள்.

(13) ஒரு காலத்தில் உங்கள் ஜீவ யாத்திரை உயர் மெய்ஞ்ஞான நிலைக்கு வரும். ஆத்ம தரிசனம் கிடைக்கும். அதையும் அனுமதியுங்கள்.

(14) உங்கள் மரணம் உங்கள் கதவைத் தட்டும். அந்தக் கதவை அழகாகத் திறவுங்கள். மரணத்தை அன்போடு வரவேற்று, உபசரித்து அதைக் குருவாக ஏற்றுக் கொள்ளுங்கள். அது மகா இரகசியத்தை வெளிப்படுத்தும். மரண இரகசியத்தை வெளிப்படுத்தும். உங்களை, உங்கள் கை பிடித்து அருள் வெளிக்கு அழைத்துச் செல்லும். அதை அனுமதியுங்கள்.

(15) மரணத்தைக் கண்டு பயப்படாதீர்கள். உங்களுக்கு நோய் வரலாம். அதைக் கண்டு வேதனைப் படாதீர்கள். பயப்படாதீர்கள். எல்லாம் நடக்கும். எதுவும் நடக்கும். எங்கும் நடக்கும். எப்போது வேண்டுமென்றாலும் நடக்கும்.

அதனிடம் அன்பு செலுத்துங்கள். ஆசை, பாசத்தால் பாருங்கள். இந்த சாதனையில் நீங்கள் வெற்றி பெறுங்கள். அது உங்களுக்கு உங்களிடம் வந்து கதை சொல்லும்.

நீங்கள் ஆற்றிய வினை, வினைகளின் எதிர் வினைகள், விதிகள் - தாம் எவ்வளவு நாட்கள் இங்கு இருக்கப் போகிறோம். என்னென்ன வினைகள் ஆற்றப் போகின்றோம்? அதன் பயன்கள் என்னென்ன என்பதைச் சொல்லும்.

அவைகள் நிறையப் பாடங்கள் சொல்லிக் கொடுக்கும். அது உங்கள் ஜீவ யாத்திரைக்கு நற்பயன்களைக் கொடுக்கும். உங்கள் விதியைப் (கர்மா) பேச விடுங்கள். அதை விழிக்க விடுங்கள். அது உங்களுக்குத் தெரியாமல் உங்களிடமிருந்து உங்களை வழி நடத்திச் செல்கிறது. அதனுடன் நட்புக் கொள்ளுங்கள். அதனுடன் பழகுங்கள். அதனிடம் அன்பு செலுத்துங்கள்.

அது உங்களிடம் பேசும். உங்களிடம் உங்கள் ஆதியிலிருந்து - அந்தம் வரை சொல்லும். பிறகு அந்தத்திலிருந்து - ஆதி வரை சொல்லும். பிறகு உங்களை நீங்களே தெரிந்து கொள்வீர்கள்.

உங்கள் தலையெழுத்தை அது உங்களுக்குப் படித்துக் காட்டும். பிறகு அதை நீங்களே படிக்கக் கற்றுக் கொடுக்கும்.

முழுமையாகப் பார்த்தால் எல்லாவற்றோடும் நீங்கள் பேசலாம். பூமியோடு பேசலாம். நீரோடு பேசலாம். நெருப்போடு பேசலாம்.

காற்றோடு பேசலாம். மரம், செடி, கொடிகள், மிருகங்களோடு, உங்களோடு நீங்கள் பேசலாம்.

எல்லாம் மௌனமாகச் செயல்படுகின்றன. நீங்கள் பேசுகிறீர்கள். உங்கள் பேச்சை நிறுத்தினால், மற்றவைகள் உங்களிடம் பேசும். அக உலகப் பேச்சு வெளிப்படும். அக உலகப் பேச்சுடன் மற்ற எல்லாவற்றுடனும் பேசலாம். ஏனென்றால், மனிதனைத் தவிர மற்றெல்லாம் சத்தியத்தோடு வாழ்கிறது. சத்தியத்தோடு செயல்படுகிறது.

நீ வாழ்க.

**சந்தோஷம்**

# வழிப்போக்கன் சொல்லியது

நான் குடிகாரன் மத்தியில் நின்று தியானம் செய்வேன். சந்நியாசிகள் மத்தியில் தியானம் செய்வேன். பெண்கள் மத்தியில் உட்கார்ந்து தியானம் செய்வேன். நான் மலைகளில் உட்கார்ந்து, என் இறைவனை வணங்குவேன். கங்கைக் கரையில் உட்கார்ந்து, என் தெய்வத்தை வணங்குவேன். கணிகைகள் மத்தியல் பகவானை வணங்குவேன். குழந்தைகள் மத்தியில் வையகத்துத் தலைவனை வணங்குவேன். ஆயிரம் நச்சு அரவங்கள் மத்தியிலிருந்து என்னைப் படைத்தவனை வணங்குவேன். நூறு திருடர்கள் மத்தியிலிருந்து ஆண்டவனை வணங்குவேன். அதது அதன் வேலையைச் செய்து கொண்டிருக்கும். நான் என் வேலையைச் செய்து கொண்டிருப்பதில் எனக்கு நான் ஊக்கம் கொடுத்துக் கொண்டிருப்பேன். ஆகவே, எதன் வினையும் குறை கூறாது அதது அதன் வினையையாற்றிக் கொண்டிருக்கிறது. நீங்கள் அருள் வினையை ஆற்றுவதில் முழுக் கவனத்தை நிலை நிறுத்துங்கள்.

# பிருந்தாவனத்திற்கு வா

இந்த மண்ணுலகத்தில் கடவுளை அடையும் வினையும் நடந்து கொண்டிருக்கிறது. புண்ணிய வினையும் நடந்து கொண்டிருக்கிறது. கடவுளை அடையப் புண்ணிய வினையும் நடந்து கொண்டிருக்கிறது. தவங்கள் நடந்து கொண்டிருக்கிறது. மகா சந்தோஷமான வினைகள் நடந்து கொண்டிருக்கிறது. உயர்ந்தோர் நடமாடுகின்றார்கள். உத்தமர்கள் நடமாடுகின்றார்கள்.

மனித உருவில் தெய்வம் நடமாடிக் கொண்டிருக்கிறது. மகோன்னதமான மாமனிதன் நடமாடுகிறான். கடவுள் நடமாடுகிறது. சிவம் வெளிப்படும் வினை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. யோகிகள், சித்தர்கள், சாதுக்கள், சந்நியாசிகள், தவ சிரேஷ்டர்கள் எல்லோரும் தங்கள் வினையைக் கண்ணும், கருத்துமாய் ஆற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

எங்கும் திருப்தி. எங்கும் திருப்தி. எங்கும் நிம்மதி. எங்கும் நிம்மதி. எங்கும் அமைதி. எங்கும் பேரமைதி. எங்கும் தூய்மை. எல்லாம் உண்மை. எல்லாம் பேருண்மை. உச்சிக்குள் சிவதரிசனம், உதடுக்குள்ளே சிவானந்தச் சொற்கள்.

இதயத்திற்குள்ளே மகா ஜீவ காருண்யம் மகா பேரொளி. கரங்கள் எல்லாம் கையெடுத்து, காணும் இடமெல்லாம் கடவுளைக் காணக் கையெடுத்து வணங்குகிறது.

காலெல்லாம் ஆனந்த தபோவனத்தில் நடை பயில்கின்றன.

மண்ணிலே ஒரு கைலாயம் உள்ளது. கைலாயம் அடைய வினையாற்றப்படுகிறது.

*"ஏ மனிதனே! நீ அங்கு போ*
*அந்த மெய் உணர்வாளனிடம் கலந்து விடு.*
*உன் கட்டையைத் தந்த தபோவனத்திற்கு அழைத்துச் செல்.*
*அது உனக்குப் பிருந்தாவனம்.*
*அது உனக்கு நந்தவனம்.*
*அது உனக்குச் சொர்க்க லோகம்."*

இதே மண்ணுலகில் இதற்கு எதிர்மாறான வினைகள் மனிதர்களால் செயல்படுத்தப் பட்டுக் கொண்டிருக்கிறது. அதிலிருந்து விடுபடு - விடுபடு - விடுபடு. இந்த தபோவனத்தில், இந்த ஞான சாதனை உலகத்தில் ஐக்கிய மடைந்து விடு. உனக்கு வெற்றி. வெற்றி. வெற்றி. வெற்றியால் - சுகத்தையும் அனுபவிப்பாய். நீ தெய்வமாவாய்.

இந்த உலகத்திலிருந்து ஓடிப் போ. மெய் உலகம் மண்ணில் உள்ளது. அது பூரணமாக, பரிபூரணமாக எங்கும் முழுமையாய் உள்ளது. இதை நோக்கி மிக வேகமாக ஓடி வா. ஓடோடி வா. உன் உள்ளே எழுகின்ற ஞானக் கனலை அருளாளர்கள் கண்டு கொள்வார்கள். உன்னை வரவேற்க இருக் கரங்களை நீட்டி ஆனந்தச் சிரிப்போடு காத்திருக்கிறார்கள். வேகமாக ஓடோடி வா. உன் ஜீவ யாத்திரை மகா சுப ஆனந்த நிலையில், பரசுப ஆனந்த நிலையில் வெற்றி பெறும்.

வா-வா, வா-வா, வா-வா.

உனக்கு ஆனந்தமான பேரின்ப வாழ்வு காத்திருக்கிறது.

வா-வா-வா.

ஞான வைராக்கிய மண்ணில் உள்ள விண்ணுலகத்திற்கு வா-வா-வா. விண்ணுலகம் தன் மணிக் கதவுகளை உனக்காகத் திறந்து வைத்து காத்துக் கொண்டிருக்கிறது. வேகமாய் வா. ஓடோடி வா, ஒய்யாரமாய் வா, வெற்றிக் களிப்போடு வா.

பிறவியே துன்பம் என்று நினைத்த நிலைமாறி இப் பிறவியிலே இன்பம் என்ற நிலை வந்து சேரும். இப்பிறவியிலே உனக்கு உன் ஜீவ யாத்திரையை நிறைவு செய்து வெட்ட வெளியில் உன்னை அழைத்துக் கொண்டு வந்து விடும். இதுவே இப்பிறவி உனக்குத் தரும் கல்யாணக் பரிசாகும். விண்ணிலிருந்து மண்ணுலகம் ஆள்வாய், காண்பாய் வா. ஓடோடி வா. உனக்கு நிகர் யாருமில்லை. உன்னை யாராலும் வெல்ல முடியாது.

இங்கு உனக்குப் பகைவன் இல்லை, இடையூறு இல்லை. தடைகள் இல்லை. எழுந்திரு. உனக்கு முன்பு ஞான சூரியன் பிரகாசமாய் இருந்து கடவுளின் அந்தர்மயமாய் உள்ளான்.

புறப்படு. ஓடோடி வா. அதோ பார் சாக்கடையில் புழு நெளிகிறது. சாக்கடை அதற்குச் சுகமாய் உள்ளது. அதன் அறியாமை அதற்குப் போலி சுகம் அளிக்கிறது.

அதோ பார் இன்னொரு புழு கடும் வெயிலில் துடியாய்த் துடிக்கிறது. அதோ பார் ஒரு பாம்பு தவளையை விழுங்குகிறது. தவளை மரண அவஸ்தையில் உள்ளது. அதோ பார் ஒரு ஆட்டை மலைப்பாம்பு விழுங்குகிறது. அந்த ஆடு படும் மரணத் துடி-துடிப்பைப் பார்.

ஒரு யானை ஒரு மனிதனைப் போட்டு மிதியாய் மிதிக்கிறது. அவனுடைய மரணவோசையைக் கேள். அதோ பார் புலி மானை வேட்டையாடுகிறது. மான் படும் துன்பத்தை, மரண அவஸ்தையை பார். அதோ பார் மீன்களை முதலை விழுங்குகிறது.

கடவுள், வருகின்ற அத்தனை ஜீவனுக்கும் மரணத்தைக் கொடுத்திருக்கிறது.

அதோ பார் பருந்து பறந்து கொண்டிருக்கிறது. அதன் வாயில் புழு, கோழிக் குஞ்சு, பல்லி, மீன்கள் எல்லாம் இருக்கின்றன. அவைகள் படும் மரண துயரத்தைப் பார்.

அதோ பார் மனிதனே, மனிதனை அழித்துக் கொண்டு இருக்கின்றான். மனித வாழ்வையே நாசப்படுத்திக் கொண்டிருக்கின்றான். தர்மத்தை அழிக்கின்றான். எல்லோருக்கும் துன்பத்தைக் கொடுக்கின்றான். பிறகு தானே துன்பத்தை அனுபவிக்கின்றான்.

அதோ பார் புயல். பெரிய புயல். சூறாவளிக் காற்று, மரம், செடி, கொடிகள் எல்லாம் மரண வேதனையில் துடியாய்த் துடிக்கின்றன.

அதோ பார் பூகம்பம். எல்லா மனிதர்களையும், ஜீவ ராசிகளையும் அழிக்கிறது.

அதோ பார் அக்னி. எல்லாவற்றையும் சாம்பலாக்குகிறது. அதோ பார் ஆயிரக் கணக்கான இடிகள் விழுகின்றன. உயிர்கள் படும் மரணத் துடி-துடிப்பை, வேதனையைப் பார்.

அதோ பார் முதுமை. நோய் உன்னை ஒவ்வொரு நிமிடமும் அழித்துக் கொண்டிருக்கிறது.

அதோ பார் எல்லாம் அழிவு, எல்லாம் சோகம், எல்லாம் வேதனை, எல்லாம் பெருந் துன்பம்.

இந்த உலகத்திலே நீ வாழ விரும்புகிறாய். இங்கு அறிவு நிறைந்த முட்டாள்களும் உண்டு. முட்டாள் தன்மை நிறைந்த அறிவாளிகளும் உண்டு. உன் விதியே - உன்னை முட்டாளாக, உன்னை அறிஞனாக ஆக்குகிறது.

ஆகவே இந்த உலகத்திலிருந்து உடனே ஓடி வா. மண்ணுலகத்திலிருந்து விண்ணுலகத்திற்கு வா. தபோவனத்திற்கு வா. பிருந்தாவனத்திற்கு வா.

யோகிகள், தவசிரேஷ்டர்கள் உனக்குத் துன்பமற்ற, ஞான வாழ்வு அளிக்க, ஆன்மிக வெற்றி தர உனக்காக காத்திருக்கிறார்கள். வா-வா-வா.

ஓடோடி வா. மலையின் உச்சியிலிருந்து கீழே விழாதே. உனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அற்புதமான வாய்ப்பை இழந்து விடாதே. என்னை நோக்கி வா. பரமானந்த உலகிற்கு வா. சுகம் நிறைந்த சுப ஆனந்த உலகை நோக்கி வா.

நீ ஆணும் அல்ல, பெண்ணும் அல்ல, அலியும் அல்ல. ''நீ ஆத்மா''. கடவுளின் ஒரு பொறி. ஞானப் பொறி. இந்த ஞானப் பொறிக் கனல் உன்னுள் வெளிப்பட்டால் நீயே ஆனந்தமாவாய். நீயே எல்லாம். வாழ வா, வாழ - வா, வாழ - வா. வாழ்ந்து காட்டு.

சந்தோஷம்

# கைலாயக் கோயில், இயற்கைத் திருவிளையாடல்

ஒருநாள் இரவு 8.00 மணி இருக்கலாம். கடும் சூறாவளிக் காற்று வீசத் தொடங்கியது. அது அதிகமானது. சுழன்று - சுழன்று வீசியது. மக்கள் தடுமாறினார்கள். மாடுகள் வேகமாக ஓடின. கருமேகம் சூழ்ந்தது. வானத்தில் ஜாலங்கள் நடந்தன. மின்னல்கள் ஒன்றன்பின் ஒன்றாக மாறுபட்ட திசையில் தோன்றின. மழை பெய்யத் தொடங்கியது.

ஒலியும், ஒளியும் ஆனந்தத்தாண்டவம் ஆடியது. பிறகு, ருத்ரதாண்டவம் ஆடியது. தாண்டவக் கூடம் இங்கு உள்ளதல்லவா? இடிகள், நூற்றுக்கணக்கான இடிகள் வெளிப் பட்டன. மக்கள் எல்லோரும் அச்சத்தால் ஆங்காங்கே கூடினர்.

எங்கு இடி விழப்போகிறதோ? அங்கு 15 அடி தூரத்தில் ஒரு சுவாமி உட்கார்ந்திருந்தார். மௌனமாக உட்கார்ந்திருந்தார். கைலாயக் கோயில் முழுதும் தண்ணீர் நிறைந்திருந்தது. நாங்களும் உட்கார்ந்திருந்தோம். "இப்போது இங்கு நடக்கும் இயற்கைத் திருவிளையாட்டைக் கவனி" என்று சுவாமிஜி சொன்னார். அறை குறை கவனத்தோடு காதில் வாங்கிக் கொண்டு நாங்கள் உட்கார்ந்து இருந்தோம்.

இடிகள் பேரிடிகளாக மாறின. விழுந்த ஒரு இடி பெருமாள் சன்னதியில் த்வஜஸ்தம்ப கம்பி அருகே வீழ்ந்தது. வெளீர் மயமான நீல ஒளி 10,000 வாட்ஸ் மின்னொளியைவிட அதிகமாக இருக்கும். சுவாமிகள் மௌனமாக இருந்தார். யாருக்கும் எந்தச் சேதமும் இல்லை. உயிர்ச் சேதமும் இல்லை.

ஜீவர்களின் வாழ்க்கையில் விழும் இடியைவிட இது சிறப்பானது. இந்த இடியை எல்லோரும் பார்த்தார்கள். மின் விளக்கு நின்றுவிட்டது. எல்லாம் இருள் மயம்.

ஜீவ யாத்திரையில் ஜீவர்கள் இந்தப் பிறவியில் எத்தனையோ வியக்கவொண்ணா இயற்கைக் கொடூரங்கள், அன்பு வினைகள், அழகு, ஆனந்தம், பேரானந்தம், பேரழகு இவைகளைக் காணுகின்றனர். கண்டு மலைக்கின்றனர்.

**சந்தோஷம்**

# கைலாய யாத்திரை

கைலாயம் என்பது கடவுளின் மகா சந்நிதானம் ஆகும். கடவுளின் எல்லையற்ற பரசொரூப, சித் சொரூப, மெய்ஞ்ஞான சிவ விழிப்புடைய திருத்தலமாகும். இங்கே விதி என்பது ஒன்றுமில்லை. விதி கடந்த ஒன்று, விதியை விட்ட ஒன்று, விதியில்லாத ஒன்று, உலகம் கடந்த ஒன்று, எதுவோ எங்குமாய் விளங்குவது எதுவோ அதற்குள்ளே அதன் திருக்கரம் பற்றித் தன் சக்தியை வைத்துக் கொள்ளுதல் கைலாய யாத்திரையாகும்.

பேச அறியா, பெரிய மௌனம் படைத்தது அது. அதன் மௌனக் குரலைக் கேட்கும் பாக்கியம். அந்தக் கைலாய யாத்திரையில் கிடைக்கிறது. ஜீவன் என்ற விருதை விட்டு விலகும் போது கைலாய யாத்திரை தொடங்குகிறது. கைலாய யாத்திரைக்கு வெட்ட வெளி யாத்திரை, மகா மண்டல யாத்திரை, மகா திருமட யாத்திரை, ஆதி மூல அருட் சிவ யாத்திரை, சித் வெளியாத்திரை என்று பல நாமங்கள் உள்ளன.

கைலாய யாத்திரைக்கு உலக காலம் கிடையாது. கால நிமித்தங்கள் கிடையாது. எங்கும் நின்றிலங்கும் அது எச்சொரூபமோ, அந்தச் சித்ரூபமாக இந்த ஜீவனுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. கண்டது கடவுள் காட்சி, கொண்டது கடவுள் காட்சி, விண்டது கடவுள் காட்சி. அநேகம் என்ற நிலையில்லாத ஒன்று.

ஒவ்வொரு ஜீவனும் யாத்திரை முடிக்கும் போது அல்லது நிறைவேற்றும் போது கைலாய யாத்திரை பெறுகிறது. இதுவரை செய்கின்ற யாத்திரையில் கைலாய யாத்திரை தான் தங்க, வைர முடியில் கையளவு மாணிக்கக் கல் பொருந்தியது போன்று, அதை விட 1000 மடங்குக்கு ஒப்பான யாத்திரையாகும்.

இந்த யாத்திரையில் பொருட் செலவில்லை. தேகத்திற்கு வேலையில்லை. பிராணனுக்கு வேலையில்லை. பஞ்ச கோசங்களுக்கு வேலையில்லை. நாடி, நரம்பு, இரத்தத்திற்கு வேலையில்லை. இந்த யாத்திரைக்கு இன்னொரு ஜீவனின் உதவி தேவையில்லை. எல்லாம் அதுவே அழகாக இந்த ஜீவனுக்கு அந்த ஜீவன் யாத்திரை செய்வதற்கு அனைத்து சக்தியும் தந்து ஒளி மிகுந்த யாத்திரையாக, சிவ வெளியின் யாத்திரையாக அது இதற்காக இதை அழைத்து முடிக்கிறது.

**சந்தோஷம்**

# ஆகாயக் காலம்

24 மணி நேரம் அல்லது 60 நாழிகை கொண்டது ஒருநாள். இந்த ஒரு நாளில் பூமிக்கேற்ற காலம் என்று உண்டு. நீருக்கேற்ற காலம் உண்டு. அக்னிக்கேற்ற காலம் உண்டு. ஆகாயக் காலமுண்டு.

இந்த பஞ்சபூத காலங்களில், இந்தக் காலத்தில்தான் இன்னென்ன காரியங்கள் செய்ய வேண்டுமென்ற நியதிகள் உள்ளன. உலகக் காரியமெல்லாம் பூமி காலத்திலே, நீர் காலத்திலே செய்யலாம்.

பஞ்ச பூதங்களில் ஒரு நாளைக்குள் அதாவது 24 மணி நேரத்தில் 2 முறை அதாவது பகலில் ஒரு முறை, இரவில் ஒரு முறை ஐந்து காலமும் வரும்.

ஆத்ம சாதனைக்கு, ஜீவ யாத்திரை பரமானந்த நிலையில் தங்கு தடையின்றி, இடையூறின்றிச் செய்வதற்கு ஆகாய காலமே சிறந்த காலமாகும். இந்த ஆகாய காலம் இரவு 3.40 மணி தொடங்கி காலை 8.28 மணிக்கு நிறைவுறுகிறது. அந்த ஆகாய காலம் வந்த உடனே கடவுள் உணர்வு உள்ள எல்லா ஜீவன்களும் தானாக விழித்துக் கொள்ளும். விழிப்பு தானாகவே வந்துவிடும்.

காமியார்த்த ஜீவன்கள் மும்மலம் உள்ளவர்கள், இரஜோ குணம் நிறைந்தவர்கள், தாமச குணம் மேம்பட்டவர்கள் ஆகிய அனைவரும் அந்த நேரத்தில்தான் தூங்கத் தொடங்குவார்கள்.

கடவுளை உணர ஆன்மீகத்தில் வெற்றி பெற, கடவுள் தரிசனம் பெற - ஆகாய காலமே சிறந்தது மட்டுமல்ல, அந்தக் காலம் ஒரேகாலம்தான் உள்ளது. அதில்தான் நின்று சாதனை செய்ய வேண்டும்.

பறவைகள் விழித்துக் கொள்கின்றன, மீன்கள் விழித்துக் கொள்கின்றன. ஞானிகள், யோகிகள், சித்புருஷர்கள் தானாகவே விழித்துக் கொள்வார்கள். திருமூலரும் இந்தக் கருத்தை வலியுறுத்துகிறார். ஆகாய காலத்தில் சாதனை செய்தால் வெட்ட வெளியைத் தரிசிக்கலாம். வெட்டவெளியாகலாம்.

வெட்டவெளியில் - திருப்பணி, திருவினைகள் எது செய்தாலும் அது வெற்றிக்கே கொண்டு விடும்.

ஆகாய காலத்தில் ஒரு மாபெரும் சக்தி வெளிப்படுகிறது. அமுதக் காற்று அங்கிருந்து வருகிறது. அந்தக் காற்று, தேகத்திற்கும், ஆத்மாவிற்கும், நன்மை புரிகிறது. ஞானிகள் அதைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். வழிபாட்டில் ஆகாய வழிபாடு முதன்மையானது. சாலச் சிறந்தது. பயன் உள்ளது. சிறப்பானது.

ஆகாய வழிபாட்டின்மூலம் இயற்கையைத் தத்ரூபமாக உணர்ந்து கொள்ளலாம். அதற்கு அப்பால் உள்ள வெட்ட வெளியைச் சார்ந்து கலந்திட வாய்ப்புகள் உள்ளன.

சந்தோஷம்

என்னடா வாழ்க்கையென்று பல ஜீவன்கள் தங்கள் வாழ்க்கையில் பட்டதுன்பங்கள், சோதனைகள், வேதனைகள் தாங்க முடியாமல் நொந்துபோய் கடற்கரை மணலில் உட்கார்ந்து கொண்டு அல்லது வீட்டின் மூலையில் உட்கார்ந்து கொண்டு தலையில் கை வைத்துக் கொண்டு, தான் உலகத்தில் வந்ததிலிருந்து இன்று வரை நடந்ததையெல்லாம் நினைத்துப் பார்த்து, தொகுத்து அதன் பிறகு வாயிலிருந்து வரும் வார்த்தை என்னடா வாழ்க்கை? இதுவென்று - இப்படிப் பல ஜீவன்கள் தங்கள் யாத்திரையில் ஒரு கால கட்டத்தில் இப்படிச் சொல்லுகின்றன.

# வெட்ட வெளி

வெட்டவெளி உன் கையில், உன் பையில், உன் வாழ்வில். உனக்கு மேலே, உனக்குக் கீழே. உன் எல்லாப் பக்கங்களிலும் கோடானு கோடி மைல்கள் எல்லையில்லாப் பெரு வெளியாய் உள்ளது. அது மகா சுபமானது. விழித்துக் கொண்டு உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. அதைப் பார். நுண்ணறிவால் அதைப் பார். நுண்ணுணர்வால் அதைப் பார். அங்கு தான், வெட்ட வெளியில் தான், படைப்புத் தொழில் நடை பெறுகிறது. அமிர்தம் அங்குதான் உள்ளது. உன்னைப் படைத்தது வெட்ட வெளி தான். உன்னைப் பேச வைப்பதும் வெட்ட வெளிதான். பிறகு உன் பேச்சை ஒரே நொடியில் நிறுத்தி விடுவதும் வெட்ட வெளிதான்.

மண்ணுக்குள் ஆடிய உன்னை மண்ணுக்குள்ளே புதைத்து விடுவதும் வெட்டவெளிதான். உன் உடல் - பஞ்ச பூதத்தில் உயிர் - வெட்டவெளியில்.

*"வெட்டவெளியில் நீ தெரிந்து கொள்ள*
*வேண்டியதெல்லாம் உள்ளது.*
*உன் வாழ்வு வெட்ட வெளியில் உள்ளது.*
*உன் சிரிப்பு உன் சந்தோஷம் உன் உறவுகள் எல்லாம்*
*வெட்டவெளியில் உள்ளன.*
*உன் பிறப்பு, உன் மரணம் வெட்டவெளி யாவும்,*
*வெட்டவெளியில் உள்ளது.*
*யாம் வெட்டவெளியில் உள்ளோம் நீயும் வரலாமே! "*

**சந்தோஷம்**

# ஓங்காரம்

ஓங்காரம் ஆனந்தமாய் எங்கும் ஒளி விட்டுச் சுகானந்த ஒலியோடு சதா சர்வ காலம் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. ஆத்மாவில் மகா விழிப்போடு உள்ளது. பிண்டமெல்லாம் அப்படியே. எல்லா அண்டங்களிலும் அப்படியே உள்ளது.

அகிலாண்ட அண்டங்களிலும், பிரம்மாண்ட, மகா பிரம்மாண்ட அண்டங்களிலும் ஓங்காரம் ஈடு இணையற்ற சுபமான, சுகமான நிலையில் 7 கோடி சூரிய பிரகாசத்துடன் ஒளி விட்டுக் கொண்டு உள்ளது. அதிலிருந்து அகரம் காட்சி அளிக்கிறது. உகரம் வருகிறது. மகரம் காட்சியளிக்கிறது.

இம்மூன்றும் ஜீவ யாத்திரை நிறைவின் போது தரிசனம் செய்கிறது. அதற்கு முன்பு அது சொர்ண தேகமாக உருவெடுக்கிறது. சொர்ண தேகம் அருள் தேகமாகிறது. அருள் தேகம் ஓங்கார ஆனந்த தேகமாக மாற்றப்படுகிறது.

ஓங்கார தரிசனத்தைப் பெறுகிறது. பிறகு ஏகமாகிறது. பிறகு ஓங்காரமாய், பரசிவமாய், சிவானந்தமாய் தரிசனம் பெறுகிறது. மாற்றம் அடைகிறது.

அதன்பிறகு தானே எல்லா ஜீவனுக்கும் தரிசனம் கொடுக்கிறது. தரிசனம் கண்டது பிறகு தரிசனம் கொடுக்கிறது.

தானே தரிசனமாகிறது. எது தரிசனம் பெற்றதோ பெற்ற தெல்லாம் தரிசனம், ஆனந்தமாய், சுப யோகத்தில் நின்றிலங்கும். ஆக, இந்த ஜீவ யாத்திரையின் நிறைவு நிலை வருவதற்கு ஜீவன் செய்கின்ற வினைக்குப் பெயர் "சிவயோகமாகும்".

"சி" என்ற ஒன்று மார்க்கங்களற்றது. மதங்களற்றது. மனித அறிவுக்கு, கற்பனைக்கு அப்பாற்பட்டது.

**சந்தோஷம்**

# சர்வம் பூரணம்

சர்வம் - பரிபூரணம். சர்வம்-ஏகம், ஏகம், ஏகம். சர்வம் - ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம். சுபம் - சுபம்-சுபம், நித்தியம்-நித்தியம்-நித்தியம். சாந்நித்யம் - சாந்நித்யம் - சாந்நித்யம், சன்னிதானம் - சன்னிதானம் - சன்னிதானம், சந்தோஷம் - சந்தோஷம் - சந்தோஷம், சுந்தரம் - சுந்தரம், சுந்தரம், சிவம் - சிவம் - சிவம், சிவானந்தம் - சிவானந்தம் - சிவானந்தம். சர்வம் - பரசிவானந்தம் - பரசிவானந்தம் - பரசிவானந்தம் , சர்வம் - மங்களம் - மங்களம் - மங்களம். சர்வம் - மங்கலம், மங்கலம் - மங்கலம்.

பரமனாந்தம், ஏகானந்தம், சுகம் - சுகம் - சுகம், சுகோதயம் - சுகோதயம் - சுகோதயம். சுப ஆனந்தம். வெட்ட வெளி - வெட்டவெளி - வெட்டவெளி ஆனந்தம். சம்பூரணம், நித்யம், சர்வம் - சற்குரு, சற்குரு, சற்குரு. சிவமயம், பேரானந்தம், பிரம்மானந்தம். சர்வமும் - கடவுள், கடவுள், கடவுள்.

சந்தோஷம்

# பூஜ்யஸ்ரீ

போய்க் கொண்டிருந்தது. போய் கொண்டிருந்தது. எங்கும வெளி. எல்லாம் வெளி. போய்க் கொண்டிருந்தது. எங்கும் வெளிர் ஒளி. வெளிர் ஒளி. வந்து கொண்டிருந்தது. வந்து கொண்டிருந்தது. கோபுரக் கலசம் கண்டேன். கோயில் கண்டேன். கோயிலுக்குள்ளே சன்னதி கண்டேன்.

வந்து கொண்டிருந்தது. சன்னதிக்குள்ளே சாந்நித்யம். வந்து கொண்டிருந்தது. சன்னதிக்குள்ளே சக்தி கண்டேன். வந்து கொண்டிருந்தது. சக்திக்கு அப்பால் சிவம் கண்டேன். வந்து கொண்டிருந்தது. சிவசக்தி கண்டேன். வந்து கொண்டிருந்தது. வந்த அதுவைக் கண்டேன்.

வந்து கொண்டிருந்தது. அந்த அதுவுக்குள் சத்சித்தானந்தத்தைக் கண்டேன். வந்து கொண்டிருந்தது. இப்போது எதைக் கண்டேனோ அது எல்லா நிலையிலும், எல்லாத் திசையிலும் கண்டேன். வந்து கொண்டிருந்தது திசைகள் மறையக் கண்டேன். இரு நிலைகள் மறையக் கண்டேன்.

உலகைக் காணேன். உறவைக் காணேன். கால்களையும், கைகளையும் காணேன். கருத்தையும் காணேன். எங்கும் சத்தியம். எங்கும் தர்மம். எங்கும் நியாயம். வந்து கொண்டிருந்தேன். நானற்றுப் போவதை நான் கண்டேன்.

எங்கும் ஒளி, எங்கும் ஆனந்த ஒளி
எங்கும் ஒலி, எங்கும் ஆனந்த ஒலி.

வந்து கொண்டிருந்தது. வந்து கொண்டிருந்தது. வந்து கொண்டிருக்கும் வினையும் காணேன். வந்து கொண்டிருந்தது. சிவத்திற்குள் சிவமாய் ஜீவ நிலை கடந்து எங்கும் சிவமாய் இரண்டற்ற நிலையில் ஏகமாய் இருக்கக் கண்டேன்.

போய்க் கொண்டிருந்தது. வந்து கொண்டிருந்தது. இந்த இருநிலையும் கடந்து ஏகமாய் இருக்கக் கண்டேன். என் ஆனந்தத்தை, அற்புதத்தை, அதிசயத்தை என்னென்று சொல்வேன்! என்னென்று சொல்வேன்! வாருங்கள். வாருங்கள்! வாருங்கள். என் நிலையில் நீங்களும் நில்லுங்கள். நீ ஆனந்தம். சந்தோஷம். ஆனந்தம்.

சந்தோஷம்

# இறைவன் புறப்பட்டார்

இறைவனிலிருந்து இறைவன் புறப்பட்டார். ஜீவ விழிப்புப் பெற்ற ஜீவன்களுக்குத் தரிசனம் கொடுக்க இறைவன் புறப்பட்டார்.

சிவ விழிப்பில் இருக்கும் சற்குருவுக்குத் தரிசனம் கொடுக்க இறைவன் புறப்பட்டார். பரசிவ நாதத்தில் இன்புறும் நாத யோகிகளுக்கு, நாத ரூபத்தில் இறைவன் புறப்பட்டார். ஜோதி வடிவாய் அகண்ட ஞான ஜோதி விளங்க ஜோதி சொரூப நிலைக்குத் தரிசனம் கொடுக்க இறைவன் புறப்பட்டார்.

குகையிலிருந்தும், பரந்த வெட்டவெளியிலிருந்தும், ஆற்றங்கரையிலிருந்தும், கடற்கரையிலிருந்தும் தவம் செய்யும் தவசிரேஷ்டர்களுக்குத் தரிசனம் கொடுக்க இறைவன் புறப்பட்டார். நாதமும், ஜோதியும்கூடிக் குலாவி உச்சி இன்பத்தில் இருக்க அங்கு தரிசனம் கொடுக்க, சங்க நாதம் ஒலிக்க, கெட்டி மேளம் ஒலிக்க, தாரை நாதம் ஒலிக்க, நாயனம் ஒலிக்க, தவில் ஒலிக்க, சங்கு முழங்க ஜீவர்கள் உள்ளங்களெல்லாம் இன்ப ஒலியாக்கி பரசிவ ஒலிகள் கூடிக் குலாவி ஒலிக்க, எங்கும் நாதம், எதிலும் ஆனந்தம். கடவுள் ஆனந்தம் எங்கும் ஒலிக்க, எங்கும் இன்பம் பக்திப் பரவசம் எய்துகிறவர்களுக்குத் தரிசனம் கொடுக்க இறைவன் புறப்பட்டார்.

தரிசனம் - பேரானந்த தரிசனம். சிவ தரிசனம். சுப தரிசனம். சுகோதய தரிசனம். அருள் தரிசனம். ஆசை தரிசனம். ஆனந்த தரிசனம். மகா - மகா யோக தரிசனம்.

இதற்குப் பிறகு என்ன!!!

**சந்தோஷம்**

# தத்துவங்கள்

ஜீவ யாத்திரையில் ஜீவன் மண் உலகிற்கு வந்த பிறகு, ஜீவ வெளியிலிருந்து மண் உலகிற்கு முதன் முதலில் வரும் போது ஒரு உருவம் தரப்படுகிறது. அதற்குச் சித் தத்துவங்கள் அடங்கிய தேகம் கொடுக்கப்படுகிறது.

மற்ற தேக தத்துவங்களுக்கும், இந்தத் தத்துவங்களுக்கும் வேறுபாடுகள் உள்ளன. முதன் முதலில் நுழையும் தேக உருவத்திலிருந்து ஒரு சில நிமிடங்களுக்குப் பிறகு, அதற்கு அடுத்த உருவம் கொடுக்கப் படுகிறது. இந்தத் தேகத்தில் தான் மண் தத்துவங்களாகிய பஞ்ச பூத தத்துவங்கள் கொடுக்கப்படுகின்றன.

பஞ்ச கோசத் தத்துவங்களாகிய பல தத்துவங்கள் கொடுக்கப் படுகின்றன. மனித நிலைக்கு வந்த பிறகு மனித உருவத்திற்குள் வந்த பிறகு, அதற்கு 96 தத்துவங்கள் முழுமையாக வெளிப்படும் நிலை உள்ளது. இந்த மனித உருவத்திற்கு வந்த பிறகு தான், தத்துவ தரிசனம், தத்துவ நிக்கிரகம், தத்துவ பேதலிப்பு, தத்துவம் குன்றுதல், தத்துவம் விரிவடைதல், தத்துவம் கடத்தல் ஆகிய வினைகள் உள்ளன.

ஜீவ விழிப்பு வந்த பிறகு, தத்துவ நிக்கிரக ஏகாக்ர இரகசியங்கள் அந்த ஜீவனுக்கு அறிவிக்கப் படுகின்றன. ஜீவ விழிப்பிலிருந்து சிவ விழிப்பிற்கு வந்த பிறகு தத்துவங்கள் முழுவதும் கலைந்து விடுகின்றன.

சிதாகாச, சித் சொரூபம் அதற்குக் கொடுக்கப் படுகிறது. இப்போது எல்லா வெளியிலும் பயணம் செய்யும் நுண்ணிய திரு ஆற்றல் அதற்குக் கொடுக்கப் படுகிறது. இது ஒரு உயரிய நிலையாகும்.

ஜீவ யாத்திரையில், ஜீவன் நிறைவு செய்வதற்கு முன் ஆறாவது படியாகும் இந்நிலை. அப்போது மனித உருவத்தில் இருக்கும். ஆனால், மனித குணங்கள், மனித இயல்புகள், மனிதப் பண்பாடுகள், மனித நேயங்களாகிய எதுவுமே இராது.

சந்தோஷம்

# உலக அமைதி

இன்றைய உலகில் 40% மக்கள் உலக அமைதியை வேண்டுகின்றனர். 1% மக்கள் உலக அமைதிக்காகத் தங்களை அர்ப்பணித்து, அவரவர் அறிவுக்குப் பட்டவாறு உலக அமைதி கொண்டு வரப் பாடுபடுகிறார்கள்.

எல்லா மக்களும் தங்கள் மதத்தைப் பின்பற்றினால் அல்லது உலக மக்களையெல்லாம் ஒரே மதத்திற்குக் கொண்டு வந்தால், உலகில் அமைதியைக் கொண்டு வரலாம் என்று எல்லா மதத் தலைவர்களும் நம்புகிறார்கள்.

அதே போன்று அரசியல் தலைவர்களும் தங்கள் கட்சிக்கு உலக மக்கள் வந்து விட்டால், ஒரே கட்சிக்கு வந்து விட்டால் அதன் மூலம் பேரமைதியைக் கொண்டு வர முடியும் என்று கருதுகின்றனர்.

நமது நாட்டின் அரசியலை எல்லா மக்களும் ஏற்றுக் கொண்டால் அல்லது உலக நாடுகள் எல்லாவற்றையும் நமது கட்டுப் பாட்டிற்குக் கொண்டு வந்து விட்டால் உலகில் அமைதியைக் கொண்டு வர இயலும் என்று பல நாடுகள் நம்புகின்றன.

பொதுக் கருத்து உடையவர்கள், தங்கள் கருத்துகளை உலகம் முழுதும் பரவச் செய்து அதனால் அமைதியைக் கொண்டு வர முடியும் என்று நம்புகிறார்கள்.

ஆன்மிகத் தலைவர்களும், யோகிகளும், தங்கள் மார்க்கத்தின் மூலம் அல்லது ஆன்மிகத்தின் மூலம் உலகில் ஆன்மிகத்தைக் கொண்டு வர இயலும் என்று சிநந்திக்கின்றனர்.

உலகில் அதையைக் கொண்டு வருவதற்கு ஒரு சில ஐயங்கள் எழுகின்றன. ஒரு வகையில் பார்த்தால் உலகில் அமைதியைக் கொண்டு வர இயலும் என்று தோன்றுகிறது. வேறு வகையில் பார்த்தால் அது இயலாது என்று தோன்றுகிறது.

இந்திய ஆன்மிகத்தின் சித்தாந்தத்தின்படி அல்லது சனாதன தர்மத்தின்படி பார்த்தால்; கர்மா, மறுபிறவி என்ற இரண்டு

விதிமுறைகளின்படி பார்த்தால் உலகில் அமைதியைக் கொண்டு வர இயலும் என்ற எண்ணம் தடுமாறுகிறது.

மறுபிறவி கொள்கையின் படி பார்த்தால், சென்ற பிறவியில் தவறு செய்தவன், இப்பிறவியில் துன்புறுவான்; சென்ற பிறவியில் அதர்மத்தால் பாதிக்கப் பட்டவன் இப்பிறவியில் துன்புறுவான். சென்ற பிறவியில் அதர்மத்தைச் செய்தவன், இப்பிறவியில் துன்புறுவதற்குக் காரணம் - சென்ற பிறவியில் பாதிக்கப் பட்டவன் இப்பிறவியில் துன்பத்தைக் கொடுக்கின்றான். ஆனால், பார்வைக்கு அதர்மமாகத் தோன்றும். சென்ற பிறவியும், இப்பிறவியும் நேராகக் கணக்கிட்டால் சரியாகத் தோன்றும்.

ஞானிகளுக்குத் தெரியும். ஞானி இல்லாதவருக்கு இது தெரிவது இயலாது. சென்ற பிறவியில் தீய வினை செய்தவன் இப்பிறவியில் மக்களால் பாதிக்கப்படுவான். சென்ற பிறவியில் தர்மத்தைச் செய்தவன் இப்பிறவியில் சந்தோஷத்தை அடைவான்.

மறுபிறவி, கர்மா என்ற பாரத சித்தாந்தத்தின் படி பார்க்கும் போது உலகில் இன்ப- துன்பங்கள் மாறி - மாறி வரும். கொடுமைகளும், கொடூரங்களும், நன்மைகளும், புண்ணியங்களும், பாவங்களும், துன்பங்களும், தர்ம - அதர்மங்களும், உண்மைகளும், பொய்களும் உலகெங்கும் நிகழ்ந்தால் இப்படிப் பணியாற்றுகின்ற மக்களின் மறுபிறவிகளில் அது தொடரும் அல்லவா!

சென்ற பிறவியில் உதை வாங்கினால், இப்பிறவியில் உதை கொடுப்பான் அல்லவா! சென்ற பிறவியில் கொலைச் செய்தவன் இப்பிறவியில் கொலை செய்யப் படுவான் அல்லவா!

இதே போன்று மனிதர்களின் வினைகளை, வினைகளின் வினைகளை அந்த வினையினால் எழும் மறுவினைகளை, முடிவில்லா இவ்வினைகளைச் சிந்தித்தால், அருள் நோக்கத்தோடு சிந்தித்தால், தவத்தின் வலிமையோடு சிந்தித்தால் உலகில் எக்கணமும் அமைதியைக் கொண்டு வர இயலும்.

அந்தந்தக் கர்மா அந்தந்தப் பிறவிகளில் வினையாற்றுகிறது. ஆகவே, உலகெங்கும் வினை தொடர்கிறது. பிண்ட வெளியிலிருந்து

வரும் வினை அண்ட வெளியில் நிறைந்து பஞ்ச பூதச் சீற்றங்களைக் கொண்டு உலகத்து ஜீவர்களுக்குப் பாடம் கற்பிக்கிறது.

உலகில் அமைதியைக் கொண்டு வர முடியுமா? முடியாதென்று காலம் சொல்கிறது. முடியுமென்று ஆத்மஞானிகள் பேசுகிறார்கள்.

உலகெங்கும் அமைதியைக் கொண்டு வருவதற்குச் சில ஆலோசனைகள்.

1. "ஓம்" என்ற ஓங்காரத்தை எல்லா உயிர்களும் காலையும், மாலையும் பரிசுத்தத்தோடு அந்தர்முகமாக ஜெபித்தால் அமைதியைக் கொண்டு வர வாய்ப்புண்டு.

2. எல்லா மக்களுக்கும் லலாடத்தைத் திறந்து விட்டால் உலகில் அமைதி தானாகவே வந்து விடும்.

3. உலக மக்களின் அறியாமை, அகங்காரம், மாயை மமகாரம், பொய், மாமாயை, வித்யா மாயைகளை நீக்கி விட்டால் உலகெங்கும் தானாகவே அமைதி வரும்.

4. உலகத்தில் அனைத்து மக்களும் சத்தியம், தர்மம், நியாயம், அன்பு, அருள், பேரறிவோடு வாழ்ந்தால் உலக மக்களோடு ஐக்கியம் ஏற்படும். அமைதி விளையும்.

5. உலகமெல்லாம் ஒரே சமயத்தில் அழிந்தால், அழிந்த பிறகு அமைதி வரும். வரும் உலகம் கொஞ்ச நாளைக்கு அமைதியாக இருக்கும்.

6. எந்தக் காலத்திலாவது குறைந்தது 1 ஆண்டு அல்லது 5 ஆண்டாவது உலகத்து உயிர்களெல்லாம் போர் இன்றி, விபத்தில்லாது, குறைந்த வயதில் செல்லாமல், 100 ஆண்டுகள் சுகமாக வாழ்ந்து உலகம் அமைதியாக இருக்கின்றதா என்று ஆய்வு நடத்தும் போது இல்லையென்ற கருத்துதான் வெளிப்படுகிறது.

7. அந்தந்த ஜீவன் அந்தந்த அளவில் தன் ஜீவ யாத்திரையில் சுவை அறியாமலே நடத்திச் செல்கின்றது. எல்லா ஜீவன்களும் தங்கள் - தங்கள் ஜீவ யாத்திரை வெற்றி பெற ஒரு முனைப்போடு வினையாற்றினால் உலகம் அமைதி பெற வாய்ப்புண்டு.

8. தன்னை உணர்ந்து, தன் ஆத்ம தரிசனத்தை அனைவரும் கண்டால் உலகம் அமைதியாக இருக்கும்.

9. உலகெல்லாம் வாழ, இந்த உலகத்து உயிர்களெல்லாம் என்றும் இன்புற்று வாழ, உலகத்து உயிர்கள் பேரமைதியோடு வாழ எல்லாம் வல்ல கடவுள் வினையாற்றினால் உலகத்தில் பேரமைதி முழுமையாக வளரும்.

10. வேதாந்திகள், பதஞ்சலிகள், சாங்கியர், சாங்கிராந்தவாதி, பார்க்கரியன், மாயா வாதியர், சமயவாதியர், பாஷாண வாதியர் இவர்களெல்லாம் ஒன்று கூடி உலகப் பேரமைதிக்காக அதி தீவிரமாகக் கடுந்தவம் புரிந்தால் உலக அமைதி வரும். உலகத்தில் உயிர்களெல்லாம் என்றும் இன்புற்று வாழ, உலக மக்களெல்லாம் ஒரே நேரத்தில் இறைவனைக் கை கூப்பித் தவம் செய்தால், அதுவும் வெட்ட வெளியில் தவம் செய்தால், உலகில் அமைதி அக்கணமே அருள் மயமாய், ஆனந்த மயமாய் எங்கும் நிறைந்திருக்கும். இதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

*தேடிய இடமும் கிடைத்தது*
*இந்த இடமே திருவருளைக் காட்டியது*
*திருவருளுக்குள்ளே அகண்ட அண்ட ஜோதி தெரிந்தது*
*அந்த அண்ட ஜோதியில் ஆதி - அந்தமில்லா*
*பெருஞ்ஜோதி காட்சி தந்தது.*
*அந்த ஜோதிக்குள்ளே சிவம் தெரிந்தது.*
*அந்த சிவத்திற்குள்ளே யாம் இருக்கக் கண்டோம்.*
*யாமுக்குள்ளே எல்லாம் தெரிந்தது.*
*இதற்கு மேலே இதற்குக் கீழே எதுவுமேயில்லை என்பதை*
*அது உணர்வால் உணர்த்தியது.*

**சந்தோஷம்**

# சித்தர்கள்

* சித்தர்களுக்கு என்று ஒரு உலகம் இல்லை. இறைவன் படைத்த எல்லா உலகத்தையும் தன்னுடைய உலகமாக மாற்றிக் கொள்வார்கள். அத்தகைய வல்லபம் அவர்களுக்கு உண்டு.

* சித்தர்களுக்கு விண் உலகம் உண்டு. மண் உலகம் உண்டு. இரண்டு உலகமும் அவர்களுக்கு ஒரே உலகமாகும். அந்த நாடும், இந்த நாடும் சித்தர்களுக்கு எல்லாம் ஒன்றேயாகும். அத்தகைய சித்தர்கள் மனித உருவத்தில் நடமாடும் போது அவர்களை அறிய முடியாத சிறியர் அவர்களுக்கு துன்பம் கொடுப்பார். சித்தர் இங்கு இருந்த போது பைத்தியக்காரர்கள் என்று சீவர்கள் எண்ணுவார்கள்.

  அவரைக் காணும் போது அவர்கள் திருவருள் பெற்று இறைவனை அடைய எந்நாளும் எதுவும் புரிய மாட்டார்கள். இத்தகைய நிலைமை 400 ஆண்டுகளுக்கு முன்பும் இப்படித்தான் இருந்தது. கி.பி.2000இல் இப்படித்தான் இருக்கிறது.

* நல்ல வாசலைத் திறந்து ஞான வாசலூடு போய் எல்லை வாசலை யார் கண்டார்களோ அவர்கள் இனிப் பிறப்பதில்லை.

* வெண்சுடர் கண்டவர்கள் சித்தர்கள் ஆவார்கள். அவர்கள் சிவத்தைக் காண்பார்கள்.

* ஜீவ யாத்திரையில், தம்பிரானை (கடவுள்) நாள்தோறும் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் தலையில் படும்படி கும்பிடாதவரை அல்லது வணங்கிடும் மக்களிடம் கூடி வாழாதலே ஜீவ யாத்திரையில் வெற்றி பெற வழி என்று சிவவாக்கியர் கூறுகிறார்.

* உடலில் உள்ள மூல நாடியை உயர ஏற்றி ஊன்றிட, ஊன்றி ஏற்றிட, மூன்று மண்டலம் நிறைந்ததும் அமுதம் வந்து இறங்கிடும். அவருக்கு நாதமும் வெளிப்படும்.

  ஆகவே மூல நாடியை எழுப்பினால் மோகன மாயை யிலிருந்து விலகிடலாம். அங்கு மேரு நாடியை விளக்கம் பெறச் செய்தால் உன்னுள்ளே உள்ள மேல் வாசலைத் திறந்து பார். ஜோதியாக

உம்முள்ளே தெரிந்திடும். தெரிந்திடும். அதன் பிறகு திருவுமாகி, சிவனுமாகித் தெளிந்து உள்ளோர் சிந்தையில் பிரம்ம ஸ்கந்த வாசனை வீசும். அதன் பிறகு கருவிலே வீழ்ந்து எழுந்த கன்மவாத வினையெல்லாம் சூரியன் முன் உள்ள பனி போல் நீங்கிடுமே.

*பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடத்துள்*
*உண்ணின்ற சோதி யொருவர்க் கறியொண்ணார்*
*கண்ணின்றிக் காணுஞ் செவியன்றிக் கேட்டிடும்*
*அண்ணல் பெருமையை யாய்ந்தது மூப்பே.*

*- நிஜானந்தபோதம்*

மனிதன் பெரு நெறியோடு வெட்டவெளியில் ஆடாது, அசையாது இருந்தானானால் (மனம் ஆடாது, சிந்தை ஆடாது) தெய்வம் வடிவம் பெறுவர் - என்று அபிராமி பட்டர் சொல்கிறார்.

*தனம்தரும் கல்வி தரும் ஒரு நாளும் தளர்வறியா*
*மனம் தரும் தெய்வ வடிவுந்தரும் நெஞ்சில் வஞ்சமில்லா*
*இனந்தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே*
*கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக் கண்களே.*

சிவவாக்கியர் பேசுகிறார்.

*பன்னிரண்டு நாளிருத்திப் பஞ்சவன்ன மொத்திட*
*மின்னியவ் வெளிக்குணின்று வேறெடுத் தமர்ந்து*
*சென்னியான தலத்திலே சீவனின்றி மாங்கிடும்*
*பன்னியுன்னி யாய்ந்தவர் பரப்பிரம்ம மாவரே-507*

மனிதனாக வாழ்பவர். மாமனிதராகி, உத்தமராகி, தேவராகி, பரப்பிரம்மாக முடியும். இதுவே சித்தர்கள் கண்ட முடிவு. அவர்கள் பரப்பிரம்மமாகி இருக்கிறார்கள். மனிதன் தேவனாகலாம். பரப்பிரம்மமாகலாம். ஆக முடியும்.

*சிவாயவசி யென்னவுஞ் செபிக்க இச்சகமெலாம்*
*சிவாயவசி யென்னவுஞ் செபிக்கயாவுஞ் சித்தியாம்*
*சிவாயவசி யென்னவுஞ் செபிக்கவான மாளலாம்*
*சிவாயவசி யென்பதே இருதலைத் தீயாகுமே.-550*

*மனவுறுதி தானிலாத மட்டிப் பிணமாடுகள்*
*சினமுறப்பி றர்பொருளைச் சேகரித்து வைத்ததைத்*
*தினந்தினமு ரெங்குஞ்சுற்றித் திண்டிக்கே யலைபவர்*
*இளமதிற் பலர்கள்வையும் இன்பமற்ற பாவிகள்-549*

மனிதனுடைய ஆற்றலைச் சிவ வாக்கியர் பாடல் விரித்து உரைக்கிறது.

*எட்டிரண் டுங்கூடியே யிலிங்கமான தேவனை*
*மட்டதாக வும்முளே மதித்துநோக்க வல்லிரேல்*
*கட்டமான பிறவியென் கருங்கடல்க டக்கலாம்*
*இட்டமான வெளியினோ டிசைந்திருப்பீர்*
*காண்மினே. - 505*

பிறப்பதற்கு முன்பு ஆணும், பெண்ணும் ஒன்றேயாகும். கருவிலே, கருவிற்கு வந்த போது சுக்கிலம், சுரோணிதம் என்ற பொருள் இரண்டாகப் பிரிந்து உலக காம வேட்டைக்கு அனுப்புகிறது. அந்த வேட்டை மனிதன் வாழ்க்கையை வேட்டையாடி விடுகிறது.

*கையில்லாக் குட்டையன் கட்டிக்கிட்டானிரு*
*காலில்லா நெட்டையன் முட்டிக்கிட்டான்*
*ஈயில்லாத் தேனெடுத் துண்டுவிட் டானது*
*இனிக்கு தில்லையே வாலைப் பெண்ணே*
*வாலைக் கும்மி - 47*

*உச்சிக்கு நேராயுண் ணாவுக்கு மேல் நிதம்*
*வைத்த விளக்கும் எரியுதடி*
*அச்சுள்ள விளக்கு வாலைய டியவி*
*யாம லெரியுது வாலைப் பெண்ணே*
*வாலைக் கும்மி - 24*

உன் உச்சிக்கு நேரே, உன் நாவுக்கு மேல் எரிந்து கொண்டிருக்கும் விளக்கை சுயஞ்ஜோதியை உன்னுள்ளே நீ பார்க்க வேண்டும். அதிலிருந்து விண்ணளாவிய பயன்கள் உனக்கு உண்டு. ஆகவே, உன் ஜீவ யாத்திரையைப் புனிதமாக்கி, முழுமையாக்கி விரைவு படுத்து வாயாக.

**சந்தோஷம்**

# உண்மை

இது தான் உண்மை. உலகில் உள்ள அனைத்து மக்களும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காக இறங்கி- கீழே இறங்கி - அதற்குக் கீழே இறங்கி எதில் இருந்தோமோ அந்த மெய்ந் நிலையை விட்டு மாயை நிறைந்த ஜீவனைத் திருப்திப் படுத்துவதற்காக மகிழ்ச்சி கொள்ளச் செய்வதற்காக நான் ஒருக்காலும் அத்தகைய பணியைச் செய்ய மாட்டேன். அப்படிச் செய்பவர்களை ஒருக்காலும் நான் விரட்டி அடிக்க மாட்டேன். இது தான் உண்மை.

உன் உடலுக்குள் அற்புதமான அதி அற்புதமான நுண்ணிய மெய்ஞ்ஞானப் பரம்பொருள் உள்ளது. அது மெய்ஞ்ஞானப் பரம்பொருளைக் காட்டிலும் சிறியதா? பெரியதா? - என்பதைப் பற்றி வாதிக்க நான் தயாராக இல்லை. வாதிப்பவர்கள் - மயக்கம் உள்ளவர்கள், மதி மயக்கம் உள்ளவர்கள், வித்யாமயக்கம் உள்ளவர்கள். நான் எத்தனையோ பிறவி எடுத்து இருக்கிறேன். அத்தனை பிறவியிலும் எனக்கு வாதிடும் புத்தி வந்ததில்லை. அது எனக்கு வேண்டவும் வேண்டா. இதுதான் உண்மை.

ஒரு ஜீவனை நீ முழுமையாகப் பார். எதனால் பார்ப்பாய்? இரண்டு கண்களால். இரண்டு கண்களாலா? உன்னிடம் உள்ள அந்த இரண்டு கண்களும் என்ன செய்யும்? இதுவரை உனக்கு அந்த 2 கண்களும் எதைப் பார்த்து உனக்கு என்ன செய்தது?

தீராத சுகத்தைக் கொடுத்ததா? தெய்வத்தைக் காட்டியதா? பஞ்ச பூதங்களில் உள்ள நுண்ணிய அறிவையும், உணர்வையும் உனக்குக் காட்டிக் கொடுத்ததா?

அதோ பார் - ஒரு ஜீவன் பிரிந்து கொண்டு இருக்கிறது. உன் புறக் கண்கள். அதைக் காட்டிக் கொடுத்ததா? ஒரு கனிச் சாறுக்குள் உள்ள ருசியை உன் புறக்கண் காட்டிக் கொடுத்ததா? உன் கண்கள் எங்குப் பார்த்தாலும் சுற்றிச் சுற்றி எல்லாவற்றையும் பார்க்கிறதே! அதனால் நீ

பெற்ற மகா பயன்கள் எவை? எவ்வளவோ முறை உன் கண்கள் உனக்குப் பொய் சொல்லி உன் வாழ்வையே திருப்பி இருக்கிறது தெரியுமா?

கண், காது, அறிவு மூன்றும் ஒன்றாகவே இணைந்து ஒரு மையப் புள்ளியில் செயல்படும். அதை அதிகாரம் பண்ணி தன் வழியில் அழைத்துச் செல்வது மனம். இக நிலையில் வேண்டு மென்றால் வெற்றி பெற்றதைப் போன்ற மாயா சுகத்தை அனுபவித்து இருக்கலாம். ஆனால் இது உண்மை அல்ல. உண்மையில்லாதது தரும் சுகம். சுகம் அன்று சோகம்.

## சந்தோஷம்

# மாணிக்கவாசகர்

மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று இங்கு

வீடு உற்றேன். உய்ய என் உள்ளத்தில் ஓங்காரமாய்...

மாணிக்கவாசகர் இறைவன் மீது தீரா அன்பு கொண்டவர். பாண்டியன் அமைச்சர் ஆவார். பாண்டிய மன்னன் குதிரை வாங்க, மாணிக்கவாசகரிடம் கொடுத்த பணத்தில் சிவாலயம் கட்டி முடித்தார். அதற்கு ஆவுடையார் கோயில் என்று பெயர்.

"திருவாசகத்திற்கு உருகாதார் - ஒருவாசகத்திற்கும் உருகார்" என்ற பெருமைமிக்க திருவாசகத்தை அருளிப் போந்தார்.

பரமேஸ்வரனே வைகையில் வெள்ளம் பெருகும்போது மாணிக்கவாசகருக்காகப் பிரம்படிபட்டார்.

அத்தகைய சிறப்புமிக்க கடவுளின் செல்லப்பிள்ளையான மாணிக்கவாசகர் சிதம்பரத்திலே தில்லை நடராஜப் பெருமானுடன் ஜோதியோடு ஜோதியாய்க் கலந்தார்.

சந்தோஷம்

# ஆண்டாள்

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாள். ஆண்டாள் ஆழ்வார், வளர்ப்புத் தந்தையை அழைத்தார். நான் திருவரங்கத்திலிருக்கும் பெருமானைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும். அவரை வரித்துக் கொள்ள வேண்டுமென்ற ஆழ்ந்த கருத்தைச் சொன்னார். இது அப்போது பாண்டிய மன்னனுக்குத் தெரிவிக்கப்பட்டது.

பயணத்திற்கான எல்லா முன்னேற்பாடுகளும் செய்து அழகிய பல்லக்கு ஒன்றைப் பாண்டிய மன்னன் வழங்கினார். பெரியாழ்வார் மற்றும் எல்லோரும் புடைசூழப் ஸ்ரீவில்லிப்புத்தூரி லிருந்து புறப்பட்டார்கள். பல்லக்கில் ஆண்டாள் பேரானந்த நிலையில், பெருமானைத் தன் இதயத்தில் தரிசித்துக் கொண்டே வந்தார்.

வரும் வழியில் ஒவ்வொரு கால கட்டத்திலும் - கோயில் தெரிகிறதா? கோயில் தெரிகிறதா? என்று கேட்டு வந்தார். காவேரி வந்தது. காவேரிக் கரையில் பல்லக்கை இறக்கி வைத்தார்கள். கோயில் தெரிகிறது என்றார்கள்.

அவ்வளவுதான்! பெருமாட்டி ஆண்டாள் புறப்பட்டுத் திருவரங்கப் பெருமானிடம் ஜோதி சொரூபமாகக் கலந்துவிட்டார். பிறகு பல்லக்குத் தூக்குகின்றார்கள். பல்லக்கு கனமற்று இருந்தது. பல்லக்கை நிறுத்திப் பார்த்தார்கள். பல்லக்கில் ஆள் இல்லை. பெரியாழ்வார் அழுது கொண்டே கோயிலுக்குச் சென்றார். வருந்தி அழுது கொண்டிருந்தார்.

பெருமான் திருவரங்கத்தான் சந்நிதியில், "ஆண்டாள் என்னுள் கலந்துவிட்டாள் - வருந்தாதீர்" என்ற அசரீரி கேட்டது.

இதைப்பற்றி இன்னொரு கருத்துமுண்டு. பாண்டியன் தந்த பல்லக்கில் ஆண்டாள் வர, பெரியாழ்வார் மற்றும் தொண்டர்கள் கோயிலுள் த்வஜஸ்தம்பம் வரை வந்தார்கள். ஆண்டாள் அப்போது ஜோதி சொரூபமாகத் தன் திருமேனியோடு பகவான் ரங்கநாதப் பெருமானிடம் கலந்தார்.

பெரியாழ்வார் மற்றவர்கள் அழுதார்கள். சன்னிதிக்குச் சென்றார்கள். ஸ்ரீரங்கநாதனிடம் தங்கள் வருத்தத்தைத் தெரிவித்தார்கள். திருவரங்கப் பெருமானிடமிருந்து அசரீரி வந்தது - "ஆண்டாள் என்னிடம் ஐக்கியம் அடைந்து விட்டாள்" என்று.

பெரியாழ்வார் வேண்டிக் கொண்டபடி திருவரங்கப் பெருமான் திருவல்லிப்புத்தூருக்கு வந்து ஆண்டாளை முறைப்படி திருமணம செய்து கொண்டார் என்ற செய்தியும் உள்ளது. ஆண்டாள் மிக உயர்ந்தவள்.

ஐந்து குடிக்கு ஒரு சந்ததியாய்
ஆழ்வார்கள் தம் செயலை
விஞ்சி நிற்கும் தன்மையாளை
பிஞ்சாய்ப் பழுத்தாளை ஆண்டாளை
பக்தியுடன் நாளும் வாழ்த்தாய்
மனமே மகிழ்ந்து.

சந்தோஷம்

# பட்டினத்தார்

**கா**வேரிப் பூம்பட்டின அடிகள். பட்டினத்தார் *மிகப் பெரிய ஞானி.* உலகை உணர்ந்தவர். இறைவனைக் கண்டவர். தன் தரிசனத்தைப் பெற்றவர். தானாந்தம் கொண்டவர். அவர் திருவிடை மருதூரில் தனக்கு ஐக்கியம் கிடைக்கவில்லை என்று பெரும் வருத்தமுற்றார்.

இறைவனின் அசரீரிக் குரல் அவருக்கு உரைத்தது. "இங்கு இருக்கும் பேய்க் கரும்பைச் சுவைத்துக் கொண்டே போ. நடந்து கொண்டே இரு. எங்கு அது இனிக்கிறதோ அங்கு நீ வெட்ட வெளியில் ஐக்கியம் அடைவாய். " அதன்படியே பேய்க் கரும்பை சுவைத்த வண்ணம் நடந்து கொண்டே இருந்தார். சுவைத்துக் கொண்டே சென்றார்.

திருவொற்றியூர் வந்தது. வடிவுடையம்மன் திருவருள் அவருள் பாய்ந்தது. கடற்கரை ஓரம் கடவுள் தரிசனம் பகிரங்க அந்தர் முகத்தில் கண்டார். பெற்ற சந்தோஷத்திற்கு எல்லை இல்லை. குதித்து ஆடினார். தன் கோட்டையிலிருந்து வெளிப்படப் போவதை எண்ணி எல்லையற்ற ஆனந்தத்தில் இருந்தார்.

அங்கு உள்ள குழந்தைகளைக் கூப்பிட்டார். துணி துவைப்பவர்கள் பயன்படுத்தும் மண்ணால் ஆன பெரிய சால் இருப்பதைக் கண்டார். குழந்தைகளிடம் நான் இங்கு உட்கார்ந்து கொள்கின்றேன். நீங்கள் என்னை வைத்து மூடி விடுங்கள். பிறகு திறந்து பாருங்கள். நான் உங்களுக்குச் சக்கரை மிட்டாய் கொடுப்பேன் என்றார்.

குழந்தைகளிடம் பேரம். வாழ்க்கை பேரம். மக்களிடம் பேரம். எல்லாவற்றிடமும் பேரம். பேரத்திற்கு ஒத்துக் கொண்டன குழந்தைகள். பட்டினத்து அடிகள் உட்கார்ந்தார். குழந்தைகள் சாலை எடுத்து மூடியை மூடின. சற்று நேரம் கழித்து வெளி வந்தார். எல்லோருக்கும் மண்ணை அள்ளிக் கொடுத்தார். அது இனிப்பு மிட்டாயாக மாறியது. குழந்தைகளுக்குக் கொண்டாட்டம். மீண்டும் ஒரு முறை மூடச் செய்தார். அவ்வாறே நடத்தப்பட்டது. அடிகள் வெளியே வந்து மிட்டாய் கொடுத்தார். குழந்தைகளுக்குக் கும்மாளம்.

மூன்றாவது தடவை கையில் மண்ணை எடுத்தார். இனிக்கும் மிட்டாயாக மாறின. எல்லாக் குழந்தைகளுக்கும் நிறைய-நிறையக் கொடுத்தார். தாழி திறப்பதற்குப் பின்பு கொடுக்கும் மிட்டாயைத் தாழி திறப்பதற்கு முன்பே கொடுத்தார். தாழியை மூடுங்கள் என்றார். தாழி மூடப்பட்டது.

குழந்தைகள் திறக்க முயன்றார்கள். திறக்க முடியவில்லை. ஊரார் திறக்க முயன்றார்கள். முடியவில்லை. சமாதி நிலை பெற்றார். இறைவனிடம் கலந்தார்.

**சந்தோஷம்**

# சதா சிவ பிரம்மேந்திர சுவாமிகள்

பரவெளியில் ஐக்கியம் அடையும் எல்லாம் கடவுளின் வல்லமையைப் பெற்று இருக்கும்.

தனக்கு ஒன்றும் தெரியாது. தன்னால் ஒன்றும் முடியாது. அவனின்றி ஒரு அணுவும் அசையாது. இறைவனே எல்லாம் என்று நினைத்திருந்த நிலை மாறி அதன் வல்லமையை, வரத்தைப் பெற்றுத் தன்னால் எல்லாம் முடியும், மரணம் கூடத் தன் சொல்லுக்குக் கட்டுப்படும் என்ற வல்லபத்தைப் பரவெளியில் கண்டும் அது பெற்றும் இருக்கிறது.

என்னே ஜீவ யாத்திரையின் மாண்புகள்! இதோ சான்றுகள்.

சதாசிவ பிரம்மேந்திர சுவாமிகள் இறைவனின் வல்லபத்தைப் பெற்று இருந்தார். ஒரு சமயம் புதுக் கோட்டையில் வசித்து வந்த ஒரு வைஷ்ணவ பிராமணர் தன் பூஜைக்காகச் சாலிக்கிராமம் ஒன்று வேண்டும் என்று சுவாமிகளிடம் விண்ணப்பித்தார்.

அந்த பிராமணரின் கனவின் மூலம் நேபாள் அழைத்துச் சென்று இரண்டு சாலிக்கிராமம் வாங்கித் தந்து, மீண்டும் அந்த பிராமணரைக் கிராமத்திற்கு அழைத்து வந்து சுவாமிகள் விட்டார்.

இன்னும் அந்த சாலிக்கிராமத்திற்கு பூஜை நடந்து கொண்டு இருக்கிறது.

சந்தோஷம்

# ஞானேஸ்வர மகராஜ்

ஆலந்தியில் உதித்த ஞானேஸ்வர மகராஜ் இறைவனிடம் ஐக்கியமடைந்த முறை வியக்கத் தகுந்தது. இது 1296இல் நடந்தது.

இதோ ஞானேஸ்வர மகராஜ் பரசிவத்திடம் ஐக்கியம் அடைந்த நிலை. வருமாறு, ஞானேஸ்வர மகராஜ் பண்டரிபுரம் திரும்பி வந்தார். அவருடன் நாம தேவரும் இருந்தார்.

ஞானேஸ்வர மகராஜ் ஆலந்தியில் விரைவில் ஜீவ சமாதி அடைந்து விடப் போவதாகப் பிரகடனப் படுத்தினார். எல்லோருமே அதிர்ந்து போனார்கள். நாமதேவர் கண்களில் இரண்டு பேராறுகள் ஓடின. இதைச் செவியுற்ற எல்லா கிராமத்து மக்களும் அழுது புரண்டனர். ஏனிந்த அவசரம், எதற்காகப் போக வேண்டும். எங்கு பார்த்தாலும் அழுகையொலிகள். அவர் இருந்த நூற்றுக் கணக்கான கிராமங்கள் சோகத்தில் ஆழ்ந்திருந்தன. மக்களுக்கு அழுகையைத் தவிர வேறு எதுவுமே தெரியவில்லை. ஞானேஸ்வர மகராஜிடம் நெருங்கி, யார் சென்று அவரைத் தடுப்பது, யாரால் அவரைத் தடுக்க முடியும், குரு மகராஜின் பிரம்மத்திடமே அழுதார்கள். என்னைத் தடுக்காதீர்கள். நான் போக வேண்டிய நேரம் வந்து விட்டது. என் பணியைத் தொடங்கி விட்டேன். இனி வருபவர்கள் இவ்வழியை வளர்த்துச் செல்வார்கள் என்று அமைதியாகச் சொன்னார். காலம் விரைந்தது.

காலம் விரைந்து வந்தது. ஞானேஸ்வர மகராஜ் பந்தர் பூரிலிருந்து ஆலந்திக்குப் புறப்பட்டார். ஞானிகளும், யோகிகளும், மக்களும் அவருடனேயே படைதிரண்டு புறப்பட்டனர். நாமதேவரும் புறப்பட்டார். ஆலந்தியில் சித்தீஸ்வரர் கோயிலுக்கு அருகில் ஒரு குழியைத் தோண்டினார்கள். அதற்கருகே ஆஜனாமரம் ஒன்று இருந்தது. குழியில் தர்ப்பை விரித்தனர். அதற்கு மேல் மான் தோலைப் போட்டு மூடினார்கள். மூன்று நாட்கள் ஆயிரக்கணக்கான மக்கள் இருந்து இரவும், பகலும் பகவான் நாமத்தை கீர்த்தனையாகப் பாடினார்கள். மெய் மறந்து பஜனை செய்தார்கள். எங்கும் கண்ணீர். எல்லாம் கண்ணீர் சப்தத்தில் பெரும் நிசப்தம். பேரிரைச்சலில் பேரமைதி. அமுத கானத்தில் மோன நிலை. கண்ணீரில் கைலாயம். ஆனந்தத்தில் அருள் சாந்த நிலை. அந்தப் பள்ளத்தாக்கு முழுவதும் ராம கிருஷ்ண ஹரி விட்டல பாண்டுரங்கா,

ஜெய ஜெய விட்டல, ஜெய ஜெய பாண்டு ரங்கா, ஓ! பாண்டு ரங்கா, ஓ! பாண்டு ரங்கா, ஓ! பாண்டு ரங்கா என்று எல்லோரும் பிரம்ம சொரூபத்திலிருந்து கீர்த்தனைகள் பாடிய வண்ணமாகவே இருந்தனர்.

ஞானேஸ்வர மகராஜ் ஆலந்திக்கு அருகிலுள்ள இந்திராணி ஆற்றில் குளித்து விட்டுப் பூங்காவியாடை அணிந்து கொண்டு முடியை ஒதுக்கிக் கொண்டு தான் சமாதி இருக்கப் போகும் இடத்திற்கு வந்தார்.

அங்குக் கூடியிருந்த லக்ஷக் கணக்கான மக்களைப் பார்த்து புன்முறுவல் பூத்தார். தன் அழியாத அன்பை எல்லோர்க்கும் அள்ளிக் கொடுத்தார். அங்கு வந்திருந்த எல்லோரையும் தனித் தனியாகப் பார்த்தார். பிறகு தன் சற்குருவை நினைத்து மண்டியிட்டு நமஸ்கரித்தார். இது எல்லோர் முன்னிலையிலும் நடந்தது.

என்னுடைய ஆத்மார்த்த நண்பர்களே! சகோதரர்களே! நான் ஏதாவது தவறு செய்திருந்தால் என்னை மன்னித்து விடுங்கள். நான் ஜீவ சமாதி செல்வதற்கு எனக்கு அனுமதி கொடுங்கள் என்று கூடியிருந்தோரிடம் பேசினார். இதைக் கேட்டவுடன் காட்டாறு போன்று கண்ணீர் பீறிட்டு வந்தது எல்லோர்க்கும். அங்கிருந்த பெரியவர்களும், ஞானிகளும் அவருக்குச் சந்தனத்தைப் பூசினர். ஞானேஸ்வர மகராஜுக்கு எல்லோரும் மாலைகள் போட்டனர். மலர்கள் தூவப்பட்டன. எல்லோரும் ஞானேஸ்வர மகராஜின் ஆசீர்வாதத்தைக் கேட்டனர். ஞானேஸ்வர மகராஜ் பிரம்மமாகி விட்டார். ஞானேஸ்வர மகராஜ் ஜீவசமாதி அடைவதை உணர்ந்த முக்தாபாய், ஸோபன், நாமதேவர் எல்லோரும் தாங்கள் அனாதைகளாகி விட்டதாகக் கருதினார்கள். அவர் ஜீவ சமாதி அடைவதைக் கண்டு ஆயிரம் ஆண்டுகள் ஹடயோகத்தில் வாழ்ந்த பழம் பெரும் யோகி சந்த் தேவர் சிறு குழந்தை போன்று கத்திக் கதறினார்.

ஞானேஸ்வர மகராஜ் இனிமையான சொற்களில் எல்லோரையும் ஆறுதல் படுத்தினார். அந்த விட்டலனை நம்பி இருங்கள். அவரே உங்களுக்கு என்றும் ஆதாரமாக இருப்பார். துன்பப்படாதீர்கள். இப்படி சொல்லிக் கொண்டே ஒவ்வொரு படியாக அந்தக் குகையினுள் இறங்கினார். 10 திசைகளையும் நோக்கி மண்டியிட்டு வீழ்ந்து வணங்கினார். அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்தார். அபய முத்திரையுடன் கண்கள் மேலே பார்வை செலுத்தின. சமாதிக்குள் சென்று விட்டார்.

குகை மூடப்பட்டது. அவ்வமயம் எல்லோருமே கதறினர். கத்தினர். நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது. ஜெய் ஸ்ரீ ஞானேஸ்வர மகராஜ் என்று கூவினர். சிரம் தாழ்த்தி வணங்கினர். ஞானேஸ்வர மகராஜ் தன் 21ஆவது வயதிற்குள் ஜீவ சமாதி அடைந்தார். அதற்குள் அனைத்தையும் முடித்துக் கொண்டார்.

1000 (ஆயிரம்) மனிதப் பிறவிகள் எடுத்தும் ஆண்டவன் நாமத்தைச் சொல்லத் தகுதியில்லாத மனிதனைத்தான் பார்க்கிறோமே தவிர இவ்வளவு சிறிய வயதில் எவ்வளவு பெரிய சாயுச்சிய நிலை அவருக்குக் கிடைத்தது.

கார்த்திகை மாதத்தில் 1296-இல் ஞானேஸ்வர மகராஜ் ஜீவசமாதி அடைந்தார். அவர் மறைந்து 309 ஆண்டுகட்குப் பிறகு ஞானேஸ்வர மகராஜின் சமாதியில் ஒரு கோயிலைக் கட்டினார் சுவாமி ஏக்நாத். இன்று ஆலந்தியில் காணும் கோயில் சுவாமி ஏக்நாத் கட்டியதாகும்.

சந்தோஷம்

# குரு தட்சணாமூர்த்தி

திருவாரூரில் தோன்றிய குரு தட்சணா மூர்த்தி சுவாமிகள் இறைவனிடம் ஐக்கியம் அடைந்த நிலை இவ்வாறு.

ஒரு நாள் ஐக்கியத் திருநேரம் வந்தது. சுவாமிகள் சகஜ மார்க்கத்தில் இருந்தார். சகஜ சமாதியும் பெற்றார்.

ஒரு நாள் சுவாமிகள் திருவாரூர் கோயில் மகா மண்டபத்தில் பிரம்மப் பேரழகோடு உட்கார்ந்திருந்தார். பக்தர்கள் வந்து தண்டனிட்டார்கள். எல்லோருக்கும் ஆசி வழங்கினார்.

அப்போது அங்குக் கூடி இருக்கும் பக்தர்களைப் பார்த்து முடிந்தது - முடிந்தது முற்றிலும் முடிந்தது என்று எல்லோரிடமும் சித்தானந்த அருள்வாக்கைத் தந்தார். அக்கணத்திலிருந்து நிஷ்டையில் ஆழ்ந்தார்.

சுவாமிகளின் அணுக்கத் தொண்டர் பழனியப்பா சுவாமி குரு தட்சணா மூர்த்தி அவர்களின் சூக்குமப் பொருள் உணர்ந்தார். சுவாமிகள் இறைவனோடு கலக்கப் போகிறார் என்று எல்லோருக்கும் தெரிவித்தார். அதே சமயத்தில் தட்சண மூர்த்தி சுவாமிகள் தான் கைவல்யமாகும் தன்மையை கனவில் வெளிப்படுத்தினார். சிலருக்குக் குறிப்பு மூலம் வெளிப்படுத்தினார்.

எட்டு நாட்கள் சுவாமிகள் நிஷ்டையில் ஆழ்ந்திருந்தார். எட்டாம் நாள் வந்தது. சுவாமிகள் சொர்ண தேகத்திலிருந்து ஆத்ம ஜோதி அகண்ட வெட்டவெளியில் கலந்தது. விதேக முக்தி அடைந்தது.

கலியுகாதி ஆண்டு 1936 மன்மத வருடம் ஆவணி மாதம் 12ஆம் தேதி புதன்கிழமை உத்திராட நட்சத்திரத்தில் பூர்வ பட்ச நன்னாளில் பகல் 12 மணி சுப நேரத்தில் எல்லா பக்தர்களும் பார்க்கும் வண்ணம் பரசிவத்தோடு ஐக்கியமானார்.

அகண்ட பரிபூரண சத்சித்தானந்தில் சிவ சொரூபமானார்.

**சந்தோஷம்**

# நித்தியானந்த பாபா

நித்தியானந்த பாபா சிறந்த யோகி. ஞான சித்தர். அவர்களின் போதனைகள் இதோ

1) உலக இன்பத்திற்கு அப்பால் விலகிச் செல்.
2) உன் குருநாதரைப் போற்றி வணங்கு.
3) தூய்மையான மனமும் அருள் படர்ந்த அன்பான பார்வையும் உனக்குத் தேவை. எல்லாவற்றையும் உயர்ந்து நோக்கிப் பார்.
4) இறைவன் மேல் ஆழ்ந்த நம்பிக்கை வை பேரின்பம் கிடைக்கும்.

நித்தியானந்த பாபா தியானத்தை வலியுறுத்தினார். அவர் பரிபூரண நிலையில் உலகில் நடமாடினார். தான் கடவுளுடன் கலக்கப் போகும் நேரத்தைக் கண்டு கொண்டார். தன் தேகத்தில் உள்ள எல்லாப் பகுதிகளுக்கும் அன்போடு ஆறுதல் அளித்தார்.

சிவ ஐக்கியம் அடையத் தன்னைத் தயார் செய்து கொண்டார். உணவு சாப்பிடுவதை நிறுத்திக் கொண்டார். நீர் மட்டும் சற்றுப் பருகினார். உடல் இளைத்தது. மருத்துவர்கள் வந்து பார்த்தார்கள். மருத்துவம் செய்து கொள்ளத் தடுத்து விட்டார். தன் உடலை விட்டுப் போவதில் அதிகக் கவனம் செலுத்தினார்.

ஆத்மா பந்தமன்றி தனித்து இருந்தது. அந்த நாள் வந்தது. பக்தர்களுக்கும் தன் சீடர்களுக்கும் தரிசனம் கொடுத்து ஆசி வழங்கினார். அன்றையிலிருந்து இரண்டு நாட்கள் சுத்த மகா மௌன நிலையில் கடவுளைச் சிந்தித்து, கடவுளிடம் தன் ஐக்கிய நிலையைப் பற்றி கலந்து கொண்டிருந்தார்.

அன்றிலிருந்து 12 நாட்களுக்குப் பிறகு, 1961-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 8ஆம் தேதி செவ்வாய்க் கிழமை காலை 10.40 மணிக்கு தன் திருத்தேரிலிருந்து (உடல்) பரவெளிக்குப் பயணமானார்.

இவர் கணேஷ் புரியில் சமாதி கொண்டார். இன்று அழகான சமாதி கட்டப்பட்டு உள்ளது. ஆயிரக் கணக்கான பக்தர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்.

சந்தோஷம்

# ஞானானந்தகிரி சுவாமிகள்

திருக்கோயிலூரில் பெண்ணை ஆற்றின் எதிர்ப்புறத்தில் ஒரு ஆசிரமம் அமைத்துப் பல ஆண்டுகள் மக்களுக்கு ஆசி வழங்கினார். 6.1.1974 மாலை 7.00 மணியளவில்தான் பரப்பிரம்மத்துடன் ஐக்கியமடையும் செய்தியைச் சூக்குமமாகப் பிரகடனப்படுத்தி 7.1.1974 அன்று பிரம்மஜோதி, பரப்பிரம்ம ஜோதியோடு ஐக்கியமடைந்தார்.

170 ஆண்டுகள் இவ்வுலகில் எல்லா மக்களுக்கும் ஆசி வழங்கியுள்ளார். ஆனந்த வாழ்வைக் கொடுத்துள்ளார். மனிதர்களின் தீய கர்மாவை நீக்கியுள்ளார்.

அவருடைய ஆத்மா தேகத்தைவிட்டுப் போன உடன் பிரம்ம ஞான வெப்பம் அவருடைய தேகத்திலிருந்து மூன்று நாட்கள் வெளிவந்த வண்ணமாய் இருந்தது.

சந்தோஷம்

# திருவருட்பிரகாச வள்ளலார்

19ஆம் நூற்றாண்டின் உயர்ந்தோங்கி, அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் செல்லப் பிள்ளையாக உலகத்தில் ஜீவகாருண்யத்தைப் பரப்பிய திருவருட் பிரகாச சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள், தான் புறப்படுவதற்குத் தயாரானார். அவர் இவ்வுலகில் மனித உடலோடு புறப்பட்டார்.

ஒரு வீட்டிற்குச் சென்று திருக்காப்பிட்டுக் கொண்டு வெட்டவெளியில் கலந்து விட்டார். இரவு 12 மணிக்குச் சித்திவளாகத்தில் 5000 பேர் கூடி இருந்த சபையில், அவர்களின் மையத்தில் பெருமான் நின்றுதான் அடையப்போகும் நிலையும், எதிர்கால நிலைகளையும் பற்றி ஒரு அருளுரை வழங்கினார்.

திருவருட் பிரகாச வள்ளல் பெருமான் - சிதம்பர இராமலிங்க சுவாமிகள் அண்ட வெட்டவெளியில் அருட் பெருஞ் ஜோதியியுடன்தான் கலந்திடும் திருநேரத்தைத் தவத்தால் உணர்ந்து, 5000 மக்கள் முன்னிலையில் பிரகடனப்படுத்தினார். யாத்திரை முற்றுப் பெற்றது.

இதோ வள்ளல் பெருமான் திருவருள் அவதாரப் புறப்பாடு தயாராகி விட்டது. இங்கிருந்து அது புறப்படப்போவதை எல்லோருக்கும் தெளிவாக்கி, தீரமாய் - சிவானந்தத்தில் திளைத்த வண்ணம் எமது எதிரில் இருக்கும் திருஅறைக்குள் நுழைந்து அதுதானே திருக்காப்பிட்டுக் கொண்டுவிட்டது.

திருக்காப்பிட்டுக் கொள்வதற்கு முன்பு அது வெளியிட்ட பிரகடனம் இதோ :

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி

தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

## திருவருட்பிரகாச வள்ளலார் திருவருட்பா

திருக்காப்பிட்டுக் கொண்ட தருணம் வெளியிட்டவை

என்சாமி எனதுதுரை என் உயிர் நாயகமே!
இன்றுவந்து நான் இருக்கும் இடத்தில் அமர்கின்றார்
பின்சாரும் இரண்டரை நாழிகைக்குள்ளே யெனது
பேர்உடம்பில் கலந்துளத்தே பிரியாமல் இருப்பார்
தன்சாதி உடைய பெரியதவத்தாலே நான்தான்
சாற்றுகின்றேன் அறிந்ததிது சத்தியஞ் சத்தியமே
மின்சாரும் இடைமடவாய் என்மொழி நின்தனக்கே
வெளியாகும் இரண்டரை நாழிகை கடந்தபோதே

சத்திய வார்த்தை பாடல் 4

திருக்காப்பிட்டுக் கொண்ட தருணம் வெளியிட்டவை

ஸ்ரீமுக வருடம் தை மாதம் 19ஆம் தேதி 30.1.1874 வெள்ளிக் கிழமை இரவு 12 மணியளவில் திருஅருட்பிரகாச வள்ளலார் திருக்காப்பிட்டுக் கொள்ளும் தருணம் வெளியிட்டவை.

"நாம் உள்ளே பத்துப் பதினைந்து தினம் இருக்கப் போகிறோம் பார்த்து அவநம்பிக்கை அடையாதீர்கள். ஒருக்கால் பார்க்க நேர்ந்து பார்த்தால் யாருக்கும் தோன்றாது வெறும் வீடாக இருக்கும்படி ஆண்டவர் செய்விப்பார். என்னைக் காட்டிக் கொடார் நாம் சுத்த பிரணவ ஞான தேகத்துடன் வெளிப்படுவோம். நாம் திருக்கதவை மூடியிருக்குங்கால் அதிகாரிகள் திறக்கும்படி ஆக்ஞாபிக்கின் "ஆண்டவர் அருள் செய்வார்".

இப்போது இந்த உடம்பில் இருக்கிறோம், இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வோம். இவ்விடத்தில் எங்கெங்குச் சென்றாலும் அங்கங்கும் இருப்போம், திருத்தி விடுவோம், அஞ்ச வேண்டாம். நீங்கள் அருள் அடைவதற்கு இந்த தீபத்தினைக் கடவுள் எனக்கொண்டு ஜீவ காருண்யம் உடையவராய்ச் சிந்தித்துக் கொண்டிருங்கள். இனி இரண்டரைக் கடிகை நேரம் உங்களுடைய கண்களுக்குத் தோன்ற மாட்டோம். இவ்வுலகத்தி லும் மற்றெங்கும் இருப்போம். பின்னர் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் வருவார். அப்போது இவ்வுருவுடன் சித்திகள் பல நிகழ்த்துவோம். திருவருள் செங்கோலாட்சி செய்வோம். அக இனத்தார்க்குச் சாகாவரமும் ஏனையோருக்குப் பரிபாக நிலையும் அளிப்போம்"

(திருஅருட்பா, காரணப்பட்டு ச.மு.கா. சாமிபிள்ளை பதிப்பு, 1924 பக்.63)

# மகா சித்தர்

மயிலாடுதுறை பரப்பிரம்ம சற்குரு ஓம் ஸ்ரீ சித்தர் சுவாமிகள் தன் ஞானப்பணியெல்லாம் முடித்துவிட்டுத் திருவருள் சிவ அழைப்பிற்காகக் காத்திருந்தார். தான் திருவருள் சிவத்திடம் கலப்பதற்கு மூன்று மாதங்களுக்கு முன்பு தான் இவ்வுலகிலிருந்து விடுபடப்போவதாக எல்லோரிடமும் சொல்லிவிட்டார்.

தான் சிவ ஐக்கியம் அடைவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பே - சனிக்கிழமை மாலை 7.35 மணிக்கு ரசம் சாதம் சாப்பிட்டுவிட்டு, தன் கையைக் கழுவினார். தன் கையைக் கழுவும்போது - "எல்லாம் முடிந்துவிட்டது, எல்லாம் முடிந்து விட்டது, எல்லாம் முடிந்துவிட்டது" என்று மூன்று முறை சொன்னார்.

எல்லோருக்கும் ஆசி வழங்கிவிட்டு, நாளை மறுநாள் சூரியன் வந்ததும் - யாம் சென்று விடுவோம் என்று சிவ ஐக்கியத் திருநேரத்தை வெளியிட்டார். அவ்வாறு 31.8.1964 மயிலாடுதுறை பரப்பிரம்ம சற்குரு ஓம் ஸ்ரீசித்தர் சுவாமிகள் பரம்பொருளோடு ஐக்கியமானார்.,

சந்தோஷம்

# மாதாஜி சித்தர்

நடந்தது. நடக்க வேண்டியது நடந்தது. யாருக்கும் நடக்காதது நடந்தது. மகான்கள், யோகிகள், சித்தர்களுக்கு நடக்க வேண்டியது நடந்துது. எங்கும் குதூகலம். தினந்தோறும் 50, 60 பேருக்கு அன்னதானம். திருக்கல்யாணக் களைக் கட்டியது. வருவோர், போவோர் எண்ணிக்கை கூடிக் கொண்டேயிருந்தது. திறந்த கதவு மூடவேயில்லை. ஏற்றிய அடுப்பு அணையவில்லை.

வடித்த சாதங்களின் வினை தொடர்ந்து கொண்டிருந்தது. இலைகள் போடப்பட்டுக் கொண்டே இருந்தன. எங்கும் பஞ்சாட்சர ஜெபம். மக்கள் சுறுசுறுப்பாக திரு வினையாற்ற இங்கும், அங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள். பழனியிலிருந்து 4 மூட்டை விபூதி தயாராகிக் கொண்டிருந்தது. மலர்கள் பூத்துக் கொண்டு இருந்தது. புதுத் துணிகள் நெய்தாகி விட்டது. வாகனங்கள் தயார் நிலையில் நிறுத்தப்பட்டது. வருவோருக்கு எல்லாம் ஆசி. அழைத்து-அழைத்து ஆசி வழங்கினார்கள். ஒரு சமயத்தில் 120 பேருக்கு ஆசி வழங்கினார்கள். இந்தத் திருவருள் காட்சி கைலாயத்தில் நடந்திருக்குமோ என்று ஐயமே. நாட்கள் நகர்ந்து கொண்டு இருந்தது. கடவுளும் வந்து கொண்டு இருந்தார்.

தேரை அழைத்துச் செல்ல ஐராவதம் வந்தது. நேரம் வந்தது. 700 கி.மீ. சதுரப் பரப்பில் பல 100 கோயிலில் கும்பாபிஷேகம், லட்சக் கணக்கான கல்யாண மேடையில் மாங்கல்ய தாரணம், பல லட்சக் கணக்கான கெட்டி மேளங்கள் முழங்கிக் கொண்டிருந்தன.

காலை 10.30 மணிக்கு நட்சத்திரம் திருவோணம், யோகம் - சித்தயோகம், சஷ்டி திதியில், சுப மகா யோகத்தில் இராஜம்மாள் என்று அழைக்கப்படும் மாதாஜி சித்தர் இறைவனிடம் இரண்டறக் கலந்தார். பரவெளி ஐக்கியம் பெற்றார். விதேக முக்தி பெற்றார். அப்போது கார்த்திகை 9ஆம் தேதி (25.11.1998).

ஸ்ரீ ராஜ நாராயண நந்தா சுவாமிகள் என்று அழைக்கப்படும் மாதாஜி சித்தர் சமீபத்தில் நம்மோடு வாழ்ந்து, நமக்குத் தன் வல்லபத்தைக் காட்டி நம்மை வாழ்த்தி, நம்மை வாழ வைத்த சித்தர். நம் கண்களுக்கு முன்பாக இறைவனிடம் ஐக்கியம் அடைந்தார்.

திருக் கல்யாண காட்சி நம் காலத்தில் நடந்தது. அவருக்கு நிகர் அவர்தான். அவர் கடைசி வரை தன்னிடம் வந்தவர்களுக்கு தன் திரு அருள் கரத்தால் விபூதி வழங்கி ஆசி வழங்குவது வழக்கம். பத்து நிமிடத்திற்கு ஒரு முறை தன் வாழ்நாள் முழுதும் விபூதி பூசிக் கொண்டு இருந்தார்.

**சந்தோஷம்**

## சிரிக்க வைக்க வேண்டும்.

ஒரு நாட்டின் தலைவனென்றால் அவன் நூறு கோடி மக்களைச் சிரிக்க வைக்க வேண்டும்.

ஒரு மனிதன் சந்தோஷத்தோடு எழுந்திருக்க வேண்டும். அமைதியாகப் படுக்க வேண்டும்.

காலையில் சந்தோஷமாக எழுந்து, படுக்கப் போவதற்கு முன் அமைதியாகத் தூங்குபவர்கள் - முதல் நாளிலிருந்து இறுதி நாள் வரை இந்நிலையில் இருந்தால், கடவுளிலும் மேல் நிலையாகும். அந்த ஜீவன் ஐம்புலன்கள் வென்றதாக இருக்கும். மனதைக் கடந்ததாக இருக்கும். சுந்தர வாழ்வை மண்ணுலகிலும், மகா சுந்தர வாழ்வை விண்ணுலகிலும் பெறுவதில் தன்னிகரற்றது. எத்தனையோ 100 ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு ஜீவன் தன்னிகரற்ற ஜீவ வாழ்க்கை மூலம் ஜீவ யாத்திரையை நடத்துகிறது.

வாழ்க்கை யாத்திரையா?!

யாத்திரை வாழ்க்கையா?!

# அந்தரங்க வெளியிலிருந்து உலகிற்கு வரும் ஞான அமுதம்

ஒரு ஞானி, ஒரு சித்புருஷர், ஒரு யோகி எவ்வாறு இறைவன் காட்டிய கருத்துகளை வெளியிடுகிறார்கள்?

விதியற்றவர் - சித் புருஷர்

ஆனந்தத்தில் இருப்பவர் - யோகி

எல்லாம் உணர்ந்து, எல்லாம் கண்டு, எல்லாவற்றிலுமாக வெட்ட வெளியில் நிற்பவர் - பெயரிடப்படாதவர்.

அவர் எல்லா உலகத்து உயிர்களையும் அன்போடு பார்த்துக் கொண்டு இருப்பார். அவர் அன்பில் எல்லா உயிரும் இன்புற்று இருக்கும்.

அத்தகைய மகா ஒன்று பூமியில் இருந்து கொண்டு தன் அறிவின் செயலை நிறுத்தி விடுகிறது. விதியின் செயலை நிறுத்தி விடுகிறது. மனதைச் சாந்தமாக்கி விடுகிறது. எல்லாவற்றையும் அமைதியாக்கி, இறைவனுடைய கருத்தை வரவேற்பதற்குக் காத்திருக்கிறது.

அப்போது பிரம்மாண்ட வெட்ட வெளியில் உள்ள அற்புத வெளியிலிருந்து, அதன் மையப் புள்ளியிலிருந்து அதீதமான நுண்ணிய அருள் சிவ திருவருள் சக்தி ஒன்று அங்கிருந்து புறப்பட்டு வருகிறது.

அந்தச் சக்திக்காகக் காத்திருக்கும் இதன் கபாலத்திற்கு வருகிறது. அந்தக் கபாலத்திற்கு வந்த ஒன்று ஆத்ம கேந்திரத்திற்கு அனுப்பி அங்கிருந்து சிதாகாச வெளியில் நின்று அந்தத் திருவருள் கருத்தை அந்த ஒன்றுக்கு வெளிப்படுத்திக் கொண்டு இருக்கிறது.

சான்றாக, வேத வியாசர் - பிரம்ம சூத்திரம் ஆதி சங்கரர் - அருட் போதனைகள், வள்ளலார் - திருவருட்பா, இராம கிருஷ்ண பரம ஹம்சர் சிவ நாதக் கருத்துகள்.

**சந்தோஷம்**

# யாத்திரையில் - ஜீவ யாத்திரை

வேண்டாமென்று சொன்னேன் கேட்காமல் வா என்று அழைத்துச் சென்றது. சூக்கும அருள் ஆக்ஞைப் படி 12.2.2001 மாலை 5.00 மணிக்குக் கங்கை - காவேரி விரைவு வண்டி புறப்பட்டது.

15 நாட்கள் ஞான யாத்திரை முடிந்தது. சுத்த - அசுத்த நிலையில் இருந்ததெல்லாம் சுத்த நிலை பெற்றது. இறை தேட்டகத்துடன், இறையானந்தத்தில் 26.2.2001 மாலை 6 மணிக்கு வந்த இடத்திற்கு திருப்பி வந்தோம். இதற்கும் இடையில் அலகாபாத் கும்ப மேளா - அமுதம் விழுந்த இடம். கங்கை, யமுனா, காவேரி சங்கமம். மூன்று நதியின் சங்கமம்.

மூன்று நாட்கள் சிவ மடத்தில் தங்கினார்கள். இரண்டு முறை சங்கமத்தில் நீராடி - நீராடி - நீராடித் தொல்லையறும் பிறவியை நீக்கச் சாதனை புரிந்தார்கள். இங்கு தான் சத்திய தேவ் மகராஜ் சமாதியுள்ளது. அந்தச் சமாதிக்கு ஜோதி என்ற பெண் சேவை புரிந்து வந்தாள். அவருக்கு ஞான சந்நியாசம் வழங்கப்பட்டது. இரவு 12 மணி வரை எல்லோரும் ஜெபம், தியானம் செய்து கொண்டிருந்தார்கள்.

15ஆம் தேதி காலை அலகாபாத் சிருங்கேரி மடத்தில் யோகாசனப் பயிற்சி ஆத்ம சாதகர்களுக்கு அளிக்கப்பட்டது. அன்று மாலை மூன்று நதிகள் சங்கம இடத்தில் வெட்ட வெளி தியானம் 40 நிமிடம் நடந்தது. வெட்டவெளி தியானம் பற்றிய பயிற்சி வகுப்பு நடந்தது.

யாத்திரைக்குள் யாத்திரை. யாத்திரைக்காக யாத்திரை. யாத்திரையில் யாத்திரை. யாத்திரையின் வெற்றிக்காக யாத்திரை. யாத்திரைக்கு முற்றுப் புள்ளி வைத்து யாத்திரையின் நோக்கத்தை நிறைவேற்றி; யாத்திரையின் முடிவில் இன்பத்தை என்றும் சாசுவதமாக்கி எல்லா ஊழிக் காலங்களும் சந்தோஷமாக இருக்க யாத்திரையின் வெளியே ஒரு யாத்திரை. 4 பிறவிகளில் ஆற்றும் அருள் வினை, யாத்திரை இந்தப் பிறவியில் 15 நாட்களுக்குள் நடத்தப்பட்டது.

ஜீவ யாத்திரையில் இந்த யாத்திரை ஏறு முகத்தில் வீறு கொண்டு ஜீவ யாத்திரையைப் பெருமைப் படுத்தி ஜீவனை ஜீவ ஆனந்தத்திற்குக் கைப் பிடித்து அழைத்து இறைவனின் கைவசம் ஒப்படைக்க இறைவனை நோக்கிக் கரம் குவித்து ஓடுகிறது.

இந்த 15 நாட்கள் ஞான யாத்திரையில் கலந்து கொண்ட ஜீவன்கள், ஜீவன்களின் பிறவிகள் குறைந்திருக்கும்; இந்த 15 நாட்கள் வேரறுக்க முடியாத கடுமையான பந்த பாசங்களின் வீரிய சக்தி கொஞ்ச - கொஞ்சமாகத் தன் பலனை இழந்து இறைவனை நோக்கி அவர்கள் மனத்தைத் திருப்பியிருக்கும். கொடுமையான உள்ளம் கொண்டவர் உள்ளம் கொடுமையிலிருந்து விலக்கப்பட்டு தெய்வீகச் சிந்தனை சிரசில் நுழைந்து சிரசில் உள்ள தெய்வீகப் பெட்டகத்தைத் திறந்து தெய்வீக சுகத்தைக் காண ஒரு அற்புத ஆர்வம் தோன்றி வினையாற்றத் தொடங்கியிருக்கும்.

இந்த ஞான யாத்திரையில் சிந்தித்தல்; பயத்தை வெல்லுதல்; தீமையிலிருந்து எச்சரிக்கையாக விலகுதல்; முழு கவனமாக இருத்தல்; எல்லோரும் ஜீவன்களே யென்று தெரிந்து கொள்ளுதல்; சப்த பிரம்மத்தின் சக்தியை அன்பு நிலைக்காக, அருள் நிலைக்காக, பேரருள் நிலைக்காக, சித் வினைக்காகப் பயன்படுத்துதல்.

18 காமியார்த்த குணங்களை நினைவிலிருந்து அகற்றி நிஷ்காமிய புள்ளிக்கு வருதல்; சுத்த நிலையடைதல்; சுத்த சுக நிலை பெறுதல்; இரு கன்னங்களிலும் தன் கையால் போட்டுக் கொள்ளுதல்; புற நிலையில் ஆதி கடவுளை ஆத்மாவில் சிந்தித்துப் பிரதி பிம்பங்களை மனங் கடந்து அல்லது மனம் முழுதும் ஒரே சிந்தனையில் தரிசித்தல்; புற அழுக்கும், அக அழுக்கும் முழுதும் விலகப் பல நதிகளில் நீராடுதல்; ஆங்காங்கே, அப்போதைக்கு அப்போது தியானம் செய்தல்; ஆண்டவனைச் சிந்தித்த வண்ணமாக அருள் ஜெபம் நடத்தல்; தனி ஜெபம், ஏகாந்த ஜெம்; ஏகோபித்த ஜெபம் நடத்தல்; 15 நாட்களுக்கு முன்பு விட்ட மூச்சுக்கும் இப்போது விடுகின்ற மூச்சுக்கும் முற்றிலும் வித்தியாசமாக விடல், அன்று அஞ்ஞான மூச்சு; இன்று ஞான மூச்சு; ஞானக் காற்றைச் சுவாசித்தல்.

ஆங்காங்கே சுவாமிகளின் அருளுரைகள், இடியுரைகள், கருத்துரைகள், வாழ்வுரைகள், கடவுள் சொற்கள், கடவுள் சுகம், அண்டவெளி அருளாற்றல் காணச் செய்தல், பெறச் செய்தல், பிரமித்திடும் காட்சிகள், பிரமிக்கா காட்சிகள், எத்தனையோ வகையான ஞானப் படியில் ஏறுதல் ஆகியவை இந்த ஞான யாத்திரையில் இடம் பெற்றுள்ளன.

அத்தனையும் வெளிப்படையாக இதில் கலந்து கொண்ட

அத்தனை பேருக்கும் அவரவர்களுக்குச் சொந்த மாக்கப்பட்டது. வெட்டவெளிச்ச மாக்கப்பட்டது. அவர்கள் தேக நிலையிலிருந்து விதேக நிலையை அடைய, சுத்த சிவ நிலையில் வழி காட்டப்பட்டது.

ஓடியோடி ஓடி உட்கலந்த ஜோதியை நாடி நாடிப் பார்க்கும் இந்த முறை ஞான யாத்திரையில் அனுபவமாக்கப் பட்டது.

விட்டுக் கொடுத்தல்; அனுசரித்துப் போதல்; அபேத நிலைக்கு வருதல், ஆனந்த நிலைக்கு வருதல்; இகம் வேண்டாம் - பரம் வேண்டும் என்ற சித் நிலைக்கு வருதல்; வெறுத்தல்; விரக்தி, விபரீதம் கொள்ளுதல்; கிளறுதல்; கத்துதல்; அகோரம் கொள்ளுதல் போன்ற வினைகளிலிருந்து முற்றிலும் விலகி ஆன்மிக வாழ்வு நடத்தத் தொடங்குதல்; ஜீவ ஐக்கிய வினைக்கு வினையாற்றுதல்; ஜீவ-சிவ ஐக்கிய பெரு நிலைக்கு உந்துதல் ஆகிய வினைகள் இந்த யாத்திரையில் கிடைத்த பயன்களாகும்.

சாமீபம், சாரூபம், சாலோபம், சாயுச்யம் என்ற 4 படிகளை ஜீவன்கள் ஏறுவதற்கு அற்புதமான ஞானப் பேரொளியைக் காட்டுதல் இந்த ஞான யாத்திரையாகும்.

குண்டலினி என்ற மகா அருட் சக்தியை பிண்டவெளியில் விழிப்புற்று கைலாசம்க் செல்லக் காத்திருப்பதற்கு விழிப்பு சக்தியைக் கொடுத்துள்ளது. இந்த ஞான யாத்திரை சாக்கிரம், சொப்பனம், சுழித்தி, துரியம், துரியாதீதம் ஆகிய அவத்தையிலிருந்து ஜீவனை விடுவித்து சிதாகாச உலகிற்கு அழைத்து வந்து விடுவதற்குத் தயார் நிலையில் வைக்கிறது.

அன்றாட தேக பயணத்தில் எத்தனையோ கிலோ மீட்டர் தேகம் சென்று வந்து கொண்டிருக்கும். இந்த 15 நாட்கள் யாத்திரையில் 4481 கி.மீ. கடந்துள்ளது. அதற்குள் எத்தனை பேரின்பங்கள், காண முடியாததைக் காண்டல், கருத முடியாததைக் கருதுதல், எண்ண முடியாததை எண்ணல், ஓட முடியாததை ஓடுதல், பெற முடியாததைப் பெற முயற்சித்தல்.

**காசியில் நான்**

காலையில் வழக்கம் போல் 5.30 மணிக்கு எழுந்திருந்தேன். இல்லை- இல்லை. என்னுள் இருந்த ஒன்று என்னை விழிக்கச் செய்து

இவ்வுலகிற்குக் கொண்டு வந்தது. நீராடினேன். நீராடுதல் என்ற தத்துவ நிகழ்ச்சி ஏராளமாக உண்டு. ஆனால், இது புற நிலையில் நடந்தது. பிறகு காசி விஸ்வநாதர் ஆலயத்திற்குச் சென்றோம். எனக்கு முன் எல்லோரும் அங்கு இருந்தனர்.

துறவிகள் கூட்டம் ஏராளம். கண்களெல்லாம் இறை பக்தியில் திளைத்துக் கொண்டு விஸ்வநாதருக்கு ஜெய் என்று சொல்லிக் கொண்டு சென்றார்கள். சிலர் கையில் கங்கை நீரெடுத்துக் கொண்டு கோயிலுக்கு வந்தார்கள். இந்தியாவில் உள்ள 12 ஜோதிர் லிங்கங்களில் ஒன்று தான் காசியில் உள்ள விஸ்வநாதர் லிங்கம்.

அந்தப் பாண லிங்கத்தில் அந்த நீரை வார்த்தார்கள். சிலர் பால் கொண்டு வந்து அபிஷேகம் செய்தார்கள். அந்தக் கோயிலுக்குள் ஒரு அற்புதமான சக்தி நிறைந்து நிற்கிறது. பெரிய சோம்பேறிகள் கூட இவ்வாலயத்தில் நுழைந்து விட்டால், இறைவனின் திருவருள் எல்லைக்குள் வருவதை எளிதில் உணர்வார்கள். இரவு சயன பூஜை 10.35க்குத் தொடங்குகிறது.

பிறகு காலை 10.35 மணிக்குக் கேதாரி கட்டத்திற்குச் சென்றோம். அங்கிருந்து கொஞ்ச தூரத்தில் அழகான ஒரு இடம். ஒரு சதுக்கம் கிடைத்தது. அந்தச் சதுக்கத்தில் கங்கை நீரை விட்டுக் கழுவி விட்டோம். கழுவப்பட்டது. பிறகு சற்குருவுக்கும், மாதாஜி சித்தருக்கும் அபிஷேகம் செய்வதற்கான முன் யத்தனங்கள் நடந்தன.

**ஒரு நாள்**

ஒருநாள். அது திரு நாள். அது தெய்வம் தந்த சித்ரூப தரிசனப் புண்ணிய நாள். ஆத்ம சாதனைக்கான அருள் நாள். ஜீவ யாத்திரை ஜீவனை உத்வேகத்துடன் யாத்திரையில் விரைவு செய்யும் விஸ்வ நாள்.

காசி மாநகரம். அங்கே விஸ்வநாதர் எழுந்தருளியுள்ளார். விஸ்வ நாதர் என்பது குறிப்பிடட ஒருவருக்குச் சொந்தமானதன்று. விஸ்வம் என்றால் எல்லா அளவிற்கும் அப்பால். மகா பிரம்மாண்டமாய், வெட்ட வெளியாய், உள்ளது உள்ளபடி இருப்பதாகும். அங்கிருந்து நாதம் வெளிப்பட்டது. வெட்டவெளி எந்த அளவிற்கு உள்ளதோ அதே நிலையில் (அளவு) நாதம் இருந்தது. வெட்டவெளி முழுதும் நாதம் நிறைந்து இருந்ததால் விஸ்வநாதம் என்ற நாமம் வந்தது.

முதலில் இந்தப் பிரபஞ்சம் விரிவடைவதற்கு முன்பு அகண்ட பெரு வெளியில் மையம் தோன்றியது. அந்த மையப் புள்ளியிலிருந்து சப்த நாத பிரம்மம் வெளிப்பட்டது. நாதம் வெளிப்படப் வெளிப்பட வெளி விரிந்து கொண்டு வந்தது; வெளி விரிய அகண்ட கோளங்கள் அதிலிருந்து புறப்பட்டு வெளி வந்தன. அண்ட கோளங்களிலிருந்து பஞ்ச பூதங்கள் வெளிப்பட்டன. அவைகளின் கூட்டுச் சேர்க்கையில் ஜீவன்கள் வெளிப்பட்டன.

அந்த நாதம் அகரம், உகரம், மகரம் என்ற மகா மந்திர அட்சரமாய் வெளிப்பட்டது. அந்த அட்சரத்தில் அஷ்டாசரம் உண்டு. அந்த அஷ்டாசரம் ஒன்று நாதமாகவும், நாதத்திலிருந்து விந்து வெளிப்பட்டதாகும் என்று அந்த அஷ்டாசரம் பேசுகிறது.

3 அட்சரங்கள் ஒன்று சேர்ந்தது ஓங்காரமாகும்.

**அபிஷேகம் செய்வதற்கான யத்தனங்கள்**

இதுதான் உண்மை. இந்த உண்மைக்குள் ஒரு உண்மையுண்டு. அந்த உண்மைக்குள்ளே ஒரு உண்மையுண்டு. அந்த உண்மைக்குள் இன்னொரு உண்மையுண்டு. இன்னொரு உண்மைக்குள் பேருண்மையுண்டு. அதுவே ஆதி மூலம். அதுவே சிவம்.

புற உண்மை அதற்குள் அக உண்மை. அதற்குள்ளே ஆத்ம உண்மை. அதற்குள்ளே அப்பால் உள்ள சிவ உண்மை. இந்த ஐந்து உண்மைகளைக் கண்டறிந்தவர் சற்குரு. நான்கு உண்மைகளுடன் இருந்தவர்கள் சித்தர்கள். மூன்று உண்மையோடு இருந்தவர்கள் ஞானி. இரண்டு உண்மையோடு இருப்பவர்கள் ஆத்ம சாதகர்கள். ஒரு உண்மையோடு வாழ்பவன் மாமேதை, சான்றோர். எதையுமே தெரியாமல் இருப்பவர் - இருளர்.

மூன்று உண்மையிலேயே கடந்த பிறவி உண்மை தெரிய வரும். இரண்டாவது உண்மையில் இப்பிறவி முழுதும் தெரியும். அதாவது பிறப்பிலிருந்து இறப்பு முடிவு வரை தெரியும். ஒரு உண்மையில் புற உலகத்தின் மொத்த உருவம் புரிய வரும். நான்காவது உண்மையில் சிருஷ்டி, காப்பு, சம்ஹாரம், அருளல், மறைத்தல் ஆகிய ஐந்து உண்மைகள் வெளிப்படும். அவைகளின் அதீதியாக இருக்கும் விதியை மாற்றும் வல்லமையுண்டு. ஐந்து உண்மையில் எல்லாம் ஏகம்,

எல்லாம் ஆனந்தம், எல்லாம் ஒன்று, எல்லாம் சிவம் என்ற நிலையை அடைதல்.

இந்த இது வாராணசி கங்கை நதியை காணச் சென்றது. அது கேதாரி கட்டத்தை வந்து அடைந்தது. கங்கை அழகாக ஓடிக் கொண்டு இருந்தாள். கேதாரி கட்டத்திலிருந்து விலகிச் சிறிது தூரம் சென்று கொண்டிருந்தது. ஓரிடம் இதை அழைத்து அது அகண்ட, பெரிய இடம், உயரமான இடம்; அதன் ஆழத்தில் கங்கை ஓடிக் கொண்டிருந்தாள். அதன் ஓரத்திலிருந்து யாரும் விழாமல் இருக்க உயரமான இரும்புக் கைப் பிடிகள் போடப் பட்டிருந்தன.

சுமார் 11/2 ஏக்கர் இடமிருந்தது. எல்லாம் சிமெண்ட் தரை வண்ணங்களாயுள்ள சதுரமான இயற்கைக் கற்களால் போடப் பட்டிருந்தது. தேடிய இடம். அதன் எதிரே ஒரு சிவன் கோயிலிருந்தது. சற்குருவுக்கும், மாதாஜி சித்தருக்கும் ஒரே சமயம் மகா அபிஷேகமும், மகா பூஜையும் நடத்துவதற்கு அந்த இடத்தின் மகா அருள் சக்தி அழைப்புத் தந்து அழைத்துச் சென்றது.

அந்த இடத்தைக் கவனித்தோம். எந்தெந்தக் கோணத்தில் அந்த இடத்தைக் கவனிக்கின்றோம் என்பதை அங்குள்ள அருள் இதற்குக் காலம் கொடுத்து வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. சற்குரு இதனுள்ளே இருந்து, "இது செய்; இதை அப்புறப்படுத்து; இது தேவையில்லை; இதை விலக்கு; இதைக் கொண்டு வா; இதை இந்த இடத்தில் நிச்சயப்படுத்து; எங்கும் சாஸ்வதமாக இருப்பதை விழிப்பு நிலைக்குக் கொண்டு வா. வெட்டவெளிக்குள்ளே திருவொளியுள்ளது. அந்தத் திருவொளிக்குள் நீ போ" என்றார்.

கங்கை ஓடுகிறது. அந்த கங்கை நீருக்குள்ளே திருவருள் பரசக்தியுள்ளது. நீ உன்னிலிருந்து விலகு. நீ கையன்று, நீ காலன்று, நீ உடலன்று, உருவமன்று, உபாதைகள் அல்ல என்று இதனுள்ளேயுள்ள சற்குரு இதனுள்ளே உள்ளவைகளை வெளியே சற்று தூரத்திற்கு அழைத்துச் சென்று அங்கு அவைகளைச் சற்று நேரம் ஆடாமல், அசையாமல் நிறுத்தி விட்டு வந்தார்.

இந்த மாபெரும் மாதாஜி சித்தர், ஞான சித்தர் மகா சித்ரூப அபிஷேகத்திற்கு இது 3 மணி நேரம் பணியாற்றியது. சோர்வுமில்லை, உபாதையுமில்லை ஏனென்றால் சோர்வு கொடுக்கக் கூடிய சக்திகளை

வெளியே கொண்டு வந்து சற்று தூரத்தில் நிச்சலன நிலையில் நிறுத்தி விட்டார். அவைகளை மௌனமாக்கினார். 10 லிட்டர் – 10 லிட்டர் கேன்களில் சங்கிலி போன்று தொடர்ந்து அருளன்பர்கள் கங்கையைக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். பூத உருவம் மறைந்தது. அந்தக் கேனை எடுத்துத் தலைக்கு மேலே தூக்கி அபிஷேகம் செய்யப் போகின்ற இடத்தைக் கங்கை நீரைவிட்டுக் கழுவியது.

அந்த நீருள்ள பெட்டியைத் தூக்கியதும் கங்கை நீர் – விழிப்புக்குக் கொண்டு வரப்பட்டது. முதல் நிலையில் புற அழுக்குகள் வெளியேற்றப் பட்டன. அடுத்த நிலையில் தீயவர்களின் கண் பார்வை சக்திகளிலிருந்து சக்தி நீக்கப் பட்டது. மூன்றாவது நிலையில் பாவிகள் அந்த இடத்தில் பலகாலம் நடமாடி யிருப்பார்கள்; பாவத்தைத் தீர்ப்பதற்குத் தானே கங்கைக்கு வருகிறார்கள்; அந்தப் பாவிகளின் பாவ சக்திகள் படர்ந்திருக்கும்– அவைகள் நீக்கப்பட்டன. காலத்தின் சீற்றங்கள் அங்கே பட்டிருந்தது அது நான்காவது நிலையில் நீக்கப்பட்டது. ஐந்தாவது நிலையில் பாவங்களைப் போக்கி விட்டு வீட்டிற்குச் செல்லலாம் என்று பலர் வந்திருப்பார்கள்; அவர்களில் சிலர் இங்கேயே நன் மரணம் அடைந்திருக்கலாம் அல்லது துர்மரணம் அடர்ந்திருக்கலாம். அவற்றின் சக்தியும் அங்கிருந்து வெளியேற்றப்பட்டது. ஆறாவது நிலையில் மணிகர்ணிகா கட்டத்திலிருந்து – அர்ச்சந்திரா கட்டம் வரை வேகும் சடலங்களின் கர்ம அதீத சக்திகளும், அவைகளின் நோய்களின் சக்திகளும் எரியும் போது வெளி வரலாம். அவைகளும் இந்த இடத்தில் நீக்கப்பட்டன. ஒவ்வொருவருக்கும் ஒரு மந்திரம். மந்திரத்தைச் சூக்கும இயந்திரத்திலடக்கி அந்த நிலையில் அதைப் பணியாற்றச் செய்தல்; அது முழுமையாகப் பணியாற்றுகிறதா? என்பதைக் கவனித்துக் கொள்ளுதல்; அடுத்த மந்திரம் மறதிக்கு அப்பாலிருந்து வரவழைக்கப் பட்டது. இயந்திரத்தை அதில் புகுத்தி அந்தக் கங்கை நீருக்குள் புகுத்தி அந்த இடத்தைக் கங்கையின் விழிப்பு சக்தியில் அந்தந்தத் தீய சக்திகளை வெளியேற்றச் செய்தல். இப்படி ஆறு நிலையில் அந்த இடத்தில் கங்கை நீரின் விழிப்பு பயன்படுத்தப் பட்டது. அந்தச் சமயத்தில் அந்த நீர்ப் பெட்டியை எடுத்து நீரை விரித்துப் பரப்பிய விதம், அதன் வேகம் அத்தனையும் மனித சக்தியில் இயக்கியது அன்று. அது முற்றிலும் மாற்றப்பட்டது. ஞானிகள் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இந்தச் சுத்த சித்தி நிலையில் இன்னொரு நிலையும் நடந்தது.

அங்கே தன்னையறிந்தவர்கள், தன்னை உணர்ந்தவர்கள், ஆத்ம தரிசனம் பெற்றவர்கள், கடவுள் தரிசனம் பெற்றவர்கள், சாயுச்ய மடைந்தவர்கள், சமாதி நிலை பெற்றவர்கள், நிர்விகல்ப மடைந்தவர்கள், தெய்வங்களாய் இருந்தவர்கள், சிவமாயிருந்தவர்கள் அந்த இடத்திற்கு எத்தனையோ லட்சம் பேர் விஜயம் செய்திருக்கலாம்; அத்தகைய அருள் சிவ சக்தியைப் புற நிலையில் கொண்டு வந்து எங்கும் சிவ மயமாக்கி விதேக நிலையில், சிவ-சிவ நிலையில், சிவ மயமாய் அந்த இடத்தை மாற்றிச் சிறிது நேரம் அதை அப்படியே இருக்கச் செய்யும் பணியும் - இந்தக் கங்கை நீரின் விரிப்பில் நடந்தது. ஞான யாத்திரை நின்றது; ஜீவ் யாத்திரை நடந்தது - அதில் சிவம் வெளிப்பட்டது.

பூஜை செய்யுமிடத்தில் மந்திர ஸ்தாபனம் செய்யப்பட்டது. சற்குருவின் உருவம் மந்திர சொரூபத்தில் அழைக்கப்பட்டது. மாதாஜி சித்தர் - அந்த உருவத்தின்த் இன்னொரு அசல் அழைக்கப் பட்டது. இரண்டும் சிவ ஞான மெய் விழிப்பில் விளங்கியது. அது இதைப் பார்த்தது. இதுவும் அதைப் பார்த்தது. இந்தப் பணிக்குப் புறக் கண்கள் தேவையில்லை. மூன்றும் சிவமாயிருந்தது. ஆத்ம லிங்கம் ஒன்றே போதும். ஆத்ம லிங்கத்தில் மகா சக்தியுள்ளது.

அதனால் ஆயிரம் கோடி யுகங்கள், ஆயிரம் கோடி கிரகங்கள் அகண்ட வெட்ட வெளி எல்லாமே காண இயலும். கண்டு கொண்டிருக்கும்.

**மகா அபிஷேகம்**

மகா அபிஷேகம் நடந்து கொண்டிருந்தது. இப்பக்கம் கங்கை ஓடிக் கொண்டிருந்தது. இன்னொரு பக்கம் சிவன் கோயில், பின் பக்கத்தில் காசி விஸ்வநாதர். முன் பக்கத்திலே வியாச காசி. காசியில் 28 கோடி லிங்கங்கள் இருக்கின்றன. எங்குப் பார்த்தாலும் லிங்கங்கள். விஸ்வநாத லிங்கத்தைப் பார்த்தேன். அது வெட்ட வெளியைக் காட்டுகின்ற அருவமாக இருந்தது.

இந்த விஸ்வநாதர் லிங்கத்தை விஸ்வ - ரூப லிங்கமாகத் தரிசிக்க வேண்டுமென்ற அவா மேலிட்டது. இது உட்கார்ந்தது. இது உட்கார்ந்த வண்ணமாக மாறியது. கூடு ஆடவில்லை! காரணம் கூட்டிற்குள்ளிருந்த ஒன்று கூட்டின் ஆட்டத்தை நிறுத்தியது.

இதனுள்ளே ஒரு லிங்கம் பூரணமாக, மகா பரிபூரணமாகக் காட்சியளித்தது. அதற்குப் பெயர் தான் ஆத்ம லிங்கம். ஆணிலும் ஆத்ம லிங்கம் உண்டு. பெண்ணிலும் ஆத்ம லிங்கமுண்டு. இதை உணர்ந்தால், தரிசித்தால் இந்நிலையை வெளியே கொண்டு வந்தால் ஆணுமில்லை, பெண்ணுமில்லை. இவைகளின் இரண்டின் செயல்களுமில்லை. இந்நிலையைப் பெற்றவனே தன்னையறிந்தவனாவன். அவனால் முன்னை வினையின் முடிச்சை அவிழ்க்கவும் முடியும். பின்னே வினையைப் பிடித்துப் பிசையவும் முடியும்.

இதை அனுபவித்துக் கண்டவர் திருமூலர். இதைக் காகிதத்தில் கண்டவர் நாம். தன்னைத் தானே அறிகின்ற தத்துவம் அனுபவமாகிறது. இதனால் தான் ஆரம்ப சந்நியாசி பத்து மாதம் காசியில் கற்ப வாசலில் இருக்க வேண்டும் என்று வகுத்திருக்கிறார்கள். இந்தப் பத்து மாதம் முடிப்பதற்குள் துறவி தன்னை அறிய வேண்டும், ஆத்ம தரிசனம் பெற வேண்டும், ஆத்மானந்தத்தில் திளைக்க வேண்டும்.

ஆத்ம தரிசனம் பெற்றவர்களிடமிருந்து உலகம் விலகி விடும். உலகம் பயந்து விடும். உலகம் அவர்களுக்கு அடிமையாகி விடும். தன்னை வென்றவன் உலகத்தை வென்று விடுவான் என்ற அனுபவம் இங்குத் தரிசனம் கொடுக்கும். படிக்கின்ற தத்துவத்தையெல்லாம் கேட்கின்ற தத்துவத்தை யெல்லாம், அறிகின்ற தத்துவத்தையெல்லாம், நினைக்கின்ற ஆத்ம பேதங்களெல்லாம், காசியிலே சித்தியடைகின்றன. அனுபவத்திற்கு வருகின்ற உண்மை காசியில் வெட்ட வெளிச்சமாகிறது. ஜீவ யாத்திரைக்கு இது தான் உயிர் நாடி.

**துறவு**

எதற்காக நாம் வணங்குகின்றோமோ அது கிடைத்து விட்டால் மீண்டும் - மீண்டும் அதை வணங்குகின்றோம். காரணம் என்ன? கர்மா இருக்கும் வரை தீமையாக இருந்தாலும் சரி, நன்மையாக இருந்தாலும் சரி, வணங்குவதற்காகப் பிறந்தது வணங்கியே தீர வேண்டும். வணக்கத்தை ஏற்பதற்காகப் பிறந்தது அதன் வணக்கத்தை ஏற்றே தீர வேண்டும்.

ஒரு காலத்தில் வணங்கப் பிறந்தது, வணக்கம் எல்லாம் முடிந்து விடும் வணக்கத்தை ஏற்க வந்தது, வணங்க வந்ததின் வணக்கம் முடிந்த

பிறகு அது இதை இரண்டற்ற நிலையில் ஆக்கி விடுகிறது. இதுவே ஜீவ யாத்திரையின் எல்லை.

ஒரு சலவைக் கல்லை மாசுபடுத்த முடியாது. அதை விடப் பெரியது ஆகாயம். அதை எதனாலும் மாசுப்படுத்த முடியாது. ஆபாசப்படுத்த முடியாது. அதைக் காட்டிலும் உயர்ந்ததாக அதை மாற்றவும் முடியாது. அதில் இல்லாதது எதுவுமில்லை. அதிலிருந்து தான் எல்லாம் வெளிப்படுகிறது. பிறகு அங்கு சென்று தான் எல்லாம் முடிவடைகின்றன. நீ அந்த நிலைக்கு எப்போது வரப் போகிறாய்? அந்நிலை வருவதற்கு நீ என்ன செய்ய வேண்டும்?

அதற்கும் உனக்கும் நல்லுறவு வேண்டாமா? ஆகாயம் பரிசுத்தமானது. பரிபூரணமானது. எல்லையற்ற முடிவில்லாப் பேரானந்தம் உடையது. எங்கும், எல்லோரிடமும் வெளிப்படும் ஆற்றலெல்லாம் அது தந்தது தான்.

நீ ஜீவன். ஆகாய நிலையை அடைவதற்கு நீ ஜீவ யாத்திரை மேற் கொண்டு இருந்தாய். இதில் தோல்வி என்பதற்கு இடமில்லை. உனக்குப் போட்டியில்லை. உனக்கு புகலிடம் அதுவேயாகும். அங்குச் சென்ற பிறகு இங்கு வரவேண்டும் என்று எண்ணாதே. நீ அங்குச் சென்ற பிறகு எல்லா உயிரும் உனக்காக வேண்டித் தவம் இருக்கும். அப்போது நீ ஜீவனாக இருக்க மாட்டாய். ஜீவர்களைக் கடையேற்றும் அதிபதியாய் இருப்பாய். ஜீவ யாத்திரைக்கு எல்லையுண்டு. சவ யாத்திரைக்கு எல்லையுண்டு. ஞான யாத்திரைக்கு எல்லையுண்டு.

யாத்திரை கடந்த நிலை வந்த பிறகு எல்லையுமில்லை, தொல்லையுமில்லை, ஏக்கமுமில்லை, ஆதங்கமில்லை, அச்சமில்லை, இல்லையென்பதுமில்லை, வேண்டுதல் இல்லை, வேண்டுவதில்லை, வேண்டி விரும்பி ஏற்பதுமில்லை, கொடுப்பதுமில்லை, கொடுக்கப்படுவது மில்லை, நல்லதுமில்லை, கெட்டதுமில்லை, நானுமில்லை, நீயுமில்லை. அதற்கு அப்பால் பரம். அதன் உள்ளே சிவம்.

இவ்வுலகில் நீ வந்த பிறகு இருக்கலாம் - இருக்கலாம் என்று தோன்றும். இருக்கணும் - இருக்கணும் என்று தோன்றும். இருந்தே தீர வேண்டும் - இருந்தே தீர வேண்டும் என்ற வெறி வரும்; போவதற்கான எத்தனங்களும், அறிகுறிகளும் தென் பட்டாலும் போகக் கூடாது என்று பேய் வெறி பிடித்துப் போகக் கூடாத திசைகளெல்லாம் சென்று

கொக்கரித்து, கூக்குரலிட்டு அழுகுரல் புரியும். புரண்டு - புரண்டு ஆராத கண்ணீராய் அவலத்தில் துடி-துடித்துக் கிடக்கும்.

ஜீவ யாத்திரை - ஒரு பகுதி முடிந்த பிறகு அந்த பிரம்மத்தின் காற்றுப்பட்ட பிறகு அதோ அதைக் காண வேண்டும். *ஐக்கியம் அடைய* வேண்டும் என்று துடியாய்த் துடிக்கும். அந்தத் துடிப்பின் ஒரு பிரிவு துறவு.

**மகோற்சவம்**

19 வந்தது. 19ஆம் தேதி அது. மாதா மாதம் வருகிறது. இந்த மாதம் 19ஆம் தேதி மிகவும் சிறப்பானது. அந்தச் சிறப்பு மனித சத்தியத்திற்கு அப்பாற்பட்டது. அந்தச் சிறப்புகளையெல்லாம் தருகின்ற வினை அந்தச் சத்தியத்திலிருந்து வந்தது. அந்த வினையை ஆற்றியது மனிதன்.

வந்தது 19-ஆம் தேதி காலை. எல்லாத் தேதியிலும் காலை வருகிறது. ஆனால் 19ஆம் தேதி காலை மிகவும் சிறப்பானது.

காலை. காலையில் தேநீர். 6 மணிக்குத் தேநீர். எத்தனையோ மகோற்சவம் பற்றிக் கேள்விப் பட்டு இருக்கின்றோம். ஆனால் தேனீர் மகோற்சவம் பற்றிக் கேள்விப் பட்டிருக்கின்றோமா? யாருக்குத் தேனீர். குற்றவாளிக்குத் தேநீரா? சிறைக்குச் செல்லாமல் வெளியே திரிகிறார்களே அவர்களுக்குத் தேனீரா? அசத்தியத்தில் வாழ்பவர்களுக்கா? கடவுளை மறந்தவர்களுக்கா? அதர்மத்தைத் தொழிலாகக் கொண்டு வாழ்பவர்களுக்கா? ஏமாற்றுபவர்களுக்கா? பொய்யர்களுக்கா? இல்லை-இல்லை. இவர்களுக்குத் தேநீரா? அதுவும் ஒரு சித்தர் பிரான் கொடுக்க வேண்டும்.

தேநீர் மகோற்சவம் விண்ணெல்லாம் வீறிட்டுக் கொண்டு கொண்டாடப் பட்டது. தர்மத்தைக் கதியென்று இருப்பவர்கள், காவி அணிந்தவர்கள், ஞானிகள், வேண்டாம் இந்த உலகம் என்று இருப்பவர்கள், சிறு சிறு இன்பங்கள் எத்தனையோ விட்டவர்கள், ஜெகமெல்லாம் போதும் என்று துறந்தவர்கள், சிவமே கதி என்று வாழ்பவர்கள், வேண்டாம் - வேண்டாமென்று சொல்லிக் கோவணத்துடன் அதுவும் இல்லாமலும் இருப்பவர்கள். காவியுடம்பு, ருத்திரத்தை அணிந்தவர்கள்.

ஆயிரமாயிரம் சாதுக்கள் தங்கள் பஞ்சேந்திரியங்களைக் கட்டுப்

படுத்தியவர்கள், நாக்கு ருசியை ஒதுக்கியவர்கள், வஞ்சக உலகத்தை விட்டு விலகியவர்கள், இறைவனே - இறைவனே என்ற தேட்டகத்தை தீவிரப் படுத்திக் கொண்டு இருக்கும். இத்தகைய முப்பதாயிரம் சந்நியாசிகள் கங்கைக் கரையில் உட்கார்ந்து கொண்டு இருக்கின்றார்கள். அவர்கள் எழுந்து வந்து இந்தத் தேநீர் மகோற்சவத்தை ஆரம்பித்து வைத்தார்கள்.

சாரை-சாரையாகச் சாதுக்கள். சாரை- சாரையாக யோகிகள், சாரை- சாரையாக நாக சந்நியாசிகள், சாரை- சாரையாகச் சன்னிதானங்கள், சாரை- சாரையாக லாட சந்நியாசிகள், சாரை- சாரையாகப் பைராகிகள், சாரை- சாரையாகச் சாதுக்கள், சாரை- சாரையாக வேதாந்திகள், சாரை- சாரையாகப் பௌத்தர்கள், ஆத்ம ஞானிகள், இறை பக்தர்கள், அகடாக்கள், ஆனந்தர்கள், அருளாளர்கள். இப்படி எல்லா வகை ஆன்மிகத் திருவுள்ளங்கள் - வந்து அந்தத் தேநீரை இறைவன் இன்புற அருந்தி; இறைவனைச் சிந்தித்து; ஆழ்ந்த தியானத்தில் சிதாகாசப் பெருவெளியில் ஆழ அவர்களுள் கலந்து நிற்கும் இந்தத் தேநீர் மகோற்சவம் காலை 6 மணிக்கு தொடங்கி, மதியம் வீறு கொண்டு எழுந்து, மாலை பெரியதாகி இரவு அதி வேகங்கொண்டு மறுநாள் 12.00 மணிக்கு மகோற்சவம் மகத்தான சிலிர்ப்போடு ஞானிகள் நல்லாசியோடு அருள் மழை பொழிய விளங்கியது.

அலகாபாத்திற்குக் கும்ப மேளாவிற்கு வந்திருந்த சாதுக்கள் காசி மாநகரில் வருணை அசிக்கு நடுவில் உள்ள வாரணாசி அனுமான் கட்டத்தில் கூடியிருந்த போது இந்தத் தேநீர் திருவிழா நடந்தேறியது.

*சாதுக்கள் எல்லாம் மகிழ்ந்தார்கள்.*
*திருடனும் மகிழ்கின்றான்.*

சாதுக்களும மகிழ்கின்றார்கள் - இரண்டிற்கும் எவ்வளவு வேறுபாடு.

*ஞானிகள் மகிழ்கின்றார்கள்.*
*இல்லறத்தார் மகிழ்கின்றார்கள் - இரண்டிற்கும் எவ்வளவு வேறுபாடு.*

யார் இதை நடத்தியது. இறைவான?! ஆமாம். மூல காரணம் அவன் என்றாலும் முதற்காரணம் ஓங்கார ஆசிரமம் தந்த மயிலாடுதுறை

பரப்பிரம்ம சற்குரு ஓம் ஸ்ரீ சித்தர் சுவாமிகள் அல்லவா? இதை மறந்தால் நாம் நம் உயிரை மறந்தவராவோம்.

உயிருக்கு ஒரு விமோசனம்; உயிருக்கு ஒரு பிரகாசம்; உயிருக்கு ஒரு ஆசை அது என்னவென்றால் பேருயிரோடு ஐக்கியமடைதல். இந்தப் பணி தேநீர் மகோற்சவத்தில் நடந்து கொண்டிருந்தது. பல லட்சம் மந்திரங்களை ஜெபித்தவர்கள், கடவுளருளைப் பல தடவை பார்த்தவர்கள், கடவுள் தரிசனத்தைப் பெற்றவர்கள், ஞானிகள் அந்தத் தேநீரை அருந்தினார்கள்.

ஞானத் தேநீரை அருந்துவதற்குப் பசு மாடுகள் எல்லாம் தன்னைச் சுத்தப் படுத்தியிருந்தன. மண் பானையெல்லாம் சுத்தமாக்கப்பட்டன.

வாசுகி, பாம்பால் கடைந்தெடுக்க கும்பம் அமுதமாகி விடும்; அதற்கு ஒரு மேளா. இது தேநீர் மேளா இதன் பெருமையை எழுத்தாக்க இயலாது. இதன் மூலம் இறைவனின் பெருங்கருணையை உணர முடியும்.

நடத்தியது ஓங்காரம் பொறுப்பாளர்கள். இன்னும் ஆன்மிக விளக்கம் விளக்கியிருக்கலாம்.

அடுத்து 19ஆம் தேதி மாபெரும் ஆத்மானந்தப் பணி. சாதுக்களுக்கு ஆத்ம சுகம் அளித்தல். விதேக திருப்தி கொடுத்தல்; விகல்பங்களற்ற அந்த கல்ப தேகங்களுள்ள அந்த சாதுக்களின் திருக்கரத்தால் அமுது படைத்தல். கங்கைக் கரையில் பல வகையான சாதுக்கள், சந்நியாசிகள் காத்திருக்கின்றார்கள். பகவானை நினைத்துக் கொண்டு மண்ணையும், சாம்பலையும் அள்ளிப் பூசிக் கொண்டு ஆடைகளற்றவராய் திகம்பரராய், தீரராய் அப்படியே இயற்கையோடு இயற்கையாய் இருக்கிறார்கள். அவர்களுக்கு அமுது படைத்தல். அவர்கள் முகத்தில் என்னே! சந்தோஷம். தேகத்தில் எழுகின்ற எல்லாவற்றையும் நீக்கியவர்கள், எல்லாப் பசியையும் கடந்தவர்கள் அல்லவா? அவர்களுக்குப் பாயாசம் படைக்கப் பட்டது. சப்பாத்தியும் படைக்கப்பட்டது. ஞான அருள் அக்னியில் விளைந்த அடிசலும் படைக்கப்பட்டது.

அருள் கரங்கள் அதை வாங்கின. இயற்கை நியதிக்காக அதை உட்கொண்டன. இது மதியம் 2 மணிக்கு நடந்தது. பசியற்றவர்களுக்கு

உணவா? பாச மற்றவர்களுக்கு உணவா? உலகம் கடந்தவருக்கு உணவா? பகைவர் இல்லாதவர்களுக்கு உணவா? நித்ய புருஷர்களுக்கு உணவா? உணர்வற்றவர்களுக்கு உணவா? ஆக இறைவனைக் கண்டவர்களுக்கு உணவு, இறை முக்தி அடைந்தவருக்கு உணவு, அப்படியென்றால் இறைவனுக்கே அமுது அளிக்கப்பட்டது என்பதாகும்.

**ஞான யாத்திரையின் வெற்றி**

வியக்கத் தகுந்த, வினை சற்குருவால் வியக்கத் தகுந்த வினை, தெய்வத்தால் வியக்கத் தகுந்த வினை. ஜீவ விழிப்புக் கொண்டவரால் வியக்கத் தகுந்த வினை நடந்தது அல்லது நடத்தப்பட்டது. இன்னும் ஏக வெளியில் நிறைந்துள்ள சிற் சக்திகள் வியக்கும் வினையும் இது தான். இத்தனை சக்திகளும் எதற்கும் வியக்காது. ஆனால் இந்த வினையைக் கண்டு வியக்கிறது. ஆனால் சிவம் வேடிக்கை பார்க்கும். சக்தி சிரித்துக் கொண்டே சந்தோஷ சிரிப்பு உதிர்த்துக் கொண்டேயிருக்கும். முழுமையாக அந்த 12.02.2001 - லிருந்து 26.02.2001 வரை இடைப்பட்ட நாட்கள் மற்றவர்களுக்குக் காலத்திற்கு உட்பட்ட நாட்களாகும்.

ஆனால் ஜீவ யாத்திரையில் பங்கு கொண்ட ஜீவன்களுக்குத் தெய்வத்தின் திருவருள் பார்வையும், பராசக்தியின் சந்தோஷ சிரிப்புக்குள், சற்குருவின் ஆசீர்வாத சக்திகள், சிற் சக்திகளெல்லாம் உடனிருந்து தாங்களும் இந்த யாத்திரையில் அருவங்களாகப் பங்கெடுத்துக் கொள்ளும் நாட்களாக, மரணமில்லாத நாட்களாக, இகத் துன்பங்கள் இல்லாத நாட்களாக, மாமாயை, மாயை, வித்யா மாயை மூன்றுக்கும் அப்பால் கடந்து பரிசுத்த நாட்களாக, அகங்காரம் சற்றுமேயில்லாத அருள் நாட்களாக, சிவம் அனைத்தையும் தன் நேரடிப் பார்வையில் வைத்துக் கொண்டு, பங்கு கொண்டவர்களுக்குத் தற்காலிகமாக உலக விழிப்புக் கொடுத்து, 12 நாட்களில் ஜீவ விழிப்பு தந்து தெய்வ நாட்களாக, விதியின் வல்லமையை ஒடுக்கி, விதியின் செயலை நிறுத்தி, தெய்வத்தின் செயலைச் சற்குருவின் வினைக்குள் வந்துள்ள முத்தி நாட்களாக, சித்தி நாட்களாக, வேதங்கள் சொல்லும் பிரம்ம நிர்வாண நாட்களாக, வெட்ட வெளியில் நடமாடும் வெட்ட வெளி நாட்களாக, இகக் கலப்பு சற்றும் இல்லாத சுத்த சுகோதய நாடக்ளாக, சுந்தர நாட்களாக, சுத்தானந்தா நாட்களாக, சிவ நாட்களாக, சிவானந்த நாட்களாக, பிறவி அறுக்கும் பேரின்ப நாட்களாக, காம தகனம்

நடத்தும் கருத்துள்ள நாட்களாக, ஜீவனிலிருந்து தேகத்தைப் பிரித்து, சவத்தின் தகனத்தின் முன் அமர்த்தி தன் தேகத்தைச் சவமாக்கி எரிந்து கொண்டிருக்கும் சவத்திற்கு அனுப்பி வைத்து, அதையும் சற்குருவின் திருவருள் சக்தியினால் தகனம் செய்ய வைத்து, எல்லாத் தகனங்களையும் கொண்டு வந்து உள்ளே உள்ள ஒவ்வொன்றையும் தகனம் செய்து அவரவர் ஜீவன்களுக்குத் "தகன ஜோதியைத்" தரிசனம் செய்ய வைத்து, தகன ஜோதியில் தன் ஜீவனைக் கலக்க வைத்து எல்லாவற்றையும் ஏகமாகப் புரிந்து, உலகம் ஒரு சாம்பல் என்பதை உணரச் செய்து, இந்தச் சாம்பலுக்காக இவ்வளவு வினையாற்றினோ மென்று ஞானக் கலக்கம் கொண்டு வந்து, பின் அந்தக் கலக்கத்திலிருந்து அவர்களை மீட்டு, இரு ஜோதியானந்தத்தில் இன்புற்று இருக்கும் தன் திரு நாட்களாக இந்த ஜீவ யாத்திரை நடந்தது.

இந்த நிலையில், இந்த யாத்திரையில் கலந்து கொண்டவர்கள் எப்படிப் பட்டவர்கள்? இந்த யாத்திரையில் கலந்து கொண்டவர்களை அது தேர்ந்தெடுத்தது. அவைகளுக்கு வேண்டிய சக்தியையும், அது தந்து, கர்ம பந்தம், பிராரப்த கர்மா, சஞ்ஜீவ கர்மா ஆகிய வினைகளிலிருந்து அந்த ஜீவன்களைத் தற்காலிகமாக விடுத்துச் சுத்த சகஜ ஜீவர்களாக மாற்றி அவர்களை இந்த யாத்திரைக்கு அனுப்பியது. ஆபத்துகளும், விபத்துகளும் இல்லாத யாத்திரையாக அதுவால் அது சமைக்கப்பட்டது.

இந்த 12 நாட்களும் பரசிவ வினை, பர நாத வினை, பரமானந்த வினை, பரமுக்தி வினை, பர ஜீவ வினை, சின்மய வினை ஆகிய வினைகள் வரவேற்கப்பட்டு அந்த 12 நாட்கள் வினையாற்றப்பட்டன. இங்கு வாத, பிரதி வாதத்திற்கே இடமில்லாமல் சரணாகதி நிலையிலே எல்லா வினைகளும் நடந்தன. இந்த 12 நாட்களும் நிம்மதியோடு, சந்தோஷத்தோடு நித்திரைக்கு எல்லோரும் சென்றார்கள். சந்தோஷமாக, சாந்தமாக, நித்திரையிலிருந்து காலையில் வெளி வந்தனர். நித்திரை அவர்களைச் சுகமாகப் பார்த்துக் கொண்டது. அவர்கள் அன்று முழுதும் உழைத்த மனோ உழைப்பு, தேக உழைப்பு, நாடி, நரம்பு உழைப்பு, பிராண உழைப்பு, மூளை உழைப்பு, பஞ்ச கோசங்கள் உழைப்பு ஆகிய உழைப்புகளால் தேகத்தின் மொத்த உருவம் சோர்ந்திருக்கும். அந்தச் சோர்வையெல்லாம் நித்திரா தேவி அவர்களிடமிருந்து எடுத்து விட்டு வெட்ட வெளி சக்தியை அந்தத் தேகத்திற்குள் பிரவேசிக்க வைத்து, நிர்மல தேகமாக்கிக் நிராமய தேகமாக்கி, எல்லாச் சோர்வுகளும் எடுத்து

விட்டுத் தூய்மையாக அடுத்த செயல் ஆற்றத் தயார் செய்து சிவகதி அடையப் பக்குவம் பெறும் சொர்ண விக்ரகங்களாக அவைகளை அது பவனி வரச் செய்தது.

ஒவ்வொரு நாள் நடக்கும் வினையையும், அந்தத் தற்காலிகமாக ஜீவ விழிப்பு உள்ள ஜீவன்கள் கண்டு வியந்து, வியக்கத் தகுந்த வினைகளை அதுகளே தனக்குத் தெரியாமல் தானே ஆற்றிக் கொண்டிருந்தன. அடுத்த நொடியில் என்னவாகும்? என்ன ஆற்றப் போகிறது என்பது. அந்தப் பரா சக்திக்கும், சற்குருவுக்கும் மட்டுமே தெரிய வந்தது.

இந்த வினைகளை ஆற்றும் போது இவை மனித வினைகளல்ல, மாமனித வினைகளல்ல, விதியின் வினைகளல்ல, விதேகத்தின் வினைகளல்ல, எதுவுமே உங்கள் வினைகள் அல்ல. கலந்து கொண்டவர்கள் கருவிகள், ஆனால் வினையினால் விளையும் பயன்கள் எல்லாம் அந்த ஜீவன்களுக்கே போய் சேரும்.

**கயா**

மகா விஷ்ணு ஸ்தலம். அவரவர்கள் மூதாதையர்கள் பிண்டமிட புத்த கயாவுக்கு வந்தார்கள். புத்தர் ஞானம் பெற்ற போதி மரத்திற்குக் கீழே எல்லாரும் அமர்ந்தார்கள். எல்லோரும் தியானத்தில் ஆழ்ந்திருந்தார்கள். மரத்திடம் மண்டியிட்டு வணங்கினார்கள். அகக் கண்ணையும், புறக் கண்ணையும் மூடிக் கொண்டு தியானம் செய்தார்கள்.

கொல்கட்டாவில் மூன்று நாள். அங்கு உள்ள கிருஷ்ணன் கோயிலில் ஓங்கார ஆசிரமத் தலைவர் அருளுரை வழங்கினார்கள். மூல மந்தரம் 1008 தடவை ஜெபிக்கப்பட்டது.

ஆன்மிகப் பேரரசர் ஸ்ரீ இராம கிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் சமாதிகளில் தியானம் நடத்தப்பட்டது.

**சந்தோஷம்**

# மகா சந்நிதானம்

ஆதிமூலப் பேருண்மை மையத்தில் நின்று கொண்டால், இருப்பது ஒரே கோயில், அந்தக் கோயிலில் ஒரே தெய்வம். அந்த ஒரு தெய்வத்தில் எல்லாம்.

இதற்கு வாசல் இல்லை. இதற்கு எல்லையில்லை. இது மகா விழிப்பில் உள்ளது. தொடக்கம், முடிவு என்ற இரண்டு இங்கிருந்துதான் வருகிறது. பிறகு அங்கே முடிகிறது. இதற்கு நீளம், அகலம் கிடையாது.

இதற்கு அநித்தியம் இல்லை. நிராமயமானது. நிர்மூலமானது. தூய்மைகளுக்கெல்லாம் சிறந்த தூய்மையானது. இதை உணர்ந்தால், கண்டால், சிந்தித்துக் கொண்டிருந்தால் தூய்மையாகி விடலாம். முழுமையாகி விட்டால் ஒரு நொடியில் ஜீவ யாத்திரையை முடித்துக் கொள்ளலாம்.

ஒரு நொடியில் சுபயோகத்தில் சுபமாக, சுகானந்தமாக நிறைவு செய்து கொள்ளலாம்.

சந்நிதானம் என்றால் கடவுள். கடவுள். கடவுள். அதுவே வெட்டவெளி. வெட்டவெளியே கடவுள். வெட்டவெளிதான் ஒரே திருக்கோயில். எல்லா அண்டங்களிலும், அகிலாண்டங்களிலும், எல்லா மகாபிரம்மாண்டங்களிலும் அண்டகோடி பிரம்மாண்டங்களிலும் அண்டகோடி மகாபிரம்மாண்டங்களிலும் உள்ளது.

நீயே கோயில். உன் உள்ளே கடவுள். இதுவே மகா சந்நிதானம்.

**சந்தோஷம்**

# பின்னுரை

ஹே மனிதனே! நீ சந்தோஷமாக வாழ வேண்டும். உனக்காகத் தான் இந்த ஜீவ யாத்திரை. இந்த ஜீவ யாத்திரை புத்தகம் உன் கையில் இருக்கிறது. உன் வாழ்வு உன் கையில் இருக்கிறது. உன் ஆத்ம சாதனை உன் கையில் இருக்கிறது. இறைவன் உன் கையில் இருக்கிறார். இந்த உலகம் உன் கையில் இருக்கிறது. உன் கையில் சந்தோஷம் இருக்கிறது. உன் கையைத் திறந்து பார்த்தால் உனக்கு எதுவுமே இல்லையென்று தோன்றும். ஆனால் எல்லாம் இருக்கிறது.

உன் மூச்சின் விலை என்னவென்று தெரியுமா? உன் மூச்சின் ஆற்றல் என்னவென்று தெரியுமா? அந்த மூச்சு எங்கிருந்து வந்தது என்று தெரியுமா? அந்த மூச்சு ஓடுகின்றது தான் தெரியும். அது ஓடி எதைத் தொட்டு விட்டு வருகிறது என்று தெரியுமா? அதைச் சிந்தனை செய்.

இந்தப் புத்தகத்தை அந்நியமாக நினைத்துக் கொண்டு படிக்காதே. இந்த அமுத நூல் உன்னைக் கல்பமாக்குவதற்கு விதேக முக்தி கொடுப்பதற்காக. எல்லாப் பிறவிகளிலும் கொடுத்து, எல்லாப் பிறவிகளிலிருந்தும் உன்னை விடுவித்துப் பிறவி கடந்த வெட்ட வெளி நிலையில் நிறுத்திப் பேரின்ப சுக வாழ்வைச் சுபமாக நீ வாழ வேண்டும் அதற்காகத் தான். உன் சுயத்தை (சுயம்பு) எங்கும் நிறைந்து மகா சுயம்போடு கலக்கச் செய்ய இந்த அமுத நூல் உன் கைக்கு வந்திருக்கிறது.

தனிமையாய் உன் உலகப் பணிகளைத் தூக்கி எறிந்து விட்டுத் தூய்மையாக வெளியே நின்று ஒரு அரச மரத்தடியில் நின்று படி. ஏதாவது ஒரு கோயிலின் வெளிப் பிரகாரத்தில் அமர்ந்து படி. தெளிந்த சிந்தனையோடு படி. எல்லா சித்தர்கள், யோகிகள், அவதாரப் புருஷர்களை வணங்கி - வணங்கிப் படி. உன் யாத்திரையிலிருந்து பின் இழுத்துச் செல்லும் மாயா லீலைகள் உன்னிடத்தில் வரலாம். தன் பணியை வீரியத்தோடு ஆற்றத் தொடங்கலாம். அவைகளுக்கு அடிமையாகி அவைகளிடம் தோற்று விடாதே. அவை உன்னைப் பயமுறுத்தலாம். உன்னை வம்புக்கு இழுக்கலாம். உன் மனதை உடைக்கலாம். திடமாய் இரு. தீரமாய் இரு.

உன்னைப் பாதுகாப்பதற்கு வெட்ட வெளி இருக்கிறது. கடவுள் இருக்கிறது. சற்குரு இருக்கிறார். எங்குப் பார்த்தாலும் சக்திகள் இருக்கின்றன. எதற்கும் அஞ்ச வேண்டா. உன் பகைவன் உன்னுள்ளே இருக்கிறான். உன் வாழ்வைப் பறிக்கும் உறவுகள் கூட இருக்கலாம்.

நீ மெய்ஞ்ஞானத்திற்குச் செல்வதை யார் தடுத்தாலும் சரி அவர்களைத் தூக்கி எறியச் சற்றும் தயங்காதே. உன் ஆணை இது.

ஜீவ யாத்திரையின் வெற்றி கடவுளின் திருமுக தரிசனம்-வல்லபம் பெற ஐக்கிய சித்தி, பேரானந்தத் திரு ஐக்கிய திருக் கல்யாணம் உனக்கே. உனக்கே. உனக்கே.

இந்நூலில் சில கருத்துகள் புரியாமல் இருக்கலாம். ஏற்க முடியாமல் இருக்கலாம். மிகச் சாதாரண கருத்தாகவும் காட்சி தரலாம். கடவுள் அருளை, உங்கள் தவ வலிமையினால் பெறப் பெற எல்லாம் உங்களுக்கு எளிதாகி விடும்.

இந்தக் கருத்துகள் எல்லாம் அப்போது உங்களுக்கு மாணிக்கமாகத் தென்படும். எந்தெந்தப் பரிபக்குவத்தை எப்போது எப்போது நீங்கள் அடைவீர்களோ, அந்தக் கருத்து விழிப்பு நிலை பெற்ற உங்களுக்குள்ளே வந்து தன் பணியாற்றிப் பிண்ட வெளியிலிருந்து அண்ட வெளியில் உயர்ந்திடச் செய்யும்.

**சந்தோஷம்**

# இறைவான் நிலையை யாரறியப் போறார்

*யாரறியப் போறார் உன் நிலையை - இறைவா*
*யார் உணரப் போறார் உன் பெருமையை*
*யார் காணப் போறார் உன் காட்சியை இறைவா*
*யார் பெறப் போறார் நின் அன்பை (யார்)*

*பார் எல்லாம் நின் புகழ் ஒலிக்குதையா-இறைவா*
*பக்குவமாய் இந்த நாடகம் நடக்குதையா*
*நாளெல்லாம் இதுவே வாடிக்கையாய் இருக்குதையா*
*நான் மட்டும் தன்னந்தனியே நின்று பாடுகின்றேனய்யா*
*(யார்)*

*ஜோதியிலே நிற்பதெல்லாம் சுகம காணுதய்யா*
*வீதியிலே நிற்பதெல்லாம் வேடிக்கை காட்டுதைய்யா*
*சாதியிலே வந்ததெல்லாம் சாத்திரம் பழக்குதய்யா*
*பாதியிலே வந்ததெல்லாம் பாழ் குழிக்கு*
*போகுதய்யா (யார்)*

*அணுவில் அண்டத்தை வைத்தது ஏனய்யா*
*அண்டத்தை அணுவாக்கிக் காட்டியது ஏனய்யா*
*காலத்தில் கோலத்தை தந்தது ஏனய்யா*
*ஓலத்தை ஏலம் விட்டுப் பார்ப்பது ஏனய்யா (யார்)*

*மச்சுக்குள் வைத்த சுகம் எச்சிக்குள் வாராதய்யா*
*நச்சுக்குள் இருக்கும் ரகசியம் தெரிவது இல்லையய்யா*
*பிச்சிப்பூ பூக்கும் காரணம் பிறருக்குத் தெரியாதய்யா*
*கச்சிதமாய் வைத்திருக்கும் வாழ்வு*
*புரிவதில்லையய்யா (யார்)*

*புத்தி சொல்லி கேட்க இங்கே யாரும் இல்லையய்யா*
*சித்தி பெற்றவரோ இங்கு நித்திரை கொள்வதில்லை*
*பக்தி கொண்டு நின்பாதம் பற்ற இங்கு*
*யாருமில்லையய்யா*
*முக்தி பெற்று வாழ யாரும்*
*முன்வரவில்லையய்யா (யார்)*

# இறைவன்

*உன்னை நான் வந்து பார்த்திடுவேன் - உன்*
*உறவைச் சொல்லிச் சொல்லி பேசிடுவேன்*
*ஊரையும் பேரையும் விட்டு விட்டு*
*உன்னடியில் கீழ் வீழ்ந்து கிடந்திடுவேன் (உன்னை)*

*கண்ணால் என்னை நீ மிரட்டினாலும் - கடும்*
*சொல்லால் என்னை நீ விரட்டினாலும்*
*கரத்தால் என்னை நீ அடித்தாலும்*
*காலால் என்னை நீ உதைத்தாலும் (உன்னை)*

*பெண்ணாக உன்னுள் நானும் வாழ்ந்திடுவேன்*
*பேரின்பம் நாளும் துய்த்திடுவேன்*
*வெண்ணையாய் உன்னுள் உருகிடுவேன்*
*வெல்லம் போல் அன்பை தந்திடுவேன். (உன்னை)*

*கருவினில் நின்ற என் போதகனே*
*கனவில் மலர்ந்த என் காதலனே*
*நினைவில் நின்ற உயிர் நாயகனே- என்*
*நெஞ்சில் நிறைந்த மன்னவனே. (உன்னை)*

*சமையலில் உன்னை நான் பார்த்திடுவேன்.*
*சந்தோஷத்தில் உன்னை நான் கண்டிடுவேன்*
*சங்கடத்தில் உன்னை நான் அணைத்திடுவேன்*
*சரித்திரத்தில் உன் புகழ் பாடிடுவேன் (உன்னை)*

*பாரெல்லாம் நன்றாய் படைத்து விட்டாய் - இந்த*
*பாவையின் கையை பிடித்து விட்டாய்.*
*உலகெல்லாம் வாழ வைத்திடுவாய் - இந்த*
*உயிர்களெல்லாம் வாழ வாழ்த்திடுவாய். (உன்னை)*

# பெருநிலை

எனக்காகவா இந்தப் பெருநிலை - இறைவா
எனக்கேன் இந்தத் திருநிலை
உனக்காக நான் ஒன்றும் செய்திலேன்
உறவாக உன்னை நானும் நினைந்திலேன்.

(எனக்காகவா)

உயிரோடு உயிராக இருக்கின்றாய் இறைவா
உணர்வோடு உணர்வாக வதிகின்றாய்
கணக்காக எதையும் நீ முடிக்கின்றாய்
கருத்தாக அனைதனையும் காக்கின்றாய்.

(எனக்காகவா)

வாழ்வெல்லாம் எனதாக்கி வைத்து விட்டாய்
ஊழ் எல்லாம் கூழாக்கி நீக்கி விட்டாய்
தாழ்வெல்லாம் எனைவிட்டு ஓட்டிவிட்டாய்
யாழ்எல்லாம் எனைவிட்டுத் தள்ளிவிட்டாய்.

(எனக்காகவா)

அருளோடு அருள் தந்து உருவாகி நின்றாய்
உருவோடு உயிராக நீ நிற்கின்றாய் - என்
உருவோடு உயிராக நீ நிற்கின்றாய்
கருவோடு கதிதந்து கரையேற்றினாய்
குருவாக கருவெல்லாம் வந்து நின்றாய்

(எனக்காகவா)

பரவெளியில் எனை நீயும் கலக்கச் செய்தாய்
பாரெல்லாம் எனதாக்கிப் பார்க்கச் செய்தாய்
சிவமாக சிவமாக்கி எனை நீயும் சேர்த்துக் கொண்டாய்
ஜெகஜோதியாய் எனை நீயும் ஆக்கிக் கொண்டாய்

(எனக்காகவா)

இனி,
நானென்றும் நீயென்றும் இல்லை என்றாக்கி விட்டாய்
இந்நாளும் எந்நாளும் நம் நாளாய் மாற்றிவிட்டாய்
ஏகாந்த வெளியில் எனை நீயும் இருத்திக் கொண்டாய்
எட்டாத சொர்க்கத்திற்கு அழைத்துக் கொண்டாய்.

(எனக்காகவா)

# வெளிவந்த நூல்கள்

1. ஞானபூமி
2. ஞான யாத்திரை
3. ஞான வாசல்
4. ஞான கீதை
5. ஞான கானம்
6. ஞான மணிகள்
7. என்று நீ
8. நீயே பிரம்மம்
9. இறையருளுக்கு இனிய பாராயணம்
10. மங்கையரில் மகரிஷிகள்
11. மௌனம் பாகம் - 1
12. ஸ்ரீ சற்குரு அகண்ட நாமாவளி
13. மகா சித்தர்
14. வெட்டவெளி தியானம் - பாகம் 1
15. ஆன்மீகத்தில் ஆயிரம்
16. உற்றதும் உணர்ந்ததும்
17. ஜெபம்
18. நீ வாழ வேண்டும்
19. இந்த வாழ்க்கையின் முடிவெங்கே?
20. சற்குரு ஞானசித்தர் ஆலயம்.
21. இருபதாம் நூற்றாண்டின் இறுதிச் சித்தர்
22. Open Space Meditation
23. To know Thyself
24. Anbu Yoga
25. சந்தோஷ மலர்
26. ஞான மலரில் ஒரு பாரிஜாதம்
27. மகர வித்தை - பாகம் 1
28. பகவத் கீதை ஒரு புதிய நோக்கு - தியான யோகம்
29. மாதாஜி கீதை
30. Mathaji Geeta
31. நாகம்மாள் அஷ்டோத் திரம்

# வர இருக்கும் நூல்கள்

1. மதிபுத்திகள்
2. ஐயைந்து மகான்கள்
3. சிவ வாக்கியர்
4. ஞான சூத்திரம்
5. பஞ்ச சேவை
6. சகஜ மார்க்கம்
7. மௌனம் - பாகம் 2
8. மகரவித்தை - பாகம் 2
9. வெட்டவெளி தியானம் - பாகம் 2
10. 108 மகான்கள் வரலாறு
11. இறை உணர்வு
12. தூக்கம்
13. இறுக்கம்
14. சந்தோஷம்
15. சரணாகதி
16. நெற்றிக் கண்
17. நீங்கள் அறியாதவை
18. எப்ப பொறாப்படறீங்க
19. அறிவு, அன்பு, ஆனந்தம்
20. மரணம்
21. சீவர்களுக்குச் சிவாலயங்கள்
22. பரவெளி
23. சற்குரு
24. அம்மா



(சாகித்திய அக்காதெமி பரிசு பெற்ற ஒரியாக் கவிதைகள்)



# ஒலியின் வானம்

ஒரியா மூலம்
சீதாகாந்த மகாபாத்ரா
தமிழாக்கம்
விஜய பிரசாத் மகாபாத்ரா
விஜயா தாஸ்




சாகித்திய அக்காதெமி